# தென்னிந்திய மருத்துவ வரலாறு

டாக்டர் இரா. நிரஞ்சனா தேவி
முதுமுனைவர் பட்ட ஆய்வாளர்



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
**INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES**
இரண்டாவது முதன்மைச் சாலை, சி.ஐ.டி. வளாகம்,
தரமணி அஞ்சல், சென்னை - 600 113

# BIBLIOGRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| Title of the Book | : | Tennindiya Maruthuva Varalāṟu |
| Author | : | Dr. R. Niranjana Devi |
| Publisher | : | International Institute of Tamil Studies,<br>II Main Road, C.I.T. Campus,<br>Chennai - 600 113.<br>Ph: 044-22542992 |
| Publication No. | : | 512 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Year of Publication | : | 2004 |
| Paper Used | : | 18.6 Kg. TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type Used | : | 10 points |
| No. of Pages | : | xxvi + 382 |
| No. of Copies | : | 1000 |
| Price | : | Rs. 115 /- (Rupees One Hundred and Fifteen only) |
| Printing | : | Powerman Printers, Chennai |
| Subject | : | History of Medical Sciences |

முனைவர் சா. கிருட்டினமூர்த்தி
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை 600 113

# அணிந்துரை

மனிதன் இயற்கைக்குக் கட்டுப்பட்டவன். இயற்கையின் வேகத்திற்கு மனித இனம் தன்னைத் தக்கவைத்துக் கொள்வதற்கு ஒவ்வொரு காலக்கட்டத்திலும் அவ்வினத்திற்குக் கிடைக்கும் அனுபவ அறிவு துணையாக இருந்திருக்கிறது. இவ் அனுபவ அறிவின் ஒரு கூறாக விலங்குகளிடம் இருந்து மருத்துவ முறைகளை மனிதன் பெற்றான் என்பர்.

பண்டைக்கால மருத்துவப் பழக்கவழக்கங்களுள் சில இன்றும் மலைவாழ் மக்களிடம் காணப்படுகின்றன. பண்டைக் காலம் தொட்டு இன்று வரை மனித இனம் நோய் என்ற ஆபத்தில் இருந்து முழுமையும் தன்னை விடுவித்துக் கொண்டதில்லை. ஏதேனும் ஒரு நோய் அவ்வப்போது மனித இனத்தைப் பாதிப்பிற்கு உட்படுத்திவந்திருக்கிறது. சிறிய நோய்களில் இருந்து பெரிய நோய்கள் வரை மனித இனம் பாதிப்பிற்குள்ளாகி அழிந்துவரும் நிலையும் ஏற்பட்டுள்ளது. நோய் என்று தோன்றியதோ அன்றே நோய்க்குரிய மருத்துவமும் தோன்றியிருக்க வேண்டும். அவ்வப்போது ஏற்படும் நோய்களைக் குணப்படுத்துவதற்கும் தொடர்ந்துவரும் நோய்களைப் போக்குவதற்குமாகிய மருத்துவமுறைகள் அவ்வக் காலக்கட்டங்களில் இருந்து வந்துள்ளன. இந்நிலையில் பல்வேறு மருத்துவமுறைகள் இந்திய மக்களிடையே இருந்தன என்பதை இலக்கியங்கள் மற்றும் கல்வெட்டுச்சான்றுகள் நமக்குத் தெரிவிக்கின்றன.

தென்னிந்திய மருத்துவ வரலாற்றில் குறிப்பாகத் தமிழகத்தின் மருத்துவ வரலாற்றை எடுத்துக்கூறுவதாக இந்நூல் அமைந்துள்ளது. கிறித்தவ சகாப்தம் தொடங்கித் தென்னிந்தியாவில் பரவலாகப் பயன்படுத்தப்பட்டுவரும் ஆயுர்வேதம் வடநாட்டில் தோன்றியது. அது இந்திய மருத்துவம் என்று அழைக்கப்பட்டது. அந்நாளிலேயே இந்திய

மருத்துவர்கள் 'மோகச் சூர்ணம்', 'சம்மோகினி' ஆகிய உணர்விழக்கச் செய்யும் மருந்துகளையும் 'சஞ்சீபனி' என்னும் உணர்வைத் திரும்பப் பெறச் செய்யும் மருந்தினையும் பயன்படுத்தியிருந்தனர் என்ற செய்தி நம்மை வியக்கவைக்கிறது.

சங்க காலத்தில் மருத்துவர் என்ற பெயருடைய பல புலவர்கள் இருந்திருக்கின்றனர். மருத்துவன் தாமோதரனார், மருத்துவன் நல்லச்சுதனார் ஆகிய சங்ககாலப் புலவர்கள் மருத்துவர் என்ற பெயரிலேயே அழைக்கப்பட்டிருந்தனர். திருவள்ளுவர், மருந்து என்ற தலைப்பில் ஓர் அதிகாரத்தையே அமைத்துள்ளார்.

ஆயுர்வேத மருத்துவர் சுசுருதர் மருத்துவம் பற்றிக் கூறிய செய்திகள் திருவள்ளுவரின் கருத்துகளோடு ஒத்திருப்பதை எண்ணி வியக்காமல் இருக்க முடியாது.

தமிழகத்தில் சித்தர்கள், மருத்துவம் பற்றிய அரிய பல செய்திகளையெல்லாம் தம் படைப்புகளில் ஆங்காங்கே சுட்டிச் சென்றுள்ளனர். பெருங்கதையில் 'மகாஅர் மருந்தாளர்' என்ற தொடர் பயின்று வந்துள்ளது. இதற்குக் குறிப்புரை எழுதிய டாக்டர் உ.வே.சா. அவர்கள் 'குழந்தைகளுக்கு மருந்தை ஆய்ந்து கொடுக்கும் மருத்துவன்' என்று குறிப்பிடுவதைக் காணலாம். குழந்தைகளுக்கென்றே மருத்துவத் துறையில் தனிமருத்துவர்களும், மருத்துவ வழிமுறைகளும், மருந்துகளும் அக்காலத்திலேயே இருந்தன என்பதை இத்தொடர் நமக்கு அறிவிக்கிறது.

போரில் விழுப்புண்பட்ட வீரர்களின் புண்ணை அறுவை செய்து தைத்துக் குணப்படுத்திய செய்தி பதிற்றுப் பத்தில் இடம்பெற்றுள்ளதைக் காணலாம்.

'நெடுவசிபரந்த வடுவாழ் மார்பு' என்ற இத்தொடரில் புண்ணைத் தைத்தலால் உண்டாகிய வடு சுட்டப்பட்டதை நாம் அறியமுடிகிறது. இதனால் பிளந்த புண்ணைத் தைத்துக் குணப்படுத்தும் உயரிய அறுவை மருத்துவமுறை பதிற்றுப்பத்துக் காலத்தில் இருந்ததை நம்மால் உணரமுடிகிறது.

இதோடு மட்டுமல்லாமல் அப்போது இருந்த ஐம்பெருங்குழு, எண்பேராயம் போன்ற குழுக்களில்

மருத்துவர்கள் இடம்பெற்றிருந்தனர் என்பதை அறியும் போது மருத்துவர் ஒரு நாட்டின் அரசாட்சியின் அங்கமாகத் திகழ்ந்தனர் என்பதை உய்த்துணரலாம்.

கல்வெட்டுகளிலும் மருத்துவ வரலாறு பற்றிய பல்வேறு செய்திகள் காணப்படுகின்றன. கி.பி. 12ஆம் நூற்றாண்டில் ஆதுலர்சாலை என்ற பெயரில் மருத்துவமனை இருந்ததை 15ஆம் நூற்றாண்டைச் சார்ந்த கல்வெட்டு தெரிவிக்கிறது. வீரராசேந்திர மன்னன் ஆட்சியில் 'வீரசோழன் ஆதுலர்சாலை' என்ற ஒரு மருத்துவமனை இருந்ததாகக் கி.பி. 14ஆம் நூற்றாண்டைச் சார்ந்த கல்வெட்டொன்று தெளிவு படுத்துகிறது. அம்மருத்துவமனையில் பணிபுரிந்த மருத்துவர்கள், பணி ஆட்கள், அவர்கள் ஊதிய விவரம், உள் மற்றும் புற நோயாளிகள் செலவு விவரம், ஆண்டுக்குத் தேவையான மருந்துகள், மருந்து சேமிப்புக் கிடங்குகள் ஆகிய முழு விவரங்களும் அக்கல்வெட்டில் காணப்படுகின்றன. இக்கால அரசு மருத்துவமனையைப் போலப் புறநோயாளிகளுக்கென மருத்துவமனையில் தனிப்பிரிவு அக்காலத்தும் செயல்பட்டு வந்தது என்பதை இச்சான்றுகள் எடுத்துக்காட்டுகின்றன. தமிழக மருத்துவ வரலாற்றைத் தெரிந்துகொள்வதற்கு இவை போன்ற பல அரிய சான்றுகள் இந்நூலுள் ஆராயப்பட்டுள்ளன.

இத்தகு வரலாற்றுச் சான்றாதாரங்களோடு அமைந்த இந்நூல் தமிழகத்தின் மருத்துவ வரலாற்றை அறிந்து கொள்வதற்கு ஒரு வழிகாட்டியாக அமையும் என்பதில் ஐயமில்லை.

முனைவர் இரா. நிரஞ்சனாதேவி தனது முனைவர் பட்டத்திற்கு ஆங்கிலத்தில் அளித்த இந்த ஆய்வு தமிழில் வெளிவந்தால் இத்தமிழுலகிற்குப் பயனுடையதாக இருக்கும் என்ற நோக்கத்தில் இதனைத் தமிழில் மொழிபெயர்த்து அளித்தார். தமிழக மருத்துவ வரலாறு பலராலும் அறியப்பட வேண்டியதன் காரணமாக இந்நூலை நிறுவனம் வெளியிட எண்ணியது. இதற்கு அனுமதி அளித்த நிறுவனப் பதிப்புக் குழுவினர்க்கு என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். கடின உழைப்பின் விளைவாக முனைவர் இரா. நிரஞ்சனாதேவி

உருவாக்கித் தந்துள்ள இந்நூல் தமிழக மருத்துவ வரலாற்றைப் பதிவுசெய்யும் ஓர் ஆவணமாகத் திகழும். அவருக்கு நிறுவனத்தின் சார்பில் பாராட்டுகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும், ஊக்கமும் தந்து வருகின்ற நிறுவனத் தலைவர் **மாண்புமிகு கல்வி மற்றும் பிற்படுத்தப்பட்டோர் நலத்துறை அமைச்சர் திருமிகு சி.வி. சண்முகம்** அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி பண்பாடு மற்றும் அறநிலையத் துறைச் செயலாளர் திருமிகு பு.ஏ. இராமையா இ.ஆ.ப. அவர்களுக்கும், சிறப்புச் செயலாளர் திருமிகு தா. சந்திரசேகரன் இ.ஆ.ப. அவர்களுக்கும் என் நன்றியறிதலைப் புலப்படுத்திக் கொள்கிறேன்.

இந்நூலுக்கு ஒளிஅச்சுக்கோப்புச்செய்த நிறுவனக் கணிப்பொறியாளர் திரு. ஸ். கோபிநாத்திற்கும், அழகுற அச்சிட்டுத்தந்த பவர்மேன் அச்சகத்தார்க்கும் என் பாராட்டுகள்.

சென்னை **இயக்குநர்**

*31-07-04*

# நன்றியுரை

"தென் இந்திய மருத்துவ வரலாறு" கி.பி. 16ஆம் நூற்றாண்டு வரை" என்ற இந்த ஆய்வு நூல் முதலில் "History of Medicine in South India with Special reference to Tamilnadu - up to 16th C A.D." என்னும் தலைப்பில் பழங்கால வரலாறு மற்றும் தொல்லியல் துறையில் சென்னைப் பல்கலைக்கழக டாக்டர் பட்ட ஆய்விற்காக மேற்கொள்ளப்பட்டது.

தென்னிந்திய வரலாற்று நோக்கில் தமிழ்நாட்டு மருத்துவம் குறித்து யாதொரு நூலும் இதுகாறும் வெளியிடப் படாத காரணத்தால் தமிழில் மொழிபெயர்த்து வெளியிடுதல் நல்லது என்பதில் ஆரம்பம் முதல் தீவிர ஊக்கமும் உற்சாகமும் அளித்தவர்கள் இருவர். மதுரை திருமலை மஹால் அருங்காட்சியகக் காப்பாட்சியாளரும் முதிய கல்வெட்டாய் வாளருமான **டாக்டர் வெ. வேதாச்சலம்** அவர்கள் எனது ஆய்வேட்டிற்காக நான் சேகரித்த புகைப்படங்களை எல்லாம் மறுபுகைப்படம் எடுத்து, அதில் தேவைப்பட்ட பிரதிகளும் எடுத்துக் கொடுத்து எனது கஷ்ட காலத்தில் தேவையறிந்து உதவியவர் ஆவார். அவரது உதவியை என்றும் நினைவில் நிறுத்திப் போற்றுவேன். இவர் தான் முதலில் இருந்தே தமிழில் மொழிபெயர்க்கச் சொல்லிக் கட்டாயப்படுத்தியவர். இருந்த போதிலும், இந்த தமிழ் மொழிபெயர்ப்பு உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் **டாக்டர் சா. கிருட்டினமூர்த்தி** அவர்கள் அளித்த தூண்டுதலால் எழுதப்பட்டது என்பதுதான் உண்மை. அனைத்து வகையிலும் மனம் சோர்ந்து இருந்த என்னால் அவர்கள் அளித்த ஊக்கத்தினாலேயே இப்படியொரு நூல் தமிழில் உருவாகியது எனலாம். எனவே முதற்கண் எனது உளம் கனிந்த நன்றிகளை அவருக்குத் தெரிவிக்கக் கடமைப் பட்டிருக்கின்றேன்.

ஆய்வுப் பட்டத்திற்காக என்னைக் கட்டாயப்படுத்தி பதிவு செய்யச் செய்து, இத்தலைப்பில் நான் தான் ஆய்வு மேற்கொள்ள வேண்டும் என்பதில் மிகவும் பிடிவாதம் காண்பித்து என்னை ஊக்குவித்து சுதந்திரமாக ஆய்வு மேற்

கொள்ளச் செய்து டாக்டர் பட்டம் வாங்கும் வரை உற்சாகப் படுத்திய எனது மதிப்பிற்குரிய பேராசிரியரும், வழிகாட்டியும் தந்தைக்குச் சமமானவருமான எனது குரு, சென்னைப் பல்கலைக்கழகத்தின் தொல்லியல் துறையின் முன்னாள் தலைவர் **பேரா. டாக்டர் S. குருமூர்த்தி** அவர்களை என்றென்றும் நன்றியுடன் நினைவு கூர்வேன்.

அஃதேபோல், எனது கல்லூரி நாள் முதல் என்னிடம் தனிப்பட்ட பிரியமும் அக்கறையும் காண்பித்து நான் M.Phil பட்டம் பெறக் காரணமாக இருந்தவரும், எனது அன்னை இறையடி அடைந்த சமயம் மீளாத் துயரில் இருந்த என்னைத் தன் அருகிலேயே அருமையாக வைத்து அன்பாக ஆறுதலும், தைரியமும், நம்பிக்கையும் அளித்த, சென்னை மீனாட்சி மகளிர் தன்னாட்சிக் கல்லூரி முதல்வர் **டாக்டர் கே.எஸ். லக்ஷ்மி** அவர்கள் தான் எனக்கு முன்மாதிரி எனக் கூறுவதுடன், எனது இன்றைய நிலைக்கும் முதற்காரணம் அவர்களே என்றும், என்றைக்கும் எனது மற்றும் என் தந்தையின் நினைவில் நன்றி மனத்துடன் நிறைந்திருக்கிறார்கள் என்றும் கூறிக்கொள்கின்றேன்.

அடுத்து, எனது அதிகார பூர்வமற்ற வழிகாட்டியாகவும் ஆந்திரம், கேரளப் பகுதி மூலச் சான்றுகளுக்கு உதவியவரும், எனது முன்னேற்றத்தில் தனிப்பட்ட ஊக்கமளித்தவரும் இன்று எங்கள் குடும்ப நண்பராகவும் ஆகிவிட்ட ஹைதராபாத், இந்திய மருத்துவ வரலாற்றுக் கழகத்தின் முன்னாள் இயக்குநரும் (IIHM), சென்னை, தரமணியில் உள்ள டாக்டர் ஏ. லக்ஷ்மிபதி ஆயுர்வேத ஆராய்ச்சி நிறுவனத்தின் (Voluntary Health Service) முன்னாள் இயக்குநருமான **ஆயுர்வேத மருத்துவர் டாக்டர் பி. ராமாராவ் (Dr. B. Rama Rao )** அவர்களையும், அவர்கள் துணைவியாரையும் இங்கு நன்றியுடன் நினைத்துப் போற்றுகின்றேன்.

ஆய்வேடு முழுமை பெறுவதற்கு முக்கியக் காரணகர்த்தாவாக இருந்த சென்னைப் பல்கலைக்கழகத் தொல்லியல்துறைப் பேராசிரியர் **டாக்டர் ஏ. ஏகாம்பரநாதன்** அவர்களுக்கும் இவ்வமயம் நன்றி சொல்லக் கடமைப் பட்டுள்ளேன்.

ஆய்வேடு நிறைவுபெறும் காலம் பலவிதங்களில் மிகுந்த உடல்நலக் குறைவால் பாதிக்கப்பட்டிருந்த எனக்கு நம்பிக்கையும் ஊக்கமும் ஊட்டி உடல் நலத்திலும் அக்கறை காட்டிய தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் சித்த மருத்துவத் துறைத் தலைவர்

பேராசிரியர், மருத்துவர் திருமதி **டாக்டர் பிரேமா** அவர்களுக்கும், சென்னை, நுங்கம்பாக்கம் **ஆங்கில மருத்துவர் டாக்டர் மனோன்மணி காந்தி**, M.B.B.S., D.G.O., அவர்களுக்கும் எனது நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

ஆய்வுக்கால இறுதிக் கட்டம் முதல் இன்று வரை எந்தவித எதிர்பார்ப்பும் இன்றி என் உடல் நலனில் அக்கறை செலுத்தி வரும், எங்கள் குடும்ப நண்பர்களாகிவிட்ட சென்னை அறிஞர் அண்ணா மருத்துவமனையின் இந்திய மருத்துவப் பிரிவின் மருத்துவ அலுவலர் **ஆயுர்வேத மருத்துவர் டாக்டர் B. லலிதாபாய்** அவர்களுக்கும், அவரது கணவரும் தமிழ்நாடு எய்ட்ஸ் நோய்க் கட்டுப்பாட்டு நிறுவனத்தின் துணை இயக்குநருமான **சித்த மருத்துவர் டாக்டர் க. பழனிச்சாமி** அவர்களுக்கும் எனது இதய பூர்வமான நன்றிகள்.

ஆய்வுக் கட்டுரைகள் எழுதுவதற்கு ஆரம்பம் முதல் ஆர்வம் ஏற்படுத்தியவரும், தொடர்ந்து ஊக்கமும் அளித்து வரும் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் அறிவியல் தமிழ்த் துறையின் முன்னாள் தலைவரும், அனைத்திந்திய அறிவியல் தமிழ்க் கழகத்தின் செயலாளருமான பேராசிரியர் **டாக்டர் இராம. சுந்தரம்** அவர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றிகள்.

இவர்கள் தவிர, பாண்டிச்சேரி ஃபிரெஞ்சுக் கலைக்கூட ஆய்வு அலுவலர் **திருமதி ஃப்ராகாய்ஸ் ஹெர்னால்ட் (Mrs. Francaise Hernault)**, கும்பகோணம் "ராமன் & ராமன்" நிறுவனரும் தஞ்சை, தமிழ்நாடு தொல்லியல் கழகத்தின் முன்னாள் துணை இயக்குநருமான மறைந்த திரு. **N. சேதுராமன்**, ஐதராபாத் இந்திய மருத்துவ வரலாற்றுக் கழகத்தின் இயக்குநர் **டாக்டர் மொம்மினி அலி (Dr. Mommini Ali)**, திருவனந்தபுரம் - அனைத்துலக திராவிட மொழி நிறுவன இயக்குநர் உயர்திரு. **வ.ஐ. சுப்பிரமணியம்**, கேரளப் பல்கலைக் கழகத்தின் முன்னாள் பதிவலர் மற்றும் முதிய வரலாற்றாளருமான **திரு. ஸ்ரீதரமேனன் (Shri. Sreedhara Menon)**, திருச்சிராப்பள்ளி டாக்டர் இராஜமாணிக்கனார் வரலாற்று ஆய்வு மைய இயக்குநரும், கண் மருத்துவருமான **டாக்டர் இரா. கலைக்கோவன் (Dr. R. Kalaik kovan)**, இவரால் அறிமுகப்படுத்தப்பட்ட மனநல மருத்துவர் **ஓ. சோமசுந்தரம்**, சென்னைப் பல்கலைக்கழகத்தில் இயங்கும் தென்கிழக்கு ஆசியப் பண்பாட்டு இயக்கத்தின் இயக்குநர் **முனைவர் ந. சுப்புரெட்டியார்**, சென்னை, அடையாறு ஸ்ரீ சாரதா கல்வி அறக்கட்டளையின் இயக்குநர் **டாக்டர்**

கே.வி. ஷர்மா, சென்னை அருங்காட்சியகத்தின் இரசாயனப் பாதுகாப்புத் துறைக் காப்பாளர் டாக்டர் வி. ஜெயராஜ், தமிழ்நாடு கோயில் அளவீட்டுத் துறை முன்னாள் இயக்குநர் திரு. ப. வெங்கடேசன், சென்னை அண்ணா பல்கலைக் கழகத்தின் High Voltage Power System துறையின் முன்னாள் தலைவர் பேராசிரியர் டாக்டர் R. உதயகுமார், M.E., Ph.D., மற்றும் டாக்டர் B. ராமாராவ் அவர்களை அறிமுகம் செய்து வழிப்படுத்திய தமிழக அரசு தொல்லியல் துறையின் முதிய கல்வெட்டாய்வாளர் திருமதி மார்க்ஸீய காந்தி, சென்னைப் பல்கலைக்கழக நூலகர் திரு. R. வெங்கன், சென்னைப் பல்கலைக் கழக நூலக ஆய்வேட்டுப் பிரிவு நூலகத் துணை அலுவலர் திருமதி கமலா, தமிழ்நாடு தொல்லியல் அளவீட்டுத் துறை நூலகர் திரு. K. ராஜன் மற்றும் மத்திய அரசுத் தொல்லியல் அளவீட்டுத் துறை நூலகர் மற்றும் அலுவலர்கள் ஆகிய அனைவருக்கும் எனது நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

இறுதியாக, மொழிபெயர்ப்பு ஆய்வு நூலை முழுவதும் கவனமாகப் படித்துக் குறைகளைச் சுட்டிக்காட்டி, இன்று ஆய்வு நூல், அவர் குறிப்பிட்ட திருத்தங்களுடன், சிறப்பான முறையில் வெளிவரக் காரணமாக இருந்த தஞ்சை மருத்துவக் கல்லூரியின் அறுவை மருத்துவ நிபுணர் டாக்டர் சு. நரேந்திரன் அவர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவிக்கின்றேன்.

எனது ஆய்வுக் காலங்களில் எனக்கு மிகவும் மன நிம்மதியையும், அதிக மூலச் சான்றுகளையும் தந்துதவிய உலகத் தமிழாராய்ச்சி நிறுவன நூலகத்திற்கு எப்படி நன்றி செலுத்துவது என்று எப்பொழுதும் எண்ணுவது உண்டு. இன்று எனது ஆய்வுப் பணியை அந்நிறுவனமே வெளியிட்டுள்ளது. இந்த நிறுவனத்திற்கு என் உளமார்ந்த நன்றியைத் தெரிவிக்கக் கடமைப்பட்டுள்ளேன்.

உலகளவில் தமிழைச் 'செம்மொழி' ஆக ஏற்றுக் கொள்ள இருக்கும் இத்தருணத்தில், எனது இந்த ஆய்வேடு சிறப்பாக நன்முறையில் வெளிவரக் காரணமாக இருக்கும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் டாக்டர் சா. கிருட்டினமூர்த்தி அவர்களுக்கும் எனது இதயபூர்வமான நன்றிகள் என்றென்றும் நிறைந்திருக்கும்.

எண் 30, கவரைத் தெரு
வடபழனி
சென்னை 600 026

டாக்டர் இரா. நிரஞ்சனாதேவி

# நிழற்படப் பட்டியல்





45 ஆனைமலைக் கல்வெட்டு
நன்றி : டாக்டர் வெ. வேதாச்சலம்

46அ பிரம்மா (கி.பி. 7ஆம் நூ.ஆ.) (ஐஹோலி-கர்நாடகா)
நன்றி : சென்னைப் பல்கலைக்கழகம்

46ஆ பிரம்மா (புஞ்சை) (கி.பி. 10ஆம் நூ.ஆ.)
நன்றி : சென்னைப் பல்கலைக்கழகம்

47அ அசுவினித் தேவர்கள் (திருக்கடையூர்)
நன்றி : டாக்டர் வானதிராணி, ராணிமேரி கல்லூரி, சென்னை

47ஆ அசுவினித் தேவர்கள் (சிதம்பரம்)
நன்றி : சென்னைப் பல்கலைக்கழகம்

47இ அசுவினித் தேவர்கள் (நாச்சியார் கோவில்)
நன்றி : டாக்டர் வெ. வேதாச்சலம்

48அ தன்வந்த்ரி (ஸ்ரீரங்கம்)
Courtesy : IIHM

48ஆ தன்வந்த்ரி (சிதம்பரம்)
Courtesy : French Institute, Pondicherry

49அ தன்வந்த்ரி (திருவான்மியூர்) (மருந்தீஸ்வரர் ஆலயம்)

49ஆ தன்வந்த்ரி (சிவகங்கை)
Courtesy : French Institute, Pondicherry

49இ தன்வந்த்ரி (லேபாக்ஷி-ஆந்திரா)
நன்றி : சென்னைப் பல்கலைக்கழகம்

50அ தன்வந்த்ரி (நுக்கிஹலல்லி - கர்நாடகா)
Courtesy : French Institute, Pondicherry

50ஆ தன்வந்த்ரி (ஹொஸ ஹொலலு - கர்நாடகா)
Courtesy : French Institute, Pondicherry

50இ தன்வந்த்ரி (ஹலெபேடு - கர்நாடகா)
சென்னைப் பல்கலைக்கழகம்

51அ தன்வந்த்ரி ஆலயம் (நெல்லுவாயா - கேரளா) (நுழைவாயில்)

51ஆ தன்வந்த்ரி ஆலயம் (நெல்லுவாயா - கேரளா) (வெளிதோற்றம்)

51இ தன்வந்த்ரி ஆலயம் (நெல்லுவாயா - கேரளா) (உள்தோற்றம்)

51ஈ தன்வந்த்ரி சன்னதி (நெல்லுவாயா - கேரளம்)

51உ தன்வந்த்ரி மூலவிக்கிரஹம் (நெல்லுவாயா)
நன்றி : கோயில் நிறுவனம்

52அ பொதிகை மலை அகத்தியர் கோயில்
நன்றி : டாக்டர் வெ. வேதாச்சலம்

52ஆ அகத்தியர் (பொதிகை மலை)
நன்றி : டாக்டர் வெ. வேதாச்சலம்

53 பதஞ்சலி (சிதம்பரம்)
நன்றி : சென்னைப் பல்கலைக்கழகம்

54அ திருநாவுக்கரசர் (அப்பர்)

54ஆ. திருஞானசம்பந்தர்
நன்றி : டாக்டர் வானதிராணி

55அ மருந்தீஸ்வரர் ஆலயம் (திருவான்மியூர்) (வெளித் தோற்றம்)

55ஆ மருந்தீஸ்வரர் ஆலயம் (திருவான்மியூர்) (தெற்குப் பார்வை)

56 வைத்தீஸ்வரன் கோயில்

# சுருக்க விளக்கம்

## தமிழ் இலக்கிய நூற்கள்

| | | |
|---|---|---|
| அகம். | - | அகநானூறு |
| அருட்பா. | - | திருவருட்பா |
| ஆசார. | - | ஆசாரக்கோவை |
| கம்ப. | - | கம்பராமாயணம் |
| கலி. | - | கலித்தொகை |
| குறள். | - | திருக்குறள் |
| குறு. | - | குறுந்தொகை |
| கொங்கு. | - | கொங்கு மண்டலச் சதகம் |
| சிந்தா. | - | சீவகசிந்தாமணி |
| சிலப். | - | சிலப்பதிகாரம் |
| சிறு. | - | சிறுபஞ்சமூலம் |
| சிறுபாண். | - | சிறுபாணாற்றுப்படை |
| தணிகை. | - | தணிகைப் புராணம் |
| தொல். | - | தொல்காப்பியம் |
| நற். | - | நற்றிணை |
| நாலா. | - | நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் |
| பதிற். | - | பதிற்றுப் பத்து |
| பரி. | - | பரிபாடல் |
| புறம். | - | புறநானூறு |
| பெரிய. | - | பெரியபுராணம் |
| பெரும்பாண். | - | பெரும்பாணாற்றுப்படை |
| மணி. | - | மணிமேகலை |
| மதுரை. | - | மதுரைக்காஞ்சி |
| மலை. | - | மலைபடுகடாம் |
| விவேக. | - | விவேக சிந்தாமணி |

# ABBREVIATIONS

| | |
|---|---|
| APHC-P | Andhra Pradesh History Congress Proceedings |
| ARE | Annual Report on Epigraphy |
| ARMAD | Annual Report of the Mysore Archaeological Department. |
| ASI | Archaeological Survey of India |
| BDHM | Bulletin of the Department of History of Medicine |
| BIHM | Bulletin of the Institute of History of Medicine. |
| BIIHM | Bulletin of the Indian Institute of the History of Medicine. |
| BITC | Bulletin of the Institutie of Traditional Culture. |
| BITC | Bulletin of the Institute of the Traditional Culture. |
| CCRIMH | Central Council for Research in Indian Medicine and Homeopathy, New Delhi. |
| CTI | Corpus of Telengana Inscriptions |
| DIMH | Directorate of Indian Medicine and Homeopathy. |
| E.A. | Epigraphia Andhrica |
| E.C. | Epigraphia Carnatica |
| E.I. | Epigraphia Indica. |
| E.I. | Epigraphia India |
| H.A.S. | Hyderabad Archaeological Series |
| IA | Indian Archaeological - A Review |
| IAP | Inscriptions of Andhra Pradesh |
| I.H.C. | Indian History Congress. |
| I.I.H.M. | Indian Institute of History of Medicine |
| I.I.T.S. | International Institute of Tamil Studies. |
| I.P.S. | Inscriptions of Pudukkottai State. |
| J.A.S. | Journal of Asiatic Society. |
| J.B.B.R.A.S. | Journal of Bombay Branch of Royal Asiatic Society. |

| | |
|---|---|
| J.I.H. | Journal of Indian History. |
| J.R.A.S. | Journal of Royal Asiatic Society. |
| J.R.S.M. | Journal of Royal Society of Medicine. |
| J.S.I.M. | Journal of Indian Medicine. |
| J.T.M.S.S.M.L. | Journal of Traditional Medical Science Seminar Manual. |
| M.A.R. | Mysore Archaeological Report. |
| M.E.R. | Madras Epigraphical Report. |
| M.M.J. | The Madras Medical Journal |
| N.E.R. | Nagarjunakonda Excavation Report. |
| P.S.I.C.S.T.S | Proceedings of the Second International Conference Seminar of Tamil Studies. |
| Q.J.M.S. | Quarterly Review of Historical Studies. |
| Q.R.H.S. | The Quarterly Journal of Mythic Society. |
| R.C.I.S.M. | Report of the Committee on the Indigeneous System of Medicine. |
| R.S.C.W. - H.M.I.R. | Regional Seminar cum Workshop on History of Medicine in India - A Report. |
| S.I.I. | South Indian Inscriptions. |
| S.I.T.I. | South Indian Temple Inscriptions. |
| S.I.S.S.W.P.S. | South India Saiva Siddhanta Works Publication Society. |
| T.A.S. | Travancore Archaeological Series. |
| T.N.S.D.A. | Tamil Nadu State Department of Archaeology. |
| T.N.S.M.V. | Tamil Nadu Siddha Maruttuva Variyam. |
| T.N.T.B.S. | Tamil Nadu Text Book Society. |
| T.S.I. | Temple Survey of India |
| T.T.D.I. | Tirumalai Tirupati Devastanam Inscriptions. |
| T.S.I. | The Temple Survey of India, Chennai. |

## MISCELLANEOUS

| | | |
|---|---|---|
| Cf. | - | Compare |
| Ch. | - | Chapter |
| Comp. | - | Compiled by |
| Dept. | - | Department |
| Dt. | - | District |
| Ed. | - | Edited by |
| Edn. | - | Edition |
| Eds. | - | Editors |
| Fig. | - | Figure |
| Govt. | - | Government |
| Ins. | - | Inscriptions |
| Intr. | - | Introduction |
| Ltd. | - | Limited |
| No. | - | Number |
| P. | - | Page |
| Pl. | - | Plate |
| PP. | - | Pages |
| Pt. | - | Part |
| Pub. | - | Published by |
| Pubn. | - | Publication |
| Rev. | - | Revised |
| St. | - | Saint |
| (T) | - | Tamil |
| TK. | - | Taluk |
| Tr. | - | Translated by |
| V. | - | Verse |
| VV. | - | Verse |
| Vol. | - | Volume |
| Vols. | - | Volumes |
| W.S.R. | - | With Special Reference |

# பொருளடக்கம்

## அத்தியாயம் 3



## அத்தியாயம் 4

## நூற்பட்டியல்

# நூல் அறிமுகம்

மருத்துவ வரலாறு என்பது மருத்துவத்தின் ஒரு பிரிவு அன்று; அதுதான் மருத்துவக் கல்விக்கே முக்கியமான அடிப்படையாகும். இந்த மருத்துவக் கலையின் அடிப்படைக் கொள்கைகள் முதன் முதலில் எந்த ஆதாரங்களினின்றும் உருவாகி, வளர்ச்சியடைந்து இன்றைய மருத்துவம் மற்றும் அறுவை மருத்துவக் கலையாக வியக்கத்தக்க வகையில் வளர்ச்சி அடைந்திருக்க வேண்டுமென்று அறிந்து கொள்ளும் ஆவல் ஒவ்வொரு மருத்துவ மாணவன் மனதிலும் தோன்றுவது இயல்பு. மருத்துவம் பயிலும் மாணவர்களை மருத்துவத் துறையில் புதிய கண்டுபிடிப்புக்களுக்கான ஆய்வுகளை மேற்கொள்ள மனதில் ஒரு எழுச்சியினை, ஆர்வத்தினைத் தூண்ட வேண்டுமாயினும் மருத்துவ ஆசிரியர் மருத்துவ வரலாறு பற்றிய தெளிந்த, பரந்த அறிவு பெற்றிருக்க வேண்டும்.

மருத்துவக் கலையில் இருவகைத் தத்துவங்கள் அடங்கியுள்ளன; ஒன்று மூடநம்பிக்கை மற்றும் இயல்புமீறிய சக்திகளின் அடிப்படையிலமைந்துள்ள ஆதிகாலத் தத்துவம்; மற்றது பகுத்தறிவு மற்றும் பரிசோதனைகளின் அடிப்படையில் அமைந்த தற்காலத் தத்துவம்.

ஆதிகாலம் முதல் தற்காலம் வரை மனிதன் தனக்குச் சாதகமற்ற சூழ்நிலைகளில் எவ்வாறு செயல்பட்டான், இடர்தரும் அத்தகைய சூழ்நிலைகளிலிருந்து தன்னை எவ்வாறு பாதுகாத்துக் கொண்டான், தனக்கு ஏற்பட்ட காயங்களை எவ்வாறு ஆற்றினான், நோய்களை எவ்வாறு குணப்படுத்தினான் என்பன போன்ற விபரங்களை அறிவியல் முறைகளில் வெளிக் கொணர்வதே மருத்துவ வரலாற்றின் முக்கிய நோக்கமாகும்.

நாட்டுப்புற மக்கள் கடைப்பிடித்த மருத்துவ முறையிலிருந்தே படிப்படியான பரிணாமவளர்ச்சி போன்று தற்கால மருத்துவ முறை வளர்ச்சியடைந்து வந்துள்ளதால், ஆதிகால நாட்டுப்புற மக்களின் மருத்துவப் பழக்கவழக்கங்களி லிருந்து மருத்துவ வரலாற்றினைக் கண்டறிய வேண்டும்.

## மருத்துவ வரலாறு பற்றிய முந்திய நூற்கள்

உலக மருத்துவ வரலாறு பற்றி ஏராளமான நூற்கள் வெளிவந்துள்ள போதிலும் தென்னிந்திய மருத்துவ வரலாறு பற்றிய முழுமையான நூல் எதுவும் நிறைவாக வெளிவரவில்லை. History of Ayurveda in Andhradesa from 14th to 17th Century A.D. என்பது கி.பி. 14-ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 17ஆம் நூற்றாண்டு வரையில் ஆந்திர தேசத்தில் ஆயுர்வேத மருத்துவ வளர்ச்சி பற்றி கல்வெட்டுக்கள் உள்ளிட்ட பல்வேறு ஆதாரங்களைக் கொண்டு எழுதப்பட்ட ஒரு ஆய்வேடாகும். இது தவிர, தலைசிறந்த அறிஞர்கள் பலராலும் எழுதி வெளியிடப்பட்ட பல ஆய்வுக் கட்டுரைகள் தென்னிந்திய மருத்துவம் பற்றி வெளிவந்துள்ள போதிலும், அவை எதிலும் தென்னிந்தியா முழுவதிலுமான மருத்துவ வரலாறு பற்றி முழுமையாக ஆய்வு செய்யப்பட வில்லை.

"தமிழ் இலக்கியத்தில் சித்த மருத்துவம்" என்னும் நூல் தமிழ் இலக்கியத்தில் காணப்படும் சித்த மருத்துவம் பற்றிய விவரங்களைக் கொண்டமைந்த ஒரு ஆய்வு நூலாகும். ஆனாலும் இது தமிழ்நாட்டு மருத்துவ வரலாறு பற்றிய முழுமையான நூலாகாது.

நந்தி என்னும் மாத இதழில் வரலாற்றில் மருத்துவம் என்ற தலைப்பின் கீழ் பல கட்டுரைகள் வெளிவந்துள்ளன. Medical Science and Dispensaries in Ancient South India as Gleaned from Epigraphy என்பது மற்றொரு ஆய்வுக்கட்டுரை. இவையெல்லாம் தென்னிந்திய மருத்துவ வரலாற்றுத் தொடர்பான பயனுள்ள தகவல்கள் பல தந்துள்ள போதிலும் அவற்றைத் தென்னிந்திய மருத்துவ வரலாறு என்று கருத முடியாது.

எனவே, ஆதிகாலம் முதல் கி.பி. 16ஆம் நூற்றாண்டு வரையிலான மருத்துவ வரலாற்றினை குறிப்பாகத் தமிழ்நாட்டின் மருத்துவ வரலாற்றினைச் சிறப்புப் பார்வையாகக் கொண்டு வெளிக் கொணர்வதே இந்நூலின் நோக்கமாகும்.

## ஆய்விற்கான ஆதாரங்கள்

### இலக்கிய ஆதாரங்கள்

விரிந்து பரவியிருந்த பழந்தமிழ்நாட்டு மக்களின் பொருளாதார, கலாச்சார, சமூக, அரசியல் நிலைமைகளை விளக்கிக்கூறும் ஆதாரங்களை ஏராளமாகத் தருவது சங்க இலக்கியங்கள் மட்டுமே. அப்போதைய தமிழகத்தில் தற்போதைய

கர்நாடகம், ஆந்திரம், கேரளம் ஆகிய மாநிலங்களின் சில பகுதிகள் உள்ளடங்கியிருந்தமையாலும், கி.பி10ஆம் நூற்றாண்டுக்கு முன்னர் இம்மாநில மக்களின் வாழ்க்கை முறைகள் பற்றித் தெரிவிக்கும் வேறு எந்த ஆதாரமும் இல்லாத காரணத்தினாலும் தென்னிந்தியாவின் சங்ககால மருத்துவ வரலாற்றுக்குச் சங்க இலக்கியங்களே சான்றாக அமைந்துள்ளன. எனவே சங்க இலக்கியங்கள் கூறும் சங்ககால மக்களின் மருத்துவ வரலாறு குறித்து இந்நூலின் 4-ம் அத்தியாயத்தில் விரிவாக ஆராயப் பட்டுள்ளது.

## கல்வெட்டு ஆதாரங்கள்

வரலாற்றுக்கு அடிப்படை ஆதாரங்களாக அமைபவை கல்வெட்டுக்களாகும். தமிழ்நாட்டுக் கல்வெட்டுக்கள் தமிழ்நாட்டு மக்களின் அரசியல், சமூக, பொருளாதார மற்றும் கலாச்சார வாழ்க்கையைப் பிரதிபலிக்கின்றன. தமிழ்நாட்டில் இதுவரை கண்டெடுக்கப்பட்டுள்ள சுமார் 21,000 கல்வெட்டுக்களுள் சுமார் 7,000 கல்வெட்டுக்கள் இன்னமும் வெளியிடப்படாத நிலையில் உள்ளன. அவை ஒவ்வொன்றையும் பார்வையிடுவது கடினமாகை யால், மருத்துவம் தொடர்பான சுமார் 80 கல்வெட்டுக்களை நன்றாக ஆராய்ந்து இந்நூலினை எழுதுவதற்குப் பயன்படுத்தப் பட்டுள்ளன. பிற மாநிலங்களிலும் கி.பி. 10ஆம் நூற்றாண்டுக்குப் பிந்திய மருத்துவ வரலாற்றுக்குக் கல்வெட்டுக்களும், இலக்கியங் களும் ஆதாரங்களாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன. ஆனால் பிற மாநில மொழிவன்மையின்மையின் காரணமாக, பிற மாநில மருத்துவ வரலாற்றின் ஆய்வுக்காக அம்மொழிகளிலுள்ள கல்வெட்டுக்கள் மற்றும் இலக்கியங்களின் ஆங்கில மொழி பெயர்ப்புக்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

## அகழ்வாய்வு ஆதாரங்கள்

பழங்காலத்தில் நடைமுறையிலிருந்த மருத்துவ வசதிகள், மற்றும் மருத்துவம் தொடர்பான சில குறிப்புக்களை வெளியிடும் வகையில் சில அகழ்வாய்வு ஆதாரங்களும் கிடைத்துள்ளன. பாம்ப்பேய் (Pompeii), ஸ்ரீலங்கா, நாகார்ஜுன கோண்டா, திருமுக் கூடல் ஆகிய இடங்களில் இருந்துள்ள மருத்துவமனைகள் பற்றித் தெரிவிக்கின்ற அகழ்வாய்வு ஆதாரங்களும், ரோமாபுரி, தட்சசீலம் மற்றும் சில பகுதிகளில் கிடைத்துள்ள அறுவைச் சிகிச்சைக் கருவிகளும் இந்த ஆய்வுக்குத் துணைபுரிந்த அகழ்வாய்வு ஆதாரங்களாகும்.

## சிற்ப – ஓவிய ஆதாரங்கள்

தமிழ்நாட்டில் தாராசுரம், சிதம்பரம், நாச்சியார் கோயில், விருத்தாசலம் முதலிய இடங்களிலும், கர்நாடகாவில் பட்கல் (Bhatkal) என்ற இடத்திலும் இடைக்கால மக்களின் பிரசவ முறைகளை வெளிப்படுத்துகின்ற சிற்ப ஆதாரங்கள் கிடைத்துள்ளன. மற்றும் மதுரையிலும், அழகர்கோயிலிலும் கிடைத்துள்ள சில ஓவியங்கள் வேறுசில குறிப்புக்களுக்குத் துணை ஆதாரங்களாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

## பிற ஆதாரங்கள்

மேற்கூறப்பட்ட ஆதாரங்கள் தவிர சிறந்த அறிஞர்களின் நூற்கள், ஹைதராபாத் - அருங்காட்சியக வழிகாட்டி (Museum Guide: Hyderabad), மருத்துவ வரலாற்று நிறுவன வெளியீடுகள் (Bulletin of the Institute of History of Medicine), மருத்துவ ஆராய்ச்சி தொடர்பான ஆய்வுக் கட்டுரைகள், சில பயணிகளின் குறிப்பேடுகள் மற்றும் ஏராளமான பருவ இதழ்களும், நாளேடுகளும் மருத்துவம் தொடர்பான பல அரிய செய்திகளை ஆதாரங்களாகத் தந்துள்ளன. எல்லாவற்றிற்கும் மேலாக, ஏராளமான நூல் நிலையங்களும், அருங்காட்சியகங்களும் ஆய்வுக்குத் தேவையான செய்திகளைத் திரட்டுவதில் பெரிதளவில் துணைபுரிந்துள்ளன. இவை தவிர, மருத்துவம் தொடர்பான சில பெரியோர்களிடமும் நேர்காணல் மூலம் பல அரிய செய்திகளும், வழிகாணுதலும் பெறப்பட்டுள்ளன.

## நூலின் அத்தியாயப் பிரிவுகள்

விரிந்து பரந்து செய்யப்பட்ட ஆய்வுக் கருத்துக்களைச் சுருக்கமாகக் கூறுமுகமாக இந்நூல் நான்கு அத்தியாயங்களைக் கொண்டதாக அமைக்கப்பட்டுள்ளது.

முதல் அத்தியாயத்தில் ஆதிகால மருத்துவம் பற்றிய கருத்துக்கள் இரண்டு பிரிவுகளின் கீழ்க்கூறப்பட்டுள்ளன. முதல் பிரிவில் வரலாற்றுக்கு முந்திய ஆதிகாலத்திலிருந்து தென்னிந்தியா நீங்கலான பிறநாடுகளில் மருத்துவத்தின் படிமுறை வளர்ச்சி பற்றிப் பகுத்துக் கூறப்பட்டுள்ளது. இரண்டாவது பிரிவின் கீழ் தென்னிந்தியாவில் ஆதிகால மருத்துவம் பற்றி அலசி ஆராயப் பட்டுள்ளது. தற்கால மலைவாழ் மக்களின் வாழ்க்கை முறைகளிலும் சங்ககால மக்களின் வாழ்க்கை முறைகளிலும் காணப்படும் ஒற்றுமைகளை எடுத்துக்காட்டி, மலைவாழ்

மக்களின் தற்காலப் பழக்கவழக்கங்கள் அவர்களின் முன்னோர் களிடமிருந்து தலைமுறை தலைமுறையாக வம்சா வழியில் பெறப்பட்டன என்ற கருத்தின் அடிப்படையில் தற்கால மலைவாழ் மக்களின் மருத்துவப் பழக்க வழக்கங்கள் ஆதிகால மக்களின் மருத்துவப் பழக்கவழக்கங்களைப் பிரதிபலிப்பவையாகக் கொள்ளப்பட்டுள்ளன.

தென்னிந்தியா நீங்கலான உலக நாடுகளின் மருத்துவ வளர்ச்சி பற்றி இரண்டாவது அத்தியாயத்தில் மூன்று பிரிவுகளாக ஆராயப்பட்டுள்ளது. இந்தியா நீங்கலான உலக நாடுகளில் மறுமலர்ச்சி காலம் வரையிலான மருத்துவ வளர்ச்சி பற்றி முதல் பிரிவில் ஆராயப்பட்டுள்ளது. உலகின் பல நாடுகளிலும் ஆதிகாலத்தில் மதமும் மாந்திரீகமும் கலந்த மருத்துவ முறையின் பரிதாபகரமான நிலை பற்றியும், ஹிப்போகிரேட்ஸ் போன்ற மருத்துவ அறிஞர்கள் மதம் மற்றும் மாந்திரீகத்தின் பிடியினின்றும் மருத்துவத்தை விடுவிக்க எடுத்துக்கொண்ட பெரு முயற்சிகள் பற்றியும், அறிவியல் பூர்வமான மருத்துவ வளர்ச்சி பற்றியும் முதல் பிரிவின் கீழ் விளக்கிக் கூறப்பட்டுள்ளது.

இரண்டாம் பிரிவின் கீழ் **இந்திய மருத்துவம்** என்ற தலைப்பில் இந்தியாவின் உன்னத மருத்துவமான ஆயுர்வேதம் பற்றிச் சுருக்கமாக விவரிக்கப்பட்டுள்ளது. ஆயுர்வேதத்தின் தோற்றம், ஆயுர்வேத சம்ஹிதாக்களின் வெளியீடுகள், இந்திய மருத்துவ வளர்ச்சிக்குப் புத்த சமயம் ஆற்றிய தொண்டு, அசோகப் பேரரசின் கீழ் மருத்துவமனைகளின் வளர்ச்சி, உலகப்புகழ்பெற்ற இந்தியக் கல்விமையங்கள், சிறந்த இந்திய மருத்துவர்கள் மற்றும் குழைம அறுவை சிகிச்சையில் அவர்களின் தன்னிகரற்ற திறமை, குப்தர்களின் காலத்தில் மருத்துவத் துறையின் செழித்தோங்கிய நிலைமை, இந்தியாவில் யுனானி மருத்துவத்தின் அறிமுகம், முஸ்லிம் ஆட்சியின் கீழ் இந்திய மருத்துவத்தின் நிலைமை, யுனானி மற்றும் மேலைநாட்டு மருத்துவங்களினால் இந்திய மருத்துவத்திற்கு ஏற்பட்ட பின்னடைவும் வளர்ச்சித் தடைகளும் என்பன போன்ற கருத்துக்கள் பற்றி விவாதிக்கப்பட்டுள்ளது.

மறுமலர்ச்சி காலத்திற்குப் பின்னர் உலக நாடுகளில் ஏற்பட்டுள்ள மருத்துவ வளர்ச்சி பற்றி மூன்றாம் பகுதி விவரிக்கிறது. ஐரோப்பிய மருத்துவத்தில் மறுமலர்ச்சிக் காலத்தில் ஏற்பட்ட புத்தெழுச்சி, பல்வேறு பல்கலைக்கழகங்களின் தோற்றம், ஏராளமான மருத்துவ அறிஞர்கள் மருத்துவ உலகிற்கு அவர்கள் ஆற்றிய சேவைகள், அவர்களின் புதிய கண்டு

பிடிப்புக்கள் அவர்கள் எழுதிய மருத்துவ நூற்கள் ஆகியவை பற்றி கி.பி. 16ஆம் நூற்றாண்டு வரையிலான விவரங்கள் யாவும் சுருக்கமாக விவரிக்கப்பட்டுள்ளன.

தமிழ்நாடு நீங்கலான தென்னிந்தியாவில் கி.பி. 16ஆம் நூற்றாண்டு வரையிலான மருத்துவ நிலைமை மற்றும் வளர்ச்சி பற்றி மூன்றாம் அத்தியாயத்தில் ஆராயப்பட்டுள்ளது.

இந்த அத்தியாயம் ஐந்து பிரிவுகளாகப் பிரிக்கப் பட்டுள்ளது. ஒவ்வொரு பிரிவின் கீழும் மருத்துவத்தின் ஒவ்வொரு நோக்கு பற்றி விவாதிக்கப்பட்டுள்ளது. கர்நாடகம், ஆந்திரம், கேரளம் ஆகிய மூன்று மாநிலங்களிலும் ஆயுர்வேத அறிமுகத் தினால் உள்நாட்டு மருத்துவத்தில் ஏற்பட்ட மாற்றங்கள், ஆயுர்வேதக் கலவையின் மூலம் கேரள மருத்துவத்தில் ஏற்பட்ட மாற்றமும் கேரள மருத்துவர்களின் தனித்திறமைகளும், மூன்று மாநிலங்களிலும் நிலவி வந்த நோய்களும், அந்நோய்களைத் தீர்க்க மருத்துவர்கள் மேற்கொண்ட முயற்சிகளும், வம்சாவழியாக ஆந்திராவிலும், கேரளாவிலும் வாழ்ந்துவந்த மருத்துவக் குலங்கள், மருத்துவ வளர்ச்சிக்கு ஜைனர்களும் பௌத்தர்களும் ஆற்றிய சேவைகள், மருத்துவ வளர்ச்சிக்காக ஆட்சியாளர்கள் காட்டிய ஆதரவு, சில நோய்களைக் குணமாக்குவதில் கோயில்களின் பங்கு ஆகியவை பற்றி இந்த அத்தியாயத்தில் பகுப்பாய்வு செய்யப்பட்டுள்ளது.

தமிழ்நாட்டில் மருத்துவ வளர்ச்சி பற்றி நான்காவது அத்தியாயத்தில் மிகக் கவனமுடன் ஆய்வு மேற்கொள்ளப் பட்டுள்ளது. விரிவாக ஆய்வுசெய்யும் வகையில் இந்த அத்தியாயம் 10 பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. முதல் பிரிவின்கீழ் பழங் காலத்தில் தமிழ்நாட்டில் மருத்துவத்தின் நிலை பற்றி ஆராயப் பட்டுள்ளது. உடல் நலத்திற்குக் காரணமாக விளங்கும் உணவு, பசியும் நோயாகும் உணவும் மருந்தாகும் என்ற கருத்து, ஒழுங்கற்ற உணவு முறையினால் ஏற்படும் நோய்கள், மருத்துவத் தொழிலில் பயன்படுத்தப்படுகின்ற மருந்துகள் மற்றும் சிகிச்சை முறைகள், மருத்துவர்களால் கையாளப்பட்ட அறுவை மருத்து வத்தின் தன்மைகள், இடைக்காலத் தமிழகத்தில் இயங்கியுள்ள மருத்துவ மனைகள், மருத்துவக் கல்வியின் நிலைமை, மருத்துவர்களின் தகுதிநிலை, மருத்துவத் தெய்வங்கள் ஆகியவை பற்றி அடுத்துள்ள பிரிவுகளின் கீழ் ஆராயப்பட்டுள்ளன.

நோய்களின் காரணங்கள் பற்றிய பழந்தமிழரின் அறிவு, நோய் வராமல் காக்க அவர்கள் எடுத்துக்கொண்ட

நடவடிக்கைகள் ஆகியவை பற்றி விரிவாக ஆராயப்பட்டுள்ளது. மருத்துவர்களின் தகுதிநிலை, ஆட்சியாளர்களால் மருத்துவர்களுக்கு அளிக்கப்பட்ட கொடைகள், மானியங்கள் மற்றும் அவர்களை ஊக்குவிக்கும் பொருட்டு அவர்களுக்கு வழங்கப்பட்ட விருதுகள், அக்கால மருத்துவர்கள் பெற்ற ஊதிய விபரம், இக்கால மருத்துவர்கள் பெறுகின்ற ஊதியங்களுடன் ஒரு ஒப்பு நோக்கல் ஆகியவை நன்கு ஆராயப்பட்டுள்ளன.

இறுதியாக, எந்த ஒரு நோய்க்கும் இறுதித் தீர்வு இறைவன்தான் என்ற நம்பிக்கை அன்று முதல் இன்றைய நாட்களிலும் கூட நிலவி வரும் நம்பிக்கை ஆகும். எனவே, வரலாற்றுக் காலம் முதல் நோய் தீர்க்கும் மருத்துவத் தெய்வங் களாகப் பல தெய்வங்கள் வணங்கப்பட்டு வந்த போதிலும், மருத்துவத்திற்குரிய தெய்வங்களாக அன்றுமுதல் இன்று வரையிலும் வழிபாட்டில் இருந்து வரும் மருத்துவத் தெய்வங்கள் குறித்தும் ஒரு சிறிய ஆய்வு செய்யப்பட்டுள்ளது.

இது தமிழ்மொழி இலக்கிய நூல் அல்ல; ஆங்கிலத்திலிருந்து தமிழ் மொழியில் மொழிபெயர்ப்பு செய்யப்பட்ட மருத்துவ வரலாற்று ஆய்வு நூலாகும். எனவே, இதில் கையாளப்பட்டுள்ள பெயர்ச் சொற்கள் அனைத்தும் தூய தமிழில் எழுத இயலாமல் உச்சரிப்பு ஒலிக்கு ஏற்ற இயல்பு நிலையில் எழுதப்பட்டுள்ளன.

## அத்தியாயம் – 1

# ஆதிகால மருத்துவம்

மருத்துவத்தின் வரலாறு ஆதிகாலத்திலிருந்து தொடங்குகிறது. ஆதிகால மக்களைப் பீடித்த நோய்கள் பற்றியும் அந்நோய் களினின்றும் தங்களைப் பாதுகாத்துக் கொள்ள அவர்கள் மேற்கொண்ட சிகிச்சை முறைகள் பற்றியும் ஆராய்வதே இப்பிரிவின் நோக்கமாகும்.

இயற்கையின் தாக்கங்களினாலும், மற்றும் விபத்துக்கள் போன்ற பிற காரணங்களாலும் தங்களுக்கு நேரிடுகின்ற உடல்நலக் கேடுகளினின்றும் தங்களைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டிய சூழ்நிலைகள் ஏற்பட்டபோது, அவற்றிற்கான வழி முறைகளைக் கண்டறிய வேண்டிய கட்டாயம் ஆதிகால மக்களுக்கு ஏற்பட்டிருக்க வேண்டும். அத்தகைய தருணங்களில் ஆதிமனிதன் மிருகங்களின் செயற்பாடுகளைக் கூர்ந்து கவனிக்கலானான். மிருகங்கள் எவ்வாறு நோய்களினின்றும் தங்களைப் பாதுகாத்துக் கொள்கின்றன, நோயுறும் காலங்களில் அவற்றின் செயல்பாடுகள் எவ்வாறு அமைகின்றன என்பன போன்றவற்றைக் கூர்ந்து கவனிக்கலானான். இவ்வாறு மேற் கொள்ளப்பட்ட ஆழ்நோக்கின் அடிப்படையில், தான் பெற்ற அறிவினைப் பயன்படுத்தி **தவறுறு சோதனை (Trial and Error)கள்** மூலம் உணவுக்குப் பயன்படும் தாவரங்கள், நோய் நீக்கும் மருத்துவக் குணம் படைத்த தாவரங்கள், உயிர் கொல்லும் நச்சுத் தாவரங்கள் ஆகியவற்றை இனம் பிரித்துக் கண்டறியலானான். **மிருகங்களையும் பறவைகளையும் கூர்ந்து நோக்கி மனிதன் மருத்துவம் பற்றிய அறிவினைப் பெற்றான் என்ற அதர்வ வேதக் கருத்து** இங்கு நோக்கத்தக்கது என்றும்,

> "புராணம் அல்லது வேதத்தின் நோக்கில்
> ஆராயும்போது இம்மருத்துவ அறிவியல்,
> புராண காலத்திற்கும் முந்திய காலத்தில்

நிகழ்ந்த நெடிய பரிணாம வழிமுறை யினாலேற்பட்ட இயற்கையான விளைவே ஆகும் என்றும் அதுமட்டுமன்றி, அதற்கும் முந்திய காலத்திலேயே ஆதிகால மனிதர் களால் முறைப்படுத்தப்பட்ட அனுபவங்கள் மற்றும் பார்வைகள் மூலம் அமையப் பெற்ற வடிவேயாகும்" என்றும் கிருஷ்ணசாமி ஐயர் குறிப்பிடுகின்றார்.[1]

மருத்துவ அறிவியலின் வளர்ச்சியில் விலங்கியல் அறிவியல் (Veterinary Science) ஒரு முக்கிய பங்கு வகிக்கிறது. மூலிகைத் தாவரங்களையும் அவற்றின் மருத்துவப் பயன்பாடு களையும் கண்டறிவதில் விலங்கினங்கள் மனிதனுக்கு முன்னோடியாக இருந்து வந்திருக்கின்றன. ப்ளினி (Plini) என்பவர் தனது **இயற்கை வரலாறு** (Natural History) என்னும் நூலில் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.[2]

"காண்டாமிருகம் பெருந்தீனியின் காரணமாக உடல் பெருத்துவிட்டால் ஏதேனும் ஓர் கூர்மையான முனையின் மீது தன் உடலை அழுத்தி, தனது தொடைப் பகுதியிலுள்ள ஒரு நரம்பினைச் சிதைத்து அதன் மூலம் நிவாரணம் பெறுவதுடன், காயத்தைச் சேற்றினால் மூடிக் கொள்கிறது - இது அறுவைச் சிகிச்சையின் போது கையாளப்படும் நரம்பியல் சிகிச்சையின் அடிப்படை முறைமையாகும்; நாய்களும் பூனைகளும் தங்களுக்கேற்பட்ட காயங்களை நாவினால் நக்கித் தாங்களாகவே நிவாரணம் பெறுகின்றன; நாய்கள் வாந்தி யெடுப்பதற்காக ஒருவகைப் புல்லைத் தின்கின்றன; குருவிகள் தங்களின் கண்நோயினைக் **காலெண்டைன்** (Calendine) என்ற தாவரத்தின் சாற்றின் மூலம் குணப்படுத்திக் கொள்கின்றன; கரடிகள் வயிற்றுவலி குணமாக ஔரம் (Aurum) என்ற தாவரத்தின் இலைகளைச் சாப்பிடுகின்றன; ஆமைகள் பாம்பின் விஷ முறிவுக்காகக் குனிலா **புபுலா** (Cunila Bubula) என்ற செடியை உண்கின்றன; மான்கள் நச்சுச் செடிகளின் விளைவுகளைக் குணப்படுத்த **ஆர்ட்டிச் சோக்** (Artic-choke) என்ற செடியின்

இலைகளை உட்கொள்ளுகின்றன; யானைகள் தங்களுக்கு ஏற்படும் கடுமையான வயிற்று வலியினின்றும் நிவாரணம் பெற உப்பு மணலை உண்ணுகின்றன. கீரிப்பிள்ளை பாம்புடன் சண்டையிட்ட பின் பாம்புக் கடியினால் ஏற்பட்ட நஞ்சினைப் போக்க ஒருவகை மரத்தின் பட்டையினைச் சாப்பிடுகிறது; அதன் காரணமாகவே அந்த மரம் **நாகமரம்** (Snake wood) என்றழைக்கப் படுகிறது"[3]

நோய்களிலிருந்து தம்மைத் தாமே காத்துக் கொள்ளும் விலங்குகளைக் கூர்ந்து கவனித்து வந்ததன் மூலமே ஆதிமனிதன் தனது மூலிகை மருத்துவ அறிவினைப் பெற்றான் என்ற கருத்துக்குத் துணைக் கருத்தாக இருக்கும் வகையில் **பிஸ்வாஸ்** (Biswas) என்பவர் பின்வரும் முக்கிய மேற்கோளைச் சுட்டிக் காட்டுகின்றார்.[4]

பீகார், ஒரிஸ்ஸா, வங்காளம் மற்றும் அஸ்ஸாம் மாநில மலைப் பகுதிகளில் வாழும் **சண்டாள** (Santal) இன மலைவாழ் மக்களின் மூலிகை மருத்துவன் **ராரமிக்** (Raramic) என்றழைக்கப் படுகின்றான். அவன் பலவித மூலிகைகள் பற்றியும் மூலிகை மருந்துகளின் பண்புகள் பற்றியும் தெளிந்த அறிவு பெற்றவன்.[5] அந்த ராரமிக் தனது மருத்துவ அறிவினை ஒரு வயது முதிர்ந்த மற்றொரு ராரமிக்கிடமிருந்து பெற்றிருக்க வேண்டுமென்றும் அந்த ராரமிக் தனது மூலிகை மருத்துவ ஞானத்தை மிகவும் இரகசியமாகப் பாதுகாத்து வந்தவன் என்றும் **பிஸ்வாஸ்** (Biswas) குறிப்பிடுகின்றார். அந்த ராரமிக் காட்டில் நோயுற்ற விலங்குகளைப் பின்தொடர்ந்து சென்று அவை எந்தெந்த மூலிகைச் செடிகளையும் கிழங்குகளையும் உட்கொண்டு தங்களுடைய நோயினைக் குணப்படுத்துகின்றன என்பதைக் கண்டறிந்து மருத்துவம் பற்றிய தனது அறிவினை விருத்தி செய்து கொள்கின்றான்.[6]

"ஆதிமனிதன் தனது எதிரிகளுடன் போரிடும் போது ஏற்பட்ட வெளிக்காயங்கள், இரணங்கள், எலும்பு முறிவுகள், கொடிய விலங்குகளின் கடிகள், தீக்காயங்கள் மற்றும் சிதைவுகள் போன்றவற்றிற்காக மட்டுமே மருத்துவ உதவியை நாடினான்" என்றும்

"தனது சுயபாதுகாப்பிற்காக எழுந்த உணர்வுகளின் மூலமே மருத்துவக் கலையாகிய இந்த உயரிய அறிவியல் எழுச்சியடைந் துள்ளது" என்றும் திருமூர்த்தி என்பவர் அபிப்பிராயப் படுகின்றார்."[7]

"ஒரு தொடர் பரிமாண வளர்ச்சி மற்றும் முன்னேற்றம் காரணமாக ஒரு தீர்க்கமான வடி வமைப்பினைப் பெற்ற ஒரு மருத்துவ அறிவியலைத் தொகுக்கவல்ல திறன் படைத்த வர்களாக ஆதிமனிதர்கள் இருந்தனர் என்றும், விலங்குகளின் பழக்கவழக்கங்கள் பற்றிய அவர்களின் ஆழ்நோக்கு அறிவே இன்றைய மருத்துவ அறிவியலின் மீப்பெரு வளர்ச்சிக்கு ஒரு மூலாதாரமாக அமைந் துள்ளது" என்றும் கிருஷ்ணசாமி குறிப்பிட்டுள்ளார்.[8]

ஆதிமனிதனால் உருவாக்கப்பட்ட இந்த நோய் தீர்க்கும் கலையே நமது தேசிய மருத்துவத்திற்கு ஆணிவேராக அமைந்தது. நூற்றாண்டுகள் செல்லச் செல்ல, ஆதிமனிதன் தனது மூலிகை அறிவினை மென்மேலும் விருத்தி செய்து கொண்டேயிருந்தான். அதே நேரத்தில், மூடநம்பிக்கைகளும் சமயப்பற்றுதலும் அவனது உள்ளத்தை ஆட்கொண்டமையால், அவனுடைய துயரங்கள் யாவும் மனித சக்திக்கு அப்பாற்பட்ட ஏதோவொரு தெய்வீக சக்தியினால் மட்டுமே தீர்க்கப்பட முடியும் என நம்ப முற்பட்டான். ஆதி மனிதர்களின் இத்தகைய நம்பிக்கைகள் பற்றி விமர்சிக்க முற்பட்ட திருமூர்த்தி என்பவர், "இயற்கைக்கு மாறான சக்திகளின் பிரதிநிதிகளென நம்பப்பட்ட துர்த்தேவதைகள், கெடுதல் விளைவிக்கும் பேய், பிசாசுகள், மற்றும் குரோத குணம் படைத்த எதிரிகள் ஆகியோர் மீது ஆதிமனிதர்கள் கொண்டுள்ள நம்பிக்கையானது அப்பிரதிநிதிகளின் கோபதாபங்களைத் தணித்தால் மட்டுமே தங்களது இன்னல்களிலிருந்து நிவாரணம் பெறமுடியுமென்று கருதி புரோகிதர் மற்றும் சூனியக்காரர்களை நாடவைத்துள்ளது" என்ற தனது கருத்தினையும் வெளியிட்டு உள்ளார்.[9]

## 1. மண்டையோட்டைத் துளையிடல் (Trephination)

வரலாற்றுக்கு முற்பட்ட மனிதர்கள் மூலிகை மருத்துவம் பற்றிச் சிறிது பட்டறிவு பெற்றிருப்பினும், மூடநம்பிக்கை களாலும், சமயப் பற்றுதலாலும் பெரிதும் ஆட்கொள்ளப் பட்டிருந்தனர். கெட்ட ஆவியானது உடலினுள் புகுந்ததன்



படம் 1அ
மண்டையோட்டில் துளையிடுதல் (கிரீஸ்)

காரணமாகவே உடல் நோயினால் பாதிக்கப்படுகிறதென்றும் நோயாளியின் மண்டையோட்டில் துளையிட்டு அந்த ஆவியை உடலினின்றும் வெளியேற்றுவதன் மூலம் மட்டுமே அந்த நோயினைக் குணப்படுத்த முடியுமென்றும் நம்பினர் (படம் 1அ)

சுமார் 10,000 ஆண்டுகட்கு முந்திய ஒரு புதிய கற்கால மனிதனின் (Neolithic Man) மண்டையோட்டில் காணப்பட்ட ஒரு துளையின் வழுவழுப்பான விளிம்புகள் அத்துளையைச் சுற்றியுள்ள மண்டையோட்டுப் பகுதியின் வளர்ச்சிக்குச் சாட்சியாக அமைந்துள்ளனவென்றும் எனவே அந்த மண்டையோட்டுக்கு உரியவன் மண்டையோட்டுத்துளை அறுவை சிகிச்சைக்குப் பின்னரும் உயிர் வாழ்ந்துள்ளமை மூலம் தெளிவாகிறதென்றும் தொல்லியல் ஆய்வின் மூலம் தெளிவாகிறதென்றும் தெரியவருகிறது.[10]

வரலாற்றுக்கு முந்திய காலத்தைச் சேர்ந்த மண்டை யோடுகள், பிரிட்டன், பிரான்சு மற்றும் ஐரோப்பாவின் பிற பகுதிகள், பெரு ஆகிய இடங்களிலிருந்து இத்தகைய துளை களுடன் கண்டெடுக்கப்பட்டுள்ளன.[11] உலகிலேயே 'பெரு' என்ற நாட்டில் தான் மிகப்பெருமளவில் துளையிடப்பட்ட மண்டை யோடுகள் கண்டெடுக்கப்பட்டுள்ளனவென்றும், ஒரே மண்டை



படம் 1ஆ
துளையிட்ட மண்டையோடு (ஹரப்பா)

யோட்டில் ஐந்து இடங்களில் மண்டையோட்டுத்துளை அறுவை சிகிச்சை செய்யப்பட்டுள்ளதைக் காட்டுகின்ற ஐந்து துளைகள் காணப்பட்டுள்ளனவென்றும் ஆல்டன் மேசன் (Alden Mason) என்பவர் சுட்டிக்காட்டுகின்றார்.[12] இந்தியாவில் சமீபத்தில் செய்யப் பட்ட தொல்லியல் கண்டுபிடிப்புக்களிலிருந்து ஆதிகால இந்தியாவிலும் அநேகப்பகுதிகளில் இத்தகைய மண்டை யோட்டுத் துளை அறுவை சிகிச்சை முறை நடைமுறையில் இருந்திருப்பது தெரியவந்துள்ளது.[13] (படம் 1ஆ)

ஜீவகா (Jivaka) என்பவர்[14] புத்த சமய காலத்தைச் சேர்ந்த ஒரு பிரபலமான மருத்துவர் மற்றும் அறுவை சிகிச்சை நிபுணராவார். ராஜகிரஹா (Rajagraha) என்ற பகுதியைச் சேர்ந்த ஒரு வணிகரின் தீராத தலைவலியை மண்டையோட்டுத் துளை அறுவை சிசிக்சை மூலம் ஜீவகா தீர்த்து வைத்துள்ளார். அந்த வணிகரை ஒரு படுக்கையின் மீது படுக்கவைத்து, அவரது மண்டையோட்டில் துளையிட்டு, துளையின் இரு மருங்கிலு முள்ள சதையை வெளியே எடுத்தார். பின், அவ்வணிகருக்குத் தீராத தலை வலியைக் கொடுத்து வந்த இரண்டு பூச்சிகளை

மண்டைக் குள்ளிருந்து வெளியே எடுத்து, அத்துளையை மூடி, தையலிட்டு, காயத்தின் மேல் ஒருவிதக் களிம்பினால் பூசினார். பின்னர் அவ்வணிகரை மூன்று வாரங்களுக்கு முழுமையான ஓய்வு எடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டார்.[15]

பழந்தமிழ்நாட்டில் கூட இது போன்ற மண்டையோட்டுத் துளை அறுவை சிகிச்சைமுறை பழக்கத்திலிருந்தமைக் கான சான்று ஒன்றினைச் **சைமன் காசி சிட்டி** (Simon Casie Chitty) என்பவர் அளித்துள்ளார். மாமுனி அகத்தியர் ஒரு நோயாளியின் மண்டையோட்டில் துளையிட்டு, அந்த நோயாளிக்குப் பயங்கரமான துன்பத்தைக் கொடுத்து வந்த ஒரு தேரையை (Toad) மூளையினின்றும் வெளியே அகற்றி அந்நோயாளியின் துயர் துடைத்தார்.[16]

மேற்கூறப்பட்ட இரு நிகழ்ச்சிகளிலும் நோயாளிகளின் தலைக்குள் தாங்கொணாத் துயர் கொடுத்து வந்த பூச்சிகளையும் தேரையையும் வெளியே அகற்றுவதற்காகவே மண்டையோட்டுத் துளை அறுவை சிகிச்சை செய்யப்பட்டுள்ளதே அன்றி மேலை நாடுகளில் செயப்பட்டது போன்று கெட்ட ஆவியை வெளி யேற்றுவதற்காகச் செய்யப்பட்டதன்று என்பது குறிப்பிடத் தக்கது. மேலை நாடுகளில் செய்யப்பட்ட மண்டையோட்டுத் துளையறுவை சிகிச்சை பற்றி விமர்சிக்கும் **லெஃப் (Leff)** என்பவர் வலிப்பு போன்ற நோய்களுக்கான சிகிச்சையின் போது நோயாளியின் நடவடிக்கை உணர்வற்ற நிலையைக் காட்டினாலும் அல்லது நோயாளி தன் உடம்பை இங்கும் அங்குமாக ஆட்டி அகோரமாகக் கூக்குரலிட்டு அரற்றிப் பேயால் பீடிக்கப்பட்டது போன்ற நிலையினை உணர்த்தினாலும் சிகிச்சையின், இறுதி முயற்சியாகவே இந்த மண்டையோட்டுத் துளையறுவை சிகிச்சைமுறை மேற்கொள்ளப்பட்டதாகக் குறிப்பிடுகின்றார்.[17] அப்போதுங்கூட, மாந்திரீகம் மற்றும் பூசை, மந்திரம் ஆகிய முறைகள் யாவும் தோல்வியடைந்து விட்ட பின்னரே இத்தகைய சிகிச்சை முறை செய்யப்பட்டுள்ளதாகவும் குறிப்பிடுகின்றார்.

ஆதிகால மக்கள் கெடுதல் செய்யும் பேய்களினால் உண்டாகும் துயரங்கள் மந்திரத்தின் மூலம் மட்டுமே நீக்கப்பட முடியுமென்று நம்பினர். எனவே, இத்தகைய பேய்களை மாந்திரீகம், வசியம் மற்றும் மாயவித்தைகள் மூலம் விரட்டுவதற் கென மாந்திரீகர்கள் கிளைத்தெழுந்தனர். இம்மாந்திரீகர்கள் **மந்திர மருத்துவர் அல்லது சூன்ய மருத்துவர்** (Witch Doctors) என அழைக்கப்பட்டனர்.[18]

துளையிடப்பட்ட மண்டையோடுகள், காஷ்மீர் பள்ளத் தாக்கில் **புர்ஜம்** (Burzahm) எனுமிடத்தில் ஒன்றும், ராஜஸ்தானில் கக்கர் (Ghaggar) நதியின் தென்கரையில் **கலிபங்கன்** (Kalibangan) எனுமிடத்தில் ஒன்றுமாகக் கிடைத்துள்ளன. இந்த மண்டை யோட்டுத் துளைகள் பிற்காலங்களில் பெரு, மெக்ஸிகோ ஆகிய இடங்களில் செய்யப்பட்டது போன்று கற்கத்திகளால் செய்யப் பட்டிருக்கலாம் என்று **சங்காலியா** (Sankalia) என்பவர் கருதுகின்றார்.[19]

உடலிலிருந்து துர்ப்பேய்களை விரட்டுவதற்கு இரத்த வெளியேற்று முறையினையும் (Method of Blood-letting) ஆதிகால மக்கள் பயன்படுத்தியிருப்பதாக **லெஃப்** (Leff) கூறுகிறார்.[20] உடலிலிருந்து பேய்கள் வெளியேற்றப்படும்போது இரத்தப் பெருக்கு (Haemorrhages) ஏற்படுகிறதென்னும் நம்பிக்கை இந்தோனேசியாவில் இன்னும் நிலவி வருவதாகவும் அவர் குறிப்பிடுகின்றார்.[21]

தொல்நெடுங் காலந்தொட்டு இந்தியாவில், குறிப்பாகத் தமிழ் நாட்டில் பெண் குழந்தைகளின் காதுகளில் காதணிகள் அணிவதற்காகக் கூர்மையான ஊசியால் துளையிடும் வழக்கம் இருந்து வருகிறது. இவ்வாறு காது குத்தும் நிகழ்ச்சியைப் பெரியதொரு சடங்காகவும் கொண்டாடப்படுவதுண்டு. காது மென்தோலில் குறிப்பிட்ட புள்ளிகளில் துளையிடுதல் என்பது **அக்குபங்க்ச்சர்** (Acupuncture) என்ற சிகிச்சை முறையின் அடிப்படைக் கொள்கையில் அமைந்ததென்றும் அது வாதநோய் மற்றும் சன்னி (Fits) போன்ற சிலவகை நோய்களைக் குணப் படுத்தும் தன்மை வாய்ந்ததென்றும் கூறப்படுகிறது.[21அ] இப்பழக்கமானது இரத்த வெளியேற்ற முறையினை (Blood letting Method) அடிப்படையாகக் கொண்டு உடல் நலமேம் பாட்டிற்காக மேற்கொள்ளப்பட்டிருக்கலாம். ஏனெனில், காதுகளில் துளையிடும்போது சிறுதளவு இரத்தம் வெளி யேறுவதால் உடல்நல விருத்திக்கு உதவுகிறது என்று நம்பப் படுகிறது.

## மோகன்-ஜோ-தாரோ படுகொலை (**Mohen-jo-daro Massacre**)

சிந்துவெளிப் பள்ளத்தாக்கில் அகழ்ந்தெடுக்கப்பட்ட மண்டையோடுகளில் காணப்படும் துளைகள் பற்றிய மனித இன ஆராய்ச்சியாளர்களின் (Anthropologists) விளக்கங்களை மேற்கோள்காட்டி அலெதா டேவர்ஸ் (Aletha Tavers) என்பவர் பின்வருமாறு விமர்சிக்கின்றார்.[22]

> "இந்த மண்டையோட்டுத் துளைகள் பற்றி மேலும் செய்யப்படுகின்ற ஆய்வுகள் மனித இன ஆராய்ச்சியாளர் பலரை மீண்டும் ஆய்வு செய்ய வைத்திருக்கின்றன. இறப்பிற்குப் பின் மண்டையோடுகளில் ஏற்படும் மாற்றங்கள் இந்த மண்டையோட்டுத் துளைகளுக்குக் கற்பிக்கப்படும் விளக்கங்களுள் ஒன்றாகும். மாந்திரீக மார்க்கக் கடமைகளும் கூட இத்துளைக் குறிகளுக்கான காரணங்களாக உணர்த்தப்படுகின்றன. அகழாய்வுக் கொள்கை களுக்குப் பொருத்தமாகயிருக்கும் வகையில் பலமுறை இத்துளைக் குறிகள் பற்றித் தவறாக விளக்கப்பட்டுள்ளன".

மேலே குறிப்பிட்ட கருத்தினை வலியுறுத்தும் வகையில், மிகவும் புகழ்பெற்றதும் இன்னமும் விவாதத்திற்குரியது மாயிருக்கின்ற மோகன்ஜோ-தாரோ படுகொலை பற்றிய விளக்கங்களே அந்த மண்டையோட்டுக் குறிகளுக்குகான தவறான விளக்கங்களாக அமைந்துள்ளன என்று அலெதா டேவர்ஸ் மேலும் கூறுகின்றார்.[23] இது பற்றி கென்னடி (Kennedy) என்பவர் பின்வருமாறு கருத்துரைக்கின்றார்.[24]

> "வரலாற்றுக்கு முந்திய தெற்கு ஆசியாவைப் பற்றி கற்கும் மாணவர்கள் சுமார் 4000 ஆண்டுகட்கு முன்னர் மோகன்-ஜோ-தாரோ வில் நிகழ்ந்த இந்தப் பயங்கரமான கொடூரத்தை பற்றி நன்கு அறிந்திருப்பார்கள்"

இப்படுகொலை பற்றிய தொல்லியல் ஆய்வாளர்களின் கருத்துக்களை விமர்சிக்கும் இவர் பின்வரும் கருத்தினையும் சுட்டிக் காட்டுகின்றார்.[25]

> "கி.பி. 1920 மற்றும் 1930களில் சிந்துநதிப் பள்ளத் தாக்குப் பகுதிகளில் மார்ஷல் (Marshall) மற்றும் சில அகழ்வாய்வாளர் களால் அகழ்ந்தெடுக்கப்பட்ட சுமார் 34 எலும்புக்கூடுகள் பற்றிய ஆய்வறிக்கையின் படி, எவ்விதச் சடங்கு சம்பிரதாயமுமின்றி வீடுகளில் இடிபாடுகளுக்குள்ளும், கிணறு போன்ற அமைப்பிலான அறைகளுக்குள்ளும், வீதிகளில் புதையுண்டு கிடக்கும் சுவர்களுக்

கிடையேயும் எறியப்பட்டுக் கிடக்கும் இந்த எலும்புக் கூடுகள் போர், படுகொலை மற்றும் திடீர் மரணம் ஆகியவை தொடர்பான எதிர் பாராச் சூழ்நிலைகளின் பிரதிபலிப்பாக இருக்கின்றன என்னும் முடிவுக்கு ஆய்வாளர் களை இட்டுச் சென்றுள்ளது."

மார்ஷலைத் தொடர்ந்து **மக்காய்** (Mackay) என்பவர், படுகொலை செய்யப்பட்ட மக்களனைவரும் மோகன்-ஜோ-தாரோ நகரைத் தாக்கியவர்களால் கொலையுண்டவர்கள் என அனுமானிக்கின்றார். இந்த அனுமானத்தை மேலும் விளக்கிக் கூறும் வகையில் **வீலர்** (Wheeler) என்பவர் அந்த மக்களைத் தாக்கிக் கொன்றவர்கள் ஹரப்பா (Harappa) நாகரிக வீழ்ச்சிக்குக் காரணமான ஆரியர்களேயாவர் என்றும் மோகன்-ஜோ-தாரோ படுகொலை பற்றிய மர்மம் இவ்வாறு தான் உருவானதென்றும் அதுவே இன்றுவரை தொல்லியல் இலக்கியங்களில் நிரந்தரமாக நிலைத்துள்ளதென்றும் குறிப்பிடுகின்றார்.[26] இது பற்றிய பழைய கொள்கை மறுக்கப்பட்டு தற்போது இந்த விஷயம் மீண்டும் ஆராயப்பட்டு வருகிறதென்று **அலெதா டேவர்ஸ்** (Aletha Tavers) கூறுகின்றார்.[27] மேலும், மோகன்-ஜோ-தாரோ மண்டையோடு களில் காணப்படும் துளைக் குறிகள் தொல்லியல் ஆய்வாளர்களைத் தவறான முடிவுக்கு இட்டுச் செல்கின்ற **பொய்மைக் குறிகள்** (Pseudo pathologies) என்று முத்திரையிடப்பட்டுள்ளன என்றும் குறிப்பிட்டுள்ளார்.[28]

மத்தியகால ஐரோப்பாவில் **பிளேக்** (Plague) போன்ற கொள்ளை நோய்களால் இறந்தவர்களின் சடலங்களை அதற்கென அமைக்கப்பட்ட **பிளேக் குழிகளிலோ** (Plague-pits) அல்லது புறக்கணிக்கப்பட்ட கட்டிடங்களுக்குள்ளோ வீசி யெறியும் வழக்கம் இருந்தது. இந்த வழக்கத்தை மேற்கோள் காட்டி கென்னடி (Kennedy) என்பவர், ஹரப்பா மக்களின் குளியல் மற்றும் சுகாதாரமுறைகளின் சிதைவுச் சின்னங்களை அத்தாட்சியாகக் கொண்டு பார்க்கையில், மோகன்-ஜோ-தாரோ மற்றும் ஹரப்பா மக்கள் உடல்நல ஒழுங்குமுறைகளில் மிகவும் கவனமாக இருந்தனரென்றும், கலாச்சார வீழ்ச்சிக்குப் பின்னருள்ள காலங்களில் புறக்கணிக்கப்பட்ட நகரப் பகுதிகளில் கொள்ளை நோய்களில் பலியானவர்களின் சடலங்கள் புதைக்கப் பட்டிருக்கலாமென்றும் கருதுகின்றார்.[29] மேலும், இறந்தவர்களின் சடலங்கள் குவிக்கப்பட்டுள்ள மாதிரியைக் கருத்திற்கொண்டு பார்க்கும்போது, ஹரப்பா மக்களின் குடியேற்றப் பகுதிகளில்

காணப்படும் சுடுகாட்டுடன் கூடிய இடுகாட்டுப் பழக்க வழங்களி னின்றும் மாறுபட்டு சடலங்களை நகருக்குத் தொலைவில் சவக் கிடங்குகளில் பாதுகாக்க வேண்டிய சூழ்நிலைகள் இருந்திருக்க வேண்டுமென்று அவர் கருதுகின்றார்.[30]

ஆதிமனிதன் மாந்திரீக நம்பிக்கையினால் உந்தப்பட்டு இறந்த சடலங்களைத் தொலைதூர இடங்களில் கல்லறைகளில் அடக்கம் செய்யும் பழக்கத்தை மேற்கொண்டான்.[31] அவனுடைய குலவழக்கங்கள் மூடநம்பிக்கைகளின் அடிப்படையில் அமைந்த போதிலும் பல அறிவுபூர்வமான தடுப்பு முறைகள் பரம்பரை பரம்பரையாக வழங்கப்பட்டுத் தற்காலத்திலும் அவனது சந்ததியினரால் தொடர்ந்து கடைப்பிடிக்கப்பட்டு வருகின்றன.[32] நோயாளி களையும் அவர்களுடைய உடைமைகளையும் தொட்டுப் பழகு பவர்களைக் கெடுதல் செய்யும் ஆவிகள் (Evil spirits) தாக்கக் கூடும் என்று நம்பினான். அதன் காரணமாக நோயாளிகளையும் அவர்களது உடைமைகளையும் பிறர் தொடாவண்ணம் பாதுகாக்கும் அளவில் சில கொள்கைகளைக் கடைப் பிடிக்கலானான்.[33]

அம்மை நோயைப் பொறுத்தவரை, இந்துக்கள், பெர்சியர்கள் (Persians) மற்றும் சீனர்கள் (Chinese) சில மாதிரியான தடுப்பூசி முறையினை ஆயிரக்கணக்கான ஆண்டு கட்கு முன்னரே நடைமுறைப்படுத்தியுள்ளனர் என்று லெஃப் (Leff) கூறுகிறார்.[34] அம்மை நோயினின்றும் பாதுகாக்கப் படவேண்டியவரின் மேற்பகுதிக்கையில் (Arm) மாந்திரீகன் ஒருசிறு காயத்தை உண்டுபண்ணி ஒரு அம்மை நோயாளியிடமிருந்து எடுக்கப்பட்ட ஒருவித பசையினை அக்காயத்தின் மீது தடவி மந்திரங்களை உச்சரித்துக் கொண்டே தேய்க்கின்றான்.[35] கி.பி. 18ஆம் நூற்றாண்டு வரை ஐரோப்பியர்களுக்குத் தெரியாதிருந்த இந்த அம்மைத் தடுப்பு முறை கி.பி. 550க்கு முன்னரே இந்தியர்களுக்குத் தெரிந்திருந்தது என்று திருமூர்த்தி கூறுகின்றார்.[36]

## 2. வேதகால மருத்துவம்

கி.மு. 800 வரையிலான வேதகாலத்தில் இந்திய மருத்துவ முறையானது ஆதிகால மருத்துவ முறையினை ஒத்திருந்தது.[37] **"நோயின் காரணம் பாவம்; பாவமன்னிப்பே அதன் பரிகாரம்"** என்ற நம்பிக்கையிலேயே பிற நாட்டவரைப் போல் இந்தியர்களும் வாழ்ந்து வந்தனர். பேய்களை விரட்ட மாந்திரீகம், மந்திரம் மற்றும் இறைவழிபாட்டுப் பாசுரங்கள் ஆகியவை பயன்

படுத்தப்பட்டன. மாந்திரீக முறை மற்றும் இறைவழிபாட்டுச் சடங்குகள் மூலம் சில நோய்களைக் குணப்படுத்த முடியுமென்ற ஆதிமனிதனின் நம்பிக்கை இன்றுவரை மக்களிடம் காணப் படுகின்றது. தமிழ் நாட்டில் தர்மபுரி மாவட்டத்திலுள்ள மல்ல சமுத்திரம் என்னுமிடத்தில் காணப்பட்ட கற்காலப் பாறை



படம் 1இ
மாந்திரீகச் சமயச் சடங்கு
(கோணவக்கரை பாறை ஓவியம்)

ஓவியம் ஒன்றில் இருபுற முனைகளும் இணைக்கப்பட்ட பெருக்கற்குறியொன்று காணப்படுகிறது. இது துர்த்தேவதைகளை விரட்டுவதற்குப் பேயோட்டிகள் பயன்படுத்தும் உடுக்கை எனும் ஒருவகை வாத்தியக் கருவி போன்ற அமைப்பிலுள்ளது.[37அ] நீலகிரி மாவட்டம் கோணவக்கரை எனுமிடத்திலுள்ள கற்காலப் பாறை ஓவியம் (படம். 1இ) பேயோட்டுவது தொடர்பான ஒரு மாந்திரீக - சமயச் சடங்கினைப் பிரதிலிப்பதாகப் பவுன்துரை என்பவர் கூறுகின்றார்.[37ஆ] எனவே, இத்தகைய மாந்திரீக சமயச் சடங்குகள் மீது தமிழ்மக்கள் கொண்டுள்ள நம்பிக்கை நெடுங்காலமாக அவர்களிடமிருந்து வரும் நம்பிக்கையாகும். வேதகாலத்தில் எண்ணற்ற நோய்கள் இருந்துள்ளன என்பது வேதங்களின் மூலம் அறியப்படுகிறது. வேதகால மருத்துவ முறைகள் இன்றளவும் மக்களிடையே புழக்கத்திலிருந்து வருகின்றன.[38]

வேதகால மருத்துவம் பற்றிய விபரங்கள் ரிக்வேதம், அதர்வணவேதம் ஆகிய இருவேதங்களிலும் ஏதேனும் ஒரு வடிவில் காணப்படுகின்றது. காய்ச்சல், சயரோகம் போன்ற சில நோய்களைக் குறிப்பிட்டுச் சில பாசுரங்களும் சில மூலிகைகளின் நோய் தீர்க்கும் பண்புகள் பற்றிய சில குறிப்புக்களும் ரிக் வேதத்தில் குறிப்பிடப்பட்டுள்ளன. நோய்களினின்றும் நிவாரணம் பெற பிரார்த்தனை செய்வதற்கென பல பாசுரங்கள் அதர்வண வேதத்தில் இடம்பெற்றுள்ளன. நோய்களின் தீர்வுக்காக மூலிகை மருந்துகளுடன் மந்திரங்களும் **தாயத்துக்களும்** (Talisman) கொடுக்கப்பட்டுள்ளன. இவ்வாறு, மாந்திரீகமும் மதமும் கலந்த மருத்துவமுறையினை நோக்குங்கால், அதர்வண வேதத்தில் கூறப்பட்டுள்ள மருத்துவம் ஆதிகால மருத்துவ முறையுடன் நெருங்கிய ஒற்றுமை கொண்டிருப்பதாகக் கொள்ளமுடிகிறது.[39]

## 3. தென்னிந்தியாவில் ஆதிகால மருத்துவம்

தென்னிந்தியாவில் ஆதிகால மருத்துவம் பற்றி ஆராய்வதற்கான ஆதாரங்கள் மிகக்குறைந்த அளவிலேயே உள்ளன. புதிய கற்கால மனிதன் கண்ட நோய்களும் அவற்றைக் குணமாக்க அவன் கையாண்ட சிகிச்சை முறைகளும் அடங்கியதே **ஆதிகால மருத்துவம்** (Primitive Medicine) என்று **அமெரிக்கக் கலைக்களஞ்சியம்** (Encyclopaedia Americana) வரையறுத்துள்ளது. மேலும், அதுபற்றிய ஆய்வுகளுக்கு செதுக்கப்பட்ட கற்கள், நாட்டுப்புறப் பாடல்கள், புராணங்கள், வழிவழிவாய் வரும் மொழிக்கதைகள் மற்றும் இன்று வாழ்ந்து வரும் ஆதிவாசிகள், மலைவாசிகள் ஆகியோரின் மாயாஜால எண்ணங்கள் பற்றிய உளவியல் பகுப்பாய்வு முதலியன ஆதாரங்களாக அமைகின்றன வென்றும் அதில் குறிப்பிடப்பட்டுள்ளது.[40] இன்று வாழ்ந்துவரும் பழங்குடிமக்களின் மருத்துவ அறிவினை ஆராய்வதன் மூலம் ஆதிகால மக்களின் மருத்துவ அறிவு பற்றித் தெரிந்து கொள்ளலாம் என்று **லெஃப்** (Leff) குறிப்பிடுகின்றார்.[41]

தென்னிந்தியாவில் ஆதிகால மருத்துவம் பற்றிய ஆய்வுக்கு ஒரு ஆதாரமாகத் திகழ்வது நாட்டுப்புற மருத்துவ மாகும். நாட்டு மருத்துவம் (Native Medicine) என்பது உடல்நலம் மற்றும் நோய் பற்றிய அனுமானங்கள், கோட்பாடுகள், செய் முறைகள் ஆகியவற்றை உள்ளடக்கிய ஒரு மருத்துவ முறையாகும்.

> "நோய்களுக்கான தீர்வுகளைத் தேடும் மக்களின் நடவடிக்கைகள் விரிந்து கிளைத் தெழுந்து இந்தியாவில் தனிமனிதர்களிடமும் மக்கள் இனத் தொகுதிகளிடமும் பரந்து காணப்படும்

ஒரு மருத்துவ முறையே ஆதிகால மருத்துவமாகும்'' என்று சுந்தரம் என்பவர் வரையறுக்கின்றார்.[42]

நாட்டுப்புற மருத்துவத்தின் பண்புகள் பற்றி விமர்சிக்கின்ற கருப்பையன் என்பவர் "ஷாமன் (Shaman) என்றழைக்கப்படும் நாட்டுப்புற மருத்துவன் மந்திரம், பூசை, இரத்த வெளியேற்றம், அடித்தல், உமிழ்தல் முதலிய செயற்பாடுகளுடன் தனது மாந்திரீக சமயத் தொடர்பான தனித்திறமையின் மூலம் மூலிகை மற்றும் மூலிகையல்லாத வேறு பொருட்களையும் அறிவியல் பூர்வமாகப் பயன்படுத்துவதால், நாட்டுப்புற மருத்துவமானது மூட நம்பிக்கைகள் நிறைந்த ஒரு விந்தையான தொகுப்பாகக் காணப் படலாம்'' என்று கூறுகின்றார்.[43] ஆதிகாலத் தமிழ் மக்கள் எண்ணற்ற நம்பிக்கைகளையும் பழக்கவழக்கங்களையும் கொண்டிருந்தனர். அவற்றுள் பெரும்பாலானவை இன்றும் தமிழ் மக்களால் கடைப்பிடிக்கப்பட்டு வருகின்றன. எடுத்துக்காட்டாக, நோயாளியின் வீட்டின் முன்வாசலில் வேப்பிலையைக் கட்டித் தொங்கவிடுதல், குழந்தை வேண்டுமென்று கடவுளைப் பிரார்த்தித்தல், ஆண் குழந்தை பிறந்தால் மகிழ்ச்சியில் ஆர்ப்பரித்தல், ஒருவருடைய நலம் காக்க வேள்வி மற்றும் பூசைகள் செய்தல் ஆகிய செயற்பாடுகள் இன்றும் தமிழ் மக்களால் கடைப்பிடிக்கப்பட்டுவரும் அன்றைய பழக்க வழக்கங்களாகும் (அத். 4ல் விளக்கம் காண்க).

ஒவ்வொரு பழங்குடி இனத்தவருள்ளும் மந்திரவாதிகள் இருக்கின்றார்கள். அவர்கள் பூசாரிகள், ஷாமன்கள் அல்லது மந்திரவாதிகள் என்று அழைக்கப்படுகின்றனர். ஷாமன் என்பவர் தேவதைகளுடனும் பேய்களுடனும் நெருங்கிய தொடர்பு கொண்டவர் என்று கருப்பையா கூறுகின்றார்.[44] நோயாளிக்குச் சிகிச்சையளிக்கும்போது ஷாமன் நோயைக் கட்டுப்படுத்த இயல்புமீறிய எல்லாவித கருவிகளையும் பயன்படுத்துகிறார்; கெட்ட தேவதைகளினின்றும் நோயாளியைக் காப்பாற்றும் பொருட்டு நோயாளியின் புஜம் மற்றும் கழுத்தில் மந்திரக் காப்பு, தாயத்து ஆகியவற்றைக் கட்டுகிறார். மந்திரவாதியாகச் செயல்படும் இந்த ஷாமன் நோய் தீர்க்கும் பணியில் ஈடுபட்டிருப்பதால் நாட்டுப்புற மக்கள் அவரை மருத்துவர் (Doctor) என்றே அழைக்கின்றனர்.[45] அவர் மூலிகை மற்றும் மூலிகையல்லாத மருந்துகளுடன் ஆவிக்குளியல் (Steam bath) இரத்த வெளியேற்றம் (Blood letting) மற்றும் அறுவை சிகிச்சை (Surgery) ஆகியவற்றையும் கையாளுகின்றார். முறிந்த எலும்புகளைப் பொருத்தி வைப்பதுடன் பாம்புக் கடியினின்றும்

உயிர்களைக் காப்பாற்றுகின்றார். மேலும் அவர் **உளவியல் – மருந்தியலின்** (Psycho- therapeutic) பல்வேறு சிகிச்சை முறைகளையும் கையாளுவதால் மருத்துவ சிகிச்சையில் அவரால் வெற்றி பெறமுடிகிறது.[46] கல்வராயன் மலையைச் சார்ந்த மலையாளிகளுள் உடுக்கடித்துக் குறி சொல்லும் **கோடங்கி** என்பவன் மருத்துவச் சிகிச்சையளிக்கும் ஷாமனாகவும் செயல் படுகின்றான்.[47] ஆக, ஷாமன் என்பவர் பல பழங்குடியினத்த வரிடையேயும் ஒரு மருத்துவராகச் செயல்படுகின்றார். பல சந்தர்ப்பங்களில், ஷாமன் ஒரு இனத்தின் தலைவராக, புரோகிதராக, மந்திரவாதியாக, மருத்துவராக இப்படிப் பல்செயல் புரிபவராகச் செயல்படுகின்றார்.[48]

'செய்யக் கூடாது' என்று தடைவிதிக்கப்பட்ட சில **கூடாச் செயல்களைச் (Taboos) செய்வதால் நோயுண்டாகும் என்ற நம்பிக்கை 'பழங்குடி மக்களிடையே தொன்று தொட்டு நிலவி வருகிறது.** இந்தக் கூடாச் செயல்கள் படிப்பறிவில்லாத பழங்குடி மக்களிடையே உடல்நலம் மற்றும் சுகாதாரம் தொடர்பான பழக்கவழக்கங்களை, குறிப்பாக அவர்களின் உணவுப் பழக்கவழக்கங்கள் மற்றும் பாலியல் நடவடிக்கைகளை ஒழுங்குபடுத்துகின்றன. இத்தகைய கூடாச்செயல்களின் பெயரால் உடல்நலத்திற்கு ஊறுவிளைவிக்கக் கூடிய சில வகை பழங்கள், இலைகள், கிழங்குகள், பறவைகள், விலங்குகள் ஆகியவற்றை உண்பது தடை செய்யப்படுகிறது.[49]

நாட்டு மருத்துவம் என்பது "உடல் நலம் பெருக்கும் கருவி" என விவரிக்கும் திருஞான சம்பந்தம்,[50] "பேயோட்டுதல், மஞ்சட் காமாலை (Jaundice) நோய் தீர்க்கும் மாந்திரீகச் சூத்திரம், உடல் வலிதீர கை, கால்களை அமுக்குதல், மூலிகைக் கஷாயம், புஜம், கழுத்தில் அணியும் தாயத்துக்கள், புட்டம்மை (Measles) நோய் நீங்கச் செய்யப்படும் செம்மண் பூச்சு முதலியன ஆதி காலத்தில் பழங்குடி மக்களுக்கு ஆறுதல் அளித்துவந்த சில மருத்துவமுறைகளாகும்" என்று கூறுகின்றார்.[51] தவிர, இந்த மருத்துவமுறையானது கிராம மக்களால் ஏற்றுக் கொள்ளப் பட்டிருப்பதுடன் பல நூற்றாண்டுகளாக நாட்டின் பல இடங்களிலும் இது ஒரு சமூகக் கடமையாகவும் செயல்பட்டு வந்திருக்கிறது. மேலும், இந்த மருத்துவ முறையானது பரம்பரை பரம்பரையாக வெறும் வாய்மொழி வாயிலாகவே இன்றளவும் நிலைத்து நிற்கின்றது என்றும் கூறுகின்றார்.[52] பல நூற்றாண்டு களாக நாட்டு மக்களிடையே பிரபல்யமடைந்து வந்துள்ள அந்த நாட்டு மருத்துவம் பற்றி சுந்தரம் என்பவர் கூறியுள்ள பின்வரும் கருத்து மிகவும் பாராட்டுதற்குரியது.

"நாட்டுப்புற மருத்துவமானது ஒரு கட்டமைப்புடன் கூடிய இயந்திர நுட்பத்துடன் மக்களுடைய சமுதாயப் பின்னணியைப் பாதுகாத்து வருவதுடன், பெரும்பாலான மக்கள் நோயுற்ற போது தங்களின் முதல் முயற்சியாகக் கையாளக் கூடிய ஒரே மருத்துவ முறையாகவும் திகழ்கிறது."[53]

தென்னிந்தியாவில் பல்வேறு பகுதிகளில் வாழ்ந்து வரும் பழங்குடி மக்கள் பின்பற்றிவரும் மருத்துவ முறையே தென்னிந்திய ஆதிகால மருத்துவம் பற்றிய ஆய்வுக்கான முக்கிய ஆதாரமாகும். தென்னக மக்கள் 5 சதவீதம் பேர் தமிழ்நாடு, கர்நாடகம், ஆந்திரம், கேரளம் ஆகிய மாநிலங்களில் வசிக்கும் பழங்குடியினராவர். அவர்களுள் தமிழ்நாட்டில் 36 பழங்குடிப் பிரிவினரும், கர்நாடகத்தில் 49 பிரிவினரும், ஆந்திராவில் 33 பிரிவினரும், கேரளாவில் 35 பிரிவினரும் உள்ளனர் என்று ரெய்னா (Raina) என்பவர் கூறுகிறார்.[54]

இந்தியப் பழங்குடியினரைத் தாக்கும் நோய்கள், அந்நோய்களைக் குணமாக்க அவர்கள் பயன்படுத்தும் மருந்துகள், மருத்துவ முறைகள் பற்றிய ஆய்வு வரலாற்றுக்கு முந்திய கால இந்திய மருத்துவ வரலாற்றினை எழுத உதவியாக இருக்கும்.[55] இந்தப் பழங்குடியினர் நோய்கள் பற்றியும் அவற்றைக் குணமாக்குவது பற்றியும் தங்களுக்கென சில நம்பிக்கைகளும் கருத்துக்களும் கொண்டுள்ளனர். இந்த நம்பிக்கைகளும் கருத்துக்களும் பரம்பரை பரம்பரையாக அவர்களுடைய முன்னோர்களிடமிருந்து பெற்றவையாகும். இவ்வாறு பெறுகின்ற வம்சாவழி மருத்துவ அறிவின் மூலம் ஒவ்வொரு பழங்குடிப் பெண்ணும் சாதாரண நோய்களுக்கான வீட்டுச் சிகிச்சை முறையினைத் தெரிந்தவளாகிறாள். ஒவ்வொரு பழங்குடி இனத்திலும் சில மருத்துவ முறைகளில் தேர்ச்சி பெற்றவர்கள் இருக்கிறார்கள். பொதுவாக, அவர்கள் தாங்கள் அறிந்த மருந்துகள் பற்றிய விபரங்களை மிகவும் இரகசியமாகக் காப்பாற்றுகின்றனர்; ஏனெனில், அந்த மருந்து பற்றிய விபரம் பகிரங்கமாக்கப்பட்டால் அம்மருந்தின் செயல்பாடு பயனற்றுப் போகும் என்பது அவர்களது பயம். எனவே, முதியவர்கள் தாங்கள் அறிந்த மருத்துவத்தைத் தங்களுடைய குழந்தைகளுக்கோ அல்லது மிகவும் நம்பிக்கையான நண்பர்களுக்கோ மட்டும் கற்பிக்கின்றனர். இவ்வாறு அவர்கள் பெற்றுள்ள மருத்துவ அறிவு இரகசியமாக வம்சாவழிமுறையில் கட்டிக் காக்கப்பட்டு வருகிறது.[56] எனவே, தென்னிந்தியப் பழங்குடி இனத்தவரின்

மருத்துவ முறைகளைப் பற்றிய ஆய்வு ஆதிகாலத் தென்னிந்திய மக்களின் மருத்துவ முறையினைப் பிரதிபலிப்பதாக எடுத்துக் கொள்ளலாம். நோய்களின் தீர்வு பற்றிய ஆதிகாலப் பழங்குடியினரின் மனப்பான்மை மூடநம்பிக்கைகள் கலந்த சிகிச்சை முறையாகும். நோய்க்கான காரணம் சாதாரணமானது தான் என அவர்கள் நம்பினால் தங்களுக்கு தெரிந்த மருந்துகளை நாடுகின்றனர்.[57]

தென்னிந்திய பழங்குடி மக்களிடையே நிலவி வரும் பல்வேறு நோய்கள் பற்றியும் அவற்றைத் தீர்க்க அவர்கள் கையாளும் முறைகள் பற்றியும் **ரமணராவ்** (Ramana Rao) மிகவும் விரிவாக ஆராய்ந்துள்ளார். அவர் கண்ட சிகிச்சை முறைகளுள் **சூடுபோடுதல்** (Cauterisation) என்பது ஒரு முறையாகும். ஆந்திரப்பிரதேசப் பழங்குடி மக்கள் பற்றிப் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.

> "நல்லமலைக் காட்டிலுள்ள செஞ்சுக்கள் (Chenchus) கடுமையான தலைவலி, மூட்டுப் பிசகு, காய்ச்சலின் போது ஏற்படும் மார்புவலி முதலிய நோய்களுக்கு, பாதிக்கப்பட்ட பாகத்தைச் சூடுபடுத்தியும், சில சமயங்களில் உருக்கிய வெண்ணெய் அல்லது எண்ணெ யினால் தேய்த்தும் சிகிச்சை செய்கின்றனர்."[58]

ஆந்திரப்பிரதேசம் சித்தூர் மாவட்டம் பேரூர் எனுமிடத்தில் மக்களைப் பிடித்துவரும் நோய்கள் மற்றும் அந்நோய்களைத் தீர்க்க மேற்கொள்ளப்படும் சிகிச்சை முறைகள் பற்றிய மக்களின் கருத்தை அறிந்துகொள்ள மேற்கொள்ளப் பட்ட ஆய்வு பின்வரும் கருத்தினை வெளியிட்டுள்ளது.

> "காமாலை நோய்க்கு நோயாளியின் மணிக் கட்டில் சூடுபோட்டு கஞ்சியை உணவாகக் கொடுப்பதே பயனுள்ள சிகிச்சை முறையென்று மக்கள் நம்புகின்றனர்.[59] பொதுவாக, உடலின் வெப்பநிலை அதிகமாகி ஏற்படும் எல்லா நோய்களையும் **காய்ச்சல்** (Fever) என்றே அந்தப் பழங்குடிமக்கள் கருது கின்றனர். காய்ச்சல் நோய் தாக்கப்பட்டதாக அவர்கள் கருதினால் சிலநாட்கள் உணவு எதுவும் உட்கொள்ளாமல் இருந்து விடுகின்றனர்."[60]

மத்தியப்பிரதேசம் **பஸ்டர்** (Bastar) என்னும் பகுதியில் வாழும் ஹல்பாஸ் (Halbas), **பறையர்கள்** (Paraias) மற்றும்

**பத்ரர்கள்** (Bhatrar) என்னும் பழங்குடியினர் மலேரியா காய்ச்சலுக்காக மேற்கொள்ளும் வினோதமான சிகிச்சை முறையினை இங்கு குறிப்பிடுவது மிகவும் உசிதமானதாக இருக்கும். மலேரியாவினால் பீடிக்கப்பட்ட நோயாளியின் தலையில் **சிவப்பு எறும்புகளை** (Red Ants) உயிருடன் விட்டு விடுவார்கள். எறும்புக் கடியினால் உண்டாகும் **ஃபார்மிக் அமிலத்தின்** (Formic Acid) செயல்பாட்டினால் காய்ச்சல் குறைந்து விடுகிறது.[61] இந்த அமிலமானது நீண்ட நாளைய காய்ச்சலையும், கருநீர்க் காய்ச்சலையும் (Blackwater fever) குணப்படுத்துவதாக நம்புகின்றனர்.[62]

**ஆதிகால மருத்துவம்** ("Primitive Medicine") எனும் தனது ஆய்வுக் கட்டுரையில் **ரமணராவ்** (Ramana Rao) சில நோய்களுக் கான நாட்டுப்புறச் சிகிச்சைகள் பற்றிக் குறிப்பிட்டிருக்கின்றார்.[63] கேரளாவிலுள்ள **காடர்** (Kadar) என்னும் பழங்குடியினர் தலைவலிக்கு **அகிரந்தை** (Achyranthes)யின் வேர்களையும் **ஓஸிமம் பேஸிலிகம்** (Ocimum Basilicum) என்னும் செடியின் விதைகளையும் சேர்த்து அரைத்துப் பசையாக்கி நெற்றியில் தேய்க்கின்றனர். சாதாரண மலச்சிக்கலுக்குப் பெரும்பாலான பழங்குடியினர் உப்பும், ஓமமும் கலந்த கலவையினை உண்கின்றனர். கடுமையான மலச்சிக்கலுக்கு ஆந்திரப் பிரதேசச் **செஞ்சுக்கள்** (Chenchus) இஞ்சி, வெங்காயம், பூண்டு ஆகியவற்றைச் சேர்த்து இடித்து நீரில் கலந்து குடிக்கின்றனர். ஆந்திரப்பிரதேசம் **அகோபிலம்** (Ahobilam) எனும் சிற்றூரில் மேற்கொள்ளப்பட்ட ஆய்வில் சீயக்காயிலிருந்து எடுக்கப்பட்ட சாறு அல்லது விளக்கெண்ணெய் (Castor oil)யுடன் பசுவின் சிறு நீரைக் கலந்து மலச்சிக்கலைப் போக்க அருந்துகின்றனர் என்று தெரியவந்துள்ளது.[64] மேலும், கண் எரிச்சலுக்கு **கோஸினியா இண்டிகா** (Cocinia Indica) என்னும் செடியின் இலைச்சாறு அல்லது உப்புக் கரைசலைக் கண்களில் ஊற்றுகின்றனர் என்றும் அந்த ஆய்வு தெரிவிக்கின்றது.[65] கண் உறுத்தலுக்கு, ஒரு துணியை வாயினால் ஊதி சூடேற்றிக் கண்களில் ஒத்தடம் கொடுக்கின்றனர். கண்ணோவிற்கு, வெங்காயச் சாற்றினைக் கண்களில் விடுகின்றனர்.[66] இது போன்று, காதுவலி, நாக்குப்புண், பல் நோய்கள், இருமல், வயிற்றுப்போக்கு, மண்ணீரல் விரிவு, பெண்களின் மலட்டுத் தன்மை போன்ற சாதாரண நோய்களுக்கும் தென்னிந்தியப் பழங்குடி மக்கள் மேற்கொள்ளும் சிகிச்சை முறைகள் பற்றியும் ரமணராவ் தனது ஆய்வுக் கட்டுரையில் விவரித்துள்ளார்.[67]

ஆதிகால மருத்துவத்தின் முக்கியமான பலன் உளவியல் மற்றும் மருந்தியல் ஆகியவற்றின் சக்திகளில் தான் அடங்கியுள்ளது.

அவர்களுடைய சிகிச்சையில் மாந்திரீகமும் சமயமும் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளன. நோய்கள் வந்தால் அவர்கள் பொதுவாக மூலிகை மருத்துவச் சிகிச்சையையே பின்பற்றுகின்றனர்; ஆனால், அந்த மருந்துக்கு நோய்கள் கட்டுப் படாவிடில் அவர்கள் இயற்கைக்கு மீறிய முறைகளை நாடுகின்றனர்

**நச்சுக் கடிகளுக்கான சிகிச்சை**

நச்சுப் பாம்புக் கடிகளுக்கு நடைமுறை மருந்துகளான மூலிகை மருந்துகளும் மூடநம்பிக்கையிலமைந்த மாந்திரீகமும் கலந்த கூட்டுச் சிகிச்சைமுறை மேற்கொள்ளப்படுகிறது. **கோயா** (Koya), **யானாதி** (Yanadi), **சவரா** (Savara), **தோடர்** (Todas), **செஞ்சு** (Chenchu) மற்றும் பல பழங்குடி இனத்தவரும் நச்சுப் பாம்புகளின் விஷமுறிவுக்கான பல மூலிகைகளை அறிந்து வைத்துள்ளனர்.[68] செஞ்சு இனத்தில் ஒருவர் நச்சுப் பாம்பினால் தீண்டப்பட்டால், கடிவாயில் எரியும் குச்சியினால் சுட்டெரித்து, ஒரு பாம்பாட்டி கொடுக்கும் மூலிகைச் சாற்றினை உட்கொள்ளச் செய்து மந்திரங்களை உச்சரிக்கின்றனர்.[69]

ஆந்திரபிரதேசம் கர்நூல் மாவட்டத்திலுள்ள அஹோபிலம் (Ahobilam) என்னும் சிற்றூரில் ஹேமலதா, சுப்பாரெட்டி ஆகிய இருவரும் செஞ்சுக்களின் மருத்துவப் பழக்கவழக்கங்கள் பற்றி மேற்கொண்ட செய்முறை ஆய்வில் பாம்புக் கடிக்கு செஞ்சுக்கள் மேற்கொள்ளும் ஒரு வித்தியாசமான முறை கண்டறியப் பட்டுள்ளது.[70] பாம்புக் கடியால் பாதிக்கப்பட்டவரின் மூக்குத் துவாரங்களில் **தும்மி** (Lucas aspera) என்னும் மூலிகைச் செடியின் இலைச் சாற்றினை ஊற்றி, நாகமுஷ்டி (Snakewood-Strychnos colubrina) என்ற கொடியின் பட்டையை நசித்துப் பெறும் பசையினை உட்கொள்ளச் செய்வதுடன் மந்திரங்களும் உச்சரிக்கப்படுகின்றன. கர்நாடகாவிலுள்ள நாட்டுப்புறமக்கள் பின்பற்றும் பாம்புக்கடி சிகிச்சை பற்றி ஒரு அசாதாரணமான மருத்துவ முறை கூறப்படுகிறது;[71] பாம்பின் உடம்பிலிருந்து பிரித்தெடுக்கப்படும் ஒரு பொருள் விஷமுறிவு மருந்தாகப் பயன்படுத்தப்படுகிறது. குழந்தைகளுக்கு ஏற்படும் சொறி, சிரங்கு, எரிச்சல் போன்ற நோய்களுக்குப் பாம்புகளின் கோபமே காரணம் என்று கேரளப் பழங்குடியினரும், குழந்தையின் காதுகளில் சீழ்வடியும் நோய்க்கும், பெண்களின் மலட்டுத் தன்மைக்கும் அவர்களின் குடும்பத்தினர் பாம்புகளைக் கொன்றிருப்பதே காரணமென ஆந்திரப் பிரதேசப் பழங்குடியினரும் நம்புகின்றனர் என்று ரமணராவ் குறிப்பிட்டுள்ளார்.[72] பழங்குடியினர் பாம்புகளின்

மீது அசைக்க முடியாத நம்பிக்கை வைத்து அவைகளைத் தெய்வமாகப் போற்றிப் பூசிச்கின்றனர். மேலும் அவர்களுடைய குழந்தைகளுக்கு **நாகமணி, நாகம்மா, நாகப்பா, நாகலட்சுமி, நாகரத்தினம்** என பாம்புகளைக் குறிப்பிடும் பெயர்களைச் சூட்டுகின்றனர்.[73]

அக்கால மக்கள் புதர்களும், காடுகளும் சூழ்ந்த பகுதிகளில் ஓலை மற்றும் ஓடுகள் வேய்ந்த வீடுகளில் குடியிருந்தனர். இந்த புதர்களும், ஓலை மற்றும் ஓடுகளாலான கூரைகளும் பாம்பு, தேள், குளவி போன்ற நச்சு விலங்குகள் வாழ்வதற்கு வசதியாய் அமைந்திருப்பதால் நச்சுக்கடி என்பது அந்தக் காலத்தில் மிகவும் சாதாரணமாக நிகழும் நிகழ்ச்சியாயிருந்தது. இம்மாதிரியான நிலைமை மத்திய கால கட்டங்களிலும் இருந்தனவென்பதற்கான ஆதாரங்கள் கல்வெட்டுக்களில் காணப்படுகின்றன. நச்சுக்கடி சிகிச்சையில் தேர்ச்சி பெற்றவர்கள் **விஷவைத்தியர்கள்** என்ற பெயரில் இருந்துள்ளனரென்றும், அவர்களுடைய சேவைக்காக **விஷவிருத்தி** மற்றும் **விஷ போகம், விஷகாரபோகம்** போன்ற விருதுகள் வழங்கப்பட்டுள்ளன என்றும் கல்வெட்டுக்கள் கூறுகின்றன. (விளக்கம்: அத். 3, 4ஐக் காண்க.)

தற்காலத்திலும் சுமார் 50 ஆண்டுகட்கு முன்பு வரை தென்னிந்தியக் கிராமப்புறப் பகுதிகளில் மக்கள் இத்தகைய குடியிருப்புக்களிலேயே நச்சுப் பாம்புகளின் அச்சுறுத்தல் களுக்கிடையே தான் வாழ்ந்து வந்தனர். ஆனால் இன்றுள்ள நிலைமை வேறு. நகரப் பகுதிகளைப் போல் கிராமப்புறப் பகுதிகளிலும் புதர்களும் காடுகளும் அழிக்கப்பட்டு, கட்டியான சீமைக்காரையினால் (Cement) தளவரிசை வீடுகள் எந்த நச்சு விலங்கும் தங்குவதற்கு இடமின்றி கட்டப்படுவதால் நச்சுக்கடி நிகழ்ச்சிகளும் நிகழ்வது மிக அரிதாகிவிட்டது.

ஆந்திரப்பிரதேசகத்தில் செஞ்சுக்கள் நாய்க்கடி விஷத்தை முறிக்க **பனசா** (Panasa - Artocarpus Integrifolla) என்ற மூலிகைப் பசையுடன் கரித்தூள் மற்றும் ரல்லியூர் (Ralleur vitis guadrangularis) ஆகியவற்றைக் கலந்த கலவையினைக் கடிவாயில் தேய்க்கின்றனர்.[74]

கர்நாடகத்தில் வடக்கு மற்றும் தெற்குக் கனாரா பகுதிகளில் வாழும் பழங்குடியினர் நச்சுணவை உண்டவருக்குப் பாலில் **புத்ரஞ்சீவி** என்ற மரத்தின் விதைகளின் உட்கருவினைக் கலந்து குடிக்கச் செய்து அதன்மூலம் வாந்தியெடுக்கச் செய்து விஷத்தின் தன்மையை நீக்குகின்றனர்.[75]

## சாதாரண நோய்களுக்குப் பழங்குடி மருத்துவம்

நீலகிரி மலைகளில் வாழும் கோத்தர் (Kottar) இன மக்களின் வாழ்க்கை முறையினைப் பற்றிக் குணசேகரன் என்பவர் மேற்கொண்ட களஆய்வு, அம்மக்களின் மருத்துவ முறைகள் பற்றி மிகவும் பயனுள்ள தகவல்களைத் தந்துள்ளது.[76] ஆய்வாளர் அவ்வினமக்களுள் இரு முதியவர்களிடம் நேர்காணல் மூலம் சேகரித்த தகவல்களின் படி சில நோய்களுக்கு அவ்வினமக்கள் கையாளும் மருத்துவ முறைகள் பற்றிய விவரங்கள் கிடைத்துள்ளன. மருத்துவ சிகிச்சைகளுக்கு அவர்கள் பயன்படுத்திய மூலிகைளின் பெயர்கள் அவர்கள் மொழியிலேயே தரப் பட்டுள்ளன.

சளியினால் தலையில் ஏற்படும் பாரத்தைக் குறைக்க ஆமணக்கு இலையினால் ஒரு இரவு முழுமையும் தலையில் பற்றுப் போடுகின்றனர். கண் எரிச்சலுக்கு சில்க் (Chilk) எனும் செடியின் சாற்றில் மூன்று சொட்டுக்களைக் கண்களில் விடுகின்றனர். உடல் சூட்டினைத் தணிக்க சிட்கோலம் (Chitkolam) எனும் செடியின் இலை மற்றும் தண்டு ஆகியவற்றின் சாற்றுடன் எருமைப் பாலைக் கலந்து குடித்துவிட்டுப் பனை வெல்லத்தைச் சாப்பிடுகின்றனர். வயிற்றுவலிக்கு பெமது (Pematu) என்ற செடியின் தளிர் இலைகளின் சாற்றினைக் குடிக்கின்றனர். அடிபட்ட காயங்களை ஆற்ற புகுடுதலை (Pugudutalai) என்ற செடியின் இலைச் சாற்றினைப் பயன் படுத்துகின்றனர்.

எலும்பு முறிவுக்கு கோத்தர்கள் பின்வரும் சிகிச்சை முறையினைப் பின்பற்றுகின்றனர்; முறிந்த எலும்புகளைச் சரியாகப் பொருத்திய பின் வலரி எனும் செடியின் இலைகளை ஆமணக்கு எண்ணெய் (Castor oil) அல்லது நெய்யில் நனைத்து எலும்பு முறிவுப் பகுதியில் வைத்துத் தேய்த்துப் பின் அப்பகுதியை வலரி இலைகளால் மூடிக் கட்டுப்போடுகின்றனர்.

அதே கோத்தர்கள் காமாலை நோய்க்கு ஒரு தனிச் சிகிச்சை முறையினைப் பின்பற்றுகின்றனர். கெய்மெல்வேர் (Keymelver) என்ற மூலிகையின் வேரினைப் பொடி செய்து, பாலில் கலந்து சூடேற்றி காமாலை நோயாளிக்கு மூன்று வேளைகள் ஒரு நாளில் குடிக்கச் செய்து வெறும் மோர் மட்டுமே மதிய உணவாகக் கொடுக்கின்றனர்.

வைசூரி, சின்னம்மை, காலரா, பிளேக் போன்ற கொள்ளை நோய்கள் மாரியம்மன், மாரி, நுக்காலம்மன், மகாமாரி போன்ற

தேவதைகளின் சீற்றத்தாலேயே ஏற்படுவதாகப் பழங்குடி மக்கள் நம்புகின்றனர். இக்கொள்ளை நோய்களுக்கு எதிராக இவர்கள் எடுக்கும் நடிவடிக்கைகள் பற்றி ரமணராவ்[77] பின்வருமாறு குறிப்பிடுகின்றனர்.

> "ஒவ்வொரு பழங்குடி இனத்திலும் ஒரு மாந்திரீகன் இருப்பான்; அவன் அந்த மக்களுக்கும் தேவதைகளுக்குமிடையே ஒரு சமரசவாதியாக இருந்து, கொள்ளை நோய் தோன்றியவுடன் நீண்ட கால உண்ணாவிரதம் மேற்கொண்டு, மக்களிடம் சிலவகை உணவுகளைத் தவிர்க்குமாறு அறிவுரை கூறி, அவனுக்குத் தெரிந்த சில மருந்துகளைக் கொடுத்து, கொள்ளை நோய்த் துயரங்களைத் துடைக்குமாறு மந்திரங்கள் மூலம் தேவதைகளிடம் வேண்டுகிறான். கொள்ளை நோய்க் கட்டுப்படுத்தப்பட்டபின் வெள்ளாடு, பறவைகள், எருமை முதலிய விலங்குகளை அத்தேவதைக்குப் பலியிடுகிறான்."

பழங்குடிமக்களின் பலிகொடுக்கும் இவ்வழக்கத்தினைப் பற்றிக் குறிப்பிடும் ரமணராவ், பழங்காலத்தில் கொண்டர்களும் (Konds) லோயர்களும் (Loyas) மனிதர்களைப் பலியிட்டிருப்பதாகவும், தங்களது உடம்பைத் தாங்களே சிதைத்துக் கொள்வதும், சில உறுப்புக்களை வெட்டிப் பலிகொடுப்பதும் பழங்குடி மக்களிடையே வழக்கமாக இருந்துள்ளதாகவும் கூறியுள்ளார்.[78]

பழங்குடியினர் சிறிய காயங்களையும், வெட்டுக் காயங்களையும் எவ்விதச் சிகிச்சையும் செய்யாமல் தாமாகவே காயுமாறு விட்டுவிடுகின்றனர். ஆனால் மரம் மற்றும் மர உச்சிகளிலிருந்து விழுவதால் ஏற்படும் கடுமையான காயங்களுக்கு மட்டைக்கட்டுப் போடுதல், மூலிகைகள் ஆகியவற்றின் மூலம் சிகிச்சை செய்கின்றனர்.[79]

## குழந்தைப் பிறப்பும் பழக்கவழக்கங்களும்

கி.பி. 18ஆம் நூற்றாண்டில் தென்னிந்தியப் பழங்குடியினப் பெண்களின் பழக்கவழக்கங்கள் பற்றி ஆய்வு செய்வதற்கென கிறித்துவச் சமயக் குழுவொன்று இந்தியாவிற்கு வந்தது. இக்குழுவில் இடம்பெற்றிருந்த அப்பே ஜே.ஏ. டுபாய்ஸ் (Abbe J.A. Dubois) என்பவர் ஒரு அறிக்கை வெளியிட்டிருந்தார். அவரது கருத்துக்களின் அடிப்படையில் சாஸ்திரி என்பவர் "அப்பே ஜே.ஏ. டுபாய்ஸின் குறிப்புப்படி தென்னிந்தியர்களின் சுகாதாரப்

பழக்கங்கள்" (Health Habits of South Indians as recorded by Abbe J.A. Dubois) என்றொரு கட்டுரை எழுதியுள்ளார். அக்கட்டுரையில், தென்னிந்தியப் பழங்குடிப் பெண்கள் கர்ப்ப காலத்தின் போதும், பிரசவித்த பின்னரும் மேற்கொள்ளும் நடவடிக்கைகள், பிரசவம் பார்க்கும் பெண், மற்றும் குழந்தை பராமரிப்பு ஆகியவை பற்றி விவரித்துள்ளார்.[80] அழகான குழந்தையைப் பெறவிரும்பும் பெண் ஐயுறு நடத்தையுள்ள பெண்கள் மற்றும் குழந்தைகளை இழந்த பெண்கள் ஆகியோரின் மத்தியில் பழக அனுமதிக்கப்பட மாட்டாள்; அவள் துயரச்சிந்தனை எதுவுமின்றி சுதந்திரமாகச் செயல்பட வேண்டும்; பயங்கரமான காட்சிகளைப் பார்க்கக் கூடாது; சீரணிக்க முடியாத உணவுப் பண்டங்களை உண்ணக் கூடாது; இவ்விதி முறைகளை மீறினால் அவளது கர்ப்பம் குறைப் பிரசவமாக முடிந்து விடும்.[81]

மலபார் மலைகளின் தெற்குப் பகுதியில் வாழும் குரும்பர் இனப்பெண் பிரசவித்த நாளன்றே உணவு தேடி காட்டிற்குள் செல்கின்றாள். பிறந்த குழந்தைக்கு ஐந்தாவது அல்லது ஆறாவது நாளில் திட உணவு கொடுக்கப்படுகிறது. குழந்தை நடை பயிலத் தொடங்கும் வரை வெயில், மழை, காற்று ஆகிய எல்லாவற்றிலும் தாராளமாக விடப்படுகிறது.[82]

பிரசவம் பார்ப்பதில் தேர்ச்சிபெற்ற ஒரு பழங்குடியினப் பெண்ணே எல்லோருடைய பிரசவ காரியங்களையும் கவனித்துக் கொள்கிறாள். பிரசவம் எவ்வித சிரமுமின்றி சுமுகமாக நடந்தேறும் பட்சத்தில் அவளுக்கு வேலையெதுவும் இருக்காது.[83] சாஸ்திரியின் கணிப்புப்படி,[84] பிரசவம் பார்ப்பவள் பலவிதமான மந்திரங்கள் சொல்வதில் தேர்ச்சி பெற்றவளாயிருப்பாள். ஆகவே, பிரசவ நேரத்தில் நிகழக்கூடிய அபாயங்களை முன்னதாகவே தனது மந்திர சக்தியினால் அறிந்து தகுந்த நேரத்தில் பொருத்தமான மந்திரத்தை உச்சரித்து அந்த அபாயங்களைத் தடுத்துவிடுவாள். இவ்வாறு, பிரசவ நேரத்தில் மந்திரங்கள் சொல்வது, கடவுளைப் பிரார்த்திப்பது ஆகிய பழக்கங்கள் இன்றும் நடைமுறையி லுள்ளன. மதுரைப் பகுதியிலுள்ள **கப்பிலியன்** (Kappilian) என்னும் பழங்குடி இனப்பிரிவில், கர்ப்பிணிப் பெண் பிரசவிக்கும் முன் இறந்து போனால், அவளுடைய சடலத்தைப் புதைப்பதற்கு முன் அவளுடைய வயிற்றினின்றும் சிசுவை வெளியே எடுத்து விடும் வழக்கம் (ஆதிகால சிசேரியன் அறுவை சிகிச்சை முறை) இருந்துள்ளதாக ரமணராவ் குறிப்பிடுகின்றார்.[85]

சித்தூர் மாவட்டம் வாயில்பட்டி, கர்நூல், கடப்பா, கூடூர், நெல்லூர், செங்கல்பட்டு, சூலூர் பேட்டை, காளஹஸ்தி, வட, தென்ஆற்காடு மாவட்டங்கள் ஆகிய தென்னகப் பகுதிகளில்

பரவி வாழும் ஏனாதி (Yenadhi) என்னும் பழங்குடிப் பிரிவினர் தமிழ் நாட்டில் வில்லியர் என்றும் இருளர் என்றும் அழைக்கப் படுகின்றனர்.[86] தமிழ்நாட்டுப் பழங்குடி இனமக்களின் பழக்க வழக்கங்கள் பற்றி ஆய்வு செய்த பிலோ இருதயநாத் (Pilo-Irudayanath), இந்த ஏனாதி இனப்பெண்களின் பழக்க வழக்கங் களையும் செயற்பாடுகளையும் பற்றி விவரித்துள்ளார். அவருடைய கூற்றுப்படி, ஏனாதிப் பெண்ணிற்குத் திருமணமானவுடன், அவளது பாட்டி அவளுக்கு மருத்துவ முறைகளைக் கற்றுக் கொடுக்கிறாள்.[87] இவ்வினப் பெண்கள் பிரசவத்தின் போது மருத்துவமனையை நாடாமல் தாங்களாகவே பிரசவம் பார்த்துக் கொள்கின்றனர். பிரசவித்த பெண்ணிற்கு முளைகட்டிய ஈச்சமர விதைகளை உணவாகக் கொடுக்கின்றனர்.[88]

நீலகிரி மாவட்டத்திலுள்ள தோடர் இனப்பெண்கள் பற்றி பிலோ இருதயநாத் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.

பிரசவம் பார்க்கும் பெண் பிரசவிக்கும் பெண்ணின் கணவனைத் துணையாக அருகில் வைத்துக் கொண்டு பிரசவம் பார்க்கிறாள்.[89] ஆபத்தான சூழ்நிலையில், பிரசவம் எளிதாக இருக்கும் பொருட்டு மூன்று வகையான மூலிகை இலைகளைச் சேர்த்து அரைத்து கர்ப்பிணிப் பெண்ணுக்குக் கொடுக்கிறாள். ஆனால், அந்த மூலிகைகள் பற்றிய விபரம் எதையும் வெளியிட அந்தப் பழங்குடியினர் விரும்பவில்லையென்று பிலோ இருதயநாத் குறிப்பிட்டுள்ளார்.[90] பிரசவத்திற்குப் பின்னர், தாய்க்கு அரிசி உணவும் மிளகுரசமும் சுமார் 10 நாட்கள் வரை கொடுக்கப் படுகிறது. குழந்தைக்கு எந்த நோயும் அனுகாதிருக்க சுமார் 5 மாதங்கள் வரை தாய்க்குக் கட்டுப்பாடான உணவுகளே வழங்கப் படுகின்றன.[91]

நீலகிரி மலையிலுள்ள கோத்தர் இனமக்கள் பற்றித் தான் மேற்கொண்ட நேரடி ஆய்வின் அடிப்படையில் குணசேகரன் பின்வருமாறு விவரிக்கின்றார்.[92]

தோடர்கள் மற்றும் இருளர்களைப் போலவே கோத்தர்களும் கர்ப்பிணிப் பெண்களைத் தனிக்குடிசைகளில் வைத்துப் பராமரிக்கின்றனர். பிரசவத்திற்குப்பின் போதாஸ்பஸ் (Podhaspus) என்ற செடியின் இலையில் தயாரிக்கப்பட்ட கஷாயத்தைக் குடிக்கக் கொடுக்கிறார்கள். இரண்டு மாதங்கள் வரை இக்கஷாயத்துடன் வரகு அரிசிச் சாதத்தை உணவாகக் கொடுக்கின்றனர். இளம் தாய்மார்களின் உடம்பு வேகமாக வளர்ச்சியடையவும் உடல்நலம் துரிதமாகத் தேறவும் மான், முயல் மற்றும் வெள்ளாடு ஆகியவற்றின் உலர்ந்த இறைச்சியைப் போதாஸ்பஸ் கஷாயத்தில் சமைத்து உண்ணக் கொடுக்கின்றனர்.

ஏனாதி இனத்தில் பிரசவத்திற்குப் பின் இளந்தாய் பத்தாவது நாளில் மஞ்சள் மற்றும் சில மூலிகைககளை உடம்பில் தேய்த்து முதல் தடவையாகக் குளிக்கிறாள்.[93] சங்ககாலப் பெண்களின் பழக்கவழக்கங்களுள் ஒன்று பற்றி **நற்றிணை** யில் குறிப்பிடப்பட்டிருப்பதை இங்கு நினைவு கூர்வது பொருத்தமாக இருக்கும். பிறந்த குழந்தையைச் செவிலித் தாயின் பொறுப்பில் பாதுகாப்பாக விட்டுவிட்டு, இளந்தாயின் உடம்பில் நெய்யில் தோய்த்த வெண்கடுகு விதைகளைப் பூசிப்படுக்கையில் படுக்க வைப்பார்கள்.[94]

செஞ்சு மற்றும் காடர் இனப் பெண்கள் பற்றி ரமணராவ் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.[95]

பொதுவாக, பிரசவத்தின்போது கர்ப்பிணிப் பெண்ணுக்கு எந்த மருந்தும் கொடுப்பதில்லை. ஆனால் பிரசவத்திற்குப் பின் சில பட்டைகள், இலைகள், விதைகளைக் கொண்டு தயாரிக்கப் பட்ட கஷாயமும், சில சமயம் நாட்டு மதுவும் தாய்க்குக் குடிக்கக் கொடுக்கிறார்கள். குழந்தையின் உடம்பில் சுமார் ஒருமாத காலத்திற்கு ஆமணக்கு எண்ணெய் தடவி மஞ்சள் பூசுகின்றனர்.[96] இது போன்றதொரு வழக்கம் சங்ககால மக்களிடமும் இருந்துள்ளதென்பது **மணிமேகலை** என்ற காப்பிய நூலின் மூலம் தெரியவருகிறது.[97] மணிமேகலை தனது தோழி சுதமதியுடன் உவவனத்திற்குச் செல்லும் வழியில் குழந்தைகள் தங்கள் தலையுச்சியில் நெய்யுடன் வெண்கடுகு விதைகைளப் பூசிக்கொண்டு விளையாடிக்கொண்டிருப்பதைக் கண்டதாக மணிமேகலையில் கூறப்பட்டுள்ளது.

*"அய்யவி அப்பிய நெய்யணிமுச்சி"*

இதே காப்பியத்தில், பச்சிளங்குழந்தை தூங்கிக் கொண்டிருக்கும் அறையில் குழந்தையை நோய்கள் தொற்றா திருக்கவும், பிறகேடுகள் அணுகாதிருக்கவும் வெண்கடுகுப் புகை போடப்பட்டிருந்தது என்றும் கூறப்பட்டுள்ளது.[98]

இவ்வாறு, தற்காலப் பழங்குடியினரிடம் காணப்படும் சில பழக்கவழக்கங்களும் நடைமுறைகளும் சங்ககால மக்களிடமும் இருந்துள்ளனவென்று காணமுடிகிறது. இத்தகைய ஒற்றுமைகள் பரம்பரை பரம்பரையாக வம்சாவழி மூலம் தற்காலப் பழங்குடியினர் பெற்ற பழக்கவழக்கங்களின் விளைவாக இருக்க வேண்டும். எனவே, தற்காலப் பழங்குடிமக்களிடம் காணப்படுவதாக இதுகாறும் விவரிக்கப்பட்ட மருத்துவ முறைகள் யாவும் தென்னக ஆதிகாலப் பழங்குடி மக்கள்

பின்பற்றிய மருத்துவ முறைகளின் பிரதிபலிப்பாகும் என்று கருதுவது தவறாக இருக்க முடியாது.

ஆதிகால மனிதனைப் பற்றி லெஃப் (Leff) பின்வரும் கருத்தினை வெளியிட்டுள்ளார்.[99]

> "ஆதி மனிதனின் சிந்திக்கும் திறன் தற்கால மனிதனின் சிந்திக்கும் திறனைவிடக் குறைந்த தென மதிப்பிட முடியாது. ஆதிமனிதன் பெரும்பாலான நேரத்தையும் சக்தியையும் உணவைத் தேடுவதிலும் தன்னைச் சூழ்ந்து நிற்கும் ஆபத்துக்களினின்றும் தன்னைக் காத்துக் கொள்வதிலுமே செலவழிக்க வேண்டியிருந்தது. அவனுக்குப் பாரம்பரிய அறிவியல் ஞானமும் கிடையாது. அவனுடைய உணர்வுகளை விரிவுபடுத்தி அவன் கற்றவைகளைக் கட்டிக் காக்கத் தேவையான அறிவியல் கருவிகளும் கிடையாது. ஆயினும், நல்ல ஆரோக்கியத்தை நாடும் முயற்சியில் சில நேரங்களில் படிப்படியாகவும், சில நேரங்களில் மிகுந்த எழுச்சியுடனும் முன்னேற்றம் காணும் வகையில் ஆதிமனிதன் ஒரு முன்னோடியாகயிருந்து மிகவும் கடினமாகச் செயல்பட்டு வந்துள்ளான்."[100]

ஆதிகால மருத்துவத்தின் தரம் உலகெங்கும் ஒரே சீராக இருந்ததில்லை. ஆதி மனிதர்களின் சூழ்நிலை, வாழ்க்கை முறை மற்றும் மூலிகைகளின் கிடைப்புத் தன்மைகள் ஆகியவற்றிற் கேற்ப நாட்டுக்கு நாடு மாறுபட்டுக் கொண்டிருந்தது. எனவே, உலக நாடுகளில் மருத்துவத்தின் வளர்ச்சி முறைகளும் நாட்டுக்கு நாடு மாறுபட்ட நிலைகளில் இருந்தன. ஆகையால், எல்லா நாடுகளின் ஒட்டுமொத்த உலகின் மருத்துவ வளர்ச்சி பற்றி அறிந்து கொள்ள ஆழ்ந்த ஆய்வு தேவைப்படுகிறது. ஆயினும் இந்த ஆய்வின் நோக்கம் தென்னிந்திய மருத்துவ வரலாறு பற்றிய தென்பதால், உலகின் முக்கிய சில நாடுகளில் மருத்துவத்தின் வளர்ச்சி பற்றி மிகவும் சுருக்கமாக அடுத்துவரும் அத்தியாயத்தில் விவரிக்கப்பட்டுள்ளது.

## அடிக்குறிப்புகள்.....✍

1. A. Krishnaswamy Iyer, "A Study of the Ancient Indian Veterinary lore and its Possibilities for the future", **Dr. C. Kunhan Raja Presentation Vol. p. 340.**
2. **Ibid**, pp. 400-401.
3. ............................ **"Dutch writings of the 16th century on Indian Drugs".** B.I.I.H.M., Vol. 1, Nos. 3 & 4, July & Oct. 1971. p. 140.
4. P.C. Biswas, **"Santals of Santal Parganar",** Tribes of India, p. 64.
5. **Ibid.**
6. **Ibid.**
7. T.S. Tirumurthi, "A Brief Account of the History of Pathology - The Importance of the Study of 'History of Medicine' ", **The Madras Medical Journal,** Jan, 1939, p. 42.
8. A. Krishnaswamy Iyer, Op.cit. p. 401.
9. T.S. Tirumurthi, Op.Cit., p. 401.
10. **Lexicon Unviersal Encyclopaedia,** Vol. 18, 1984, p. 360.
11. **Encyclopaedia Britanica,** Vol. II, p. 93.
12. J. Alden Mason, **The Ancient Civilization of peru,** p. 22.
13. Kenneth G. Gysk. **"A Note on Ancient Indian Medicine",** B.I.I.H.M., Vol. VIII, Nos. 1-4, p. 22.
14. For details, Jivaka's Medical Treatments, refer Ch. 2, p. 77 of this work.
15. **Museum Guide,** pt. II, pp. 18-19.
16. Simon Casie Chitty. **The Tamil Plutarch.** Rev. Edn with notes by T.P. Meenakshi Sundaram; B.I.H.M. Vol. III, Nos. 1, Jan 1973, p. 41.
17. S. Leff and Vera Leff, **From Witchcraft to World Health,** p. 20.
18. **The World of Science Serial,** Vol. 5, p. 568.
19. A.K. Bag, **Science and Civlization in India,** p. 47.
20. S. Leff and Vera leff. **Op. cit.,** p. 21.
21. **Ibid.**

21 *அ.முரளீதரன், எஸ்.என்.,* **இந்து மதத்தின் இயற்கைக் களஞ்சியம்,** *பக். 197-198.*

22. Aletha Tavares, "Paleopathology - Its implications in Archaeology". **Spectrum of Indian Culture,** p. 189.
23. **Ibid.**

24. Kenneth A.R. Kennedy, "Skeletal Identification of Massacre Victims in Archaeological contexts - A Forensic Anthropological Approach", **Spectrum of Indian Culture,** p. 77.
25. **Ibid.**
26. **Ibid.**
27. Aletha Tavares, **op.cit.,** p. 189.
28. **Ibid.**
29. Kenneth A.R. Kennedy, **op.cit.,** p. 80.
30. **Ibid.**
31. Leff and Vera Leff, **op.cit.,** p. 21.
32. **Ibid.**
33. **Ibid.**
34. **Ibid.**
35. **Ibid.**
36. T.S. Tirumurthi, **op.cit.** p. 45.
37. H. Erwin, **A Short History of Medicine,** p. 34.

37அ.பவுன்துரை, *தமிழகப் பாறை ஓவியங்கள்,* ப. 101.

37ஆ. மேலது.

38. **Ibid.,** pp. 34-35.
39. Museum Guide, pt. II, pp. 18-19.
40. **Encyclopaedia Americana,** Vol. p. 561.
41. S. Leff and Vera Leff, **Op.cit.,** p. 12.
42. D. Sundaram, "Folk Medicine", **B.I.T.C.,** July-Dec., 1982, p. 57.
43. V. Karuppaiyan, 'Traditional Medicine in Folk Societies', **B.I.T.C.,** July - Dec. 1982, p. 50.
44. **Ibid,** p. 52.
45. **Ibid,** p. 53.
46. **Ibid.**
47. **Ibid.**
48. **Ibid.**
49. **Ibid.,** p. 55.
50. P. Tirugnana Sambandan, "VI Report of Seiminars", **B.I.T.C.,** July - Dec. 1982, p. 4.
51. **Ibid.,** p. 11.
52. **Ibid.,** p. 9.

53. D. Sundaram, **Op.cit.**, p. 58.
54. B.L. Raina, **Health Science in Ancient India**, p. 9.
55. V.V. Ramana Rao, **"Primitive Medicine"**, Regional Seminar cum workshop on History of Medicine in India. p. 118.
56. **Ibid.**, p. 119.
57. **Ibid.**, p. 118.
58. **Ibid.**
59. V. Gangadharan, P. Sudhakara Reddy & B.V. Subba Reddy, "Concept of Disease and Folk Theraphy in a village of Andhrapradesh". **B.I.I.H.M.**, Vol. VIII, Nos. 1-4, 1978, p. 47.
60. V.V. Ramana Rao, Op.cit, p. 118.
61. .................... **Tribes of India**, p. 151.
62. **Ibid.**
63. V.V. Ramana Rao, **Op.cit.** p. 118.
64. P. Hemalatha & B.V. Subba Reddy, "The Folk Medical Practices among a Tribe of Andrapradesh", **B.I.I.H.M.**, Vol. XII, 1982, p. 41.
65. **Ibid.**, p. 42.
66. V.V. Ramana Rao, Op.cit. p. 119.
67. **Ibid.**, pp. 118-123.
68. **Ibid.**, p. 121.
69. **Ibid.**
70. P. Hemalatha & B.V. Subba Reddy, **Op. cit.**, p. 43.
7!. **Encyclopaedia of the Folk Culture of Karnataka**, Vol. 1, p. 200.
72. V.V. Ramana Rao, **Op.cit.**, p. 121.
73. **Ibid.**
74. P. Hemalatha & B.V. Subba Reddy, **Op.Cit.**, p. 43.
75. V.V. Ramana Rao, **Op.cit.**, p. 123.
76. **Encyclopaedia of the folk culture of Karnataka**, Vol. I, p. 202.
77. V.V. Ramana Rao, Op.Cit.,
78. **Ibid.**
79. **Ibid.**, p. 120.
80. V.V.S. Sastry, "Health Habits of South Indians as recorded by Abbe J.A. Dubois", **B.I.H.M.**, Vol. X, pp. 85-89.
81. **Ibid.**, p. 87.
82. **Ibid.**, p. 85.
83. V.V. Ramana Rao, **Op. Cit.**, p. 119.

84. V.V.S. Sastry, **Op.Cit.**, p. 86.

85. V.V. Ramana Rao, **Op.Cit.**, p. 120.

86. *பிலோ இருதயநாத், ஆதிவாசிகள், ப. 8.*

87. It may be noticed that the home treatment or domestic medicine followed by the rural people of Tamilnadu is referred to by the term 'paatti vaidyam' (grand mother's medicine) implying that the knowledge of domestic medicine is gained by the process of inheritance through generations.

88. Pilo irudaynath, **Op. cit.**, p.12.

89. **Ibid.**, p. 68.

90. **Ibid.**

91. **Ibid.**

92. *குணசேகரன், கே.ஏ., தமிழக மலையின மக்கள், ப. 76.*

93. Pilo Irudayanath, **Op.cit.**, p. 13.

94. *நற்றிணை, பாடல் 370:2-5; 40:4-9.*

95. V.V. Ramana Rao, Op.cit. p. 119.

96. **Ibid.**

97. *மணிமேகலை, மலர்வனம் புக்க காதை, ப. 134.*

98. *மேலது, துயில் எழுப்பிய காதை, பக். 54-59.*

99. S. Leff & Vera Leff, **Op.Cit.**, p.22.

100. **Ibid.**, p. 25.



# அத்தியாயம் – 2

# உலக மருத்துவம்

அறிவியல்களுள் மிகப் பழமையானது மருத்துவம். மனித சமுதாயம் தோன்றிய நாள் முதல் மருத்துவக் கலை நடைமுறைப்படுத்தப்பட்டு வருகிறது. மருத்துவ வளர்ச்சியானது அதன் தொடக்க கால நிலையிலிருந்து இன்றைய முன்னேற்ற மடைந்த நிலைவரை படிப்படியாக வளர்ந்ததொரு செயலாக்க மாகும். எல்லா நாடுகளும் மருத்துவ வளர்ச்சிக்கான தங்கள் பங்குகளை வழங்கியது கிடையாது. மிகப்பழங்காலத்தில் சீனா, எகிப்து, மெசபொட்டோமியா, கிரீஸ் மற்றும் இந்தியா போன்ற நாடுகளில் மலர்ந்த தீவிர நாகரிக எழுச்சியின் காரணமாகவே மருத்துவக்கலை அதன் வளர்ச்சிப் பாதையில் முன்னேறத் தொடங்கியது. உலக அரங்கில் ஆதிகால மருத்துவத்தின் நிலை பற்றி முந்திய அத்தியாயத்தில் விவாதிக்கப்பட்ட நிலையில் இந்த ஆய்வின் பொருளுக்கு ஒரு முன்னுரையாகயிருக்கும் வண்ணம் மேற்கூறப்பட்ட நாடுகளில் மருத்துவக் கலையின் நிலை மற்றும் வளர்ச்சி பற்றி ஒரு சிறு குறிப்புரையாக இங்கு தரப்படுகிறது. இக்குறிப்புரையானது இந்தியா நீங்கலான நாடுகளில் மருத்துவ வளர்ச்சி, பண்டைய இந்திய மருத்துவம், மறுமலர்ச்சி மருத்துவம் என மூன்று பிரிவுகளின் கீழ் தரப்படுகிறது.

### *பிரிவு 1*

## உலக நாடுகளில் மருத்துவ வளர்ச்சி

**(இந்தியா நீங்கலாக)**

ஒவ்வொரு நாட்டிலும் அந்நாட்டிற்கே உரிய பழமையான மருத்துவமுறை பின்பற்றப்பட்டு வந்துள்ளது. ஆனால், ஒரு சில நாடுகள் மட்டுமே அறிவியல் பூர்வமான மருத்துவ அபிவிருத்தி முறைகளை மேற்கொண்டு முன்னேற்றமடைந்துள்ளன. சீனா,

எகிப்து, பாபிலோனியா, கிரீஸ் போன்ற நாடுகள் அங்கு நிலவி வந்த மருத்துவத்தின் தன்மைகள் மற்றும் அதன் வளர்ச்சிக்காக மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கைகள் ஆகியவற்றைத் தெரிவிக்கும் வகையில் சில வெளிப்பாடுகளை விட்டுச் சென்றுள்ளன. ஆதிகாலத்தில் மேலே குறிப்பிடப்பட்ட நாடுகளில் செயலாற்றி வந்த மருத்துவர்கள், மருத்துவ வளர்ச்சிக்காக அவர்கள் மேற் கொண்ட நடவடிக்கைகள், மாந்திரீகம், சமயம் ஆகியவற்றில் மக்கள் கொண்டிருந்த நம்பிக்கைகள், அந்த நம்பிக்கை களிலிருந்து மருத்துவத்தை விடுவிக்க ஆர்வமுள்ள மருத்துவர்கள் மேற்கொண்ட முயற்சிகள், மருத்துவப் பள்ளிகள், பல்கலைக் கழகங்கள் ஆகியவற்றின் நிர்மாணம், அக்கல்வி நிறுவனங்கள் தோற்றுவித்த மருத்துவ அறிஞர்கள் மற்றும் மருத்துவ வளர்ச்சிக்காக அவர்களாற்றிய தொண்டுகள் ஆகியவை பற்றி நாடு வாரியாக இப்பகுதியில் விவரிக்கப்பட்டுள்ளது.

## 1. சீன மருத்துவம்

உலகில் பெரும்பாலான நாடுகள் மூடநம்பிக்கைகளிலும், மாந்திரீக சிகிச்சை முறைகளிலும் மூழ்கிக் கிடந்த நிலையில் சீன மருத்துவ முறையானது கி.மு. 3000 ஆண்டுகட்கு முன்பிருந்தே அறிவியல் பூர்வமான வளர்ச்சியைக் கண்டிருந்தது. வழிவழியாக வந்த கதைகள் சொல்லும் தகவல்களின்படி, ஃபூ-ச்ஸி (Fu-Hsi) என்ற சீனச் சக்கரவர்த்தி (சுமார் கி.மு. 2900) **யங்-யின்** (Yang and Yin) எனும் மருத்துவத் தத்துவத்தைக் கண்டுபிடித்து சீன மருத்துவத்தை உருவாக்கினார். அவரைத் தொடர்ந்து **ஷென்-நுங்** (Shen-Nung சுமார் கி.மு. 2700) என்பவர் மருந்து பற்றிய அறிவியலையும் **அக்குபங்ச்சர்** (Accupuncture) எனும் மருத்துவ முறையினையும் உருவாக்கினார். **ஹுவாங்-தி** (Huang-Ti) என்பவர் **நீ-சிங்**[1] (Nei-ching) எனும் மருத்துவ நூலினை கி.மு. 2600ல் வெளியிட்டார். ஆயினும், சீனர் இரத்த வெளியேற்றத்தின் மீது தங்களுக்கிருந்த வெறுப்பின் காரணமாகவும், **இறப்பிற்குப் பின்னரும் கொலைப் பாவம் தொடரும்** என்ற கருத்தில் அவர்கள் கொண்டிருந்த ஆழ்ந்த நம்பிக்கையின் காரணமாகவும் அறுவைச் சிகிச்சைக் கலையின் வளர்ச்சியில் எவ்வித நாட்டமும் செலுத்தவில்லை.[2]

கிறித்துவ சகாப்தத்திற்கு முன் நிலையான நடைமுறை கொண்டிருந்த சீன மருத்துவம் **ஹன் சகாப்தத்தின்** போது (Han Dynasty: கி.மு. 206 - கி.பி. 270) மிகவும் பிரசித்தி பெற்று வளர்ந்து சுமார் கி.பி. 170ஐ அடுத்த காலகட்டத்தில் அதன் உச்சகட்டப்

புகழை அடைந்தது.[3] மேலே குறிப்பிடப்பட்ட **நீ–சிங்** (Nei-ching) என்பது தான் சீன மருத்துவத்தின் மிகத்தொன்மை வாய்ந்த நூலாகும். அதுவே இன்றும் சீன மருத்துவத்தின் மிகப்பெரிய அதிகாரப் பூர்வ நூலாகக் கருதப்படுகிறது.[4] பின்னாளில், **ஹார்வே** (Harvey)யின் கண்டுபிடிப்பான இரத்த ஓட்டச் சுழற்சி (Circulation of blood) பற்றிய கருத்தினை முன்பே அறிவுறுத்துவது போன்று இந்நூலில் இரத்த ஓட்டச் சுழற்சி பற்றிய கருத்து குறிப்பிடப்பட்டுள்ளது. பிற்கால இந்திய ஆசிரியரான **பவமிஸ்ரா** (Bhavamisra கி.மு. 1550) என்பவர் ஹார்வேயின் கண்டுபிடிப்புக்கு சுமார் நூறு ஆண்டுகளுக்கு முன்னதாகவே இரத்த ஓட்டச் சுழற்சி பற்றி விவரித்துள்ளதாக திருமூர்த்தி தெரிவிக்கின்றார்.[5]

கி.பி. இரண்டாம் நூற்றாண்டின் இறுதியில் புகழ் பெற்றிருந்த **சங்–சுங்–சிங்** (Chang-chung-ching) என்பவர் சீனர்களின் **ஹிப்போகிரேட்ஸ்** (Chinese Hippocrates) என்று அழைக்கப்பட்டார். சுமார் கி.பி. 280-ல் **மோ–சிங்** (Mo-ching) எனும் பழம்பெரும் நூலை எழுதிய **வங்–ஷு–ஹோ** (Wang shu-Ho) என்பவர் நாடித்துடிப்பு பற்றி எழுதியமைக்காக சீன மருத்துவர்களுள் மிகவும் சிறப்புப் பெற்றவராகப் போற்றப் பட்டார்.[6] அன்று முதல் கி.பி. 16ஆம் நூற்றாண்டின் மத்திய காலம் வரை சீன மருத்துவர்கள் மிகப்பெரிய அளவிலான கலைக் களஞ்சியங்களைத் தொகுப்பதிலும் பழைய மருத்துவ நூற்களுக்கு விளக்கவுரைகள் எழுதுவதிலும் பெரு முயற்சிகளில் ஈடுபட்டு வந்தனர்.

## பழங்கால சீன மருத்துவ சிகிச்சை முறைகள்

வரலாற்றுக்கு முந்திய காலம் முதல் சீனாவில் **மருந்தியல் முறை** (Materia Medica), **மாக்ஸிபுஷன்** (Moxibustion) மற்றும் **அக்குபங்ச்சர்** (Acupuncture) என மூன்று வித மருத்துவ முறைகள் பின்பற்றப்பட்டுவந்தன.

## மருந்தியல் முறை (Materia Medica)

சீன மருத்துவ முறையானது தாவர, விலங்கின மற்றும் தாதுப் பொருட்களினாலான மருந்துகளைக் கொண்டு அளிக்கப் படும் சிகிச்சை முறைகளை உள்ளடக்கியதொரு விரிவான மருத்துவ முறையாகும். **யங்** (Yang) மற்றும் **யின்** (Yin) என்னும் நீர்க்கூறுகளுக் கிடையே ஒழுங்குமுறைமையை நிலை நாட்டுவதற்காகவே மருந்துகள் பயன்படுத்தப்படுகின்றன. காயச்சலுக்கான குளிர்நீர்க் குளியல் எனும் நீர்மருந்துச் சிகிச்சையானது (Hydrotherapy

Treatment) கி.மு. 180-ல் சீனாவில் தோற்றுவிக்கப்பட்டது. மிகப் பழங்காலத்திலிருந்தே வைசூரிக்குத் தடுப்பூசி போடும் முறை சீனாவில் செயல்படுத்தப்பட்டு வந்தது.[7]

## மாக்ஸிபுஷன் (Moxibustion)

**மாக்ஸிபுஷன்** எனும் சிகிச்சை முறையில் ஒருவகை மர இலைகளின் தூளினால் செய்யப்பட்ட ஒரு ஈரமான கூம்பு உடம்பில் ஏதேனுமோர் இடத்தில் தோலின் மேல் வைக்கப்பட்டு எரிக்கப்படும். பின்னர் தோலில் தோன்றிய கொப்புளத்தினுள் எரிபட்ட கூம்பின் சாம்பல் அமுக்கிவைக்கப்படும். இது ஒரு கொடூரமான முறையாகும். மேலும் இந்த சிகிச்சையை ஏற்றுக் கொள்ள நோயாளிக்கு மிகுந்த சகிப்புத்தன்மை வேண்டும். இந்த சிகிச்சை பெரும்பாலும் **அக்குபங்க்ச்சர்** முறையுடன் சேர்த்துச் செய்யப்படுகிறது.[8]

## அக்குபங்க்ச்சர் (Acupuncture)

**அக்குபங்க்ச்சர்** எனும் இந்த முறையில்,[9] நோயினால் பாதிக்கப்பட்ட உறுப்பு அல்லது உறுப்புக்களைத் தாக்கும் வகையில் உடம்பில் தெரிவுசெய்யப்பட்ட சில புள்ளிகளில் கூர்மையான உலோக ஊசியினால் குத்தி, தோலினுள்ளேயிருக்கும் சதைப்பகுதி வரை செலுத்தப்படுகிறது. இவ்வாறு குத்தப்படும் ஊசி உடம்பின் **யங்-யின்** (Yang and Yin) நீர்க்கூற்றுப் பரவலைத் தாக்கி, சமனப்படுத்தி, பாதிக்கப்பட்ட உறுப்புக்களை இயல்பு நிலையில் இயங்க வைக்கிறது.

அகுபங்க்ச்சர் சிகிச்சை முறை கி.மு.2500 முதல் செயல் படுத்தப்பட்டு வருவதாகவும் அது சீனாவிற்கே உரிய சிறப்புமுறை என்றும் கூறப்படுகிறது.[10] **சீன அக்குபங்க்ச்சர் அறிவியல் ஆராய்ச்சி நிறுவனத்தில்** (Chinese Acupuncture Science Research Foundation) ஆராய்ச்சி உறுப்பினரான ரத்னவேலு (Ratnavelu) என்பவர் இக்கூற்றினை மறுத்து, இந்த அக்குபங்க்ச்சர் முறையானது தமிழ்நாட்டில் நினைவுக்கெட்டாத காலந்தொட்டு நடை முறையிலிருந்து வருகின்ற **அலகு குத்துதல்** என்ற சமயச் செயல்பாடேயன்றி வேறொன்றுமில்லை என்று கூறியுள்ளார்.[11]

## சீன அறுவை சிகிச்சை

சீனாவில் கி.பி. மூன்றாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் **ஹூவா-தோ** (Hua-To) என்பவர் அறுவை சிகிச்சை முறையினை



படம் 2அ
செக்கட் எனானாக் –
**Sekhet Enanach**
(முதல் மருத்துவர் – சுமார் கி.மு. 3004)

மாற்றியமைக்கத் தொடங்கினார்.[12] சணல் மற்றும் ஒயின் (Wine) என்னும் மதுவையும் கொண்டு நோயாளியை நினை விழக்கச் செய்து அவர் தமது அறுவை சிகிச்சையினை மேற் கொள்ளலானார். அவர் வயிற்றுப் புறத்தோலறுவை சிகிச்சை (Laparotomy), சிதைவுண்ட தசைப் பகுதிகளை அகற்றுதல் (Removal of Diseased Tissues) மற்றும் மண்ணீரல் அகற்றுதல் (Splenectomy) உள்ளிட்ட பல்வேறு அறுவை சிகிச்சைப் பணிகளில் ஈடுபட்டிருந்தார்.[13] அடி வயிற்றுக் குடற்பகுதிகளில் ஏற்படும் நோய்களைக் குணப்படுத்த உட்கிடப்பு உறுப்புக்களை (Viscera) அறுத்துச் சுத்தம் செய்யும் முறையினைப் பின்பற்றினார். அவர் நீர் மருத்துவ முறையில் (Hydrotheraphy) முன்னோடியாகத் திகழ்ந்ததுடன் இயன் மருத்துவத்திலும் (Physiotheraphy) புதிய மாற்றங்களைப் புகுத்தினார்.

## 2. எகிப்திய மருத்துவம்

மருத்துவ வரலாற்றில் முதல் மருத்துவர் என்று போற்றப்படுவர் எகிப்து நாட்டைச் சேர்ந்த **செக்கட் எனானாக்** (Sekhet Enanach : சுமார் கி.மு. 3000) என்பவராவார். அரசருடைய மூக்குத் துவாரங்களிலிருந்த நோயைக் குணப்படுத்தியமைக்காக இவருக்கு சிலைவைத்துக் கௌரவித்தார்கள்[14] (படம் 2அ) ஆனால், இவரினும் அதிகப் புகழுக்குரியவராகத் திகழ்ந்தவர் ஜோசர் மன்னரிடம் (King Zoser) உயர் அதிகாரியாகப் பணியாற்றிய **இமோதெப்** (Imhotep : கி.மு. 2980 - கி.மு. 2900) என்பவரேயாவார்.



*படம் 2ஆ*
படிக்கூர்ங்கோபுரம் (**Step-Pyramid**)

*இறந்த சடலங்களை வெகுகாலம் கெட்டுப் போகாமல் பாதுகாக்கும் சக்தி வாய்ந்த* **படிக்கூர்ங் கோபுரத்தை** (Step Pyramid) *இவர் வடிவமைத்தார்.*[15] *(படம் 2ஆ)*



படம் 2இ
இமோதெப் –
**Imhotep** (எகிப்திய
மருத்துவக் கடவுள்)

*அவர் ஒரு மருத்துவ நிபுணர் என்ற நிலையிலிருந்து, கிரேக்க மருத்துவக் கடவுளாக* **அஸ்கெலப்பியஸ்** (Askelepios) *இருப்பது போலும், இந்திய மருத்துவக் கடவுளாகத்* **தன்வந்த்ரி** (Dhanwantri) *இருப்பது போலும் எகிப்திய மருத்துவக் கடவுள் என்ற நிலைக்கு உயர்த்தி வணங்கப்பட்டார்.*[16] *(படம் 2இ)*

**காகுன் பாபிரஸ்** (Kahun Papyrus : *சுமார் கி.மு. 2000)* **எட்வின் ஸ்மித் பாபிரஸ்** (Edwin smith papyrus : *சுமார் கி.மு. 1600) மற்றும்* **'எல்பர்-ன்-பாபிரஸ்'** (Elber's Papyrus : *சுமார் கி.மு. 1500) என்ற பண்டைய எகிப்திய நாணற்புற்காகித*

ஏடுகள் அறிவியல்பூர்வமான மருத்துவம் பற்றிக் குறிப்பிடுகின்றன. ஆனால், பிற்றைய காலத்தைச் சேர்ந்த **லண்டன் பாபிரஸ்** (London Papyrus : கி.மு. 1350) மற்றும் **பெர்லின் பாபிரஸ்** (Berlin Papyrus : கி.மு. 1300) ஆகிய நாணற்புற் காகித மருத்துவ ஏடுகள் முற்றிலும் மாந்திரீகத் தன்மை கொண்டவையாகவுள்ளன.[17] எனவே, எகிப்திய மருத்துவமானது நாகரிகம் வளர்ச்சியடைந் திருந்த காலத்தில் அறிவியல் பூர்வமாக வளரத் தொடங்கிப் பின்னர் நாகரிகம் தேயத்தேய மாந்திரீக மருத்துவமாக மாறியிருக்கக் கூடுமென்று நம்ப இடமளிக்கிறது.

கி.மு. 3000-க்கு முன்னரே அறுவை சிகிச்சைக்கெனத் தனியாக முதல் அறுவைசிகிச்சை மருத்துவ ஏட்டினை எகிப்தியர்கள் தயாரித்திருந்தனர்.[18] கை, கால்களில் ஏற்பட்ட எலும்பு முறிவுகளைச் சீராக்கிக் குணமாக்க அவர்கள் மரக் கட்டைத் துண்டுகளைப் பயன்படுத்தியுள்ளனர். **சிறுநீரகக்கல் அறுவை சிகிச்சை** (Lithotomy), மற்றும் **இரத்தம் வடித்தல்** (Venesection) போன்ற அறுவை சிகிச்சைகளையும் கூட பண்டைய எகிப்தியர்கள் செய்துள்ளனர்.[19] ஆனால் மயக்க மருந்து பற்றிய அறியாமையின் காரணமாக அறுவை சிகிச்சையின்போது நோயாளியின் தலையில் சுத்தியாலடித்து அவனை உணர்விழக்கச் செய்துள்ளனர்.[20] ஆனால் பண்டைய இந்திய மருத்துவர்களோ, **மோகச் சூர்ணம்** (Mohachurna),[21] **சம்மோகினி** (Summohini)[22] என்ற உணர்விழக்கச் செய்யும் மருந்துகள் பற்றியும், **சஞ்சீபனி** (Sanjibani)[23] என்னும் உணர்வினைத் திரும்பப் பெறச்செய்யும் மருந்து பற்றியும் நன்கு அறிந்துள்ளனர்; மேலும், அவர்கள் துண்டிக்கப்பட்ட எலும்புகளை ஒட்டி இணைக்கக்கூடிய **சந்தான கரணி** (Santaana Karani)[24] என்னும் மூலிகையை அறுவை சிகிச்சைக்குப் பயன்படுத்தியுள்ளனர். பண்டைய கிரேக்கர்களும் ரோமானியர்களும் வலிகளிலிருந்து நிவாரணம் பெறவும், நோயாளிகளைத் தூங்க வைப்பதற்கும் மூலிகைகளைப் பயன்படுத்தியுள்ளனர்.[25]

## 3. பாபிலோனிய மருத்துவம்

எகிப்திய நாகரிகம் வளர்ச்சியடைந்திருந்த அதே காலத்தில் மெசபட்டோமியா (Mesopotomia)வில் திளைத்திருந்த நாகரிகம் பாபிலோனிய நாகரிகம் (Babylonian civilization) என அழைக்கப்பட்டது. மெசபட்டோமிய மருத்துவ ஏடுகள் நாணற் புற்காகித ஏடுகளைவிட நீண்டகாலம் அழியாமலிருக்கக்கூடிய களிமண் பலகைகளில் எழுதப்பட்டுள்ளன. பண்டைய



படம் 3அ
சுமேரியன் செய்திப் பத்திரம்
**(Sumerian Tabloid)**

மெசபட்டோமியப் பத்திரங்களுக்கிடையே காணப்பட்ட மருத்துவரின் முத்திரைகள் சுமேரியன் (Sumerian) சாம்ராஜ்யத்தில் கி.மு. 3000க்கும் முன்னால் மருத்துவர்கள் இருந்திருப்பதை வெளிப்படுத்துகின்றன. (படம் 3அ) பண்டைய சுமேரியன் நகரமான லகாஷ் (Lagash) எனும் இடத்தில் அகழ்ந்தெடுக்கப்பட்ட உருளை வடிவ முத்திரையானது லகாஷின் இளவரசர் "உர்-நிங்கிரு" (Ur-Ningiru) என்பவரின் தனிமருத்துவரான உர்-லுகல்-எடினா (Ul-Lugal-Edina) என்பவரின் முகவரிச் சீட்டு (Visiting card) என நிர்ணயிக்கப்பட்டுள்ளது.[26] (படம் 3ஆ) அந்த முத்திரையில்



படம் 3ஆ - ஒரு மருத்துவரின் முகவரிச் சீட்டு (சுமார் கி.மு. 2300)

மருத்துவக் கடவுள் தனது வலது கையில் மருந்துக் கிண்ணத்தை வைத்திருப்பது போன்றும், மற்றும் பல மருத்துவக் கருவிகளும், தூண்களின் மேல் இரண்டு பாத்திரங்களும் பொறிக்கப் பட்டுள்ளன.[27]

மந்திரஞ் சொல்லுதல், மந்திரச் சடங்குகள் மற்றும் ஈரல் குறி சொல்லுதல் (Liver Divination) ஆகியவை பாபிலோனிய மருத்துவத்தில் முக்கிய பங்கு வகித்துள்ளன. மனிதர்களுடைய நோயின் போக்கினை முன்னதாக அறிந்து சொல்ல, பாபிலோனியப் பூசாரிகள் ஒரு செம்மறியாட்டு ஈரலின் களிமண் வடிவத்தினைப் பயன்படுத்தி வந்தனர். உயிரோடுள்ள ஒரு செம்மறியாட்டின் மூக்குத் துவாரத்தினுள் நோயாளியை மூச்சுவிடச் சொல்வார். பின்னர் பூசாரி அந்தச் செம்மறியாட்டை வெட்டி, அதன் ஈரலை எடுத்து அதை மாதிரிக் களிமண் ஈரலில் குறிப்பிடப்பட்டுள்ள குறிகளுடன் ஒப்பிட்டுப் பார்த்து நோயின் குணமாகும் தன்மை பற்றி ஆராய்ந்து சொல்வார். இவ்வாறு ஈரல் மூலம் நோயின் தன்மையை அறிந்து சொல்லும் முறை **ஹெபடோஸ்கோபி** (Hepatoscopy) என்றழைக்கப்பட்டது.[28] இவ்வாறு ஈரல் குறி சொல்லுவதற்காகப் பயன்படுத்தப்பட்ட கி.மு. 3000-க்கும் முந்தைய செம்மறி யாட்டு ஈரல் களிமண் மாதிரி ஒன்று பாபி லோனியாவிலுள்ள ஒரு கோயிற் பள்ளியில் பத்திர மாக வைக்கப்பட்டு உள்ளது[29] (படம்: 3இ).



படம் 3இ
செம்மறியாட்டு ஈரலின் இரு களிமண் மாதிரிகள் (பாபிலோனியா)

ஆயினும், பாபிலோனியர்கள் அறுவைசிகிச்சையில் தேர்ச்சிபெற்றவர் களாகயிருந்திருக்க

வேண்டும். ஏனெனில், கி.மு. 2250இல் பாபிலோனிய மன்னர் **ஹம்முராபி** (Hammurabi) இயற்றிய **மன்னர் ஹம்முராபியின் கோட் பாட்டின்** (Code of King Hummu-rabhi) படி மருத்துவத் தொழில் சட்டபூர்வமாக்கப்பட்டுள்ளது. பாரிஸ் நகரில் **லூவ்ரா** (Louvra) அருங்காட்சியகத்தில் பாதுகாக்கப்பட்டு வரும் கல்தூண் கல்வெட்டுக்களில் இக்கோட்பாடு பொறிக்கப்பட்டிருப்பதைக் காணலாம் (படம் : 4அ).



படம் 4அ
மன்னர் ஹம்முராபியின் கோட்பாடு
**(Code of Hammurabi)**

தவறு செய்யும் மருத்துவர்களுக்கு அளிக்கப்பட வேண்டிய தண்டனைகள் இக்கோட்பாட்டில் பட்டியலிடப் பட்டுள்ளன. எடுத்துக்காட்டாக, உடம்பிலுள்ள சீழ்க்கட்டியினை அறுத்து சிகிச்சை செய்யும்போது நோயாளி இறந்துவிட்டாலோ அல்லது தவறான சிகிச்சையின் காரணமாக கண்ணோயாளி ஒருவன் தனது பார்வையை இழந்துவிட்டாலோ சிகிச்சை செய்த மருத்துவரின் கைகள் துண்டிக்கப்படும்.[30] இத்தகைய கொடூரமான தண்டனைகளின் காரணமாக பாபிலோனிய மருத்துவர்கள் நோயாளிகளுக்குச் சிகிச்சையளிக்க மிகவும் தயங்கியதோடல்லாமல், நோயாளிகளைத் தெருக்களில் ஆதரவற்ற நிலையில் விட்டுவிடுவார்கள். இவ்வாறு தெருவில் விடப்பட்ட நோயாளிகள் தெருவில் வருவோர் போவோரிட மிருந்து மருத்துவ ஆலோசனைகள் பெறவேண்டிய நிலை யிருந்தது. இவ்வாறான பரிதாப நிலைகளை விமர்சிக்கும் **ஹெரோடோட்டஸ்** (Herodotus) என்பவர் **ஒவ்வொரு பாபி லோனியனும் ஒரு பொழுதுபோக்கு மருத்துவன்** என்று கிண்டலாகக் கூறியுள்ளார்.[31] ஆனால் பிற்காலங்களில் கிரேக்கநாட்டில் **ஹிப்போகிரேட்ஸ்** (Hippocrates) மற்றும். இந்தியாவில் **சரகர்** (Charaka) உருவாக்கிய நன்னடத்தைக் கோட் பாடுகளில் (Code of conduct) இவ்வாறு தவறு செய்யும் மருத்துவர்களுக்கு எவ்விதமான தண்டனையையும் அறிவிக்க வில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

சிகிச்சைகளில் தவறும் அறுவை மருத்துவர்களுக்குக் கடுமையான தண்டனைகள் விதிக்கப்பட்டிருந்த போதிலும் மெசபட்டோமிய அறுவை மருத்துவர்கள் அறுவை சிகிச்சையில் மிகவும் தேர்ச்சி பெற்றவர்களாக இருந்திருக்க வேண்டும். ஏனெனில், இருவிளிம்பு அறுவைக் கத்தி (Double-edged-scalpel), ஒரு ரம்பம் (Saw), இரண்டு வெண்கலக் கத்திகள், ஒரு சிறு பளிங்குப் பாறைக்கத்தி (Obsidian knife) மற்றும் மண்டையோட்டுத் துளை யூசி (A trapan) ஆகிய அறுவை சிகிச்சைக் கருவிகள் மெசபட் டோமியாவில் மேற்கொள்ளப் பட்ட அகழ்வாய்வில் கிடைத் துள்ளனவென்பதே மேற்கூறப் பட்ட கூற்றிற்குச் சான்றாக அமைகின்றது (படம் 4ஆ).



படம் 4ஆ
பாபிலோனிய அறுவைச் சிகிச்சைக் கருவிகள்

எனவே, மிகவும் சிக்கலான அறுவை சிகிச்சைகளும் மெசபொட்டோமியாவில் செய்யப்பட்டிருக்க வேண்டும் என்பதற்கு இக்கருவிகளே சான்று பகர்கின்றன.[32]

## 4. கிரேக்க மருத்துவம்

பண்டைய கிரேக்க நாட்டின் மிகப்பெருமை வாய்ந்த மருத்துவர் **அஸ்கெலபியஸ்** (Askelepias) ஆவார். (படம் 5அ,ஆ)



படம் 5அ
கிரேக்க மருத்துவர்
அஸ்கெலபியஸ் (Askelepios)
(நோயாளியைப்
பரிசோதிக்கிறார்)



படம் 5ஆ
அஸ்கெல்பியசும் அவரது மகளும்



படம் 6அ
கிரேக்க மருத்துவக் கடவுள்
அஸ்கெலபியஸ் (**Askelepios**)

அவர் கி.மு. 1250-ல் பிறந்தார். நோய்களைக் குணமாக்கும் அவருடைய அற்புத சக்திகளின் காரணமாக அவர் மிகவும் பிரபல்யமானதுடன் **"கிரேக்க மக்களின் மருத்துவக் கடவுள்"** எனவும் ஆராதிக்கப்பட்டார்.[33] (படம் 6அ)

இவரைக் கௌரவிக்கும் வகையில் இவருக்காக நிர்மாணிக்கப்பட்ட கோயில் **அஸ்கெலபியன்** (Askelepion) என்றழைக்கப்பட்டது. நோயாளிகள் இக்கோயிலுக்குச் சென்று இரவில் தூங்குவார்கள்; கோயில் பூசாரிகள் அந்த நோயாளி

களுக்காகப் பிரார்த்தனை செய்வார்கள்; இரவில் அஸ்கெலபியஸ் அவர்களுடைய கனவில் தோன்றி அவர்களுடைய நோய்களுக்குத் தேவையான சிகிச்சை முறைகளைக் கூறுவார்; மறுநாள் தமது கனவில் அஸ்கெலபியஸ் கூறிய சிகிச்சை முறைகளைப் பூசாரியிடம் தெரிவிப்பார்கள்; அந்தப் பூசாரியும் அவ்வாறே சிகிச்சையளிப்பார்[34]

**ஏதன்ஸ்** (Athens) நகரிலுள்ள ஒரு அஸ்கெலபியன் கோயிலிலிருந்து கண்டெடுக்கப்பட்ட ஒரு பிரமாணப் பலகையில் குறிப்பிடப்பட்டிருந்த இரத்தம் வடித்தலுக்கான கிண்ணம் மற்றும் மருத்துவக் கருவிகள் (படம் 6ஆ) ஆகியவற்றி லிருந்து இரத்தம் வெளியேற்றும் முறையே அவர்களுடைய சிகிச்சை முறையில் முக்கிய பங்கேற்றிருக்க வேண்டுமென்று தெரிகிறது.[35] நோய் தீர்க்கும் இம்மாதிரியான **கோயில் தூக்கம்** (Temple Sleep) **இன்குபேஷன்** (Incubation) என்றழைக்கப்பட்டது. இம் மாதிரியான கோயில் தூக்கப்பழக்கம் மெசபோட் டோமியாவின் சமய வழிபாட்டில் முக்கிய பங்கு வகிக்கிறது.[36]



**படம் 6ஆ**
**அஸ்கெலபியஸ் ஆலயத்திலுள்ள அறுவைச் சிகிச்சைக் கருவிகள்**
**(ஏதன்ஸ்)**

இவ்வாறு கோயில் தூக்க முறையில் குணமடைந்தவர்கள் அஸ்கெலபியன் கோயிலுக்கு மாதிரி உருவங்களைக் காணிக்கை யாக வழங்கினர். எடுத்துக்காட்டாக, ஒரு நோயாளி தனது காலில்



படம் 7
அஸ்கெலபியஸ் கடவுளுக்குக் காணிக்கையாகச் செலுத்தப்பட்ட மாதிரிக் கால்

ஏற்பட்ட நோய் குணமானதற்கு அடையாளக் காணிக்கையாக அவருடைய காலின் மாதிரி உருவத்தை அஸ்கெலபியஸ் கடவுளுக்குச் செலுத்தியுள்ளார்.[37] (படம் 7)

இந்தியாவில் கூட இது போன்றதொரு 'கோயில் தூக்கம்' வழக்கத்தில் இருந்துள்ளது. **மாஸ்டர் ரால்ப் ஃபிட்ச்** (Master Ralph Fitch: கி.பி. 1583- கி.பி. 1591) எனும் ஆங்கிலேயப் பயணி எழுதியுள்ள குறிப்புக்களிலிருந்து வங்காளத்தில் மிகவும் கவலைக்கிடமான நிலையிலிருக்கும் நோயாளி, அவன் வழிபடும் தெய்வத்தின் கோயிலில், தெய்வத்தின் முன்னால் இரவில் படுக்கவைக்கப் படுவான் என்றும், அந்த இரவில் அவன் குணமடையாவிடில் மறுநாள் காலையில் அவனுடைய உறவினரும் நண்பர்களும் சேர்ந்து அவனை ஆற்றோடு போக விட்டுவிடுவார்கள் என்றும் தெரிய வருகிறது.[38]

மேலை நாடுகளுள் மருத்துவத்தில் இணைந்து கிடந்த மாந்திரீகத்தைப் பிரித்து மருத்துவத்தை அறிவியற் கலையாக மாற்றிய முதல் நாடு கிரேக்கமாகும். கி.மு. ஐந்தாம் நூற்றாண்டின் மத்தியில் **ஹிப்போகிரேட்ஸ்** (Hippocrates) என்னும் பிரபல மருத்துவர் தனக்கேயுரிய அறிவியல் பூர்வமான சிகிச்சை

முறைகளைப் பயன்படுத்தி பல பிரபலமான பெரியவர்களின் நோய்களைக் குணப்படுத்தியன் மூலம் பேரும் புகழும் அடைந்த போது மூடநம்பிக்கையின் அடிப்படையிலமைந்த மாந்திரீக சிகிச்சை முறைகள் பற்றிய கருத்துக்கள் மெதுவாக மறையத் தொடங்கின.

## ஹிப்போகிரேட்ஸ் (Hippocrates : கி.மு. 460 – கி.மு. 377)

நோயின் அறிகுறிகளைக் கண்டு நோயின் தன்மையை நிர்ணயிப்பதைவிட முன்கூட்டியே நோயின் போக்கினைக் கண்டறிந்து சிகிச்சையளிக்க வேண்டுமென்ற கருத்திற்கு முக்கியத்துவம் கொடுத்தவர் **ஹிப்போகிரேட்ஸ்**. (படம் 8அ)



படம் 8அ
ஹிப்போகிரேட்ஸ்

அவர் பிறந்த இடமான **காஸ்** (Kos) என்னும் தீவில் மருத்துவப் பயிற்சிக்கென ஒரு பள்ளியை நிறுவினார். நோயாளிகளை நன்கு கவனித்துப் பார்த்து சிகிச்சையளிக்கும் செய்முறைப் பயிற்சியின் அடிப்படையில் அங்கு மருத்துவக் கல்வி கற்பிக்கப்பட்டது.[39] மேலும் அவர் அங்கு ஒரு மருத்துவமனையையும் நிறுவினார். முதன்முதலாகத் தொடங்கப்பட்ட மருத்துவமனைகளுள் ஒன்றாக

அது கருதப்பட்டது. அவர் சிறுநீரகங்களிலும் சிறுநீரகப் பாதைகளிலும் ஏற்படும் கோளாறுகளைச் சிறுநீரைப் பரிசோதித்துப் பார்த்துக் கண்டறிந்தார். சிறுநீரகங்களில் ஏற்படும் கல்லடைப்புக்களை நீக்குவதற்கான அறுவை சிகிச்சை முறையினையும் அறிந்திருந்தார்.[40] எலும்பு முறிவுகள், மூலவியாதிகளுக்கான அறுவை மருத்துவம், சிறுநீரகக் கற்கள், தலையில் தோன்றும் அபாயகரமான கட்டிகள், கடுமையான காயங்கள் மற்றும் ஹெர்னியா (Hernia) போன்ற நோய்களுக்கான சிகிச்சைகள் ஹிப்போகிரேட்டிக் சிகிச்சை முறையில் அடங்கியுள்ளன.[41] போர்க்களத்தில் காயமுற்ற சிப்பாய்களுக்கு அவர்களுடைய சிப்பாய் நண்பர்களே சிகிச்சை யளித்தார்கள் என்ற விபரத்தி லிருந்து கிரேக்க நாட்டுச் சிப்பாய்கள் சாதாரண காயங்களுக்குச் சிகிச்சையளிப் பதில் தேர்ச்சி பெற்றிருந்தனர்[42] என்பது தெளிவாகிறது. (படம் 8ஆ)



படம் 8ஆ

"ஹிப்போகிரேட்ஸின் பிரமாணம்" (Oath of Hippocrates) என வழங்கப்படும் மருத்துவ நன்னடத்தைச் சாஸனமே (Charter of Conduct) ஹிப்போகிரேட்ஸ் மூலம் மருத்துவத் தொழிலுக்கு வழிவழியாகக் கிடைத்துவந்துள்ள மிகப்பெரிய செல்வமாகும். இந்தச் சாஸனமே இன்றுவரை பட்டமளிப்பு விழாக்களில் மருத்துவப் பட்டதாரிகளால் எடுத்துக் கொள்ளப்படும் தொழில் முறையிலான உறுதிமொழிக்கு ஆதாரமாக விளங்குகின்றது. மருத்துவத்தினின்றும் மாந்திரீகத்தையும் மூடநம்பிக்கைகளையும் களைந்தெடுப்பதில் ஹிப்போகிரேட்ஸ் ஆற்றியுள்ள தொண்டு மருத்துவ உலகிற்கு அவர் ஆற்றிய பெரு மதிப்புவாய்ந்த சேவையாகக் கருதப்பட்டு அவர் "**மருத்துவத்தின் தந்தை**" ("Father of Medicine")யாகக் கருதப்பட்டார்.[43]

ஹிப்போகிரேட்ஸுக்குப் பின்னர் மாந்திரீகமில்லா மருத்துவமுறை **அரிஸ்டாட்டில்** (Aristotle : கி.மு. 384 - கி.மு. 322) என்பரால் மேலும் முன்னேற்றமடைந்தது. அவர் மிகப்பெரிய உயிர் நூலறிஞர் (Biologist) ஆவார். "**ஒப்பீட்டு உடலியல் பகுப்பாய்வின் தந்தை**" ("Father of Comparative Anatomy") என்று கௌரவிக்கப்பட்டவர்.[44] **மாவீரர் அலெக்ஸாண்டரின்** இந்தியப் படையெடுப்பின்போது (கி.மு. 327) கிரேக்க நாட்டு அறுவை

மருத்துவர்கள் இந்தியாவிற்கு வந்து இந்திய மருத்துவம் பற்றிப் பெருமளவில் கற்றுச் சென்றனர். இந்திய மருத்துவர்களின் அபரிமிதமான மருத்துவத் திறனினாலும், பாம்புக் கடியை எளிதாகக் குணமாக்கும் அவர்களுடைய விஷவைத்தியத் திறனினாலும் பெரிதும் கவரப்பட்ட அலெக்ஸாண்டர் சில இந்திய மருத்துவர்களைத் தன்னுடன் கிரேக்க நாட்டிற்கு அழைத்துச் சென்றார்.[45]

அரிஸ்டாட்டிலுக்குப் பின்னர் கிரேக்கப் புண்பாடு கொஞ்சம் கொஞ்சமாக மறையத் தொடங்கியதும் எகிப்திலுள்ள **அலெக்ஸாண்ட்ரியா** (Alexandria) கல்விமையமாக மாறலாயிற்று. சுமார் கி.மு. 300-ல் **ஆர்க்மிடீஸ்** (Archmedes), **யூக்லிட்** (Euclid) ஆகியோரை ஆசிரியர்களாகக் கொண்டு அலெக்ஸாண்ட்ரியாவில் ஒரு பெரிய மருத்துவப்பள்ளி நிறுவப்பட்டது.[46] அரை மில்லியன் நூற்களைக் கொண்ட பெரிய நூலகம் ஒன்று அப்பள்ளியுடன் இணைக்கப்பட்டது. **ஹீரோஃபிலஸ்** (Herophilus) என்பவர் அப்பள்ளியின் மிகச்சிறந்த ஆசிரியராவார். தூக்கிலிடப்பட்ட ஒரு குற்றவாளியின் உடலைக் கொண்டு அலெக்ஸாண்ட்ரிய மக்களின் முன்னிலையில் முதன்முதலாக மனித உடல் அறுவை ஆய்வினை மேற்கொண்டவர்.[47] உடலியல் பற்றி அவர் எழுதிய ஆய்வேடுதான் அதுபோன்ற ஏடுகளுள் முதன்முதலாக வெளிவந்ததாகும். எனவே, அவர் "**அறிவியல் உடற்கூற்று நிறுவனர்**" ("Founder of Scientific Anatomy") என்று கௌரவிக்கப் பட்டார்.[48] **ஏராஸிஸ்ட்ரேட்டஸ்** (Erasistratus) என்னும் மற்றொரு ஆசிரியர் **உணர்ச்சியூட்டும் நரம்புகளுக்கும்** (Sensory Nerves), **தசையியக்கத்தைத் தூண்டும் நரம்புகளுக்கும்** (Motor Nerves) இடையிலான வேறுபாடுகளை எடுத்துக்காட்டினார். எனவே அவர் "**உடலியலின் நிறுவனர்**" ("Founder of Physiology") எனக் கருதப்பட்டார்.[49]

சுமார் கி.மு. 50ல் எகிப்து ரோம சாம்ராஜ்யத்துடன் இணைக்கப்பட்டது. கி.மு. 30ல் **கிளியோபாட்ரா** (Cleopatra) மறைவுக்குப் பின்னர் அலெக்ஸாண்ட்ரியா அதன் முக்கியத் துவத்தை இழந்தது. அத்துடன் மருத்துவத்துறையின் வருங்காலம் ரோமாபுரியைச் சென்றடைந்தது.[50]

## 5. ரோமன் மருத்துவம்

ரோமர்கள் நடைமுறைச் சாத்தியத்தைக் கடைப் பிடிப்பவர்கள். தங்களுடைய நகரத்தை மிகவும் சுகாதார அடிப் படையில் பாதுகாத்து வந்தவர்கள். அவர்கள் செயல்படுத்திய

கழிவு நீரகற்றும் செயல்முறைகள் மலேரியா என்னும் தொற்று நோய் பரவுவதைக் குறைக்கப்பெரிதும் உதவியது.[51]

## பண்டைய ரோம் நகரின் மருத்துவமனைகள்

ரோமாபுரியில் மருத்துவர்களின் இல்லங்கள் தேவைக்கு மேல் சில அறைகளைக் கொண்டவையாக அமைந்திருந்தன. கவலைக்கிடமான நிலைகளில் வருகின்ற நோயாளிகள் இவ்வறைகளில் உள்-நோயாளிகளாக (In-Patients) அனுமதிக்கப் பட்டுச் சிகிச்சையளிக்கப்பட்டனர். அநேகமாக, இதுவே பழங் காலத்திய மருத்துவமனைகளின் அமைப்பாக இருக்கக்கூடும்.[52] **பாம்ப்பேய்** (Pompeii) என்னுமிடத்தில் அகழ்ந்தெடுக்கப்பட்ட ஒரு மருத்துவரின் இல்லத்தில் நோயாளிகள் காத்திருப்பதற்கென ஒரு அறை, அறுவை சிகிச்சை செய்வதற்கென ஒரு அறை மற்றும் நோயாளிகளுக்கு உணவளிப்பதற்கென ஒரு அறை ஆகியவை இருந்துள்ளதாகக் கண்டறியப்பட்டுள்ளது.[53] இதுவே மேற்கூறப் பட்ட கூற்றுக்குச் சான்றாக அமைகின்றது.

மருத்துவருக்குரிய கட்டணத்தைச் செலுத்தமுடியாத நோயாளிகளுக்கென ரோமானியர்கள் பொதுக்கட்டிடங்களைப் பொது மருத்துவமனைகளாக (General Hospital) அமைத்திருந்தனர். இப்பொது மருத்துவமனைகளில் பணியாற்றிய மருத்துவர் களுக்கு அரசாங்கம் ஊதியம் வழங்கிவந்தது.

## ரோமானிய அறுவை சிகிச்சைக் கருவிகள்

அறுவை சிகிச்சைக் கருவிகள் தயாரிப்பில் ரோமானியர்கள் மிகவும் தேர்ச்சியுற்றிருந்தனர். அறுவை மருத்துவ அரம் (Scalpers), காயங்களைச் சோதிக்கப் பயன்படும் தட்டையான சலாகைகள் (Flat probes), உள்நாக்கினைப் பரிசோதிக்க உதவும் கருவி (Uvula), எலும்புகளை இறுக்கிப் பிடிக்க உதவும் பற்றுக் குறடுகள் (Bone-forceps), முரட்டு அரம் (Rasp), அறுவைக் கத்தரிக்கோல் (Surgical Scissors) முதலான 200 வகை அறுவை மருத்துவக் கருவிகள் **பாம்ப்பேய்** (Pompeii)யில் மேற்கொள்ளப்பட்ட அகழ்வாய்வின் போது அகழ்ந்தெடுக்கப்பட்டுள்ளன. இவற்றுள் கர்ப்பிணிப் பெண்களின் உடலுக்குள் உள்ள உடற்குழிவுகளை விரிவுப் படுத்திக் காட்டும் 'ஸ்பெகுலம்' (Speculum) என்ற கருவியும் ஒன்றாகும்.[54] இவ்வாறு கண்டெடுக்கப்பட்ட கருவிகளுள் பெரும் பாலானவை வெண் கலத்தினால் (Bronze) செய்யப்பட்டவை யாகும். மருந்துகள் செம்புக் கிண்ணங்களில் (Copper Bowls) பத்திரப்படுத்தி வைக்கப்பட்டுள்ளன.[55] இந்த அறுவை மருத்துவக் கருவிகள் யாவும் பிரிட்டிஷ் அருங்காட்சியகத்திலும், நேப்பிள்ஸ

(Naples), ஓஸ்தியா (Ostia) மற்றும் லேத்தரன் (Lateran) ஆகிய இடங்களிலுள்ள அருங்காட்சியகங்களிலும் வைத்துப் பாதுகாக்கப்பட்டு வருகின்றன.[56]

பாம்ப்பேய்யிலுள்ள ஒரு சுவர்-சித்திரத்தில் போரில் காயமுற்ற ஒரு போர்வீரனின் காலிலிருந்து ஒரு அம்பு முனையினை இடுக்கியினால் வெளியில் எடுக்கின்ற அறுவை சிகிச்சை முறை விளக்கப் பட்டுள்ளது. (படம் 9அ)



படம் 9அ
அம்புமுனைக் காயத்திற்குச் சிகிச்சை (பாம்ப்பேய் - Pampeii)

ஒரு நோயாளியின் உடம்பிலிருந்து குருதி வடித்தெடுப்பது போன்ற ஜாடி ஓவியம் ஒன்றும் காணப்படுகிறது (படம் 9ஆ)

பண்டைய கிரேக்க நாட்டிலும் ஹெலனிஸ்டிக் (Hellenistic) கால கி.மு. ஐந்தாம் மற்றும் நான்காம் நூற்றாண்டுகளில் மருத்துவர்கள் வேலை தேடியும் அதிக அளவில் பணம் தரக்கூடிய நோயாளிகளைத் தேடியும் இடம்விட்டு இடம் அலைந்தார்கள் என்று ஜான் ஸ்கார்பரோ (John Scarborough) என்பவர் குறிப்பிட்டுள்ளார்.[57]



படம் 9ஆ குருதி வடித்தல் (ஜாடி ஓவியம்)

கிரேக்க மருத்துவர்கள் முதன் முதலில் அவர்களுடைய மருத்துவத் தொழிலை ரோமாபுரியில் தொடங்கினார்கள். கி.மு. 219-ல் ரோமாபுரியில் மருத்துவத் தொழில் புரிந்து வந்த ஒரு கிரேக்க மருத்துவர் அவருடைய முரட்டுத்தனமான அறுவை சிகிச்சையின் காரணமாக **கசாப்புக்காரன்** (Butcher) என்ற பொருளில் **கார்ம்ஃபெக்ஸ்** (Cormfex) என்ற பட்டப்பெயரால் அழைக்கப்பட்டார்.[58]

ஹெலனிஸ்டிக் மருத்துவர்களின் இத்தகைய பரிதாப கரமான நிலைமையைப் பற்றி விமர்சிக்கும் **ஸ்கார்பரோ** (Scarborough) பின் வருமாறு குறிப்பிடுகின்றார்:

"கி.மு. 146ல் ஹெலனிஸ்டிக் மருத்துவர்கள் ரோமாபுரிக்கு அடிமைகளாகக் கொண்டுவரப்பட்டனர். அவர்களுள் உயர் கல்வியுடன் நன்கு தேர்ச்சிபெற்ற திறன்மிகு அடிமை மருத்துவர் களை ரோமானியப் பிரபுக்கள் அதிகவிலை கொடுத்து வாங்கித் தங்களுடைய சொந்த மருத்துவர்களாக வைத்துக் கொண்டனர். இவர்களுள் பெரும்பாலோர் நாளடைவில் விடுதலை பெற்றுத் தங்களது மருத்துவத் தொழிலைச் சுதந்திரமாகச் செய்துவந்தனர்."[59]

ரோம் நகரில் சிகிச்சைக்கு நோயாளிகளைப் பெறுவதில் மருத்துவர்களிடையே கடுமையான போட்டி நிலவி வந்தது. நன்கு தேர்ச்சி பெற்ற திறன்மிகு மருத்துவர்களைப் பிரபுக்கள் தங்களது குடும்ப மருத்துவர்களாக அமர்த்திக் கொண்டனர். ஆனால், நன்கு தேர்ச்சி பெறாத தரம் குறைந்த மருத்துவர்களோ நோயாளிகளைப் பெறுவதற்காக நகரத்தின் கூட்டம் மிகுந்த பகுதிகளில் உரக்கப் பேசி மக்களைக் கவர்ந்திழுக்க வேண்டிய நிலையிலிருந்தனர்.[60] இத்தகைய போட்டிகளின் காரணமாகப் பணக்கார நோயாளிகளைச் சிகிச்சைக்கென கவர்ச்சிகரமான விலைக்கு விற்கும் பழக்கம் நிலிவிவந்தது. எடுத்துக்காட்டாக, ரோம் நகரில் ஒரு மருத்துவர் தன்னிடம் சிகிச்சை பெற்றுவந்த ஒரு பணக்கார நோயாளியை மற்றொரு மருத்துவருக்கு இரண்டு லட்சம் **செஸ்டர்ஸ்** (Sester : An ancient Roman coin : 1 sester = 2 pennys)[61] பெற்றுக் கொண்டு விற்றுவிட்டார்.[62] **மோனிபியர்** (Monibiur) என்னும் மருத்துவர் ஒரு நோயாளியின் உடம்பில் ஏற்பட்ட தழும்புகளைக் குணமாக்க 20,000 செஸ்டர்ஸ்களுக்கு ஒப்புக் கொண்டுள்ளார். காலன் (Galen) என்னும் மிகவும் பிரபலமான மருத்துவர் கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் ரோம் நகரில் உயர் அதிகாரியிடமிருந்து அவரது மனைவியின் நோயைக் குணப் படுத்த 400 தங்கக் கட்டிகளை ஊதியமாகப் பெற்றுள்ளார்.[63]

## மருத்துவர்களின் மதிப்பும் மரியாதையும்

பண்டைய ரோமாபுரியில் சிகிச்சைக்கென நோயாளிகளைப் பெறுவதில் கடும்போட்டி நிலவிய போதிலும் தேர்ச்சியும் திறமையும்பெற்ற மருத்துவர்கள் சமுதாயத்தில் புறக்கணிக்கப்படவில்லை. ரோம சாம்ராஜ்யத்தில் ஒவ்வொரு நகரிலும் குறைந்தது ஒரு மருத்துவர் நகரத்திலேயே தங்கியிருந்து சிகிச்சையளித்து வந்தார். நகரத்திலேயே தங்கியிருந்து மருத்துவத் தொழில் புரிய வேண்டுமென்ற நிபந்தனையுடன் அந்த மருத்துவருக்கு நகர மக்கள் ஆண்டுதோறும் மாற்றியமைக்கக் கூடியவகையில் சம்பளம் கொடுத்து வந்தனர். ஆயினும் அவர் தனிப்பட்ட முறையிலும் தனது மருத்துவத் தொழிலை நடத்தித் தன் மருத்துவப் பணிக்கான ஊதியத்தை வசூலித்துக் கொள்ளவும் அவருக்குச் சுதந்திரம் அளிக்கப்பட்டிருந்தது.[64]

மருந்துகள் தயாரிப்பு வசதிகளுடன் அமைந்த ஒரு மருந்தகம், (படம் 10அ) ஊட்டச்சத்துக் குறைவுடனும் ஊதிய வயிற்றுடனும் பாதிக்கப்பட்ட ஒரு நோயாளியை ஒரு மருத்துவர் பரிசோதிப்பது, (படம் 10ஆ) கண்ணோயினால் அவதிப்படும் ஒரு பெண்ணின் கண்களைப் பரிசோதிக்கும் மருத்துவர் (படம் 11அ) மற்றும் நோயுற்ற கண்களுக்குக் களிம்பு பூசுவது (படம் 11ஆ) போன்ற சிற்பச் சான்றுகளும் நினைவுச் சின்னங்களாகக் கிடைத்துள்ளன. இச்சிற்பங்கள் யாவும் இறந்தவர்களுக்கான நினைவுச் சின்னங்களாகையால் அந்நாளில் மருத்துவர்களின் சேவைகளை நினைவு கூறும் பொருட்டு அவர்களுடைய நினைவுச் சின்னங்களையெழுப்பி அவர்களைக் கௌரவித்து உள்ளனர் என்பதை வெளிப்படுத்துகின்றன.[65]

அலெக்ஸாண்ட்ரியா பள்ளியில் முறைப்படுத்தப் பட்ட கல்வி புகுத்தப்பட்ட போது மருத்துவர்களின் தகுதி நிலை (Status)யும் உயர்த்தப்பட்டது. கி.மு. 46இல் ஜூலியஸ் சீஸர் (Julius Caesar) எல்லா நாட்டு மருத்துவர்களுக்கும் குடியுரிமை மற்றும் நகர உரிமை வழங்கிய போது மருத்துவர்களின் தகுதிநிலை மேலும் உயர்ந்தது.[66] ரோம ராணுவத்தில் படைத்துறைப் பதவி வகிக்காத உயர்நிலை அதிகாரிகளுக்கு இணையான தகுதி நிலையை மருத்துவர்கள் பெற்றிருந்தனர்.[67]

**ஔலஸ் கார்னெலிஸ் செல்ஸஸ்** (Aulus Carnelis Celsus : கி.மு. 25 - கி.பி. 50) என்பவர் எழுதிய **டிஸி மெடிக்கா** (DC Medica) என்னும் குறிப்பேடுதான் ரோமானிய மருத்துவம் பற்றிய சிறந்த நூலாகக் கருதப்படுகிறது. இதுவே அச்சிடப்பட்ட முதல்



படம் 10அ
பண்டைய ரோமன்
மருந்தகம்



படம் 10ஆ
நோயுற்ற சிறுவனைப்
பரிசோதிக்கும் கிரேக்க
மருத்துவர்



படம் 11அ
ஒரு பெண்ணின் கண்ணைப்
பரிசோதிக்கும் ரோமன்
மருத்துவர்




படம் 11ஆ
நோயாளியின் கண்ணுக்கு ரோமன்
மருத்துவர் மருந்திடுதல்

மருத்துவ நூலாகும். மிகவும் பயனுள்ள நோய்தீர்க்கும் மருந்துகளின் பட்டியலுடன் கலைக் களஞ்சியம் போன்ற அமைப்பிலுள்ளது.[68] அவருடைய மறைவுக்குப் பின் நோய்களின் தன்மைகள் பற்றி எழுந்த சர்ச்சைகள் யாவும் **காலன்** (Galen) என்பவரால் ஒரு முடிவுக்கு வந்தது.

### கிளாடியஸ் காலன் (Gladius Galen : கி.பி. 130 – கி.பி. 200)

பெர்காமம் (Pergamum) என்ற ஊரைச் சேர்ந்த கிளாடியஸ் காலன் என்பவர் ஹிப்போகிரேட்ஸின் மருத்துவ முறையில் பயிற்சி பெற்றவர். ரோமாபுரியில் மிகவும் முக்கியத் துவம் வாய்ந்த **யூடெமஸ்** (Eudemus) என்பவரின் நோயினை, மற்ற எல்லா மருத்துவர்களும் கைவிட்ட நிலையில் குணப்படுத்தி அதன் மூலம் ஒரு கீர்த்திமிக்க மருத்துவராகத் தன் புகழை நிலைநிறுத்திக் கொண்டார்.[69] அவர் மனிதக் குரங்கு களையும் பன்றிகளையும் அறுத்து உடலியல் பகுப்பாய்வு செய்து தனது கண்டுபிடிப்புக்களை மனித இனத்துக்குரியவையாக ஏற்றிக் கூறினார். அவருடைய உடலியல் விளக்கங்கள் தவறான கருத்துக் களைக் கொண்டிருந்தன. இருதயமானது 'தணிந்தும் விரைந்தும் இயங்கி இரத்த ஓட்டத்தை இயக்குவதாக விவரித்தார்; ஆனால் அவருக்கு இரத்த ஓட்டச் சுழற்சி பற்றிய கருத்து எதுவும் கிடையாது. அவருடைய மருந்து தயாரிப்புக்களும் நம்பத் தக்கவையாயில்லை. அவரால் பரிந்துரைக்கப்பட்ட பல மூலிகை மருந்துகள் கேடு விளைவிப்பவையாயிருந்தன. மிகுந்த போராட்டத்திற்கிடையே அவர் தனது இலட்சிய நூலான முழுமையான மருத்துவக் கலைக் களஞ்சியத்தை எழுதி முடித்தார்; ஆனால், அது மிகுதியான பிழைகளைக் கொண்டதாகக் கண்டறியப்பட்டது. "நோய்க்கும் பரிகாரத்திற்கு **மிடையே கடவுள் விதித்த சரியீடு**" என்ற காலனது மருத்துவத் தத்துவம் ஆலயங்களினால் அங்கீகரிக்கப்பட்டு, மருத்துவத்தின் மிகப்பெரிய ஆணையுரிமை பெற்றவராக அவர் ஆனது மட்டுமன்றி, பல நூற்றாண்டுகட்கு அவரது பிழைபட்ட கருத்துக்கள் மறுப்பேதுமின்றி ஏற்றுக் கொள்ளப்பட்டன.[70]

## 8. மருத்துவத் துறையின் இருண்ட காலம்

தொடர்ந்து வந்த ஆண்டுகளில் மேற்கத்திய மருத்துவ உலகில் ரோம சாம்ராஜ்யத்தில் ஏற்பட்ட பேரிடர் மற்றும் நிலைதடுமாற்றம் காரணமாக, ஒரு கடுமையான பின்னடைவு ஏற்பட்டது. போரினாலும், நிலநடுக்கம் மற்றும் கொள்ளை நோய்கள் போன்ற பேரிடர்களினாலும் ஆயிரக்கணக்கான

மக்கள் உயிரிழந்தனர். அலெக்ஸாண்ட்ரியாவிலுள்ள பெரிய நூலகம் கி.பி. 391-ல் அதன் மதிப்புமிக்க எழுத்துப் பிரதிகளுடன் எரியூட்டப்பட்டது.[71] பழைய காலத்திய படிப்பினைகள் யாவும் ஒரேயடியாக அழிக்கப்பட்டுவிட்டன. அத்துடன் மேலைநாட்டு மருத்துவத்தின் இருண்ட காலம் ஆரம்பமாயிற்று. அதன்பின்னர், ஐரோப்பிய நாடுகளில் மருத்துவத் துறையில் எவ்வித முன்னேற்றமோ, வளர்ச்சியோ ஏற்படவில்லை.[72] கி.பி. 1453-ல் கான்ஸ்டான்டி நோபிளைத் துருக்கி கைப்பற்றும் வரை இந்நிலை நீடித்தது. அதுவரை காலனின் நூல் சுமார் 1200 ஆண்டு காலம் பிழையற்ற நூலாகக் கருதப்பட்டு வந்தது.

இந்திய மருத்துவ உலகமும் கி.பி. 455-ல் **தட்சசீலம்** (Taxila) பல்கலைக்கழகம் அழிக்கப்பட்டபோதும்,[73] பின்னர் கி.பி. 1193-ல் **நாளந்தா** (Naalanda) பல்கலைக் கழகம் அதன் பெரிய நூலகத்துடன் **பக்தியார்கில்ஜி** (Bakhtiar khilji)யால் எரிக்கப்பட்ட போதும்[74] இத்தகைய மோசமான நெருக்கடிக்குள்ளாகி இருக்கின்றது.

மேலைநாட்டு மருத்துவம் எவ்வித முன்னேற்றமுமின்றி இருளில் மூழ்கிக் கிடந்த போதிலும் மருத்துவக் கல்வியானது முற்றிலும் ஒதுக்கப்படவில்லை. கி.பி. நான்காம் நூற்றாண்டில், இத்தாலியில் முதல் கிறித்துவ மருத்துவப் பள்ளி **சாலெர்னோ** (Salerno) எனுமிடத்தில் நிறுவப்பட்டது. கி.பி. 12-ஆம் நூற்றாண்டில் அது நலிவடையத் தொடங்கியதுவரை அந்தப் பள்ளி உயர் மருத்துவக் கல்வி மையமாகத் தழைத்தோங்கி இருந்தது. அது நலிவுற்றபோது **பாரிஸ் பல்கலைக்கழகம்** (University of Paris : கி.பி. 1110), **பொலோனா பல்கலைக்கழகம்** (University of Bologna : கி.பி. 1113), **ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகம்** (Oxford University : கி.பி. 1167), **மான்டிப்பெல்லியர் பல்கலைக் கழகம்** (University of Montepellier : கி.பி. 1181), மற்றும் **பதுவா பல்கலைக்கழகம்** (University of Paduva : கி.பி. 1222) போன்ற பல முக்கியத்துவம் வாய்ந்த மருத்துவக் கல்விமையங்கள் புகழ்மிக்கப் பல்கலைக் கழகங்களாகத் தழைத்தோங்கி வளரத் தொடங்கின.[75] இவற்றுள் பொலோனா பல்கலைக்கழகம் அதன் மாணவர் கழகத்தின் நிர்வாக முறையினால் தனிச்சிறப்புப் பெற்றுத் திகழ்ந்தது. கடுமையும் கெடுபிடியும் நிறைந்த விதிமுறைகளுடன் மாணவரின் முன்னிகழ்வாதாரமற்ற ஆட்சித்திறனும் சேர்ந்து பொலோனாவின் அறிவுத்திறன் பெருமைக்குக் காரணமாக அமைந்தன.[76] பொலோனா பல்கலைக்கழகம் உடலுறுப்பு அமைப்பியல் (Anatomy) துறையில் மருத்துவத்திற்குப் பெருமளவில் பங்களித்துள்ளது. **மான்டினோ டி லஸ்ஸி**




படம் 12
உடல்கூறு அமைப்பியல் வகுப்பறை
(கி.பி. 1493 ஓவியம்)

(Mondino de Luzzi : கி.பி. 1270 - 1326) என்பவர் உடலுறுப்பு அமைப்பியல் ஆய்வில் பொலோனாவின் முன்னோடியாகக் குறிப்பிடப்பட்டவர். அனாத்தோமியா (Anathomia) என்ற அவருடைய நூல் சுமார் 250 ஆண்டுகட்கு அத்துறை சார்ந்த மாணவர்க்குப் பைபிளாக (Bible) இருந்து வந்தது.[77] கி.பி. 1493-ல் பதிப்பிக்கப்பட்ட இந்நூலின் பிரதியில் காணப்படும் விளக்கப் படத்தில் (படம் 12) உடலுறுப்பு அமைப்பியல் பற்றிய வகுப்பறை ஒன்றில் மருத்துவர் நாற்காலியில் அமர்ந்திருக்க, அவருடைய உதவியாளர் மரத்தில் செதுக்கப்பட்ட மாதிரி உடலின் உறுப்புக்களைக் காட்டி மருத்துவரின் உரைக்கு விளக்கம் அளிப்பது போன்று சித்தரிக்கப்பட்டுள்ளது.[78]

இத்தகைய புகழ்வாய்ந்த பல்கலைக் கழகங்களின் தோற்றம் மறுமலர்ச்சிக் காலத்தில் அறிவியல் பூர்வமான மருத்துவ முன்னேற்றத்தை மீண்டும் பெறத் துணை புரிந்திருக்க வேண்டும்.

# பிரிவு 2

## இந்திய மருத்துவம்
## (தென்னிந்தியா நீங்கலாக)

சுமார் 3000 ஆண்டுகளுக்கு முன்னரே இந்திய நாகரிகம் மிகவும் சிறப்பு வாய்ந்ததாகயிருந்ததென்பது மோகன்-ஜோ-தாரோ - ஹரப்பா பகுதிகளில் மேற்கொள்ளப்பட்ட அகழ்வாய்வுகளின் மூலம் தெரியவருகிறது. சிந்துவெளிப் பகுதிகளில் நன்கு முறைப் படுத்தப்பட்ட நகராட்சி நிர்வாகம் இருந்திருக்க வேண்டும் என்றும் பொது நலம் மற்றும் கழிவு நீரகற்றல் ஆகியவற்றில் சிறப்புக் கவனம் செலுத்தப்பட்டிருக்க வேண்டுமென்றும் அகழாய்வில் கண்டெடுக்கப்பட்ட அடையாளச் சின்னங்கள் வெளிப்படுத்துகின்றன. அக்கால மக்கள் உயர்நாகரிகமும் கலாச்சாரமும் கொண்ட வாழ்க்கை முறையைப் பின்பற்றி வாழ்ந்திருக்க வேண்டும் (படம் 13அ).



படம் 13அ
மோகன்-ஜோ-தாரோ - வடிகாலமைப்பு

மோகன்-ஜோ-தாரோ - ஹரப்பா அகழாய்வில் கண்டெடுக்கப்பட்ட பொருட்களுள் சவக்காரக் கல்லில் செதுக்கப்பட்ட முத்திரையும் ஒன்று. அந்த முத்திரையில் ஒற்றைக் கொம்புடன் கூடிய ஒரு வினோதப் பிராணியின் (Unicorn) உருவம் பொறிக்கப்பட்டுள்ளது (படம் 13ஆ).





படம் 13ஆ
ஒற்றைக் கொம்பன் முத்திரைகள் (Uniocorn Seals)

இந்த மிருகத்தை அரிஸ்டாட்டில் (Aristotle) என்பவர், **"இந்தியக் கழுதை"** (Indian Donkey) என்று வர்ணித்துள்ளார். இதன் கொம்பு சகலவிதமான நோய்களையும் தீர்க்கக்கூடிய **'சகல ரோக நிவாரணி'** (Cure for all ills) என்று கருதப்பட்டது.[1]

நாகரிகம் தான் மருத்துவ வளர்ச்சிக்கு ஆதாரமாக இருந்துள்ளது என ரோமானிய மருத்துவம் பற்றிய ஆய்வின் போது காணப்பட்டது. எனவே, இந்திய மருத்துவமும் சிந்து வெளி நாகரிகக் காலந்தொட்டு வளர்நிலை பெற்றிருக்க வேண்டும். ஆனால் போதிய தகவல்களும் ஆதாரங்களும் இல்லாமையால் **ஆயுர்வேதம்** (Ayurveda) தோன்றுவதற்கு முந்திய இந்திய மருத்துவம் குறித்துத் தெளிவாகக் கூறமுடியவில்லை. கி.மு. எட்டாம் நூற்றாண்டு வரை வேதகால மருத்துவம் நடை முறையிலிருந்ததாகத் தெரிகிறது. எனவே அதன் பின்னர்தான் ஆயுர்வேத மருத்துவ முறையின் அமைப்பிற்கான ஆதாரங்கள் நிறுவப்பட்டிருக்க வேண்டும்.

மருத்துவ வளர்ச்சிக்குத் துணைபுரியும் அடிப்படைக் காரணிகளுள் மிகவும் முக்கியமானது மருத்துவக் கல்வி வழங்குவதாகும். இந்தியாவில் இந்த மருத்துவக் கல்வி வசதிகள் கி.மு. ஆறாம் நூற்றாண்டுக்கு முன்பே மிகவும் திருப்திகரமான முறையில் அமைந்திருந்தன. கம்பில்யா (Kampilya), வாரணாசி (Varanasi), தட்சசீலம் (Taxila) ஆகிய இடங்களில் மருத்துவக் கல்வி

நிறுவனங்கள் இயங்கி வந்துள்ளனவென்பதே இதற்குச் சான்றாகும்.

அறிவியற் கொள்கைகளின் அடிப்படையில் தனக்கே உரிய முறைமைகளுடன் **மருத்துவ ஸம்ஹிதா** (Medical Samhita)க்களை வெளியிட்டதன் மூலமும் மருத்துவக் கல்வியை வழங்கியதன் மூலமும் மருத்துவ அறிவியலுக்கு இந்தியா மகத்தான சேவையினை வழங்கியுள்ளது. மிகவும் உயர்தரமான மருத்துவக் கோட்பாடுகளையும் விதிமுறைகளையும் ஒழுங்கு முறைப்படுத்தியுள்ளது. இந்திய மருத்துவ வளர்ச்சிக்கு புத்த சமயம் பெருமளவில் பங்காற்றியுள்ளது. நோயின் அறிகுறிகளை முன்கூட்டியே கண்டறியும் நிமித்த முறைகளையும் நோய்களை அறுதியிடும் வகையீடுகளையும் மிகவும் உயர்தர ரீதியில் இந்தியர்கள் வளர்ச்சியடையச் செய்துள்ளனர்.

அறுவை சிகிச்சையில் இந்தியர்கள் மிகவும் தேர்ச்சி பெற்றிருந்தனர். **வயிற்றுப் புறத்தோலில் செய்யப்படும் அறுவை சிகிச்சை** (Laparotomy), **சிறுநீரகக் கல்லகற்றும் அறுவை சிகிச்சை** (Lithotomy), மற்றும் **ஒட்டுறுப்பு அறுவை சிசிச்சை** (Plastic surgery) ஆகியவற்றில் இந்திய மருத்துவர்களின் ஆற்றல் மிகவும் பாராட்டற்குரியதாயிருந்தது. இந்திய ஒட்டுறுப்பு அறுவை சிகிச்சையின் மாதிரிகளே பத்தொன்பதாம் நூற்றாண்டின் ஒட்டுறுப்பு அறுவை சிகிச்சைக்குத் தூண்டுதலாக இருந்தது என்று **பக்ச்சி** (Bagchi) என்பவர் குறிப்பிட்டுள்ளார்.[2]

எனவே, தென்னிந்தியா நீங்கலான இந்திய மருத்துவ வளர்ச்சி பற்றி ஒரு தெளிவான ஆய்வினை மேற்கொள்ள வேண்டுமாயின் ஆயுர்வேதத்தின் தோற்றம், மருத்துவ ஸம்ஹிதாக்களின் தோற்றத்தின்மூலம் ஏற்பட்ட மருத்துவ வளர்ச்சி, இந்திய மருத்துவ வளர்ச்சிக்கு புத்த சமயம் ஆற்றிய தொண்டு, மௌரிய, சுங்க-குஷானா, குப்தர்களின் காலங்களில் இந்திய மருத்துவத்தின் வளர்ச்சி, மருத்துவ நிலையங்கள் மற்றும் மருத்துவக் கல்வி மையங்களின் செயல்பாடுகள் முதலியவை பற்றிய ஆய்வு மிகவும் அவசியமாகிறது. இவைபற்றிய விவரங்கள் யாவும் இப்பகுதியில் சுருக்கமாக விவாதிக்கப்பட்டுள்ளன. இந்திய மருத்துவத்திற்குக் கடுமையான பின்னடைவை ஏற்படுத்திய **யுனானி** (Unani) மற்றும் ஐரோப்பிய மருத்துவ முறைகளின் நுழைவு வரையிலான இந்திய மருத்துவ வளர்ச்சியின் தன்மைகளை இவ்விவாதங்கள் வெளிப்படுத்துகின்றன.

## 1. வேதகால மருத்துவம்

இந்திய மருத்துவத்தின் தொடக்க கால விவரங்கள் யாவும் மிகவும் ஆழமாகத் தொல்பழமையில் புதையுண்டு கிடக்கின்றன. வேதகால இந்திய மருத்துவம் சுமார் கி.மு. 800 வரை நடை முறையில் இருந்து வந்தது. பிற நாட்டவர் போன்றே ஆதிகால இந்தியர்களும் 'பாவமே நோய்க்குக் காரணம்; பாவமன்னிப்பே அதற்குரிய நிவாரணம்" என்ற கருத்தில் ஊறிப் போயிருந்தனர். வேதகால மருத்துவமானது, குறிப்பாக ரிக் வேதம் மற்றும் அதர்வண வேதம் ஆகியவற்றினின்றும் பெறப்பட்ட தாகும். ரிக் வேதத்தில் காய்ச்சல், எலும்புருக்கி (T.B.) போன்ற நோய்களுக்கான சில பாசுரங்களும் அதர்வண வேதத்தில் நோய் நிவாரணத்திற்காகப் பிரார்த்திக்க வேண்டிய பாசுரங்களும் இடம்பெற்றுள்ளன.[3]

வேதகாலத்தைத் தொடர்ந்து கி.மு. 800 முதல் கி.பி. 1000 வரையிலான காலம் "**இந்திய மருத்துவத்தின் பொற்காலம்**" என்று கருதப்படுகிறது. மருத்துவ ஸம்ஹிதாக்கள், குறிப்பாக அக்னி வேசர், சுசுருதர், சரகர் ஆகியோரின் ஸம்ஹிதாக்களின் தாக்கங்களே இதற்குக் காரணமாகும்.

## 2. ஆயுர்வேதத்தின் தோற்றம்

ஆயுர்வேதத்தின் தோற்றம் பற்றி மரபுவழிச் செய்திகள் பின்வருமாறு கூறுகின்றன. **உயிர் அறிவியலை** (Science of Life) **பிரம்மா** தனது நினைவுகளிலிருந்து படைப்புக் கடவுளாகிய **தக்ஷபிரஜாபதிக்குக்** (Daksha Prajapati) கற்பித்தார். (படம் 14அ)



படம் 14அ – பரத்வாஜர்



படம் 14ஆ
தன்வந்த்ரி–இந்திய மருத்துவ கடவுள் (சிதம்பரம் ஆலயம்)

தக்ஷபிரஜாபதி தான் பெற்ற மருத்துவ ஞானத்தை வேத மருத்துவர்களான அசுவினி குமாரர்களுக்குக் (Aswini Kumars) கற்பிக்க, அசுவினி குமாரர்கள் அம்மருத்துவ ஞானத்தை இந்திரனுக்கு அளித்தனர். இந்திரன் தான் பெற்ற மருத்துவ அறிவியலை ஆத்ரேய புனர்வசு (Atreya Punarvasu) மூலம் பரத்வாஜருக்கும் (Bharatwaja), அறுவை சிகிச்சை அறிவியலை தேவ மருத்துவராகிய (Physician of Gods) தன்வந்த்ரிக்கும் அளித்தார்.[4] (படம் 14ஆ)

ஆத்ரேயர் தான்பெற்ற மருத்துவ ஞானத்தை கி.மு. எட்டாம் நூற்றாண்டில் அவருடைய சீடர்களுக்குக் கற்பித்தார்.[5] அச்சீடர்கள் தொகுத்தெழுதிய ஆய்வேடுகளுள் அக்னி வேசர் (Agnivesa) எழுதியதே மிகவும் சிறந்ததாகக் கருதப்பட்டு அக்னிவேச தந்த்ரா (Agnivesa Tantra) என அங்கீகரிக்கப்பட்டது. இவ்வாறு மருத்துவத்தை முறையாகக் கற்பித்த முதல் ஆசிரியராக ஆத்ரேயர் விளங்கியதால் அவர் 'இந்திய மருத்துவத்தின் தந்தை'[6] (Father of Indian Medicine) என்று கௌரவிக்கப்பட்டார் (படம் 14இ).



படம் 14இ
ஆத்ரேயர்
(இந்திய மருத்துவத் தந்தை)

சுமார் கி.மு. 500-ல் தன்வந்த்ரி அறுவை மருத்துவம் பற்றிய தனது ஞானத்தைத் தனது சீடராகிய **சுசுருதருக்கு** (Susruta)க் கற்பித்தார். சுசுருதர் தான் கற்ற அறுவை மருத்துவ ஞானத்தை எல்லாம் தொகுத்து **சுசுருத தந்த்ரா** (Susruta Tantra) என்ற பெயரில் ஆய்வேடாக வெளியிட்டார்.[7]

பின்னர் கி.பி. முதல்/இரண்டாம் நூற்றாண்டில் **அக்னி வேசதந்த்ரா சரகர் (Charaka)** என்பவரால் "சரக ஸம்ஹிதா" (Charaka Samhita) என்ற பெயரில் திருத்தி வெளியிடப்பட்டது.[8] (சரகரின் காலம் பிரச்சினைக்குரியதாகவுள்ளது). பின்னர் அது **திருதபாலர்** (Dradabala) என்னும் காஷ்மீர மருத்துவரால் புதுப்பிக்கப்பட்டு கி.பி. மூன்றாம், நான்காம் நூற்றாண்டுகளுக்கிடையில் வெளிடப்பட்டது.[9] **சுசுருத தந்த்ரா** என்பது நாகார்ஜுனா (Nagarjuna) என்பரால் உத்தர தந்த்ரா (Uttara Tantra) என்ற துணைநிரப்புப் பகுதியுடன் **சுசுருத** ஸம்ஹிதா என்ற பெயரில் வெளியிடப்பட்டது.[10] நாகார்ஜுனாவின் காலம் பற்றி பலவாறான கருத்துக்கள் நிலவிய போதிலும், அவர் கி.மு. இரண்டாம் நூற்றாண்டுக்கும் கி.பி. நான்காம் நூற்றாண்டுக்கும் இடைப்பட்ட காலத்தைச் சேர்ந்தவர் என்பதில் பொதுவான ஒருமித்த கருத்துக்கள் உள்ளன.[11]

இவ்வாறு மருத்துவ ஆய்வேடுகளாக வடித்து உருவாக்கப்பட்ட மருத்துவக் கலை, பல சிறப்பம்சங்களுடன் கிளைத்தெழுந்து முறைப்படுத்தப்பட்டதொரு மருத்துவக் கலையாக வளர்ச்சியடைந்தது. இதன் விளைவாக, கம்பில்யா (Kampilya)வை மையமாகக் கொண்டு **ஆத்ரேயா மருத்துவப் பள்ளி** (Atreya School of Physicians)யும் வாரணாசி (காசி)யை மையமாகக் கொண்டு தன்வந்த்ரி அறுவை மருத்துவப் பள்ளி (Dhanwantri School of Surgeons)யும் நிறுவப்பட்டன.[12] சரகர் மற்றும் சுசுருதர் ஆகியோரின் இரு ஸம்ஹிதாக்களும் இரு முக்கிய ஆயுர்வேத ஸம்ஹிதாக்களாகக் கருதப்பட்டன. இவற்றுள் சரக ஸம்ஹிதா உடல், உள மருத்துவத்திற்கும், சுசுருத ஸம்ஹிதா அறுவை மருத்துவத்திற்கும் முக்கியத்துவம் அளிக்கின்றன.

இவ்வாறு மருத்துவ ஸம்ஹிதாக்களைத் தொகுத்தவர்களின் வரிசையில் கடைசியாக வருபவர் கி.பி. ஏழாம் நூற்றாண்டைச் சேர்ந்த **வாக்பட்டர்** (Vagbhata) ஆவார். இவர் தனது தொடக்கக் காலத்தில் **அஷ்டாங்க சங்கிரஹா** (Ashtaanga Sangraha) என்ற மருத்துவ நூலையும் இறுதிக் காலத்தில்

அஷ்டாங்க ஹிருதயா (Ashtaanga Hrdya) என்ற மருத்துவ நூலையும் தொகுத்து வெளியிட்டார்.[13] அஷ்டாங்க ஹிருதயத்தில் மருந்து, நோய்தீர்க்கும் கலை (Therapeutics), சுகாதாரம், உடலுறுப்பு அமைப்பியல் (Anatomy), அறுவை மருத்துவம் (Surgery), கண் மருத்துவம் (Opthalmology), நோய்க்குறியாய்வு (pathology) மற்றும் தாய்மை மருத்துவம் (Obstetrics) ஆகியவை பற்றிச் சுருக்கமாக ஆராயப்பட்டுள்ளது.[14] ஆத்ரேயர், சுசுருதர், வாக்பட்டர் ஆகிய மூவரும் இந்திய மருத்துவ வளர்ச்சிக்கு முக்கிய ஆதாரமாகத் திகழ்ந்தனரென்பதால் இவர்கள் மூவரும் "இந்திய மருத்துவத்தின் மாபெரும் மூவர்" (Great Trio) என்ற பாராட்டிற்குரிய முப்பெரும் மருத்துவ அறிஞர்களாகக் கருதப்படுகின்றனர்.[15]

## 3. மருத்துவத் துறையில் புத்தமதத்தின் பங்களிப்பு

இந்திய மருத்துவத்தின் பரிணாம வளர்ச்சியில், மாந்திரீக சமய மருத்துவத்திற்கும், அறிவியல் பூர்வ மருத்துவத்திற்கு இடையே புத்த சமயம் ஒரு பாலமாக அமைந்து செயலாற்றி உள்ளது. புத்த சமயம் கி.மு. 6ஆம் நூற்றாண்டில் கௌதம புத்தரால் தோற்றுவிக்கப்பட்டது. புத்தருடைய காலத்தில் தட்சசீலமும், வாரணாசியும் (காசி) இரு மருத்துவக் கல்வி மையங்களாக விளங்கி வந்தன. இவற்றுள் வாரணாசி மிகத் தொன்மை வாய்ந்ததாகவும் அறுவை மருத்துவத்திற்குத் தனி முக்கியத்துவம் அளிப்பதாகவுமிருந்தது.[16] புத்தரே ஒரு சிறந்த மருத்துவராகவும் (Physian - Bhisakko), அறுவை மருத்துவராகவும் (Surgeon - Sallakatta) இருந்திருக்கிறார். அவருடைய தாக்கத்தினால் இந்திய மருத்துவ அறிவியல் மிகவும் செழித் தோங்கியது.

### மௌரியர் கால மருத்துவம்

'மௌரியர் காலத்தில் இந்திய மருத்துவம் அதன் உச்ச நிலையை அடைந்தது. சந்திரகுப்தமௌரியரின் (Chandragupta Maurya : கி.மு. 324 - கி.மு. 300) காலத்தில் மருத்துவப் பராமரிப்புக்கும், சுகாதாரத்திற்கும் சிறப்புக் கவனம் செலுத்தப் பட்டது. ஏழை மற்றும் ஆதரவற்ற நோயாளிகளுக்கென இலவச மருத்துவமனைகள் இருந்தனவென்று ஃபாஹியான் (Fa-Hien) குறிப்பு மூலம் தெரியவருகிறது. மனிதர்களுக்கும், விலங்குகளுக்கும் மருத்துவ வசதிகள் அளிக்கப்பட்டிருந்தனவென்றும், மருத்துவமனைகளில் தேர்ச்சிபெற்ற மருத்துவர்கள் நியமிக்கப் பட்டிருந்தனரென்றும் மௌரியப் பேரரசர் அசோகரின் பாறைச்



படம் 15
அசோகரின் பாறைச் சாசனம் (கிர்னார்)

சாசனம் (Rock Edict II கி.மு. 3ஆம் நூற்றாண்டு) தெரிவிக்கின்றது[17] (படம் 15). மருத்துவ நிவாரண அமைப்பு நிறுவப்பட்டு அதன்கீழ் 500க்கு மேற்பட்ட மக்கட் தொகை கொண்ட ஒவ்வொரு சிற்றூரிலும் ஒரு மருத்துவருடன் கூடிய மருத்துவமனையொன்று நிறுவப்பட்டது. உள்ளூர் மருந்தகங்கள் அமைக்கப்பட்டு அவற்றில் அத்தியாவசிய மருந்துகள் யாவும் சேமிப்பாகப் பத்திரப் படுத்தி வைக்கப்பட்டன.

முதியோர், ஊனமுற்றோர், ஆதரவற்றோர், கர்ப்பிணிப் பெண்கள் மற்றும் அவர்களுடைய குழந்தைகள் ஆகியோரின் பராமரிப்புக்கென வசதிகள் செய்யப்பட்டிருந்தன. நகரப் பகுதிகளில் மருத்துவமனைகள், மருந்தகங்கள், மருந்து தயாரிப்பகங்கள், மருந்துச் சேமிப்புக் கிடங்குகள் ஆகியவற்றைக் கொண்டமைந்த சுகாதார மையங்களும் மருத்துவச் சேவை நிலையங்களும் நிறுவப்பட்டிருந்தன. மருத்துவத் தொழிலை அரசாங்கம் ஒழுங்குமுறைப்படுத்திக் கட்டுப்படுத்தியது. சட்டத்திற்குப் புறம்பாக மருத்துவத் தொழில் புரிந்தவர்கள் கடுமையாகத் தண்டிக்கப்பட்டனர். சந்தேகத்திற்குரிய இறப்புக் களுக்கும், நச்சு இறப்புக்களுக்கும் சவப்பரிசோதனை கட்டாய மாக்கப்பட்டது.[18]

அசோகருக்குப் பிந்திய காலங்களிலும் மருத்துவத் துறையானது நிறுவன அமைப்பு முறையில் விரிவுபடுத்தப்பட்டு ஒழுங்குபடுத்தப்பட்டது.[19] ஆந்திரப்பிரதேசம் நகார்ஜுன கோண்டாவிலிருந்த மருத்துவமனை புத்தமடாலயத்தைச் சார்ந்த ஒரு பகுதியாகும்.[20] அதுகாறும் சிறிய அளவில் சங்கரமா (Sangharama) என்ற அமைப்பில் நாளந்தா (Naalanda)வில் செயல் பட்டு வந்த கல்வி நிலையம் புத்தர்களின் காலத்தில் மிகவும் வளர்ச்சியடைந்து ஒரு சர்வதேசப் பல்கலைக்கழகமாக மாறியது.[21]

### சுங்க – குஷானர் கால மருத்துவம்

மௌரியர்களைத் தொடர்ந்து கி.மு. 184க்கும் கி.மு. 73க்கும் இடைப்பட்ட சுங்கர்களின் காலத்தில், புஷ்யமித்ரசுங்கர் (Pushyamitra Sunga) பெரும்பாலான புத்தமடங்களை அழித்தார். இதன் காரணமாக, நாடெங்கிலும் இயங்கிவந்த சுகாதார மற்றும் மருத்துவச் சேவை மையங்கள் பெரிதும் பாதிப்படைந்தன.[22] வேத காலத்திற்குப்பின் மிகச் சிறந்த திறன்மிகு மருத்துவராகத் திகழ்ந்த பதஞ்சலி என்பவர் புஷ்யமித்ரசுங்கரின் அரசாங்க மருத்துவராகப் பணியாற்றினார். அவர் உளவியல் தொடர்பான சிகிச்சை முறைகளை விவரிக்கின்ற பதஞ்சலிதர்ஷன் (Patanjali Darshan) அல்லது யோகதர்ஷன் (Yoga Darshan) என்ற மருத்துவ நூலின் ஆசிரியராவார்.[23]

சுங்கர்களைத் தொடர்ந்து கனிஷ்கரின் காலமாகிய கி.பி. முதலாம்/இரண்டாம் நூற்றாண்டு காலத்தில் கனிஷ்கரின் அரசாங்க மருத்துவராகயிருந்த சரகர் (Charaka) என்பவர் அக்னிவேச தந்த்ராவைத் திருத்தி சரக ஸம்ஹிதா (Charaka Samhita) எனப் புதுப்பித்தார்.[24]

### குப்தர் கால மருத்துவம்

குப்தர்களின் காலமாகிய கி.பி. 320க்கும் கி.பி. 646க்கும் இடைப்பட்ட காலம் இந்திய மருத்துவ வளர்ச்சியின் கடைப் பகுதியாகக் கருதப்படுகிறது. இரண்டாம் சந்திரகுப்தரின் (விக்ரமாதித்தன்) காலத்தில் (கி.பி. 380 முதல் கி.பி. 413 வரை) சுமார் கி.பி. 402ல் இந்தியாவிற்கு வந்த சீன யாத்ரீகர் ஃபா–ஹியான் (Fa-Hien) தனது குறிப்பேட்டில் இந்தியாவில் கிராமங்கள் தோறும் மருத்துவமனைகள் அமைக்கப்பட்டிருந்த விபரத்தைக் குறித்து வைத்துள்ளார்.[25] விக்ரமாதித்தனின் அரசவையில் இடம் பெற்றிருந்த நவரத்தினங்கள் என்றழைக்கப் பட்ட ஒன்பது பிரபுக்களுள், தன்வந்த்ரி நிகண்டு (Dhanwantri

Nigantu) என்னும் மருத்துவ நூலினை இயற்றிய தன்வந்த்ரி (Dhanwantri) என்பவரும் ஒருவராவார்.

**ஸ்கந்தகுப்தரின்** (Skantagupta) காலத்திற்குப் பின்னர் குப்தர்களின் சகாப்தம் முடிவடைந்தது. கி.பி. 606-ல் ஹர்ஷ வர்த்தனர் (Harshavardhana) ஆட்சிப் பொறுப்பேற்றதும் புத்த சமயம் புத்துயிர் பெறலாயிற்று. இவருடைய காலத்தில் தான் **ரஸவாத வேதியலில்** (Alchemy) பெருமளவில் ஈடுபாடு கொண்ட சித்தாச்சாரியார்கள் (Siddhaachaaryaar) செழித்தோங்கி வளரத் தொடங்கினர்.[26]

## 4. பழங்கால இந்தியாவில் மருத்துவமனைகள்

இந்தியாவில் புத்தமதம் சார்ந்த மருத்துவமனைகளும், நோய் நிவாரண மடாலய மையங்களும் இருந்தமைக்கான ஆதாரங்கள் மிகக் குறைவாகவே உள்ளன. புத்த மதத் துறவிகளும் மடாலயக் கன்னிகளும் தங்களுடைய இருப்பிடங்களில் தாங்களாகவே சிகிச்சை செய்துகொண்டனர். எனினும் ஜிஸ்க் (Zysk) என்பவர் **வெசாலி** (Vesali) என்னும் காட்டின் அருகே நோயுறும் துறவியர்களின் பராமரிப்புக்காக மண்டபம் ஒன்று இருந்ததாக ஒரு மேற்கோளின் மூலம் குறிப்பிடுகின்றார்.[27] கும்ரஹார் (Kumrahar) எனுமிடத்தில் செய்யப்பட்ட அகழ்வாய்வின் போது பாடலிபுத்திரத்தில் (Paataliputra) **ஆரோக்கிய விஹாரா** என்னும் ஒரு சுகாதார இல்லம் (Health House) இருந்தது கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. (படம் 16அ)



படம் 16அ
கும்ரஹார் அகழ்வாய்வு (வடிகால்)

இந்த இல்லம் வெவ்வேறு அளவுகளில் நான்கு அறைகள் கொண்ட கட்டிடமாகச் சுமார் கி.பி. 300 முதல் கி.பி. 450 வரையிலான காலத்தைச் சேர்ந்ததெனக் கண்டறியப்பட்டுள்ளது.[28]




படம்-16ஆ
கும்ரஹாரில் கண்டெடுக்கப்பட்ட சுடுமண் முத்திரை

சீன யாத்ரீகர் ஃபா-ஹியான் (Fa-Hien) தனது பயணக் குறிப்புக்களில் வைசிய குடும்பத் தலைவர்கள் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டில் ஏழை நோயாளிகளின் சிகிச்சைக்கென தர்ம ஸ்தாபன இல்லங்கள் நிறவியிருந்தனர் என்று குறிப்பிட்டுள்ளார்.[29]

நாகார்ஜுன கோண்டா (Naagaarjuna Konda) வில் கண்டெடுக்கப்பட்ட கல்வெட்டு ஒன்றில் (கி.பி. 3ஆம் நூற்றாண்டு) ''விகாரமுக்ய விகாத ஜ்வராலயே" (Vihaaramukkhya Vigatajvaraalaye)[30] என்று பொறிக்கப்பட்டுள்ளது. இதன் பொருள் காய்ச்சல் கண்டவர்களுக்கான முக்கிய மடாலய சுகாதார இல்லம் (A chief Monastic Health House in the abode of fevered) என்பதாகும் (அத். 3, பிரிவு 2ஐப் பார்க்க).

இதுபோல், கும்ரஹார் அகழ்வாய்விலும் ஸ்ரீ அரோக்ய விகார பிக்சுசங்கஸ்யா (Sri Aarogyavihaare biksusanghasya) என்று பொறிக்கப்பட்ட முத்திரையொன்று கண்டு பிடிக்கப்பட்டுள்ளது. (படம் 16ஆ) இதன் பொருள் மடாலய


படம் 16இ
'தன் வந்தரெ' எனப் பொறிக்கப்பட்ட கும்ரஹார் மட்கல முத்திரை

**சமூகத்தினரின் சுபிட்சத்திற்கான சுகாதார இல்லம்** (The Auspicious health house of the monastic community) என்பதாகும். மேலும் **(ஆ)ரோக்ய விஹாரெ** (சுகாதார இல்லம்), **(த)ன் வந்தரெ** (தன்வந்த்ரி) (படம் 16இ) என்று பொறிக்கப்பட்ட இரு மட்கலத் துண்டுகளும் கிடைக்கப் பெற்றுள்ளன. நேபாளத்தில் **காத்மண்டு** (Kath mandu) அருகேயுள்ள புத்தசமயப் பகுதியில் ஒரு ஆரோக்கிய சாலைக்கு ஒரு அரசர் கொடையாக அளித்த நிலம் பற்றிய குறிப்புடன் கி.பி. 604ஆம் ஆண்டைச் சேர்ந்த கல்வெட்டுக் காணப்படுகிறது.[31]

ஆரோக்கிய சாலைகளுடன் கூடிய புத்த மடாலயங்களின் இயக்கமே இந்தியாவில் மருத்துவமனை அமைப்பு முறையின் வளர்ச்சிக்கு வழிகாட்டியாக இருந்திருக்க வேண்டும்.

தென்னிந்தியாவில் மருத்துவ மனைகளின் செயல்பாடுகள் பற்றிக் குறிப்பிடும் கல்வெட்டுக்கள் பல கிடைத்துள்ளன. குறிப்பாக, திருமுக்கூடல் மற்றும் ஸ்ரீரங்கம் ஆகிய இடங்களில் கிடைத்துள்ள கல்வெட்டுக்கள் அங்குள்ள மருத்துவமனைகளின் செயல்பாடுகள் குறித்து விரிவான விபரங்களைத் தெரிவிக்கின்றன. இது பற்றிய விபரங்கள் இந்நூலின் இறுதி அத்தியாயத்தில் விவரிக்கப்பட்டுள்ளன.

இடைக்காலத்தின் பிற்பகுதியில் **அலாவுதின் கில்ஜியின்** காலத்திலும் (கி.பி. 1296 - கி.பி. 1321) **முகம்மது பின் துக்ளக்கின்** காலத்திலும் (கி.பி. 1325 - கி.பி. 1352) ஏராளமான மருத்துவ மனைகள் நிறுவப்பட்டுள்ளன.[32]

கி.பி. 1503-ல் கொச்சியில் நிறுவப்பட்ட **சாந்தாகுரூஸ்** மருத்துவமனையும் (Santa Cruz Hospital - Holy Cross Hospital) கி.பி. 1510-ல் கோவாவில் நிறுவப்பட்ட **"ராயல்"** மருத்துவமனையும் (Royal Hospital) இந்தியாவில் ஐரோப்பிய மருத்துவம் வேரூன்றக் காரணமாக அமைந்தன.

## 5. பண்டைய இந்தியரின் அறுவை மருத்துவத்திறன்

பண்டைய இந்தியர்கள் எல்லாவிதமான அறுவை சிகிச்சைகள் பற்றியும் அறிந்திருந்தனர். கி.மு. 1500-ஆம் ஆண்டிலேயே அவர்கள் அறுவை சிகிச்சை முறைகளை நடைமுறைப்படுத்தியிருந்தனர்; அவர்கள் எலும்பு முறிவுக்கு மட்டை வைத்துக் கட்டும் சிகிச்சையில் கைதேர்ந்தவர்களாயிருந்தனர்.[33]

கி.மு500ல் வாழ்ந்த சுசுருதர் (Susruta) அறுவை சிகிச்சை முறையில் பெருமளவில் திருத்தங்கள் செய்து அறுவை சிகிச்சையில் நுட்பத்திறன் மிக்கவராகத் திகழ்ந்தார். காயங்களைக் குணப்படுத்துவதில் வல்லவராகத் திகழ்ந்தார். சிறுநீரகப் பாதைகளிலும் குடல்களிலும் ஏற்பட்ட தடைகளை அகற்றினார்.[34] தான் எழுதிய **சுசுருத ஸம்ஹிதா** (Susruta Samhita)வில் கண்படலமாற்றுச் சிகிச்சை (Cataract Operation - Couching) பற்றி செய்முறை விளக்கத்துடன் விரிவாக விவரித்துள்ளார்.[35]

பண்டைய இந்திய அறுவை மருத்துவர்கள் குடலிறக்கத்தைச் சரிசெய்தல் (Hernia Operation), வயிற்றறுப்புப் பிரசவமுறை (Caesarian Operation) மற்றும் மூக்கின் குழைம அறுவை சிகிச்சை முறை (Rhinoplasty) போன்ற சிக்கலான தோல் உயிரிழைம அறுவை சிகிச்சை (Skin Grafting Operation) முறைகளில் சிறந்து விளங்கியுள்ளனர்.[36]

மூக்கின் குழைம அறுவை சிகிச்சை பற்றிச் சுசுருதா விரிவான விளக்கமளித்துள்ளார். அந்நாட்களில் மூக்கை அறுப்பதென்பது சில குறிப்பிட்ட கூடாஒழுக்கக் கேடுகளுக்கு விதிக்கப்படும் தண்டனையாகயிருந்தது. இவ்வாறு தண்டனை பெற்றவர்களின் மூக்கைச் சரிசெய்ய அவர்களுடைய கன்னத்திலிருந்து தேவையான அளவிற்குச் சதையை வெட்டியெடுத்து அதை வெட்டுண்ட மூக்குத் தண்டின் மேல் பொருத்தி மூக்கை மீண்டும் பழைய வடிவிற்கு மாற்றினர். இவ்வாறு அறுபட்ட மூக்கைச் சரிசெய்வதை அந்நாட்களில் ஒரு கலையாகவே செய்து வந்தனர். இக்குழைம அறுவை சிகிச்சை முறையே (Rhinoplasty) இன்று குழைம ஒட்டுறுப்பு அறுவை சிகிச்சை முறையின் (Plastic Surgery) கிழ் அங்கீகரிக்கப்பட்டுள்ளது.[37]

குழைம அறுவை சிகிச்சை தவிர அடிவயிற்றுப் புறத்தோல் அறுவை சிகிச்சை (Laparotomy), சிறுநீரகக் கல்லகற்றும் அறுவை சிகிச்சை (Lithotomy) ஆகியவை பண்டைய இந்திய மருத்துவத்தின் தனிச்சிறப்புமிக்க அறுவை மருத்துவ சிகிச்சை

முறைகளாகும்.[38] மேலும், **ஆசனவாய்ப்புரை** (Anal Fistula)யைக் குணப்படுத்தும் அறுவை சிகிச்சைகளிலும் தேர்ச்சி பெற்றிருந்தனர். இந்த அறுவை சிகிச்சையில் இந்தியர்கள் கிரேக்கர்களை விட உறுதியாக உயர்ந்து நின்றனர்.[39]

பண்டைய இந்திய அறுவை சிகிச்சைகளுள் அடிவயிற்றுக் காயங்களுக்குத் தையலிடல் (Suture of abdominal wounds) **சிறுநீர்ப்பைக்கல்** (Vesicle Calculus) அறுவை சிகிச்சை, இறந்த முதிர்கருவின் (Dead foetus) கருவுயிர்க் கூறுபாடு (Embryotomy) ஆகியவை குறிப்பிடத்தக்கவையாகும்.[40]

மனிதஇனக் கருமுளை (Embryo) பற்றி சுசுருதா அளித்துள்ள விளக்கங்கள் பற்றிக் குறிப்பிடும் பேராசிரியர் கேஸ்வானி பின்வருமாறு வியந்து பாராட்டுகின்றார்; மனித இனக் கருமுளையானது அது சினையுற்ற காலம் முதல் முதிர்ச்சியுறும் காலம் வரை அடைகின்ற பல்வேறு வளர்ச்சி நிலைகள் பற்றிக் கூறப்பட்டுள்ள விளக்கங்கள் சுசுருதாவின் நுண்ணோக்கு மதிநுட்பத்தை வியந்து பாராட்டும் வகையில் அமைந்துள்ளன. மேலும் பண்டைய இந்திய மருத்துவர்கள் மிகவும் நுண்ணிய தோற்றமுடைய இருபாலணு இணைவுப் பொருளையும் (Zygote) கூட விளக்கிக் காட்டும் திறன் கொண்ட ஒருவகை ஒளியியல் கருவி (Optical Instrument)யினை வைத்திருக்க வேண்டுமென்றும் விலங்குப் பரிசோதனையில் **கருவியல்** (Embryology) பற்றி நன்கு கற்றிருக்க வேண்டும் அல்லது கருச்சிதைவு (Abortion) மற்றும் **இறந்து பிறந்த குழந்தை** (Still-born) ஆகியவற்றை அறுத்து ஆய்வு செய்திருக்க வேண்டும் என்று மட்டுமே இதன் மூலம் யாரும் முடிவு மேற்கொள்ளக்கூடும்.[41] இவ்வாறு பேராசிரியர் கேஸ்வாணி இந்திய அறுவை மருத்துவத் திறன் குறித்து வியப்புக் கலந்த பாராட்டுதல்களைத் தெரிவித்துள்ளார். கி.பி.18ஆம் நூற்றாண்டில் ஐரோப்பிய மருத்துவர்கள் கண்டுபிடித்த இரத்த ஓட்டச் சுழற்சியும், கருமுளையில் நிகழும் தாயின் இரத்த ஓட்டச் சுழற்சியும் கூட பண்டைய இந்திய மருத்துவர்கள் பலகாலம் முன்னதாக அறிந்தவையே.[42]

மண்டையோட்டு அறுவை சிகிச்சையில் சிறந்து விளங்கிய **ஜீவகா** (Jivaka)[43] ஒரு குழந்தை மருத்துவ வல்லு நருமாவார். நரம்பியல் மருத்துவத்தில் திறன்மிக்கவர். அவருடைய மேம்பட்ட அறுவை மருத்துவத்திறன் காரணமாக அவர் உலகின் மிகத்தொன்மையான நரம்பியல் அறுவை மருத்துவர் (Neuro-surgeon) என்று பாராட்டப்பட்டார்.[44] அவரது மருத்துவத்

திறனுக்கு எடுத்துக்காட்டாகப் பின்வரும் நிகழ்ச்சியினைக் கூறலாம்.

ஒரு வணிகரின் மகனுக்கு வயிற்றினுள் திருகிக் கிடந்த குடல்களை வயிற்றுப்புறத்தோல் அறுவை சிகிச்சை (Laparotomy) மூலம் வெற்றிகரமாகச் சரி செய்தார்.[45]

**மருத்துவத் துறையில் ஜீவகாவின் தனித்திறனுக்குச் சில சான்றுகள்[46]**

☆ ஒரு வணிகனின் மனைவியின் தலை நோவினை மூக்கொலிச் சிகிச்சை மூலம் (Nasal Theraphy) குணமாக்கியது.

☆ மன்னர் பிம்பிசாரரின் (King Bimbisara) மலக்குடல் புரையை (Rectal Fistula) ஒருவகைக் களிம்பு கொண்டு குணப்படுத்தினார்.

☆ உஜ்ஜயினி மன்னர் பஜோதாவின் (King Pajota) மஞ்சட் காமாலை நோயினைப் பலவகை மருந்துப் பொருட்களைப் பாலில் கலந்து, கொதிக்க வைத்துக் கிடைக்கும் கஷாயத்தின் மூலம் குணப்படுத்தினார்.

☆ நோயினால் புத்தர் அவதியுற்றபோது புத்தரின் உடம்பில் எண்ணெய்யால் நீவிவிட்டு பல்வேறு மருந்துப் பொருட்களுடன் தாமரையை நுகரச் செய்து குணப் படுத்தினார்.

தொடக்க காலப் புத்த சமயக் கல்வி ஏடுகள் மனித உடல் கூறு (Human Anatomy) பற்றி பெருமளவில் நுட்பமான தகவல் களைக் கொண்டிருந்தன. மனித உடலுறுப்பு அமைப்பியலின் அடிப்படைத் தத்துவங்களை மட்டுமே ஆதாரமாகக் கொண்டு ஆணின் மண்டையோட்டையும் பெண்ணின் மண்டை யோட்டையும் - மிகச் சாதாரணமாக வேறுபடுத்திக்காணும் அளவில் அன்றைய மருத்துவர்கள் தேர்ச்சிபெற்றிருந்தனர் என்ற அளவில் மனிதஇன அறிவியல் (Anthropology) வளர்ச்சியடைந் திருந்தது.[47] சுக்லாதாஸ் (Sukla Das) என்பவரின் கருத்துப்படி, பௌத்தர்களின் மருத்துவ ஏடுகளில் மூக்கின் குழைம அறுவை மருத்துவம் (Rhino-plastic Surgery) மற்றும் கண் விழிகளின் மறுபொருத்துதல் (Transplantation of Eye-balls) ஆகியவை பற்றிய மேற்கோள்கள் காட்டப்பட்டிருப்பது என்பதும் சுசுருத ஸம்ஹி தாவில் காணப்படும் பெருமளவிலான தகவல்கள் இவ்வேடுகளி லிருந்து பெறப்பட்டவையாகும் என்பதும் தெரிய வருகிறது.[48]

## இந்திய அறுவை சிகிச்சைக் கருவிகள்

அறுவை சிகிச்சை பற்றிச் சுசுருத ஸம்ஹிதாவில் எட்டுத் தலைப்புக்களின் கீழ் விவரிக்கப்பட்டுள்ளது.

பிரித்தெடுத்தல் (Extraction), உறுப்புக்களை அகற்றல் (Excising), கிழித்தல் (Incising), துளையிடுதல் (Probing), உரசித் தேய்த்தல் (Scraping), தையலிடல் (Suturing), கீறுதல் (Puncturing), வளிநீரகற்றல் (Evacuating fluids) முதலியவையே அந்த எட்டுத் தலைப்புக்களாகும்.

101 வகையான மழுங்கல் கருவிகள் 29 வகையான கூர்மைக் கருவிகள் பற்றிச் சுசுருதர் விவரித்துள்ளார்.[49] பற்றுக்குறடுகள் (Forceps), கண்ணகற்சிக் கருவிகள் (Specula), குழல் கருவிகள், துறட்டிகள் (Hooks), துளையிடுதல் கருவிகள் (Probes) ஆகியவை மழுங்கல் கருவிகளுள் அடங்கும். கத்திகள், கத்திரிக்கோல்கள், நீரெடுப்புக் கருவிகள் (Trocars), ரம்பம் மற்றும் ஊசிகள் ஆகியவை கூர்மைக் கருவிகளுள் அடங்கும். அக்கருவிகள் செய்வதற்கான உலோகங்கள், கனபரிமாண அளவுகள், கருவிகளின் கைப் பிடிகள், மற்றும் அவற்றைச் செய்யும் முறைகள் பற்றியுங் கூட விவரிக்கப்பட்டுள்ளன. முறிந்த எலும்புகளைப் பொருத்திக் கட்டப் பயன்படும் பலதரப்பட்ட வரிச்சல்கள் (Splints), புண் கட்டுத் துணிகள் (Bandages) ஆகியவை பற்றியும் சுசுருத சம்ஹிதாவில் விவரிக்கப்பட்டுள்ளது. இதுவே மருத்துவத் துறைக்குச் சுசுருதர் அளித்துள்ள மிகப்பெரிய பங்களிப்பாகும்.

தாய்மை மருத்துவ அறுவை சிகிச்சையின் போது பயன்படுத்தப்படும் துண்டிக்கும் கருவிகள் (Decapitators) தட்சசீலம் (Taxila), பீர்மௌண்ட் (Bhir Mound) மற்றும் சிர்காப் (Sircap)பிலுள்ள சகபார்த்தியன் (Saka Parthian) நகரத்திலும் அகழ்ந்தெடுக்கப்பட்டுள்ளன. களிம்பு மருந்துகளைத் தடவுவதற்கான தட்டலகுக் கரண்டிகள் (Spatulas), செப்புக் குறடுகள், எடை பார்க்கும் இயந்திரத்தின் எஃகுத் தட்டுகள், அகன்ற கண் ஊசிகள் முதலியன சிர்காப் பில் அகழ்ந்தெடுக்கப் பட்ட பிற அறுவை சிகிச்சைக் கருவிகளாகும்.[50]

### மருத்துவக் கல்வி மையங்கள்

நிறுவன அமைப்பு மூலம் கற்பிப்பதன் மூலமே மருத்துவக் கல்வியை வளர்ச்சி பெறச் செய்ய முடியும். இந்தியாவில் நிறுவன அமைப்புக் கல்விமுறை வசதிகள் கி.மு. ஆறாம் நூற்றாண்டிற்கு முன்னரே இருந்துள்ளன.

காம்பில்யாவிலுள்ள ஆத்ரேயர் மருத்துவப் பள்ளி (Atreya School of Physicians)யும்[51], வாரணாசியிலுள்ள தன்வந்தரி அறுவை மருத்துவப் பள்ளியும் இந்தியாவில் கி.மு. ஆறாம் நூற்றாண்டிற்கு முன்னரேயிருந்த மிகப் பழைய மருத்துவக் கல்வி நிறுவனங்களாகும். கி.மு. ஆறாம் நூற்றாண்டிற்கு முன்னர் தட்சசீலப் பல்கலைக்கழகம் என்னும் மற்றொரு கல்வி மையமும் இயங்கி வந்தது. நரம்பியல் அறுவை மருத்துவர் என்று போற்றப்பட்ட ஜீவகா (Jivaka) இங்குதான் தனது ஏழாண்டு கால மருத்துவக் கல்வியினைக் கற்றுத் தேர்ந்தார்.[52] கி.பி. ஐந்தாம் நூற்றாண்டில் ஹூணர் (Huns)களால் அழிக்கப்படும் வரை இப்பல்கலைக்கழகம் செழித்தோங்கி வளர்ந்திருந்தது.[53] தட்சசிலத்தில் மருத்துவக் கல்வி பயிலுவதையே பெருமையாகக் கூறிக் கொள்ளும் வழக்கம் அன்றைய இளவரசர்களிடமும் பிராமண இனச் செல்வந்தர்களிடமும் இருந்துவந்தது.[54]

பேரரசர் அசோகரால் நிறுவப்பட்ட மடாலயங்களிலும் மருத்துவக் கல்வியளிக்கப்பட்டு வந்தது. அவற்றுள் ஒன்றுதான் நாகார்ஜுனகோண்டாவாகும்.[55] இதுபற்றிய விபரங்கள் அடுத்த அத்தியாயத்தில் தரப்பட்டுள்ளன.

கி.பி.5ஆம் நூற்றாண்டில் தட்சசீலப் பல்கலைக்கழகம் அழிக்கப்பட்டதும் நாளந்தா (Naalanda)வில் (படம் 17அ) மற்றொரு கல்வி மையம் குமாரகுப்தரால் (Kumaara Gupta)



படம் 17அ
நாளந்தா பல்கலைக்கழகம்

பல்கலைக்கழகத் தரத்திற்கு உயர்த்தப்பட்டது. அலெக்ஸாண்ட்ரியப் பள்ளியிலிருந்த மிகப்பெரிய நூலகத்தைப் போன்று நாளந்தா பல்கலைக்கழகத்திலும் ரத்ன சாகர் (Ratnasaagar) என்ற பெயரில் ஒரு பெரிய நூலகம் இருந்தது.[56] சாலர்னோ (Salerno) பள்ளியைப் போன்று பேரும்புகழும் அடைந்தது. கி.பி. 13ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பக்தியார் கில்ஜி (Bakhtiyar Kilji)யால் இப் பல்கலைக்கழகம் அழிக்கப்படும் வரை சுமார் 700 ஆண்டு காலத்திற்கு அது புகழுடன் இயங்கிவந்தது[57] (படம் 17ஆ).



படம் 17ஆ
நாளந்தா பல்கலைக்கழகம்

நாளந்தா பல்கலைக்கழகத்தின் புகழால் உந்தப்பட்டு, கத்தியவாரில் வல்லபி (Vallabhi), பீகாரில் விக்ரம சீலா (Vikramasila), கிழக்கு வங்கத்தில் ஜகத் தலே (Jagaddale), தென் பீகாரில் ஓடந்தபுரி (Odantapuri), வடபீகாரில் மிதிலா (Mitila) போன்ற கல்வி மையங்கள் உருவாக்கப்பட்டன. எனினும், வல்லபியினால் மட்டுமே நாளந்தாவின் தரத்தினை எட்ட முடிந்தது.[58] அங்கு வழங்கப்பட்ட மருத்துவக் கல்வி இந்தியாவின் எல்லாப் பகுதிகளிலுமுள்ள மாணவர்களையும் பெரிதும் கவர்ந்து ஈர்த்தது. இக்கல்விமையமும் நாளந்தாவைப் போன்று கி.பி.13ஆம் நூற்றாண்டில் முகம்மதியர்களின் படையெடுப்பின்போது அழிக்கப்பட்டது.[59]

இவ்வாறு, கி.மு. ஆறாம் நூற்றாண்டு தொடங்கி கி.பி. 13ஆம் நூற்றாண்டு வரையுள்ள காலத்தில் மருத்துவக் கல்வி

மையங்கள் ஒன்று மாற்றி ஒன்றாகப் புகழ்பெற்று விளங்கி வந்தது இந்திய மருத்துவத் துறையின் பாக்கியமாகக் கருதப்பட்டது. இதுவே இந்திய மருத்துவம் எழுச்சி மிகுச் சிறப்பினைப் பெற்றுச் செழித்தோங்கியிருக்கக் காரணமாக அமைந்தது.

### மருத்துவத் தொழில்

இந்தியாவில் மருத்துவத் தொழில் மிகவும் பெருந்தன்மை மிக்கதொரு தொழிலாக ஆதிகாலம் முதற்கொண்டே மதிப்பிடப் பட்டு வந்துள்ளது. அசோகரின் காலத்தில் மருத்துவத் தொழில் புரிய அரசிடம் அனுமதி பெற வேண்டியிருந்தது. முறையற்று மருத்துவத் தொழில் புரிவோர் கடுமையாகத் தண்டிக்கப்பட்டனர். மருத்துவத் தொழில் புரிபவர்கள் சரகரின் நன்னடத்தைக் கோட்பாடுகளைப் பின்பற்ற வேண்டும். மனித இனத்திற்குச் செய்யப்படும் சேவையாக மருத்துவத் தொழிலைச் செய்ய வேண்டுமென்று கோரிக்கை வடிவில் அந்தக் கோட்பாடுகள் இருந்தன. பணத்திற்காகவோ அல்லது வேறு எவ்விதமான பொருட்களுக்காகவோ நோயாளிகளுக்குச் சிகிச்சையளிக்கக். கூடாது.[60] அந்த வகையில் மருத்துவத் தொழில் பிற தொழில்களை விடத் தனித்து மேலோங்கி நின்றது. பண்டைய இந்திய மருத்து வர்கள் பிறருக்கு உயிர்கொடுத்துத் தாங்களும் பயனடைந்த மையால் மிகவும் சிறப்பாகப் போற்றப்பட்டனரென்று சீனத்துறவி இ–ட்சிங் (I-tsing) குறிப்பிட்டுள்ளார்.[61]

## 7. அரேபியாவில் இந்திய மருத்துவத்தின் தாக்கம்

அலெக்ஸாண்ட்ரியாவின் பெரியநூலகம் எரிந்து ஐரோப்பிய மருத்துவ உலகம் தனது அரும்பெரும் நூற் சேமிப்புக் களையெல்லாம் இழந்து நின்றபோது பல கிரேக்க எழுத்துப் பிரதிகள் அரேபியப் பல்கலைக்கழகங்களில் பாதுகாப்பாக வைக்கப்பட்டிருந்தன. இப்பிரதிகளை அரேபிய மருத்துவர்கள் தங்களது மருத்துவக் கல்வி விருத்திக்காகப் பயன்படுத்தினர்.[62] அருகாமையிலுள்ள கிழக்குப் பகுதிகளில் ஏராளமான மூலிகைச் செடிகள் கிடைக்கக் கூடியதாகயிருந்ததும், ஐரோப்பிய மருத்துவ உலகிற்கு ஏற்பட்ட கடுமையான பின்னடைவும் சேர்ந்து அரேபிய மருத்துவ வளர்ச்சிக்குச் சாதகமாயிருந்தன.

அதே சமயம் அரேபியாவில் இந்திய மருத்துவத்தின் தாக்கம் அரேபிய மாணவர்கள் இந்திய மருத்துவத்தைக் கற்கத் தூண்டுதலாக அமைந்தது. முதன்முதலாக முகம்மதியர்கள் கி.பி. 711-ல் இந்தியாவிற்கு வரத்தொடங்கியது முதல் நூற்றாண்டுக்

கணக்கில் அவர்களின் இந்தியவருகை தொடர்ந்து கொண்டிருந்தது.[63] சுல்த்தான்களின் தலைநகராயிருந்த டெல்லி பாக்தாத்தைவிட மேம்பட்ட கலாச்சார மையமாக மாறியது. எனவே, மேலும் மேலும் அரேபிய மருத்துவ மாணவர்கள் இந்திய மருத்துவத்தைக் கற்கவும் இந்தியாவில் மருத்துவத் தொழில் புரியவும் டெல்லியை நோக்கி விரைந்தனர். கி.பி. எட்டாம் நூற்றாண்டில் **அப்பாஸிட் காலிஃபா** (Abbaside Khalifas)வின் ஆட்சியின்போது பாக்தாத்தில் மருத்துவமனைகளை நிர்வகிக்கவும் இந்திய மருத்துவ ஸம்ஹிதாக்களை அரேபிய மொழியில் மொழி பெயர்க்கவும் ஏராளமான இந்திய மருத்துவர்கள் பாக்தாத்துக்கு வரவழைக்கப் பட்டனர்.[64]

## அரேபிய மருத்துவம்

கி.பி. பத்தாம் நூற்றாண்டில் அரேபிய மருத்துவத்தின் வளர்ச்சி வேகமாக முன்னேறியது. **ரேஸ்ஜஸ்** (Rhazes : கி.மு. 865 - கி.பி. 923) என்பவர் முதன் முதலில் தட்டம்மை (Measles)யையும் வைசூரியையும் வேறுபடுத்திக் காட்டிய அரேபிய மருத்துவர் ஆவார்.[65] **அவிஸென்னா** (Avicenna :கி.பி. 980 - கி.பி. 1037) என்னும் மற்றொரு அரேபிய மருத்துவர் அறுவை மருத்துவம் பொது மருத்துவத்தைவிடத் தாழ்ந்ததென்னும் கருத்தினைக் கொண்டிருந்தார். காயங்களைக் குணப்படுத்த சூடுபோடுதலைப் (Cauterization) பரிந்துரைத்தார். அதைத் தொடர்ந்து, அறுவை மருத்துவமும் (Surgery) பொது மருத்துவமும் (General Medicine) இரு வெவ்வேறு துறைகளாகப் பிரிந்து செயல்பட்டன. சூடுபோடும் முறை எல்லாவித காயங்களுக்கும் **சர்வ நிவாரணி** (Cure-all)யாகக் கருதப்பட்டது. அடுத்த சில ஆண்டுகளில் அறுவை மருத்துவம் அதன் முக்கியத்துவத்தை இழந்து நாவிதர்களின் இடைத் தொழிலாக மாறியது.[66]

அரேபியர்களின் மருந்துகள் பற்றிய ஆய்வுப் பட்டியலே மருத்துவ உலகிற்கு அரேபியர்களின் மிகப்பெரிய பங்களிப்பாகும். தற்காலப் பயன்பாட்டிலிருந்து வரும் பெரும்பான்மையான மருந்துகள் அரேபிய மூலாதாரத்தின் அடிப்படையிலமைந் தவையேயாகும்.[67] 'கார்டோபா' (Cardoba)வைச் சேர்ந்த அரேபிய அறுவை மருத்துவர் **அபுல்காசின்** (Abul Kasin) முதல் விளக்கப் பட அறுவை மருத்துவ நூலினை எழுதி அறுவை மருத்துவத்தின் தரத்தை உயர்த்தப் பெரிதும்பாடுபட்டார். அதே இடத்தைச் சேர்ந்த யூத மருத்துவர் **மைமோனைட்ஸ்** (Maimonides : கி.பி. 1135 - கி.பி. 1204) எழுதிய **யாத்-அச்சாஜகாஹ்** (Yad-Hachazakah)



படம் 18அ
வயிற்றறுப்புப் பிரசவம் (அரேபியா - கி.பி. 12ஆம் நூற்றாண்டு)

என்ற நூல் இன்றும் யூதர்களின் மருத்துவக் கல்வி நிறுவனங்களில் நன்னடத்தைக் கோட்பாடாகப் பின்பற்றப்பட்டு வருகிறது.[68] வயிற்றுறுப்புப் பிரசவமுறை (Caesarian Section)யினை அரேபியர்கள் நன்கு அறிந்திருந்தனர். (படம் 18 அ) பன்னிரண்டாம் நூற்றாண்டில் அரேபியாவில் இத்தகைய அறுவை சிகிச்சையின் போது அபினி (Opium) ஒரு மயக்க மருந்தாகப் பயன்படுத்தப் பட்டது.[69]

## யுனானி மருத்துவம்

கிரேக்க, இந்திய மருத்துவங்களால் பெரிதும் தாக்கமடைந்த அரேபிய மருத்துவம் **யுனானி மருத்துவம்** (Unani Medicine (or) Unani - Tibb) என்ற பெயரில் ஒரு தனி மருத்துவ முறையாக வளர்ச்சியடைந்தது. இன்றும் ஆசியாவில் அது இந்தப் பெயரிலேயே நடைமுறைப்படுத்தப்பட்டு வருகிறது. ஆனால், ஐரோப்பியர்கள் அதை **“அரேபியன் மருத்துவம்”** என்றே இன்றும் அழைத்து வருகின்றனர்.[70]

கி.பி. எட்டாம் மற்றும் பத்தாம் நூற்றாண்டுகட்கு இடைப்பட்ட காலத்தில் முஸ்லிம்களின் படை யெடுப்பின் போது இந்தியாவிற்கு வந்த யுனானி மருத்துவர்கள் (Unani Hakeems) மூலம் யுனானி மருத்துவம் இந்தியாவில் புகுத்தப் பட்டது. (படம் 18ஆ) அது முகம்மதியர்களின் ஆட்சியின் போது படிப்படியாக இந்தியா முழுவதிலும் பரவியது.[71] இந்தியாவில் முஸ்லிம் ஆட்சி நிறுவப் பட்டவுடன் ஈரான் மற்றும் மத்திய ஆசியாவிலிருந்து ஏராளமான யுனானி மருத்துவர்கள் இந்தியா விற்கு வரவழைக்கப்பட்டனர். ஆயினும், முஸ்லிம் ஆட்சியாளர்கள் இந்திய மருத்துவத்தைப் புறக்கணிக்கவில்லை.



படம் 18ஆ நோயாளியை பரிசோதிக்கும் யுனானி மருத்துவர் (கி.பி. 1280)

முஸ்லிம் அரசவைகளில் இந்திய மருத்துவர்களும் அறுவை மருத்துவர்களும் இடம் பெற்றிருந்தனர். கி.பி. 17ஆம் நூற்றாண்டு வரை மொகலாயப் பேரரசர்களின் ஆதரவின்கீழ் யுனானி மருத்துவம் மிகப்பெரிய வளர்ச்சியடைந்து புகழின் உச்ச நிலையை அடைந்தது.[72]

# பிரிவு 3

## மறுமலர்ச்சி மருத்துவம்

இடைக்காலத்தில் கடுமையானப் பின்னடைவினால் பாதிக்கப்பட்டிருந்த ஐரோப்பிய மருத்துவம் கி.பி. 15ஆம் நூற்றாண்டில் மீண்டும் புத்துயிர் பெற்று புதுப்பொலிவுடன் வளர்ச்சியடையத் தொடங்கியது. மருத்துவ அறிவினை வளர்த்துக் கொள்ளவும் மருத்துவ வளர்ச்சியைப் பெருக்கவும் இத்தாலிய மருத்துவர்களிடையே எழுந்த புது ஆர்வ உணர்ச்சி ஐரோப்பிய நாடுகளெங்கும் பரவியது. பண்டைய கிரேக்கர் மற்றும் ரோமானியர்களின் கலாச்சாரமும் உயிரியல் வாழ்க்கைமுறைப் பற்றுதலும் ஐரோப்பிய மக்களிடையே மீண்டும் வேகமாக எழுச்சி பெறத் தொடங்கின. அதுவே, கல்வியின் புத்தெழுச்சி, மறுபிறப்பு, மறுமலர்ச்சி என மலர்ந்தது. காலனின் (Galen) காலந்தொட்டு மிக அரிதாக வளர்ந்து வந்த மருத்துவ அறிவியல் புதிய பெருங் கண்டுபிடிப்புக்களால் விரைந்து வளம் பெற்றது. ஐரோப்பிய மருத்துவர்கள் கிரேக்க மருந்துவத்தைக் கற்க மீண்டும் ஆர்வம் செலுத்தினர். அறிவு, நுண்ணோக்கு, பரிசோதனை ஆகியவற்றின் மீதிருந்த பழைய சிறப்புமிக்க மரியாதையை மீண்டும் எழுச்சிபெறச் செய்தது.

ஐரோப்பிய மருத்துவம் வேகமாக முன்னேற்றமடையவும் பல புதிய கண்டுபிடிப்புக்களைச் செய்து முடிக்கவும் மறுமலர்ச்சிக் காலம் ஆற்றிய பங்களிப்புக்கள் பற்றிப் பின்வரும் பக்கங்களில் சுருக்கமாகத் தரப்பட்டுள்ளன.

இந்தியாவில், அரேபிய மருத்துவம் வேரூன்றத் தொடங்கிய வேளையில் கி.பி. 1453-ல் கான்ஸ்டான்டிநோபில் (Constantinople) வீழ்ச்சியடைந்து, இத்தாலியில் மறுமலர்ச்சிக் கல்வி உதித்து ஐரோப்பா முழுவதிலும் பரவத் தொடங்கியது.[1]

### 1. மறுமலர்ச்சிக் கால மருத்துவ அறிஞர்கள்

விஞ்ஞானியும் கலைஞருமான **லியோனார்டோ-டா-விஞ்சி** (Leonardo-da-vinci : கி.மு. 1452 - கி.பி. 1519) உடலியல் பற்றிக் **காலன்** (Galen) அளித்த சில விளக்கங்களுக்குக் கேள்விகள் எழுப்பலானார்.[2] காலன் மற்றும் அவிஸென்னா (Avicenna) ஆகியோரின் கருத்துக்களை மறுத்து வந்த சுவிட்சர்லாந்தைச் சேர்ந்த **பிலிபஸ் அவுர்கோலஸ் பாராஸெல்ஸஸ்** (Phillipus Aurcolus Paracelsus : சுமார் கி.பி. 1490 - கி.பி. 1541) என்பவர்

அவர்களின் ஆய்வேடுகளைப் பொதுமக்கள் முன்னிலையில் தீயிட்டுக் கொளுத்தினார்.[3] பதுவா (Paduva) பல்கலைக்கழகத்தில் உடலுறுப்பமைப்பியல் பேராசிரியராகப் (Professor of Anatomy) பணியாற்றிய **ஆண்ட்ரீஸ் வெஸாலியஸ்** (Andreas Vesalius) என்பவர் காலனின் கொள்கைகளை எதிர்த்துச் சவால் விட்டார்.

**அம்ப்ராய்ஸ் பாரே (Ambroise Pare : கி.பி. 1510 – கி.பி. 1590)**

பிரெஞ்சு ராணுவத்தில் 30 ஆண்டுகால அனுபவம் பெற்றிருந்த அம்ப்ராய்ஸ் பாரே என்பவர் அறுவை மருத்துவத்தில் பல சீர்திருத்தங்களைச் செய்து ஆற்றல் மிகு அறுவை சிகிச்சை நிபுணர் என அங்கீகாரம் பெற்றார். **இரத்தப் போக்கினை** (Haemorrhage) நிறுத்த சூடான எண்ணெயால் அல்லது சூடேற்றிய கம்பியினால் சூடுபோடுவதைவிட இரத்த நாளங்களைக் கட்டுதல் ஒருசிறந்த முறையாகுமென்று நிரூபித்துக் காட்டினார். செயற்கைக் கால்கள், கைகள் போன்ற உபகரணங்களை வடிவமைத்தார். அவரால் குணமடைந்த நோயாளிகளிடம் தனது வெற்றிகரமான சிகிச்சைகள் பற்றிக் குறிப்பிடும் போது **“சிகிச்சையளித்தது நான்; குணப்படுத்தியது கடவுள்”** என்று பெருந்தன்மையாக நயம்பட உரைத்தார்.[4]

**ஆண்ட்ரீஸ் வெஸாலியஸ் (Andreas Vesalius : கி.பி. 1514 – கி.பி. 1564)**



படம் 19
**ஆண்ட்ரீஸ் வெஸாலியஸ்**
(கி.பி. 1514 – 1564)

ஆண்ட்ரீஸ் வெஸாலியஸ் என்பவர் மனித உடலில் பரிசோதனை நுண்ணோக்குகளின் மூலம் காலனின் கூற்றுக்களில் பல தவறுகளைக் கண்டறிந்தார். (படம் 19) காலனின் தவறுகளைச் சுட்டிக்காட்டி, அதற்கான திருத்தங்களுடன் கி.பி. 1543-ல் **டி ஹியூமானி கார்ப்போரிஸ் ஃபேப்ரிக்கா** (De humani corporis fabrica) எனும் நூலினை வெளி யிட்டார். உடற்கூற்றுக் கல்விக்கு இந்நூல் மிகப் பெரும் பங்களிப்பாக இருந்ததுடன் தற்கால நவீன உடற்கூற்று அமைப்பியலுக்கும் அடிகோலுவதாக அமைந்தது.[5]

வெஸாலியஸைத் தொடர்ந்து **காபிரியல்லோ ஃபலோபியோ** (Gabriello Fallopio : கி.பி. 1523 - கி.பி. 1562) என்பவர் ஃபலோபியன் குழாய் எனப்படும் கருப்பையிலிருந்து கரு வெளியேறும் குழாயினைக் கண்டுபிடித்தார்.[6] **ஃபாப்ரிசியஸ் அக்குவாபெண்டெண்ட்** (Fabricius Acquapendente : கி.பி. 1537 - கி.பி. 1619) என்பவர் மனித உடலின் அமைப்பினையும் உடலினுள்ளமைந்துள்ள நரம்புகளையும் வால்வுக்ளையும் பற்றிய விளக்கங்களை வெளியிட்டார்.[7]

கி.பி. 1564ல் வெஸாலியஸின் மறைவுக்குப் பின், அவருடைய கண்டுபிடிப்புக்களுக்கு அவருடைய சகப் பேராசிரியர்களால் மறுப்பு தெரிவிக்கப்பட்டது. ஆயினும் அதற்கு 64 ஆண்டுகளுக்குப் பின்னர் அவருடைய விளக்கங்கள் யாவும் **வில்லியம் ஹார்வே** (William Harvey) என்னும் ஆங்கிலேய மருத்துவரின் ஆய்வுச் சோதானைகளின் மூலம் புகழப்பட்டன.[8]

## 2. இந்தியாவில் ஐரோப்பிய மருத்துவம்

அரேபியர்களைப் போன்றே போர்த்துக்கீஸிய மருத்துவர்களும் கி.பி. 16ஆம் நூற்றாண்டில் இந்தியாவிற்கு வந்தனர். **பிரான்ஸிஸ்கோ டி அல்புகர்க்** (Francisco de Albuguerque) என்பவர் தனது கட்டளாடுக் குழுவினருடன் கி.பி. 1503ல் கொச்சியில் வந்திறங்கினார். அவர் கி.பி. 1506இல் கொச்சியில் **சாந்தாகுருஸ் மருத்துவமனையையும்** (Santacruz Hospital), கி.பி. 1510-இல் கோவாவில் ராயல் மருத்துவமனையையும் (Royal Hospital) நிறுவினார். இதனைத் தொடர்ந்து மற்ற போர்த்துக்கீஸியக் குடியேற்றப் பகுதிகளிலும் பல மருத்துவ மனைகள் நிறுவப்பட்டன. அம்மருத்துவமனைகள் யாவற்றிலும் ஐரோப்பிய மருத்துவர்களே பணிநியமனம் செய்யப்பட்டனர்.[9]

கி.பி. 1596இல் ஹாலந்தைச் சேர்ந்த **ஜான் லின்ச்சோதென்** (John Linchoten) என்பவர் விஷமிடுதலும் சூனிய மிடுதலுமே இந்தியப் பழங்குடியினரின் அன்றாட அலுவல்க ளென்றும், மலேரியாவை அவர்கள் மூலிகைகள், சந்தனம் மற்றும் பல களிம்புகளைக் கொண்டு குணப்படுத்தி விடுகின்றனரென்றும் குறிப்பிட்டுள்ளதுடன் இரத்தவெளியேற்ற முறையைத் தவிர மலேரியாவைக் குணப்படுத்த போர்த்துக்கீஸியரிடம் வேறெந்த நிவாரணமும் கிடையாதென்றும் குறிப்பிட்டுள்ளார். ஐரோப்பிய

மருத்துவர்கள் தங்களுடைய மருந்துகளின் மூலம் நோய்களைக் குணப்படுத்தத் தவறும்போதெல்லாம் உள்ளூர் மருத்துவர்களைக் கலந்தாலோசிக்கின்றனர். கைம்மாறாக இந்திய மருத்துவர்களும் ஐரோப்பிய மருத்துவர்களிடமிருந்து சிலவகைக் குடிநீர் (Syrups), வடிகட்டிய நீர் (Distilled water) இன்னும் சில மருந்துகள் ஆகியவற்றின் பயன்களைக் கற்றுத் தெரிந்து கொண்டனர்.[10] ஆயினும், இந்திய மருத்துவம் வேகமாகப் பரவிவரும் ஐரோப்பிய மருத்துவத்தின் தாக்கத்தை எதிர்கொள்ள வேண்டிய நிலையிலிருந்தது. நாளடைவில் இந்திய மருத்துவத்தை ஐரோப்பிய மருத்துவம் அமுக்கிக் கீழேயிறக்கிவிட்டு மேலோங்கி எழுச்சி பெறலாயிற்று.

இவ்வாறு இந்தியாவில் அரேபியர்கள் மற்றும் போர்ச்சுக்கீஸியரின் குடியேற்றம் தான், இந்தியாவில் யுனானி மற்றும் ஐரோப்பிய மருத்துவங்கள் வேரூன்றிப் பரவிவரக் காரணமாயிருந்தது. இவற்றுள் ஐரோப்பிய மருத்துவத்தின் வளர்ச்சி நாளுக்கு நாள் கடுகிய முடுக்கத்துடன் மிகவேகமாகப் பரவியது. யுனானி மருத்துவத்துடன் இந்திய மருத்துவமாகிய ஆயுர்வேதமும் புறக்கணிக்கப்பட்டதன் மூலம் மிகுந்தளவில் பாதிப்படைந்து ஆங்கிலேயர் ஆட்சி நிலைபெற்றது முதல் வளர்ச்சி குன்றி மறையத் தொடங்கியது.

## 3. இரத்தச் சுழற்சியோட்டம் பற்றிய சர்ச்சை

கி.பி. 17ஆம் நூற்றாண்டு மேலைநாட்டு மருத்துவ வளர்ச்சியின் குறிப்பிடத்தக்க சிறப்புப் பெற்ற காலமாகும். கி.பி. 1628இல் **வில்லியம் ஹார்வே** (William Harvey) இரத்த ஓட்டச் சுழற்சியினைச் செய்முறையின் மூலம் மெய்ப்பித்துக் காட்டினார். பொலோனாவைச் (Bologno) சேர்ந்த **மார்ஸெல்லோ மால்பிகி** (Marcello Malpighi : கி.பி. 1628 - கி.பி. 1695) என்பவர் தமனிகளுக்கும் (Arteries) சிரைகளுக்கும் (Veins) இடையே இணைப்பாகச் செயல்படுகின்ற **நுண்புழை நாளங்கள்** (Capillaries) பற்றிய விளக்கங்களைக் கூறி இரத்த ஓட்டச் சுழற்சி பற்றிய விபரங்களை வெளியிட்டார்.[11] இவ்வாறு, இரத்தச் சுழற்சியோட்டம் பற்றிய நெடுநாளைய சர்ச்சைக்கு ஒரு சுமூகமான தீர்வு ஏற்பட்டது.

## அடிக்குறிப்புகள்.....

### பிரிவு - 1
### உலக நாடுகளில் மருத்துவ வளர்ச்சி

1. **Encyclopaedia Britanica,** Vol. II, p. 94 A.
2. H. Erwin, **A short History of Medicine,** p. 40.
3. **Encyclopaedia Britanica,** Vol. II, P. 94 A.
4. **Ibid.**
5. **Ibid.**
6. William K. Beaty, **Medical Pioneers - The Physicians of Ancient China,** p.152.
7. **Ibid,** p. 94 B.
8. **Encyclopaedia Britanica,** Vol. II, 94 B.
9. **Ibid.,**
10. **Ibid.,**
11. M.R. Ratnavelu, 'Alaku Kuttutal'. **Proceedings of the fifth International Conference Seminar of Tamil Studies.** Vol. II, January 1981. pp. 13-15.
12. William, K. Beaty, **Op.Cit.,** p. 152.
13. **Ibid.,**
14. **Colliers Encyclopaedia,** Vol. 15, p. 641.
15. **Encyclopaedia Britanica,** Vol. II, p. 94.
16. H. Erwin, **Op.Cit.,** p. 19.
17. **Ibid,** p. 20.
18. **New Encyclopaedia of Science,** Vol. 14, p. 967.
19. D.F. Fraser Harris, "Gleanings from Medical Literature, Some Pagan Conception of Disease" **J.S.I.M.** Vol. 3, Medical Press and circular, 1935, p. 127.
20. **Compton's Encyclopaedia,** Vol. 14-A, p. 281.
21. **Museum Guide** : Pt II (Indian medicine). Institute of History of Medicine. Hyderabad, pp. 2, 37.
22. R.B. Chatterjee, "Indian Surgery - Past & Present", **J.A.S.** Vol. XVI, Nos. 1-4, 1974, p. 2.
23. **Museum Guide,** Op.cit., p. 37; R.B. Chatterjee, Op.Cit., p. 2.
24. **Museum Guide,** Op.cit, p. 37.

25. **Ibid.**, p. 968.

26. H. Erwin, **Op.Cit.**, p. 25.

27. K. Krishnamurthy, **Dictionary of Medical Archaeology**, p. 36.

28. **Lexicon Universal Encyclopaedia**, Lexicon Pub. Inc. 1984, Madras, p. 267.

29. R. D. Mann, "The Contributions in the Proceedings of the section of the History of Medicine that relate to the Renaissance and earlier periods of the history of medicine - A review, **JRSM**. Vol. 86, Aug 1993, p. 473.

30. H. Erwin, **Op.cit**, p. 25.

31. **Encyclopaedia Britanica,** Vol. II, 1969, p. 94.

32. K. Krishnamurthy, **Op.Cit.** p. 34.

33. **The world of Science - Serial**, Vol. 5, p. 907.

34. Pringle Patrick : **The Romance of Medical Science**, p. 23.

35. R.W. Livingstone, (Ed.,) **The Legacy of Greece**, p. 240.

36. D.F. Fraber Harris, **Op.Cit., J.S.I.M.** Vol. 3, Nos. 4-5, Apl. 15, May 15, 1936, p. 126.

37. C.M. Bowra, **Great Ages of Man - A History of the world's culture,** classical Greece, P. 103.

38. D.V. Subba Reddy, **B.I.H.M.** Vol. III, No. 1, Jan 1972, p. 25.

39. Magnus Pyke, Patric Moore: **Everyman's Scientific facts and feats,** p. 34.

40. K. Ramachandran, **Hisotry of Medicine Relating to Kindney Disorders of the Urinary Tract,** p. 12.

41. Magnus Pyke, Patric Moore, **Op.cit.**, p. 36.

42. Asoke K. Bagchi, **Medicine in Medieval India,** p. 11.

43. **Encyclopaedia Britanica,** Vol. II, p. 94.

44. **The world of Science Serial**, Vol. 5, 1994, p. 95.

45. S.L. Bhatia, **Greek medicine in Asia & Other Essays**, pp. 167-212.

46. **Encyclopaedia Britanica,** Vol. II, p. 95.

47. **The World of Science Serial**, Vol. 5, p. 95.

48. R.D. Mann, Op.Cit., **JRSM**, Vol. 86, Aug. 1993, p. 474.

49. **Encyclopaedia Britanica**, Vol. II, p. 95.

50. R.D. Mann, **JSRM, Op.cit.**, p. 474.

51. Luigi Paretti., **Hisotry of Mankind** (UNESCO) Vol. II. p. 420.
52. **The Oxford classical Dictionary,** Op.cit, pp. 662-663.
53. Scarborough John : **Roman Medicine,** Op.cit, p. 84
54. **Ibid.,** p. 170.
55. **Ibid.,** p. 86.
56. **Ibid.,** pp. 104-110.
57. Scarborough, John, **Op.cit.,** p. 29.
58. Luigi Pareti, **Op.cit.,** p. 420.
59. Scarborough, John, **Op.cit,** p.110.
60. **Ibid.,** pp. 102, 110.
61. Ancient Roman Coin : 1 Sesterce = 2 denarius = 2 pence.
62. Scarborough, John, **Op.cit.,** p. 121.
63. **Ibid.,** p. 63.
64. **Ibid.,** p. 182, Notes 13.
65. Scarborough, John, Op.cit.,
66. **Ibid.,** p. 110.
67. **The oxford classical Dictionary,** p. 662.
68. K. Ramachandran, **Op.cit.,** p. 13.
69. **New Encyclopaedia of Science,** vol. IV, p. 12.
70. Ibid., p. 13.
71. **The World of Science Serial,** Vol. 5, p. 570.
72. **Ibid.,** pp. 570-571.
73. Sir John Marshall, **A Guide to Taxila,** p. 17.
74. C. Dwarakanath, **The Development of Indian Medicine, Sarangadhara's contribution,** p. 89.
75. H. Erwin, **Op.Cit.,** p. 79.
76. **New Encyclopaedia of Science,** Vol. 4, p. 28.
77. **Ibid.,** p. 22.
78. **Ibid.,**

## பிரிவு - 2
## இந்திய மருத்துவம்

1. N.H. Keswani, (Ed.,) **The Science of Medicine and Physiological concept in Ancient & Medieval India,** p. 52.
2. Asoke K. Bagchi, **Medicine in Medieval India,** 11th to 18th centuries, p. 13.

3. **Museum Guide,** pt. II, p. 6.
4. **Ibid.,** p. 9.
5. **Ibid.,** p. 94.
6. **Museum Guide,** p. 9.
7. S.L. Bhatia, **Greek Medicine in Asia & Other Essays,** p. 208.
8. **Ibid.,**
9. C. Dwarakanath, **The Development of Indian medicine, Sarangadhara's contribution,** p. 55.
10. **Museum Guide,** p. 24.
11. **Ibid.,** pp. 52-56.

    The most commonly accepted dates for the composition of the Charaka Samhita and Nagarajuna's redaction of the older Susruta Samhita are A.D 100 and 3rd to 4th century A.D. respectively. These conclusions were arrived at by the chronology committee of the National Institute of Science, India after considering the entire available data on the subject. **A concise Hisotry of Science in India,** (ed.) D.M. Bose, S.N. Sen, B.V. Subbarayappa, Indian National Science Academy, NewDelhi, 1971, p. 223.
12. C. Dwarakanath, **Op.cit.,** p. 55.
13. **Ibid.,** p. 77.
14. **Museum Guide,** p. 34.
15. **Ibid.,**
16. Sukla Das, 'Contribution of Early Buddhism to the Development of Rational Medicine', **QRHS** (Pub.), The Institute of Historical Studies, Calcutta, Vol. XXXIV, oct. 1994, March 1995, Nos. 3 & 4, p. 19.
17. C. Dwarakanath, **op.cit.,** p. 61.
18. **Ibid.,**
19. **Ibid.,** p. 65.
20. Sukla Das : **Op.cit,** p. 19.
21. **Ibid.,** p. 20.
22. C. Dwarakanath, **Op.cit,** pp. 66-67.
23. Asoke. K. Bagchi, **Op.cit.,** p. 45.
24. **Museum Guide,** p. 24.
25. **Encyclopaedia Britanica,** Vol. 15, p. 742.
26. C. Dwarakanath, **Op.cit,** p. 86.
27. G. Zysk, Kenneth : **Ascetism and Healing in Ancient India, Medicine in the Buddhist Monastery,** p. 44.

28. **Ibid.**, p. 45.
29. **Ibid.**,
30. G. Zysk kenneth, **Op.cit.**, p. 44.
31. **Ibid.**, p. 45.
32. N.H. Keswani, **Op.cit**, pp. 133-140.
33. **The world of Science - Serial**, Vol. 5, p. 570.
34. R.H. Chatterjee, **Op.cit.**, p. 21: J.A.S. Vol XVI, Nos. 1-4, 1974.
35. **Museum Guide**, pp. 22-23.
36. **New Encylopaedia of Science**, Vol. 4, p. 32.
37. R.B. Chatterjee, **Op.cit.**, p.2.
38. Newberger, Max : **History of Medicine**, Oxford Vol. I, pp. 57-58.
39. **Encyclopaedia Britanica**, Vol. II, p. 94 A.
40. Luigi Paretti, **History of Mankind** (UNESO), Vol. III pt. II, p. 638.
41. C. Dwarakanath, **Medicine in Ancient India**, pp. 80-81.
42. Luigi Pareti, **Op.cit.**, p. 120.
43. G. Zysk, kenneth, **Op.cit.**, p. 120.
44. Sukla Das : **Op.cit.**, p. 15.
45. **Museum Guide** : p. 19; Zysk, Kenneth G. **Op.cit.**, p. 122.
46. G. Zysk Kenneth, **Op.cit.**, pp. 120-124.
47. Sukla Das : **Op.cit.**, p. 17.
48. **Ibid.**
49. **Museum GUide**, pp. 220-221.
50. R. Subramaniyam, **'History of Indian Medicine (Synopsis) - some Archaeological or Epigraphical Sources'**, p. 112.
51. C. Dwarakanath, **The Development of. Op.cit.**, p. 58.
52. S.L. Bhatia, **Op.cit.**, p. 209.
53. G. Zysk, Kenneth, **Op.cit.**, p. 47.
54. C. Dwarakanath, **Op.cit.**, p. 58.
55. Sukla Das, **Op.cit.**, p. 19.
56. P.N. Chopra & others, **A Social Cultural and Economic Hisotry of India**, p. 168; D.P. Singhal, **A History of the Indian People**, p. 108.
57. **Ibid.**, p. 170.
58. D.P. Singhal, **Op.cit**, p. 108.
59. P.N. Chopra & Others, **Op.cit**, p. 170.

60. Luigi Pareti, **Op.Cit**, Vol. III, pt. II, p. 638.
61. D.V.S. Reddy, **B.I.I.H.M.** Vol. XVII, No.2, July 1987, pp. 155-157.
62. **Compton's Encyclopaedia**, Vol. XIV, p. 282.
63. S.L. Bhatia, **Op.cit.**, p. 9.
64. **B.I.H.M.** Vol. IV, p. 214.
65. **Encyclopaedia of Asian History**, Vol. 2, p. 521.
66. **New Encyclopaedia of Science**, Vol. 4, p. 32.
67. **Encyclopaedia Britanica**, Vol. II, p. 96.
68. **Ibid.**, p. 96.
69. **Early Civilization**, Vol. III, **Byzantium and the Ancient East**, pp. 54-55.
70. **Museum Guide**, p. 49.
71. **Ibid.**
72. **Ibid.**, p. 150.

## *பிரிவு – 3*
## மருமலர்ச்சி மருத்துவம்

1. R.D. Mann, **JRSm, Op.cit**, p. 476.
2. **Encyclopaedia Britanica**, Vol. II, p. 97.
3. **Ibid.**
4. **Compton's Encyclopaedia**, Vol. 14, p. 283.
5. Magnus Pyke & Patric, Moore, **Op.cit.**, p. 41.
6. **The world of Science Serial**, Vol. 5, p. 7; **The New Book of Knowledge**, Vol. 12, p. 205.
7. **Ibid.**
8. **New Encyclopaedia of Science**, Vol. 4, p. 15.
9. Lourder Bravo Da costa **B.I.I.H.M.**, Vol. XVII, pp. 58-59.
10. **The World of Science Serial**, Vol. 5, p. 907.
11. **Ibid.**



## அத்தியாயம் – 3

# தென்னிந்திய மருத்துவம்

## (தமிழ்நாடு நீங்கலாக)

தென்னிந்திய மருத்துவ வரலாற்றுக்கு ஒரு தோற்றுவாயாக இருக்கும் வகையில் பல்வேறு நாடுகளின் மருத்துவ வரலாறு மற்றும் மருத்துவ வளர்ச்சி பற்றி இதுகாறும் சுருக்கமாக விவாதிக்கப்பட்டது. கி.மு. 3000 ஆண்டு முதல் வட இந்தியாவில் மருத்துவத்திற்கெனத் தனி வரலாறு இருந்தது. ஆனால் அதே காலத்தில் தென்னிந்தியாவில் நிலவிவந்த மருத்துவ முறைகள் பற்றி விளக்கிக் கூறும் வகையில் போதுமான ஆதாரங்கள் கிடைக்கவில்லை. கி.மு. மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்த பேரரசர் அசோகரின் கல்வெட்டுச் சாஸனம் மட்டுமே தென்னிந்தியாவில் நிறுவப்பட்ட புத்தமடாலயங்கள் பற்றியும் அவை மக்களுக் காற்றிய மருத்துவ சேவைகள் பற்றியும் சில ஆதாரங்களைத் தந்துள்ளது.

தென்னிந்தியாவில் மக்களின் வாழ்க்கை முறைகள் பற்றித் தெரிவிக்கின்ற கல்வெட்டுக் குறிப்புக்கள் கி.பி.10ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவையாகவேயிருக்கின்றன. அதற்கு முந்திய காலத்தில் தென்னிந்திய மக்களின் வாழ்க்கைமுறை மற்றும் கலாச்சாரம் பற்றித் தெரிந்து கொள்ளத் துணை நிற்பது தமிழ்ச் சங்க இலக்கியங்கள் மட்டுமே. இச்சங்க இலக்கியங்கள் தற்போதைய தமிழ்நாட்டுப் பகுதிகளுடன் கர்நாடகம், ஆந்திரம், கேரளம் ஆகிய மாநிலங்களின் பல பகுதிகளையும் கொண்டமைந்த அப்போதைய தமிழ்த்தேச மக்களின் பழக்கவழக்கங்கள், கலாச்சாரம் மற்றும் சமூக, பொருளாதார நிலைகள் பற்றி விளக்கிக் கூறுபவனவாய் அமைந்துள்ளன.

சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்ற சங்ககால மக்களின் நோய்கள் மற்றும் மருந்துகள் பற்றிய அறிவு, கருத்து,

விழிப்புணர்வு ஆகியவை தென்னிந்திய மக்களின் மருத்துவப் பழக்கவழக்கங்களைப் பிரதிபலிப்பவைகளாக எடுத்துக் கொள்ளலாம்.

இச்சங்க இலக்கியங்களில் குறிப்பிடப்பட்டுள்ள விவரங்கள் பிற தென்மாநில மக்களின் வாழ்க்கை முறையைப் பற்றிய விவரங்களுடன் தமிழ்நாட்டு மக்களின் வாழ்க்கை முறைமை பற்றி முழு அளவிலான குறிப்புக்களைத் தெரிவிப்பதால் தமிழ்நாட்டு மருத்துவ வரலாறு பற்றி ஒரு சிறப்புக் கண்ணோட்டத் துடன் இவ்வாய்வேட்டில் ஒரு தனி அத்தியாயமாக இறுதியில் தரப்பட்டுள்ளது. எஞ்சிய மாநிலங்களான கர்நாடகம், ஆந்திரம், கேரளம் ஆகியவற்றின் மருத்துவ வரலாறு பற்றி இந்த அத்தியாயத்தில் விவரிக்கப்பட்டுள்ளது. கி.பி. 16ஆம் நூற்றாண்டு வரையிலான காலத்தில் இம் மாநிலங்களில் மக்களைத் தாக்கி வந்த நோய்கள், அந்நோய்களைத் தீர்ப்பதற்காக அக்கால மருத்துவர்கள் மேற்கொண்ட சிகிச்சை முறைகள், அவர்கள் பயன்படுத்திய மருந்து வகைகள், மருத்துவர்களின் நிலைமை, மருத்துவ வளர்ச்சிக்காக அன்றைய ஆட்சியாளர்கள் மேற்கொண்ட நடவடிக்கைகள், மருத்துவமனைகள் ஆகியவை பற்றி இந்த அத்தியாயத்தில் விவரிக்கப்பட்டுள்ளது. தமிழ்நாடு நீங்கலான இத்தென்மாநிலங்களின் மருத்துவ வரலாறு தமிழ் நாட்டு மருத்துவ வரலாற்றுக்கு ஒரு முன்னோடி போன்றே அமைந்திருக்கும்.

## பிரிவு 1

## தென்னிந்திய மருத்துவத்தின் தொடக்ககால வளர்ச்சி

ரிக்வேத காலம் முதல் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கம் வரை கர்நாடகாவில் மருத்துவத் தொழிலுக்கு சமஸ் கிருதமே ஊடக மொழியாகயிருந்து வந்திருக்கிறது.[1] ஆந்திர தேசத்தில் கிறித்துவ சகாப்தத்தின் தொடக்க கால நூற்றாண்டு களில் சமஸ்கிருத பாரம்பரியமும் கலாச்சாரமுமே பரவியிருந்தது. மருத்துவர்கள் தங்கள் தொழிலுக்காகப் பழைய சமஸ்கிருத நூற்களையே பெரிதும் நம்பியிருக்க வேண்டிருந்தது.[2] கேரளாவில் கிறித்துவ சகாப்தத் தொடக்க காலத்தில் சமஸ்கிருதம் கேரளா முழுமையும் ஆக்ரமித்திருந்தது; சமஸ்கிருத மொழியிலுள்ள ஆயுர் வேத மருத்துவ நூல்கள் கேரள மருத்துவர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டிருந்தன.[3]

ஆந்திரம் இந்தியாவின் நடுப்பகுதியில் அமைந்திருப்பதால் அது வட இந்தியாவிற்கும் தென்னிந்தியாவிற்குமிடையே ஒரு இணைப்புப் பாலமாக இருந்து வந்தது. வடக்கிலிருந்து தெற்கேயும் தெற்கிலிருந்து வடக்கேயும் பயணம் செய்யும் மக்கள் வழியில் ஆந்திரமக்களுடன் தொடர்பு கொண்டனர். குறிப்பாக இந்தியாவெங்கிலுமிருந்து வருகின்ற மருத்துவர்களுடன் தொடர்பு கொள்ளும் வாய்ப்புக்கள் ஆந்திர மருத்துவர்களுக்கு அதிகமாகக் கிடைத்தன. மேலும், மிக நீண்ட கடற்கரையை ஆந்திரம் கொண்டிருந்ததால் இந்தியாவிற்கு வருகை தரும் கடல் வழி அயல்நாட்டுப் பயணிகள் கரையிறங்குமிடமாகவும் ஆந்திரம் அமைந்தது. அவ்வாறு வந்த பயணிகளுள் மருத்துவர்களும் இடம்பெற்றிருந்தனர். எனவே, ஆந்திர மருத்துவர்கள் பல திறப் பட்ட பாரம்பரியமும் கலாச்சாரமுங் கொண்ட பல்வேறு பகுதிகளைச் சேர்ந்த மருத்துவர்களிடமும் கருத்துப் பரிமாற்றம் செய்து கொள்ளும் வாய்ப்புக்களை நிறையப் பெற்றிருந்தனர். இதன் காரணமாக, பல்வேறு நாட்டு மருத்துவ முறைகளும், குறிப்பாக வடநாட்டின் ஆயுர்வேதமும், தமிழ்நாட்டின் சித்த மருத்துவமும் கலந்ததொரு தனி மருத்துவ முறையினைத் தங்களுக்கென உருவாக்கி வளர்த்தனர். அது **ஆந்திர தேசத்தின் ஆயுர்வேதம்** (Ayurveda of Andhra desa) என வழங்கப்பட்டது.[4]

ஜைன மற்றும் புத்த சமயத் துறவிகளினால் ஆயுர்வேத மருத்துவமுறை கேரளாவில் புகுத்தப்படுவதற்கு முன்னரே மக்கள் உடல்நலத் தேவைகளைப் பாதுகாத்து வந்த பாரம்பரிய மருத்துவ முறையினைக் கேரளா பெற்றிருந்தது. ஆயுர்வேதம் புகுத்தப்பட்ட போது, கேரளாவிற்கேயுரிய சிறப்பு மூலிகைச் செடிகளைப் பயன் படுத்தி ஆயுர்வேதம் தனது தன்மையினை மாற்றிக் கொண்டது. கேரள மூலிகை மருந்துகளையும் கேரள மருத்துவச் சிகிச்சை முறைகளையும் பிற மாநிலங்களின் மூலிகை மருந்துகளுடனும் சிகிச்சை முறைகளுடனும் ஒப்பு நோக்கினால் கேரள ஆயுர் வேதத்தின் தனித்தன்மை புலப்படும் என்று **வாரியர்** (Warrier) குறிப்பிட்டுள்ளார்.[5] இதற்குச் சான்று பகரும் வகையில், **தன்வந்தரம் குளிகை** (Dhanwantaram Pills), **கோரோசனாதி குளிகை** (Gorochanaadhi Pills), **வாயு குளிகை** (Vayugulika) மற்றும் **இளநீர் அஞ்சனம்** (Elaneer anjanam) ஆகிய கேரளாவின் தனிமுத்திரை பெற்ற மூலிகை மருந்துகளை அவர் மேற்கோள் காட்டுகின்றார். இந்த மருந்துகள் யாவும் ஒவ்வொரு கேரளப் பெண்ணுக்கும் மிகவும் பழக்கப்பட்டவையாகும்.[6]

## நோய்களும் சிகிச்சைகளும் பற்றிய ஆதாரங்கள்

மனித இனத்தைப் போன்று நோயும் தொன்றுபட்ட ஒன்றேயாகும். தவறான உணவு மற்றும் பழக்கவழக்கங்களின் விளைவாக உடலிலுள்ள உயிர்த்தாதுக்களின் விகிதாச்சாரம் மாறுபடுவதால் அவற்றின் கெடுபயன்கள் எல்லோருடைய உடல்களிலும் உள்ளடங்கிய கெடுபயன்களாக இயல்பு நிலைக்குக் கூடுதலாகவோ அல்லது குறைவாகவோ இருக்கும். எனவே, எல்லா மனிதர்களும் நோயினால் பாதிக்கப்படக் கூடிய சாத்தியக் கூறு படைத்தவர்களேயாவர்.

பண்டைய தென்னிந்தியாவில் பரவியிருந்த நோய்கள், அவற்றின் தன்மைகள் மற்றும் அந்நோய்களைத் தீர்ப்பதற்காகவே மேற்கொள்ளப்பட்ட சிகிச்சை முறைகள் ஆகியவை பற்றி ஆவணங்களாலும், பயணிகளின் குறிப்பேடுகளாலும் அறிந்து கொள்ளலாம்.

சங்ககாலத் தமிழ்த் தேசத்தில் பரவியிருந்த நோய்கள் பற்றிப் போதுமான குறிப்புக்கள் சங்க இலக்கியங்களில் காணப் படுகின்றன. இவை பற்றிய விபரங்கள் அடுத்த அத்தியாத்தில் தரப்பட்டுள்ளன.

கர்நாடகாவில் கி.பி. 9ஆம் நூற்றாண்டு முதற் கொண்டு தான் நூல்கள் எழுதக் கன்னடமொழி பயன்பட்டதாகத் தெரிகிறது.[7] ஆந்திராவில் கி.பி.1000 முதற்கொண்டுதான் தெலுங்கு மொழியின் பயன்பாட்டினை உணர்ந்து பல சமஸ்கிருத நூற்கள் தெலுங்கு மொழியில் மொழிபெயர்க்கப்பட்டன.[8] எனவே, கர்நாடகாவிலும் ஆந்திராவிலும் பழங்காலத்தில் கையாளப்பட்டுவந்த மருத்துவ முறைகள் பற்றி கி.பி. 11ஆம் நூற்றாண்டிற்குப் பின்னர் எழுதப் பட்ட ஆவணங்களிலிருந்து மட்டுமே தெரிந்து கொள்ள முடியும்.

## கேரளாவின் நாட்டு மருத்துவ சிகிச்சை

கேரளாவில் மிகவும் முற்பட்ட காலத்தில் மருத்துவத் தொழில் புரிந்து வந்தவர் நாட்டு வைத்தியன் (Native Vaidya) என்றழைக்கப்பட்டார். இவர் எல்லாவகை மூலிகைகள் மற்றும் மருந்துச் செடிகள் பற்றி ஆழ்ந்த அறிவு பெற்றிருந்தார். நாட்டு வைத்தியரின் சிகிச்சை முறை பற்றி ஆனந்தாவுட் (Ananda Wood) என்பவர் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.[9]

> “நாட்டு வைத்தியர் நோயாளிகளின் இல்லத்திற்குச் சென்று சிகிச்சையளிக்கின்றார்.

> தினசரி நோயின் தன்மையைக் கூர்ந்து கவனித்து அதற்கேற்ப நோயாளி குண மடையும் வரை மருந்துகள் கொடுத்துச் சிகிச்சையளிக்கின்றார். "நோயாளியின் சக்தியைக் கீழ் நிலைக்குக் கொணர்தல்' என்ற கொள்கையை அடிப்படையாகக் கொண்டது தான் நாட்டு வைத்திய சிகிச்சை முறை. எனவே, நோயாளியின் உணவு முறையினைத் தீர்மானித்த பின்னரே நாட்டு வைத்தியர் தனது சிகிச்சையினைத் தொடங்குவார்."[10]

நோயாளி குணமடையும் வரை சிகிச்சைக்குத் தேவையான மூலிகைகளைச் சேகரிப்பதற்கும், அம்மூலிகைகளி லிருந்து மருந்துகள் தயாரிப்பதற்கும் ஆகின்ற செலவுகளுக்கு மட்டுமே நாட்டுவைத்தியருக்குப் பணம் கொடுக்கப்படும். நோயாளி பூரணமாகக் குணமடைந்த பின்னரே அவருடைய சேவைக்கான ஊதியம் தரப்படும்; அந்த ஊதியமும் அநேகமாகப் பணமாகத் தரப்படுவதில்லை; மாறாக, துணிகள், அரிசி, பழங்கள் முதலிய பொருட்களாகவே தரப்படும். வைத்தியரும் இப்பொருட் களை அவருடைய மருத்துவச் சேவைக்காகச் செய்யப்பட்ட சன்மானமாகக் கருதி மிகுந்த நன்றியுடன் பெற்றுச் செல்வார். நோயாளியும் வைத்தியரிடம் நன்றியுள்ளவராயிருப்பதுடன் எல்லாப் பண்டிகை நாட்களிலும் இதுபோன்ற சன்மானங்களை வைத்தியருக்கு வழங்கி நன்றிமறவா நட்புடன் தொடர்ந்து பழகி வருவார்.[11]

### கண்ணோய்களும் கண் மாற்றுச் சிகிச்சையும்

ஆந்திராவைச் சேர்ந்த **பனகலராயர்** (Panakalaraayaa) என்பவர் எல்லாச் சாத்திரங்களிலும் வல்லவராயிருந்தார். அரசர்கள் மற்றும் பேரரசர்களின் அவைகளில் கௌரவிக்கப் பட்டவர். கண்ணோய்கள் பற்றித் தெலுங்கு மொழியில் சிறிய ஆய்வுக் கட்டுரையொன்றை எழுதியுள்ளார். வடமொழியில் சரகரும், சுசுருதரும் 76 வகையான கண்ணோய்கள் பற்றி மட்டுமே குறிப்பிட்டுள்ளனர். ஆனால் **பனகலராயரோ 96 வகையான கண்ணோய்கள் பற்றியும் 35 வகையான கண்–களிம்புகள் (Eye-ointment)** பற்றியும் தனது ஆய்வுக் கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார்.[12]

கர்நாடகத்தில் பல்குரிகி சோமனா (Palkuriki Somana : கி.பி. 12ஆம் நூற்றாண்டு) என்பவர் சிறந்த மருத்துவக்

கவிஞராவார். கண்ணோய்கள் பற்றிய அவரது அறிவையும் கண்மாற்றிப் பொருத்துதல் (Eye-Transplantation) பற்றிய அவரது கருத்துக்களையும் தனது புராண, கற்பனைக் கதைகளில் ஆங்காங்கே வெளிப்படுத்தியுள்ளார்.[13]

கண்ணப்ப நாயனாரின் கதையில், சிவபெருமானின் வலது கண்ணிலிருந்து நீர்வடிதலைப் பற்றிக் கூறுமிடத்துக் கண்ணோய் களின் வகைகள் மற்றும் தன்மைகள், கண்ணோய்களுக்கான அறிகுறிகள், கண்ணோய்களுக்கான சிகிச்சை ஆகியவை பற்றிக் கூறியதுடன் மாற்றுக் கண் பொருத்துதல் பற்றிய தனது கருத்தினையும் பின்வருமாறு வெளிப்படுத்தியுள்ளார்.

"சிவபெருமானின் வலக்கண்ணில் நீர் வடிதலைக் கண்ணுற்ற கண்ணப்பர் பலவகை மூலிகைகளையும் பயன்படுத்தித் தனக்குத் தெரிந்த எல்லாவித சிகிச்சை முறைகளிலும் கண்ணில் நீர் வடிதலைத் தடுத்து நிறுத்த முயற்சி செய்தார். எவ்விதப் பலனுமில்லையென்று கண்ட அவர் தனது அம்பினால் தனது வலது கண்ணைத் தோண்டியெடுத்து சிவபெருமானின் வலது கண்ணில் பொருத்தினார். வலது கண்ணில் நீர் வடிதல் உடனே நின்றது. ஆனால் மறுகணமே, சிவபெருமானின் இடது கண்ணில் நீர் வடியத் தொடங்கியது. உடனே கண்ணப்பர் தனது இடது கண்ணையும் அம்பினால் அகழ்ந்தெடுக்க முனைகிறார்". கண்ணப்பரின் கதை இவ்வாறு தொடர்கிறது. இது புராணக் கதையாகயிருப்பினும், கண் அறுவை சிகிச்சை முறையும் மாற்றுக் கண் பொருத்தும் முறையும் அடிப்படைக் கருத்தாக இக்கதையினுள்ளடங்கியிருப்பது மாற்றுக் கண் பொருத்தும் முறை பற்றி அக்கால மருத்துவர்கள் தெரிந்துள்ளனர் என்று எண்ண இடமளிக்கிறது.[14]

அன்றைய கர்நாடக மக்கள் கண்-வங்கி (Eye-Bank) பற்றியும் தெரிந்து வைத்துள்ளனர் என்பது சோமனாவின் மற்றொரு கதையிலிருந்து தெளிவாகிறது. காளிதாசன் என்னும் சிவபக்தர் தன்னிரு கண்களையும் அகழ்ந்தெடுத்து சிவனின் காலடியில் சமர்ப்பித்து, தனக்கு ஏராளமான கண்-குவியல் தர வேண்டுமென பக்தி நயத்துடன் வேண்டி நின்றார். அவரது வேண்டுதலை ஏற்றுக் கொண்ட சிவபெருமானும் அவர் விரும்பிய கண் குவியலைக் கொடுத்தருளினார். காளிதாசன் அக்கண் குவியலை எடுத்துச் சென்று கண்ணற்றக் குருடர் களுக்கும், கடுமையான கண்ணோயினால் கண்பாதிப்பு அடைந்தவர்களுக்கும் மாற்றுக் கண்பொருத்தும் முறையில்

கண்பார்வை பெறச் செய்தார்.[15] கதைக்காகக் கூறப்பட்ட சம்பவ மாயினும், கண் மாற்றுச் சிகிச்சை பற்றியும் கண்வங்கி முறை பற்றியும் இடைக் காலக் கர்நாடக மக்கள் அறிந்திருக்கின்றனர் என்பதே இக்கதையின் மூலம் தெரியவரும் அரிய செய்தியாகும்.

## மூக்குக் குழைம அறுவை சிகிச்சை

மிகவும் முற்பட்ட காலத்தில் வடஇந்தியாவில் மிகவும் பிரபல்யமாகயிருந்த **மூக்குக் குழைம அறுவை சிகிச்சை** (Treatment of Rhinoplasty : அத். 2ஐப் பார்க்க) முறை கர்நாடகாவில் 12 மற்றும் 13ஆம் நூற்றாண்டின்போது நடைமுறையிலிருந்திருக் கிறது. **மகானுபாவக் குழு** (Mahaanubhaava Sect)வின் நிறுவனரான **சக்ரதார சுவாமிகள்** (Chakradhaaraa Swamigal) பைத்தான் எனுமிடத்தில் ஒழுக்கக்கேடான நடத்தைக்காக மூக்கறுப்புத் தண்டனை பெற்றார். பின்னர் அவருடைய பக்தர்களின் வேண்டுகோளுக்கிணங்க முகத்தில் சிதைந்த பகுதி மீண்டும் சரி செய்யப்பட்டது.[16]

கர்நாடக அறுவை மருத்துவர்கள் பற்றி வெர்மா (Verma)வும் கேஸ்வானி (Keswani)யும் வழங்கியுள்ள குறிப்புக்கள் மிகவும் சிறப்பு வாய்ந்தவை; "இடைக் காலத்தில் **பிஜப்பூர்** (Bijapur) அரசவையைச் சேர்ந்த அறுவை மருத்துவர்கள் மிகவும் பிரபல்யமாக இருந்ததோடு மருத்துவ அறிவியலில் அவர்கள் கலைக்களஞ்சியங்களாகவும் திகழ்ந்தனர். அத்துடன் குழைம அறுவை சிகிச்சை (Plastic Surgery)யிலும் மிகவும் தேர்ச்சி பெற்றவர்களாகத் திகழ்ந்தனர்."[17]

## கேரளாவின் சிறப்புச் சிகிச்சைகள்

பிற மாநில மருத்துவ முறைகளினின்றும் கேரள மருத்துவம் உயர்ந்து நிற்கக் காரணம் மிகப்பழங்காலம் முதற் கொண்டே தனிச்சிறப்புப்பெற்ற சிலவகை சிகிச்சை முறைகளை அது பெற்றிருப்பதேயாகும். அத்தகைய சிகிச்சைகளுக்குப் பிற மருத்துவ முறைகளில் இதுவரை வேறு எவ்விதமான பயனுள்ள சிகிச்சை முறைகளும் கண்டறியப்படவில்லை. எடுத்துக்காட்டாக, **கிழி** (Kizhi), **பிழிச்சில்** (Pizhichil), **தாரா** (Dhaaraa) என்பன **வாத நோயைக்** (Rheumatism) குணப்படுத்தக்கூடிய மிகவும் சக்திவாய்ந்த கேரள சிகிச்சை முறைகளாகும்.[18] **நாராயணீயம்** (Naaraayaneeyam) என்ற நூலினை இயற்றிய புகழ்பெற்ற ஆசிரியர் **மேல்பத்தூர் நாராயண பட்டாத்திரி** (Melpathoor Naaraayana Bhattaathiri) என்பவர் தனக்கு ஏற்பட்ட வாதநோய்க்குக் குருவாயூர்

(Guruvaayur) கோயிலில் சிகிச்சை பெற்றுக் குணமடைந்தார் என்று கேரள மாநில கருப்பொருட் களஞ்சியத்தில் (Kerala State Gazatteer) குறிப்பிடப்பட்டுள்ளது.[19]

கர்நாடகாவில் புகழ்பெற்றக் கவிஞர் பல்குரிகி சோமனா (Palkuriki Somana) என்பவர் ஆயுர்வேதத்தை அடிப்படையாகக் கொண்டு, தான் எழுதிய ஒரு கதையில் வாதநோய்க்கான பலவகை சிகிச்சைகள் பற்றி விவரித்துள்ளார்.[20] மர்ம சிகிச்சை (மனித உடலின் மர்ம பாகங்களுக்கு அளிக்கப்படும் சிக்சிசை), உழிச்சில் (Uzhichil - மருந்து கொடுத்து உடலை நீவிவிட்டு அளிக்கப்படும் சிகிச்சை) ஆகியவை கேரளாவிற்கே உரித்தான பிற சிறப்புச் சிகிச்சைகளாகும். பாரம்பரியமிக்க இந்த உழிச்சில் சிகிச்சை முறையிலிருந்து எலும்பு முறிவுகள், பிளவுபட்ட எலும்புகள் மற்றும் சாதாரண நோய்களுக்காகவென பல்திறப்பட்ட உழிச்சில் முறைகள் கண்டறியப்பட்டுள்ளன.[21]

## வைசூரி

மிகப் பழங்காலம் முதற்கொண்டு தென்னிந்திய மக்களைத் தாக்கி வருகின்ற ஒரு கொடிய நோய் வைசூரி (Small-pox)யாகும். இது துரிதமாகத் தொற்றிக் கொள்ளும் தன்மை படைத்தது. கேரளாவில் மலபார் பகுதிகளில் மழைக்காலமாகிய மார்கழி-தை (December-January) மாதங்களிலும் அதைத் தொடர்ந்து வரும் சில மாதங்களிலும் மிக எளிதாக மக்களைத் தாக்கும் தன்மை படைத்தது. இந்நோயினால் பாதிக்கப் பட்டவர்களைக் குளிர்ந்த காற்றினைச் சுவாசிக்க முடியாத வகையில் மூடிய அறைக்குள் வைத்து, சர்க்கரை, வேகவைத்த வெங்காயம், தனியாவிதைகள், அரிசிச் சோறு, மிளகு, வெங்காயச் சாறு மற்றும் நல்ல உடல் நலத்துடனிருக்கும் குழந்தையின் சிறுநீர் ஆகியவற்றை மருந்தாக அவர்களுக்கு உட்கொள்ளக் கொடுத்துள்ளனர் என்று விஷ்ஷரின் கடிதங்களை (Visshers letter) மேற்கோள் காட்டி பத்மநாப மேனன் குறிப்பிட்டுள்ளார்.[22] மேலும், முறை வலிப்புக் காய்ச்சல் (Tertian fever) குடல் பூச்சிக் கோளாறுகள் (Cases of worms) செரிமானமின்மைக் கோளாறுகள் (Disorder from Indigestion), வயிறு மற்றும் நரம்புகளின் தளர்ச்சி (Weakness of Stomach and Nerves) ஆகிய நோய்கள் பற்றியும் அவற்றின் சிகிச்சைக்கென வேப்பிலைக் கஷாயத்தை (Decoction of Neem leaves)ப் பயன்படுத்தியுள்ளன ரென்றும் அக்கடிதங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது.[23] தவிர, காயங்களுக்கும் புண்களுக்கும் அரைத்த பச்சை வேப்பிலைப்

பசையினைத் தடவுவதன் மூலம் புண்கள் மேலும் பரந்து விரியாதவாறும் புரையோடிப் போகாமலும் பாதுகாக்கப்படு மென்றும் அக்கடிதங்கள் தெரிவிக்கின்றன.[24]

### யானைக் கால் நோய்

விஷ்ஷரின் கடிதங்கள் **யானைக்கால் நோய்** (Elephantiasis) என்னும் ஒரு வகை விசித்திரமான நோய் பற்றியும் தெரிவிக்கின்றன.[25] இந்நோயினால் பாதிக்கப்பட்டவரின் கால் வீக்கமடைந்து பெருத்து யானையின் கால் போன்று காட்சி அளிப்பதால் இந்நோய்க்கு இப்பெயர் வந்தது. இது கேரளாவில் கொச்சியைச் சுற்றியுள்ள இடங்களில் மிக அதிக அளவில் காணப்பட்டதால் இதற்குக் **கொச்சிக் கால்** (Cochin-leg) என்றும் பெயர் வழங்கப்பட்டுள்ளது.[26] **தேவதூதர் செயின்ட் தாமஸ்** (Apostle St. Thomas) தன்னைக் கொலை செய்த கொலையாளி களுக்குச் சாகுந்தருவாயிலிட்ட சாபத்தின் விளைவாகவே இந்நோய் தோன்றியதாகப் பாரம்பரியமாக நம்பப்பட்டு வருகிறது.[27]

### காலரா

தென்னிந்தியாவிற்கு வந்த பயணிகள் கண்ட மற்றொரு கொடிய நோய் **காலரா** (Cholera)வாகும். முதன்முதலாக வந்த பயணிகள் இந்நோயினை **மோர்டெக்சின்** (Mordexin), **மார்ட்-டி-சின்** (Mort-de-chien), **மோர்க்சி** (Morxy) என்று பலவாறாக அழைத்துள்ளனர்.[28] இந்நோய்க்கான அறிகுறிகள் பற்றியும் அவர்கள் தங்கள் கடிதங்களில் குறிப்பிட்டுள்ளனர். வாந்தி யெடுத்தல் (Vomiting), வயிறு வறண்டு போய்த் தீராத தாகமெடுத்தல், கண்கள் குத்திட்டு நோயாளி இறந்தது போல் காணப்படுதல், கை, கால் விரல்களின் நகங்கள் கறுத்துச் சுருங்குதல் முதலியன இந்நோயின் அறிகுறிகளாகும். இந்நோய் கண்டவர்களின் இறப்பு வீதம் 90 சதவீதத்திற்கும் மேலாக இருந்துள்ளது.[29] கேரள மக்கள் இந்நோயினை **நீர்க்கொம்பன்** (Neerkomban) அல்லது **பித்த பேதி** (Bilious Diarhoea) என்று அழைத்துள்ளனர்.[30]

### தொழுநோய்

தொழுநோய் ஒரு பயங்கரமான தோல் நோய். இந்நோயின் அறிகுறிகள் மற்றும் விளைவுகள் பற்றித் தமிழ் இலக்கியங்களில் விரிவாக விளக்கப்பட்டுள்ளன. கேரளாவில்

இந்நோய் தகழி (Takazhi) மற்றும் கஞ்சிரங்கோடு (Kanjirankode) ஆகிய இடங்களிலுள்ள கோயில்களில் அளிக்கப்படும் சிகிச்சையின் மூலம் குணப்படுத்தப்படுகிறது.[31]

வேதங்களில் கூறப்பட்டுள்ள சில பாசுரங்களை மேற்கோள்காட்டி, கர்நாடகக் கவிஞர் **பல்குரிகி சோமனா** (Palkuriki Somana) அவருடைய கதைகளுள் ஒன்றின் மூலமாக "**தொழுநோயினைச் சூரிய ஒளிக்கதிர்களால் குணப் படுத்தலாம்**" என்று அறிவுறுத்தியுள்ளார்.[32] தென்னிந்தியாவில் நடைமுறையிலிருக்கும் **சூரிய நமஸ்காரம்** (Sun-Worship) என்னும் சமயப் பழக்கம் தோல் நோய்களின்றும் உடம்பைப் பாதுகாத்திடக் கூடிய இந்தக் கொள்கையின் அடிப்படையில் அமைந்ததாகயிருக்கலாம். எவ்வாறிருப்பினும், தொழுநோயைக் குணப்படுத்து வதில் சூரிய ஒளிக்கதிர்கள் எந்த அளவிற்குப் பயன்பாடுகளை விளைவிக்கின்றன என்பது மருத்துவ ஆராய்ச்சிக்குரிய ஒன்றாகும்.

மேலே குறிப்பிடப்பட்ட நோய்கள் தவிர, காய்ச்சல் (Fever), தோல் நோய்கள் (Skin Disease), காசநோய் (Tuberculosis), மஞ்சட்காமாலை (Jaundice), பாலியல் நோய்கள் (Venereal diseases) முதலியன ஆந்திராவில் காணப்பட்ட சில நோய்களாகும். அவற்றுள் சிலவற்றிற்கு உள்ளூர் மருந்துகளே சிகிச்சைக்காகப் பயன்படுத்தப்பட்டன.[33] இரத்த மூலம் (Bleeding Piles), சிறுநீரகக் கோளாறுகள் (Urinary Disorders), கழலைக் கட்டிகள் (Tumours), வாயுத் தொடர்பான நோய்கள் (Gastric Diseases), இரத்த சோகை (Anaemia), வயிற்றுப் போக்கு (Diarrhoea), குறைப்பிரசவம் (Miscarriage), பெண்களுக்கு வரும் நோய்கள் (Diseases of Women), பல் நோய்கள், தலைவலி, புரையோடிய புண்கள் (Fistula) மற்றும் வலிப்பு நோய் (Epilepsy) முதலியன கி.பி. 1405இல் லட்சுமணா சாரியா எழுதிய **வைத்திய வல்லபா** (Vaidya Vallabha) என்னும் நூலில் குறிப்பிடப்பட்ட மற்றும் சில நோய்களாகும்.[34] இத்தகைய மருத்துவ நூற்களை எழுதிய மருத்துவர்கள் இந்த நோய்களின் அறிகுறிகள் (Symptoms), நோய் அறுதியிடல் (Diagnosis), நோய்களுக்கான சிகிச்சைகள் (Treatment) ஆகியவற்றையும் குறிப்பிட்டு, அதன் மூலம் மருத்துவத்தில் தாங்கள் பெற்றிருந்த செறிந்த அறிவினையும் வெளிப்படுத்தியுள்ளனர். உதாரணமாக, ஆந்திராவைச் சேர்ந்த **மல்லிநாதன்** என்பவர் (கி.பி. 15ம் நூ.ஆ.) அவரது குறிப்புரையேடு ஒன்றில் வலிப்பு (Epilepsy) நோய் பற்றி மிகவும் விரிவாக விளக்கி எழுதியுள்ளார். அது பற்றிய சிறு குறிப்பு கீழே தரப்பட்டுள்ளது.[35]

## வலிப்பு நோய்

வலிப்பு நோயினால் பீடிக்கப்பட்டவர் தனது அறிவை இழக்கிறார்; அழுவார் அல்லது பெருங்கூச்சலிடுவார்; உயிர்த் தாதுக்கள் சமநிலையிழப்பதால் நினைவிழந்து விடுவார்; பற்களை ஒன்றோடொன்று இறுக்கமாகக் கடித்துக் கொள்வார்; நுரை கக்குவார்; கை, கால்கள் வெட்டிவெட்டி இழுக்கும்; இல்லாத காட்சிகள் எல்லாம் கண்களில் தோன்றும்; தரையில் விழுந்து புரளுவார்; எவ்வித நோக்கமுமற்ற செயல்களைச் செய்வார்; சிறிது நேரத்திற்குப் பின்னர், சமநிலையிழந்த தாதுக்கள் மீண்டும் சமநிலை பெற்றதும் மேற்கூறப்பட்ட நோய்க்குறிகள் யாவும் படிப்படியாக மறைந்துவிடும்.

மேற்கூறப்பட்ட நோயின் அறிகுறிகளைப் பற்றிக் கருத்துக் கூறிய ராமாராவ், "நோயறிகுறி விளக்கங்கள் மிகவும் சுவையாக உள்ளன; ஆனால் அவை எந்த ஆதாரத்தின் அடிப்படையில் கூறப்பட்டவையென்று தெரியாது" என்று குறிப்பிட்டுள்ளார்.[36] ஆனால் இதைவிடவும் சுவைமிகு விளக்கங்களுடன் வலிப்பு நோயினால் அரற்றிய பித்தன் ஒருவனின் நடத்தை பற்றிச் சங்கத் தமிழ்க் காப்பியமான **மணிமேகலையில்** மிகவும் விரிவாகச் சித்தரிக்கப்பட்டுள்ளது. இதுபற்றிய விபரம் அடுத்த அத்தியாயத்தில் '**நோய்கள்**' என்ற தலைப்பின் கீழ் தரப் பட்டுள்ளது. இரண்டு விளக்கங்களையும் ஒப்பிட்டுப் பார்த்தால் அவற்றிற்கிடையேயுள்ள ஒப்புமை நன்கு புலப்படும்.

### பாம்புக்கடி சிகிச்சை

மருத்துவத் துறையில் கேரள மருத்துவர்களின் மேம்பாட்டினை எடுத்துக்காட்டும் பிரிவு **விஷமுறிவுச் சிகிச்சை** (Toxicology)யாகும். '**விஷமுறிவுச் சிகிச்சையில் கேரளா போன்று மிகவும் முன்னேற்றமடைந்தயிடம் வேறெதுவுமில்லை**' என்று **அகில இந்திய ஆயுர்வேத வழிகாட்டு விதிநூலில்** (All -India Ayurvedic Dicrectory) உறுதிபடக் கூறப்பட்டுள்ளது.[37]

கேரளா ஒரு மலைப்பிரதேசமாயிருப்பதால் நச்சுப் பாம்புகள் ஏராளமாக வாழும் காட்டுப் பகுதிகளைக் கொண்டதாக அமைந்துள்ளது. எனவே, ஆதிகாலம் முதல் பாம்புக் கடி என்பது கேரளாவில் மிகச் சாதாரணமாக நிகழும் நிகழ்ச்சியாகயிருந்து வந்துள்ளது. ஆகவே, நச்சுக் கடிகளுக்கான சிகிச்சைகளில் பயிற்சியும் அனுபவமும் பெறுவதற்கான சந்தர்ப்பங்கள் கேரள மருத்துவர்களுக்கு அதிக அளவில்

அமைந்துள்ளன. இத்தகைய நச்சுக் கடிகளுக்குச் செய்யப்படும் சிகிச்சை கேரளாவில் **விஷ சிகிச்சை** என வழங்கப்படுகிறது. இந்த விஷசிகிச்சை செய்யும் மருத்துவர்கள் **விஷ வைத்தியர்கள்** அல்லது **விஷஹாரிகள்** என அழைக்கப்படுகின்றனர்.[38]

பழங்காலத்தில் விஷமுறிவுச் சிகிச்சையின் வல்லமை பெற்ற விஷவைத்தியர் தன்னுடைய விஷமுறிவுச் சிகிச்சைக் கலையினைச் சமுதாய நலனுக்கு மட்டுமே பயன்படுத்த வேண்டு மென்ற நிபந்தனையுடன் அக்கலையினைக் கற்கும் தகுதி படைத்த சீடருக்கு மட்டுமே கற்பிக்கும் வழக்கம் இருந்தது என்று **பாரம்பரிய கலாச்சார நிறுவன வெளியீடு** (Bulletin of the Institute of Traditional Cultures) கூறுகிறது.[39] மேலும், பலதிறப்பட்ட விஷமுறிவுச் சிகிச்சைகளுள் மலபார் விஷ வைத்தியர்கள் **நாராயணீயம்** (Naaraayanaeeyam) மற்றும் **லக்ஷ்மணாமிர்தம்** (Lakshmanaamirtham) ஆகிய இருமுறைகளை மட்டுமே பின்பற்றினரென்றும், அவற்றுள் நாராயணீயம் வெவ்வேறு வகையான பாம்புக் கடிகளுக்கு வெவ்வேறு வகையான விஷமுறிவுச் சிகிச்சைகளைப் பரிந்துரைக்கிறதென்றும் அவ்வெளியீட்டில் கூறப்பட்டுள்ளது.[40] அந்த வெளியீட்டில் மேலும் குறிப்பிடப்பட்டிருப்பதாவது:

மலபார் விஷவைத்தியர் நச்சுப் பாம்புக் கடிகளுக்கு மூன்று வகையான சிகிச்சை முறைகளைக் கடைப்பிடிக்கின்றார்.

**1. துபாலக லக்ஷணம்** (Dubaalaka Lakshanam) என்னும் சிகிச்சை முறை: இம்முறையில், பாம்புக் கடியினால் பாதிக்கப்பட்டவன் எப்போது தன்னிடம் சிகிச்சைக்காகக் கொண்டுவரப்படுவான் என்றும், அவனுடைய தலைவிதி எப்படியிருக்குமென்றும் முன்கூட்டியே அறிந்து விஷவைத்தியர் செயல்படுவார்.

**2. ஔஷதமுறை :** இம்முறையில் பாம்புக்கடியுண்டவனுக்கு ஔஷதம் என்னும் ஒருவகை மருந்தினைக் கொடுத்துக் குணமாக்குதல்.

**3. மாந்திரீகத்தின் மூலம் பாம்புக்கடி விஷத்தைக் குணமாக்குதல்**[41]

இவற்றுள் துபாலக லக்ஷண முறையின் கீழ் செய்யப்படும் விஷவைத்தியரின் **முன்னறிசக்தி** பற்றி ஒரு நிகழ்ச்சியின் மூலம் **மலபார் காலாண்டு மதிப்பாய்விதழில்** (Malabar Quarterly Review) விளக்கிக் கூறப்பட்டுள்ளது.[42] மலபாரில், நச்சுப் பாம்பினால் கடியுண்டவனின் சகோதரன் சுமார் 100 கி.மீ.

தொலைவுக்குள்ளிருந்த ஒரு விஷ வைத்தியரை அணுகி நிகழ்ச்சி பற்றிச் சொல்லத் தொடங்குமுன்னரே, கடியுண்டவன் இறந்து விட்டான் என்றும் ஆகவே தனது சிகிச்சைக்கு அவசியமேது மில்லையென்று விஷ வைத்தியர் கூறிவிட்டார். வைத்தியரை அழைத்துச் செல்லவந்தவன் திரும்பிச் சென்றுபார்த்த போது வைத்தியரின் முன்னறிச் சக்தியின் தகவல் சரியானதென்று உறுதி செய்யப்பட்டது.

**கரத் நம்பூதிரி** (Karad Namboodri) மற்றும் **கொக்கரை நம்பூதிரி** (Kokkara Namboodri) போன்று பல புகழ்பெற்ற விஷகாரிகள் கடந்த காலங்களில் கேரளாவில் இருந்திருக் கின்றனரென்றும் அவர்களுள் சிலர் விஷமுறிவுச் சிகிச்சையில் உடனடி நிவாரணம் அளிக்கக்கூடிய மருந்துகளும், மந்திரங்களும் வைத்திருந்தனரென்றும் நாராயணன் நம்பூதிரி குறிப்பிடுகின்றார்.[43] அவருடைய இக்கூற்றுக்குச் சான்று கூறும் வகையில் பாம்புக்கடி விஷமுறிவுக்கு எவ்வித மருந்தோ அல்லது மந்திரமோ இல்லாமல் கடிவாயில் வெறும் தண்ணீரைத் தெளித்துக் குணமாக்கும் வல்லமை படைத்த **பாம்புமெக்கட்டு நம்பூதிரிபட்** (Paambumek kattu Namboodripad) என்ற மாந்திரீக மருத்துவரைச் சுட்டிக் காட்டுகின்றார்.[44]

தனது கதையின் மூலம் பல்வேறு நச்சுப்பாம்புக் கடிகளுக்கான பலதிறப்பட்ட விஷமுறிவுச் சிகிச்சை முறைகள் பற்றி பல்குரிகிசோமனா அறிவித்துள்ளது பற்றி இங்கு குறிப்பிடுவது பொருத்தமாகயிருக்கும்.

- ஒற்றைப் பல்பதிந்த பாம்புக் கடிக்குக் கடிவாயில் குளிர்ந்த நீரால் கழுவி ஒத்தடம் கொடுக்க வேண்டும்.
- இரட்டைப்பல் பதிந்த பாம்புக் கடியை மந்திரத்தின் மூலம் குணமாக்கலாம்.
- மூன்றுபல் பதிந்த பாம்புக் கடியை மருந்துகளின் மூலமே குணமாக்க முடியும்.
- நான்கு அல்லது அதற்கு மேற்பட்ட பற்கள் பதிந்திருந்தால் அந்தப் பாம்புக் கடியைக் குணமாக்கவே முடியாது.[45]

எனவே, முன்குறிப்பிட்ட நிகழ்ச்சியில் பாம்பு மெக்கட்டு நம்பூதிரிபட் பாம்புக் கடிக்குக் கடிவாயில் தண்ணீர் தெளித்துக் குணமாக்கியதற்கான காரணம் அது ஒற்றைப் பல் பதிந்த பாம்புக் கடியாக இருந்திருக்கலாம் என்று எண்ணத் தோன்றுகிறது.

பாம்புக்கடிச் சிகிச்சையில் காணப்பட்ட இத்தகைய நம்பிக்கையும் திறமையும் தற்காலத்தில் காணப்படவில்லை என்று பாரம்பரிய கலாச்சார நிறுவன வெளியீட்டில் குறிப்பிடப் பட்டுள்ளது.[46]

அக்காலத்தில் மக்கள் மலைப்பகுதிகளிலும், புதர்களும் காடுகளும் சூழ்ந்த இடங்களிலும் குடியிருந்தனர். இப்பகுதிகள் யாவும் பாம்பு, தேள், குளவி போன்ற நச்சு விலங்குகள் வசிக்கும் இடங்களாகும். மேலும் மக்களின் குடியிருப்பு இல்லங்களும் ஓலை, வைக்கோல் மற்றும் ஓடுகளால் வேயப்பட்டு இந்த நச்சு விலங்குகள் தங்குவதற்கேற்ற வசதிமிக்கவையாயிருந்தன. எனவே, நச்சுக் கடியால் பாதிக்கப்படுவதற்கான வாய்ப்புக்கள் அதிகமாக இருந்தன. எனவே, அன்றைய மக்களும் நச்சுமுறிவு மூலிகை நிவாரணங்களை நன்கு அறிந்து வைத்திருந்தனர். ஆனால் தற்காலத்திலோ, காடுகள் அழிக்கப்பட்டுக் குடியிருப்புப் பகுதிகளாக மாற்றப்பட்டுள்ளன. வீடுகளும் நவீன கலைத் திறனுடன் தட்டட்டி மேல்தளம் கொண்ட காரைக் கட்டிடங் களாக, நச்சு விலங்குகள் எதுவும் தங்குவதற்கு வசதியற்ற நிலையுடன் அமைக்கப்படுகின்றன. எனவே, நச்சுக்கடி என்பது சாதாரண நிகழ்ச்சியாகக் காணப்படுவதில்லை. அதன் விளைவாக, விஷவைத்தியர்களுக்கும் விஷமுறிவுச் சிகிச்சை செய்வதற்கான வாய்ப்புக்கள் அரிதாகிவிடுவதால், அவர்களுடைய சிகிச்சைத் திறனும் தரம் குறைந்து காணப்படுகிறது. இதனால், மக்களும் விஷவைத்தியர்களின் மீதான நம்பிக்கையை இழந்து எப்போதாகிலும் விஷக்கடி விபத்து நேரிட்டுவிட்டால் உடனே அவசரமாக நவீன மருத்துவ வசதிகளுடன் கூடிய மருத்துவ மனைகளை நோக்கி விரைகின்றனர்.

## மருத்துவச் சிகிச்சைகளில் கோயில்களின் பங்கு

பிறமாநிலங்களைப் போலவே கேரளாவிலும் சைவ, வைணவ மற்றும் திராவிடத் தெய்வங்கள் சில குறிப்பிட்ட நோய்களுக்குக் காரண கர்த்தாக்களாகவும் அந்நோய்களைக் கட்டுப்படுத்தும் சக்தி படைத்தவையாகவும் கருதப்படுகின்றன. கேரளத் தெய்வங்களுக்கு உரித்தானவையாகக் கருதப்படும் சில நோய்கள் பற்றி **வாரியர்** (Warrier) பின்வருமாறு குறிப்பிடுகின்றார்:

> க்ராங்கனூரில் (Cranganore) உள்ள பெண்தெய்வம் வைசூரியைக் கட்டுப்படுத்துகிறது;

- சோட்டானிக்கரையில் (Chottaanikkara) உள்ள பெண் தெய்வம் வலிப்பு மற்றும் பிற மன நோய்களையும் குணப்படுத்துகிறது;
- குருவாயூரிலுள்ள தெய்வம் வாதநோய்க்கு மருத்துவராக விளங்குகிறது.[47]
- தகழி மற்றும் கஞ்சிரக்கோடு ஆகிய இடங்களிலுள்ள கோயில்களில் தொழுநோய் குணப்படுத்தப்படுகிறது.

தமிழ்நாட்டு மக்கள் இன்றும் **வைசூரி** என்னும் கொள்ளைநோய் **மாரியம்மா** என்ற பெண் தெய்வத்தின் கட்டுப்பாட்டிலிருக்கிறதென்ற நம்பிக்கையுடன் வைசூரியால் தாக்கப்பட்டால் வேப்பிலை கொண்டு மாரியம்மனை வேண்டி வணங்குகின்றனர். மாரியம்மனை வழிபடும் வழக்கம் கர்நாடகம் மற்றும் ஆந்திர மக்களிடமிருந்து வம்சாவழியாகப் பெறப்பட்டதென்று தெரிகிறது.[48]

### அஷ்டவைத்தியர்களின் மருத்துவத்திறன்

கேரளாவின் அஷ்டவைத்தியர்கள் என்றழைக்கப்படும் பிராமண இன மருத்துவர்கள் (பிரிவு - 3ல் விளக்கம் காண்க) மருத்துவ சாத்திரங்களில் ஆழ்ந்த அறிவு படைத்திருந்தார்கள். எல்லாவகை நோய்களையும் குறிப்பிட்ட மருந்துகளாலும் உணவு விதிமுறைகளாலும் எளிதில் குணமாக்கும் திறன் படைத்திருந்தனர். அறுவை சிகிச்சைக் கருவிகளைப் பயன்படுத்தாமலே தங்களது சிகிச்சையில் அறுவை சிகிச்சையின் விளைவைக் காட்டக்கூடிய அவர்களது மருத்துவத்திறன் வியந்து பாராட்டற்குரியது.[49] கட்டுப்படுத்த முடியாத திடீர் பரபரப்பை நோயாளியிடம் ஏற்படுத்துவதன் மூலம் வியக்கத்தக்க அளவில் நோயைக் குணப்படுத்தமுடியுமென்ற கொள்கையில் ஆழ்ந்த பற்றுதல் கொண்டவர்கள். எடுத்துக்காட்டாக, ஒரு பிரசவத்தின்போது குழந்தையின் விரல் பக்கவாட்டு நாளங்களில் சிக்கிக் கொண்டதால் பிரசவத்தில் ஏற்பட்ட தடங்கலைப் புறவழிச் செயல்பாட்டின் மூலம் குழந்தைக்குத் திடீர் வலியினைக் கொடுத்துப் பிரசவம் எளிதாகச் செய்து முடிக்கப்பட்டது.[50]

# பிரிவு 2

## பண்டைய தென்னிந்திய மருத்துவமனைகள்

கிறித்துவ சகாப்தத்தையொட்டி முற்காலத்தில் ஜைன மற்றும் புத்தமதத் துறவிகள் தங்கள் மடாலயங்களிலேயே தென்னிந்திய மக்களுக்கு மருத்துவச் சேவையளித்து வந்தனர். அவர்களின் மடாலயங்களே அப்போதைய சுகாதார மையங்களாகச் (Health Centres) செயல்பட்டன. பின்னர் அக்ரஹாரங்கள் (Agrahaaraas) நிறுவப்பட்டன. இந்த அக்ரஹாரங்களில் வாழ்ந்து வந்தவர்களுக்குத் தேவையான மருத்துவ வசதிகளும் அங்கேயே அமைக்கப்பட்டிருந்தன. இந்த மடாலயங்ளும் அக்ரஹாரங்களும் ஏழை நோயாளிகளுக்கு மருத்துவமனைகளுக்கு நிகரான மருத்துவச் சேவையளித்து வந்த போதிலும் இந்த மடாலயங்களுடன் இணைக்கப்பட்ட மருத்துவமனை பற்றி ஒரேயொரு தொல்லியல் ஆதாரம் மட்டுமே காணப்படுகிறது.

### நாகார்ஜுனகோண்டா மருத்துவமனை

கிறித்துவ சகாப்தத்தின் தொடக்க நூற்றாண்டுகளில் ஒரு புத்த மடாலயத்துடன் இணைக்கப்பட்டிருந்த ஒரு மருத்துவமனையின் அமைப்பு பற்றிய சில வெளிப்பாடுகளை ஆந்திராவில் **விஜயபுரி நாகார்ஜுன கோண்டா** (Vijayapuri Naagarjuna Konda) எனுமிடத்தில் செய்யப்பட்ட அகழ்வாய்வு (படம். 20அ) வெளிப்படுத்தியுள்ளது.[1] அந்த அகழ்வாய்வில் கண்டெடுக்கப்பட்ட ஒரு



படம் 20அ
நாகார்ஜுன கோண்டா (அகழ்வாய்வு செய்யப்பட்ட இடம்)



படம் 20ஆ
'விஹாரெமுக்யஜ்வராலயே' பொறிக்கப்பட்ட கல்வெட்டு

கல்வெட்டில் காணப்படும் விஹாரெ முக்ய ஜ்வராலயே (Vihaare Mukhya Jwaraalaye) என்னும் சொற்கள் மடாலயத்துடன் இணைக்கப்பட்டிருந்த ஒரு மருத்துவமனையைக் குறிக்கிறது. (படம். 20ஆ) ஜ்வராலயாவின் மையத்தில், சுற்றிலும் அறைகளைக் கொண்ட தூண்களுடன் கூடிய மூடிய மண்டபம் ஒன்று உள்ளது. அந்த அறைகளுள் ஒன்றிலிருந்து ஒருபாதை சுற்றுச்சுவருடன் கூடிய ஒரு திறந்தவெளி மைதானத்திற்கு இட்டுச் செல்கிறது. இந்த அடைப்பைச் சுற்றிலும் ஒரு தாழ்வாரம் அமைந்துள்ளது. இந்த திறந்தவெளி மைதானத்திலிருந்து மற்றொரு பாதை மற்றொரு திறந்தவெளி மைதானத்திற்குச் செல்கிறது. இந்த மைதானத்தைச் சுற்றிலும் முன்புறத் தாழ்வாரத்துடன் அமைந்த அறைகள் வரிசையாக அமைக்கப்பட்டுள்ளன. சுகாதார முறையில் **நச்சுத் தடைக் குழி** (Septic Tank)களுடன் அமைக்கப்பட்ட சிறுநீர் **ஒதுக்கிடங்கள்** (Urinals), கழிப்பிடங்கள் (Lavatories) மற்றும் கழிவு நீரகற்றும் வடிகால்கள் மிகவும் விரிவான அளவில் அமைக்கப்பட்டுள்ளன.[2]

## நாகார்ஜுனகோண்டா மற்றும் ஸ்ரீலங்கா மருத்துவ மனைகளுக்கிடையேயுள்ள ஒற்றுமைகள்

மேலே விவரிக்கப்பட்ட நாகார்ஜுன கோண்டா மருத்துவ மனையின் **கட்டிட அமைப்புத் திட்டவுரு** (Structural Plan) கி.பி. 9ஆம் நூற்றாண்டில் ஸ்ரீலங்காவில் **மிகிந்தலை** (Mihintale) என்னுமிடத்தில் இயங்கி வந்த ஒரு மருத்துவ மனையின் அமைப்புடன் நெருங்கிய ஒற்றுமை கொண்டிருந்தது.[3] இது போல், ஸ்ரீலங்காவில் **அனுராதபுரம்** (Anuraadhapuram), **பொலனருவா** (Polanaruva) ஆகிய இடங்களில் காணப்பட்ட மருத்துவமனைகளும் இதே போன்ற அமைப்புக் கொண்டவையாக இருந்தன.[4]

நாகார்ஜுனாவின் ஜ்வராலயாவில் காணப்பட்ட வசதிகளுடன் வேறுசில வசதிகளும் மிகிந்தலை மருத்துவமனையில் காணப்பட்டன. மனித உடலுருவ அமைப்பில் ஒரு **மருத்துவக் குளியல் தொட்டி** (Medicinal Bath Trough) ஒன்று மிகிந்தலை மருத்துவமனையில் காண்ப்பட்டது. பக்கவாதத்தினால் (Paralysis) பாதிக்கப்பட்ட நோயாளியைத் தொட்டியில் படுக்கவைத்து, அவன் தலை நீங்கலான உடல் முழுமையும் மூழ்கியிருக்கும் வகையில் ஒருவித மருந்தெண்ணெயினால் தொட்டியை நிரப்பி நோயாளி குணமடையும் வரை தொட்டியில் வைத்திருப்பர். இது போன்ற மருந்துக் குளியல் தொட்டி பொலனருவா மருத்துவ மனையிலும் காணப்பட்டுள்ளது. (படம் 21அ,ஆ) இத்தொட்டியின்



படம் 21அ
*12ஆம் நூற்றாண்டு மருத்துவமனை (பொலனருவா – ஸ்ரீலங்கா)*



படம் 21ஆ
மருத்துவக் குளியல் தொட்டி (பொலனருவா மருத்துவமனை)

அருகிலுள்ள அறையில் மூலிகைகள் அரைப்பதற்கான அரவைக் **கற்களும்** (Grinding Stones) காணப்பட்டன. மருந்துகளையும் மருத்துவக் கருவிகளையும் பாதுகாப்பாக வைப்பதற்கென ஒரு சேமிப்பு அறையும் (Store-Room) அருகில் உள்ளது. நோயாளிகள் குளிப்பதற்கென **சுடுநீர்க் குளியல் வசதிகளும்** (Hot water Bath) கழிவுநீர் செல்வதற்கான வடிகால் வசதிகளும் செய்யப்பட்டிருந்தன. வளாகத்தின் மத்தியிலுள்ள மைதானத்தில் புத்தர் சிலையுடன் கூடிய, கல்லால் செதுக்கப்பட்ட தாமரைப்பீடம் உள்ளது.

நாகார்ஜுனா மருத்துவமனை, சுத்தமான காற்றுத் தாராளமாக வருமளவில் மிகுந்த காற்றோட்ட வசதியுடன் நிறைந்த சுகாதாரக் கொள்கைகளுக்கிணங்க வடிவமைக்கப் பட்டிருந்தது. மேலும் ஒரு மருந்தகமும் (Pharmacy) மருத்துவ மனையுடன் இணைக்கப்பட்டிருந்தது. இத்தனை வசதிகளும் சிறப்புக்களும் அமைந்த இந்த மருத்துவமனையானது தற்கால நவீன மருத்துவமனை போன்று முழுமையான வசதிகளுடன் செயல்பட்டிருக்க வேண்டும்.

நாகார்ஜுனகோண்டா அகழ்வாய்வில் கண்டெடுக்கப் பட்ட கல்வெட்டில் காணப்படும் **விஹார முக்ய ஜ்வராலயா** என்ற சொற்களை வடநாட்டில் கும்ரஹாரில் (Kumrahar) அகழ்ந்தெடுக்கப்பட்ட ஒரு முத்திரையில் காணப்பட்ட **ஸ்ரீ ஆரோக்ய விஹார பிக்ஷுஸங்கஸியா** (Sri Aarogya Vihaare Bhiksa Sanghasya) என்ற சொற்களுடன் ஒப்பிட்டுப்பார்த்தால், **விஹார** என்னும் சொல் **புத்தமடாலயத்தைக்** குறிப்பதாகக் காண முடியும். மேலும், ஸ்ரீலங்காவின் மிகிந்தலை மருத்துவமனையில்

காணப்பட்ட புத்தர் சிலையுடன் கூடிய தாமரைப்பீடம் அந்த மருத்துவமனை புத்தமடாலயத்தைச் சேர்ந்தது என்பதைத் தெற்றத் தெளிவாக உணர்த்துகிறது. எனவே, நாகார்ஜுன கோண்டா மருத்துவமனையும் ஒரு புத்தமடாலயத்தைச் சேர்ந்தததாகவே இருக்கவேண்டுமென்று கருதலாம்.

மேலே குறிப்பிடப்பட்ட இரண்டு மருத்துவமனைகளின் அமைப்புக்களில் காணப்படும் ஒற்றுமைகளைக் கூர்ந்து நோக்கி ஆராய்ந்து பார்த்தால் மிகிந்தலையில் காணப்பட்ட பிற வசதிகள் யாவும் ஜ்வராலயாவிலும் இருந்திருக்க வேண்டுமென்றும், அவை யாவும் அகழ்வாய்வின் போது காணப்படாமல் போயிருக்கலாம் என்றும் கருத இடமளிக்கிறது.

இதேபோன்ற கட்டிட அமைப்பு ஒற்றுமை அனுராத புரம், பொலனருவா மருத்துவமனைகளிலும் காணப்பட்டுள்ளதால், புத்தசமயத் துறவிகள் தாங்கள் குடியேறும் பகுதிகளிலெல்லாம் முன்கூட்டித் திட்டமிட்டு வடிவமைக்கப்பட்ட திட்டவுருவிலேயே மருத்துவமனைகளை நிறுவியுள்ளனர் என்பது தெளிவாகிறது.

நாகார்ஜுன கோண்டா மருத்துவமனையின் கட்டிட அமைப்புத் திட்டவுருவின் மாதிரியில் இலங்கையை ஆண்ட புத்த மத அரசர்கள் பல மருத்துவ மனைகளை நிறுவியிருத்தலைக் காணும்போது இந்தியாவிலும் புத்தமத மையங்களிலெல்லாம் இதுபோன்ற மருத்துவமனைகள் நிறுவப்பட்டிருக்கவேண்டுமென்று எண்ணத் தோன்றுகிறது. பின்னர், அந்த மருத்துவ மனைகள் இருந்த இடங்களெல்லாம் காலப்போக்கில் பூமிக்கடியில் புதையுண்டிருக்கலாம். எடுத்துக்காட்டாக, நாகார்ஜுன கோண்டாவில் முதல்/இரண்டாம் நூற்றாண்டில் இருந்த மருத்துவமனையும் பல்கலைக்கழகமும் அந்த இடத்தில் உருவாக்கப்பட்ட மிகப் பிரம்மாண்டமான நாகார்ஜுனசாகர் திட்டத்தின் மூலம் அமிழ்ந்து போய்விட்டன.[5]

## கேரள மருத்துவமனைகள்

கேரளாவில் ஆதிகாலம் முதல் நாட்டுவைத்தியர்கள் தாம் மருத்துவத் தொழிலை நடத்தி வந்தனர். அவர்கள் நோயாளிகளின் இல்லங்களுக்குச் சென்று சிகிச்சையளித்தனர். எந்தவிதமான சுகாதார மையமோ அல்லது மருத்துவமனையோ அப்போது இருந்ததில்லை. பின்னர் ஜைன மற்றும் புத்தமதத் துறவிகள் குடியேறியபோது தங்களுடைய மடலாயங்களில் ஏழைகளுக்கும் ஆதரவற்றோருக்கும் மருத்துவச் சேவை புரிந்து வந்தனர். அந்த

மடாலயங்களே சுகாதார மையங்களாகவும் செயல்பட்டு வந்தன. பெயர்பெற்ற **அஷ்டவைத்திய குடும்பத்தைச்** சேர்ந்த மருத்துவர்கள் தங்கள் இல்லங்களிலேயே மருத்துவத் தொழில் புரிந்து வந்தனர்; ஆனால் இவையாவும் நிறுவனமுறை அமைப்பில் இயங்கவில்லை.

கி.பி. எட்டாம் நூற்றாண்டில், ஜைனமும் புத்தமும் நலிவுற்ற நிலையில் மடாலயங்கள் யாவும் இந்துக் கோயில்களுடன் இணைந்தன. கல்வி மற்றும் கலாச்சார நிறுவனங்களும் இந்துக் கோயில்களுடன் இணைந்து **சாலைகள்** என்ற பெயரில் துணைநிறுவனங்களாகச் செயல்பட்டன.[6] நூற்றுக்கணக்கான மாணவர்கள் இச்சாலைகளில் சேர்க்கப் பட்டனர். எனவே, அவர்களுடைய உடல்நலத்தைப் பராமரிக்கும் பொருட்டு கோயில்களுடன் இணைக்கப்பட்ட மருத்துவ மனைகள் நிறுவப்பட்டன. உதாரணமாக, மலைநாட்டில் **திருவல்லா** (Tiruvalla) என்னுமிடத்திலுள்ள கோயிலின் நிர்வாகத்தின் கீழ் அக்கோயிலைச் சேர்ந்த அர்ச்சகர்கள் மற்றும் மாணவர்களின் உடல்நலப் பராமரிப்பிற்கென நிறுவப்பட்ட ஒரு மருத்துவமனை பற்றி கி.பி. 10-11ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த **ஹோசூர் கருவூலச் செப்பேடு** (Hosur Treasury Copper plate) குறிப்பிடுகின்றது.[7] மேலும், மருத்துவமனையில் சிகிச்சை பெற்று வரும் நோயாளிகளுக்காகத் தினமும் 4 நாழி அரிசியைச் சமைத்துக் கொடுக்கவேண்டுமென்றும் அச்செப்பேட்டில் குறிப்பிடப் பட்டுள்ளது.

கோயில்களில் மருத்துவமனைகள் இருந்ததாக வேறு எந்தக் கல்வெட்டு ஆதாரமும் இல்லாவிடினும், கல்வி மையங்கள் இணைக்கப்பட்ட முக்கியமான பெரிய கோயில்களில் அங்கு பயிலும் மாணவர்கள் மற்றும் பணியாளர்கள் ஆகியோரின் உடல்நலப் பராமரிப்புக்காக மருத்துவமனைகள் இணைக்கப் பட்டிருக்க வேண்டுமென்று யூகித்தறியலாம். இக்கருத்திற்கு ஆதரவாக ஸ்ரீதரமேனனும் (Seedhara Menon) ஒவ்வொரு கோயிலுடனும் ஒரு மருத்துவமனை அல்லது **ஆதுலர்சாலை** இருந்தது என்று சான்று பகர்கின்றார்.[8] ஆயினும், ஸ்ரீதரமேனனின் இந்தக் கருத்து அதிகாரபூர்வமான எந்த ஆதாரத்தின் அடிப்படையிலும் அமைந்ததல்ல. ஆனாலும், இக்கருத்தினை ஆதரிக்குமுகமாக, **கேரள மாநில கருப்பொருட் களஞ்சியத்தில்** (Kerala State Gazatteer) குறிப்பிடப்பட்டுள்ள எடுத்துக்காட்டுக் களான திருவிழா (Tiruvizha), சோட்டானிக்கரை (Chottaanikkara),

கஞ்சிரங்கோடு (Kanjirankodu), குருவாயூர் (Guruvaayur) ஆகிய இடங்களிலுள்ள கோயில்களில் குறிப்பிட்ட சிலநோய்கள் குணமாக்கப்படுகின்றன என்ற விபரங்களைக் கூறலாம். எனவே கேரளாவில் கோயில்களின் நிர்வாகத்தின் கீழ் மருத்துவமனைகள் இருந்திருக்கவேண்டும் என்ற கூற்றினை ஏற்றுக் கொள்ளலாம்.

## இடைக்கால மருத்துவமனைகள்

கிறித்துவ சகாப்தம் தொடங்கியது முதல் சுமார் ஆயிரம் ஆண்டுகள் வரை தென்னிந்தியாவில் சாதவாகனர் (Saatavaahanars) இக்ஷ்வாகு (Ikshvaakus), சேரர், சோழர், பாண்டியர், பல்லவர் எனப் பல்வேறு அரசகுலத்தினர் அரசாண்டு வந்துள்ளனர். இக்குலங்களைச் சார்ந்த மன்னர்களனைவரும் போரில் எத்துணைச் சிறப்புப் பெற்றிருந்தனரோ அந்த அளவில் சமாதானத்திலும் நாட்டம் கொண்டிருந்ததுடன், இலக்கியம், கலை, மருத்துவம் உள்ளடங்கிய அறிவியல் ஆகியவற்றையும் ஆதரித்து வந்தனர். இக்காலத்தைச் சேர்ந்த இலக்கியங்கள், கல்வெட்டுக்கள் ஆகியவை பெரும்பாலும் அழிக்கப்பட்டிருக்க வேண்டுமெனத் தோன்றுகிறது. கிடைக்கக்கூடிய கல்வெட்டுக் களும் கி.பி. 1000க்கு முற்பட்ட காலத்தில் வழங்கப்பட்ட மருத்துவ நிவாரணங்களின் தன்மை பற்றி மிகக் குறைந்த அளவிலேயே ஆதாரங்களைத் தந்துள்ளன.

கி.பி. 11ஆம் நூற்றாண்டுவரை புத்த விஹாரங்களும், ஜைன மடங்களும், இந்துக் கோயில்களும் பலதிறப்பட்ட மருத்துவ நிவாரணங்களை மக்களுக்கு அளித்து வந்திருக்கின்றன. கி.பி.11ஆம் நூற்றாண்டின் முற்பகுதி தென்னிந்திய மருத்துவ வரலாற்றில் ஒரு புதிய சகாப்தத்தின் விடிவுகாலமாகக் குறிப்பிடப்படுகின்றது. கண்டெடுக்கப்பட்ட கல்வெட்டுக்கள் ஒருசிலவேயாயினும் அவை அப்போதைய மருத்துவர்களைப் பற்றி மட்டுமல்லாது மருத்துவமனைகள், மருந்தகங்கள் தொடர்பான விபரங்களையும் அளிப்பவையாயிருக்கின்றன. இச்சில கல்வெட்டுக்களே இடைக்காலத்தில் தென்னிந்தியாவில் மருத்துவமனைகள் இருந்துள்ளனவென்பதை நிரூபிப்பதற்கான ஆதாரங்களாகும்.

11ஆம் நூற்றாண்டில், ஆட்சியாளர்களும், நகர, கிராம மன்றங்களின் பிரதிநிதிகளும் மருத்துவமனைகள் நிறுவுவதில் நன்கொடையாளர்களுடன் ஒருங்கே இணைந்து செயலாற்றி உள்ளனர்.

தென்னிந்தியாவில் ஒரு இலவச மருத்துவமனையும், மருந்தகமும் இருந்தமைக்கான முதல் கல்வெட்டுக் குறிப்பு தமிழ்நாட்டில் பண்டாரவாடை என்னும் ஊரிலுள்ள **பரகேசரி ராஜேந்திர சோழனின்** (கி.பி. 1012 - கி.பி.1044) கல்வெட்டிலிருந்து கிடைத்துள்ளது. தஞ்சாவூரில் **ஆழ்வார் ஸ்ரீ பராந்தகன் குந்தவைப் பிராட்டியரால்** **"சுந்தர சோழ விண்ணகர ஆதுலர் சாலை"** (Sundara Chola Vinnagara Aathular Saalai) என்ற பெயரில் நிறுவப்பட்ட மருத்துவமனை பற்றி இக்கல்வெட்டில் குறிப்பிடப் பட்டுள்ளது. (விவரங்களுக்கு அத். 4ஐப் பார்க்க). இதுபோன்று திருமுக்கூடல், திருப்புகளூர், ஸ்ரீரங்கம் முதலிய இடங்களில் மருத்துவமனைகள் இருந்தமைக்கான கல்வெட்டுக் குறிப்புக்கள் கிடைத்துள்ளளன. இவை பற்றிய விவரங்களும் அடுத்த அத்தியாயத்தில் தரப்பட்டுள்ளன.

மைசூரிலிருந்து பெறப்பட்ட 11 மற்றும் 12ஆம் நூற்றாண்டுகளைச் சேர்ந்த கல்வெட்டுக்கள் இலவச மருத்துவமனைகளும், மருந்தகங்களும் இருந்துள்ள விபரங்களை அறிவிக்கின்றன. எடுத்துக்காட்டாக, கி.பி. 1162-ஆம் ஆண்டைச் சேர்ந்த கல்வெட்டொன்றில் கர்நாடகாவில் **கௌடிய மடம்** (Kodia Matha) என்பது ஆதரவற்ற நோயாளிகளுக்கென இயங்கி வந்த நிவாரண மையம் என்று தெரிவிக்கிறது (பிரிவு - 4ஐப் பார்க்க) இக்கல்வெட்டுக் குறிப்புக்களிலிருந்து, கி.பி.12ஆம் நூற்றாண்டில் மடாலயங்கள் தங்களுக்கென நோய் நிவாரண மையங்களைத் தாங்களே நடத்தி வந்துள்ளன என்று அறிந்து கொள்ள முடிகிறது.

ஆந்திரதேசம் குண்டூர் மாவட்டத்தில் **விஸ்வேஸ்வர சிவாச்சாரியா** (Visweswara Sivaachaarya) என்பவரால் ஒரு அக்ரஹாரத்தில் மகப்பேறு மருத்துவமனையுடன் கூடிய பொது மருத்துவமனையொன்று நிறுவப்பட்ட விபரம் தெரியவருகிறது (விபரம் : பிரிவு 4ஐ பார்க்க).

**ஸ்ரீ சைலம்** என்பது ஆந்திராவிலுள்ள மருத்துவ முக்கியத்துவம் வாய்ந்த இடமாகும். விலங்கினங்களும் மூலிகை மற்றும் தாது வளங்களும் செழித்து வளர்ந்தோங்கிய இடம். நாகார்ஜுனா, அல்லம பிரபு (Allama prabhu), ரேவன சித்தர் (Revana Siddha), பூஜ்யபாதர் (Pujyapaada), உக்ராதித்யர் (Ugraaditya) போன்ற பல சித்தர்கள் இங்கு சில காலம் தங்கியிருந்து மருந்து தயாரிப்புக்கான செய்முறைப் பயிற்சிகள் மேற்கொண்டதாகக்

கூறப்படுகிறது. அந்த சித்தர்கள் அப்பகுதிகளில் கிடைக்கக் கூடிய சக்திவாய்ந்த பல அரிய மூலிகைகளை அடையாளங்கண்டு அவற்றின் மருத்துவப் பயன்பாடுகளை மருத்துவ உலகிற்கு அறிமுகம் செய்துள்ளனர்.[9]

நாகார்ஜுனாசாரியாவின் மாணவராகிய **ஆத்ரேயர்** (Aatreya) என்பவர் அங்கு, பாதாள கங்கையின் அருகே ஒரு குகையில் ஒரு வேதியியல் சோதனைக் கூடத்தை அமைத்துப் பரிசோதனைகள் செய்துள்ளார்.[10] இந்தியாவெங்கிலிருந்து மட்டுமின்றி சீனா, திபெத், நேபாளம், ஆப்கானிஸ்தான் முதலிய நாடுகளிலுமிருந்தும் பல மருத்துவர்களும், **ரசவாதிகளும்** (Alchemists) அங்கு வந்து மருத்துவச் சோதனைப் பயிற்சிக்காக வருகை தரும் அளவிற்கு ஸ்ரீசைலம் மருத்துவ முக்கியத்துவம் வாய்ந்ததாகப் பெருமை பெற்றிருந்தது.[11]

திரிபுரந்தகம் (Tripurantakam) என்பது ஸ்ரீசைலத்திற்கு அருகேயுள்ள மருத்துவ-சமய முக்கியத்துவம் வாய்ந்த மற்றொரு இடமாகும். இங்கு வியக்கத்தக்க மூலிகைகளும், மருந்துப் பொருட்களும் கிடைத்துள்ளதாகத் தெரிகிறது.[12]

ஆலம்பூரில் (Aalampur) உள்ள நவப்பிரம்மாவின் கோயில் புகழ்மிக்க ரசவாத சித்தர்களின் மையமாகப் புகழ் பெற்றுத் திகழ்ந்துள்ளது. ரசசாலை (Rasasaalaa) அமைப்பு விதிமுறைகளுக் கிணங்க இக்கோயில் கட்டப்பட்டுள்ளதாகக் கூறப்படுகிறது.[13]

தக்ஷராமா (Dhaksharaama) என்னுமிடத்திலுள்ள **பீமேஸ்வரர்** ஆலயம் (Bhimeswarar Temple) ஆயுர்வேத மருத்துவ மையம் ஒன்றை நிர்வகித்து வந்துள்ளது.[14]

பாமனி வம்சத்தினரின் (Bahamani Dynasty) காலத்தில் தென்னிந்தியாவில் மருத்துவத்துறையின் வளர்ச்சி பெருமளவில் முடுக்கிவிடப்பட்டிருந்தது. இரண்டாம் அலாவுதீன் (Allaudin II : கி.பி. 1435 - கி.பி. 1459) ஆட்சிக்கு வந்தபோது கி.பி. 1452இல் **பீடாரில்** (Bidar) **ஷிஃபாக்கானா** (Shifaakaana) என்னும் மருத்துவமனையினை நிறுவி, அதன் நிர்வாகச் செலவிற்கென ஏராளமான கிராமங்களை நன்கொடையாக வழங்கியுள்ளார்.[15] இம்மருத்துவமனையில் யுனானி, ஆயுர்வேதம் ஆகிய இருவகை மருத்துவச் சிகிச்சைகளும் அளிக்கப்பட்டன. யுனானி ஹக்கீம்கள் (மருத்துவர்கள்) தவிர இந்து மருத்துவர்களும் இங்கு பணியில் அமர்த்தப்பட்டிருந்தனர்.

## சாந்தா குரூஸ் மருத்துவமனை

கி.பி. 1503ல் ஃபிரான்ஸிஸ்கோ-டி-அல்புகர்க் (Francisco-de-Albuguerque) என்பவரின் தலைமையில் போர்ச்சுக்கீஸிய கப்பற்படை கொச்சியை அடைந்து ஒரு கோட்டையை அமைத்தது. போர்ச்சுக்கீஸிய வீரர்களின் உடற்பராமரிப்புத் தேவையை உணர்ந்து போர்ச்சுக்கீஸியக் குடியேற்றத் தலைவர் கொச்சியில் கி.பி. 1506இல் ஒரு மருத்துவமனையை நிறுவினார். அம்மருத்துவமனையில், ஒரு மருத்துவர், ஒரு அறுவை மருத்துவர், தேவையான எண்ணிக்கையில் செவிலியர்கள் ஆகியோர் நியமிக்கப்பட்டனர். நோயாளிகள் முழுமையாகக் குணமடையும் வரை எல்லா வசதிகளுடன் சிகிச்சையளிக்கப் பட்டது. அம்மருத்துவமனை சாந்தாகுரூஸ் (Santa Cruz) மருத்துவமனை என்றும் ஹோலிகிராஸ் (Holy Cross) மருத்துவமனையென்றும் அழைக்கப்பட்டது. அதைத் தொடர்ந்து, கண்ணனூர் (Cannanore), ச்சாவ்ல் (Chaul), கோவா (Goa) முதலிய பல போர்ச்சுக்கீஸியக் குடியேற்றப் பகுதிகளில் மருத்துவமனைகள் நிறுவப்பட்டன. இவற்றுள் கோவாவில் நிறுவப்பட்ட மருத்துவமனை ஐரோப்பிய மருத்துவக் கல்விக்கு ஒரு முன்னோடியாகத் திகழ்ந்தது.[16]

## ராயல் மருத்துவமனை

கி.பி. 1510-ல் போர்ச்சுக்கீஸியர்கள் கோவாவை வென்றதும் அவர்களின் தலைவர் அல்ஃபோன்சோ-டி-அல்புகர்க் (Alfonso-de-albuguerque) கோவாவில் ஒரு மருத்துவ மனையை நிறுவினார். அது 'ராயல் மருத்துவமனை (Royal Hospital) அல்லது ரியல் மருத்துவமனை (Hospital Real) என்றழைக்கப்பட்டது.[17] இந்த (படம் 22அ) மருத்துவமனை பற்றியும் அதன் நிர்வாக முறையினைப் பற்றியும் ஃபிரான்காய்ஸ் பைராடு (Francois Pyrard) என்னும் பிரெஞ்சு யாத்ரீகர் பின்வருமாறு விளக்கமளித்துள்ளார்:[18]



படம் 22அ 'ராயல்' மருத்துவமனை
(கோவா, கி.பி. 1510)

ராயல் மருத்துவமனை ஏராளமான சாளரங்களைக் கொண்ட ஒரு மாடிக் கட்டிடம். சுற்றிலும் அழகான தோட்டங்களும் நன்கு

பராமரிக்கப்பட்ட புல்வெளிகளும் கொண்டு ஒரு அரண்மனை போன்று காட்சியளித்தது. மருத்துவமனையை நாடிவரும் நோயாளிகள் பொது மருத்துவர், அறுவை மருத்துவர், மருந்து அளிப்பவர் ஆகியோரால் நன்கு பரிசோதிக்கப்பட்டுப் பின்னர் முதல் மாடியிலுள்ள சிகிச்சைப் பிரிவுக்கு அனுப்பப் படுவர்.

கத்தோலிக்கத் திருச்சபையின் பாதிரியார் தான் மருத்துவமனையின் இயக்குநராவார். மருத்துவமனையின் பணிகளைக் கவனித்துக் கொள்ளப் பொது மருத்துவர்கள், அறுவை மருத்துவர்கள், மருந்தளிப்போர், நாவிதர்கள் மற்றும் குருதி நீக்குவோர் (Bleeder) எனப் பலதிறப்பட்ட பணியாளர் களும் நியமிக்கப்பட்டிருந்தனர். மிகவும் நேர்த்தியான உணவு வழங்கப் பட்டது. மருத்துவர்கள் நோயாளிகளைப் பார்வையிடச் சுற்றுப் பார்வைக்காகச் செல்கின்றபோது அவர்களுடன் நோயாளிகளுக்குத் தேவையான உணவுகளுடன் எழுத்தர்களும் சென்றனர். பெரிய சுமைகளைத் தூக்குதல், கழிப்பறைகளைச் சுத்தம் செய்தல், தரைகளைத் துடைத்துக் கழுவி விடுதல், துணிகளைத் துவைத்தல் போன்ற வேலைகளுக்கு அடிமைகள் அமர்த்தப்பட்டிருந்தனர். கடுமையான காய்ச்சலும், வயிற்றுப் போக்குமே பெரும்பாலான நோயாளிகளிடம் காணப்பட்ட சாதாரண நோய்களாகும். ஸ்பெயின் (Spain) நாட்டில் பின்பற்றப் பட்ட மருத்துவ முறையே இங்கும் பின்பற்றப்பட்டது. இந்த மருத்துவமனையின் மருத்துவராகப் பணியாற்றுவதைப் பெரும்பாக்கியமாக மருத்துவர்கள் கருதினார்கள். இம்மருத்துவ மனை நலம் விரும்பிகளின் நன்கொடைகளாலும், போர்ச்சுக்கீசிய அரசரின் ஆதரவினாலும் சிறந்த முறையில் நிர்வகிக்கப்பட்டு வந்தது. ஆந்திரதேசத்தில் கி.பி. 1581-ல் சுல்த்தான் குலிகுதுப்ஷா (Quli Qutab Shah) ஆட்சி பொறுப்பேற்றதும் மக்களுடைய நலம்காக்கப் பெரிதும் ஆர்வம் காட்டினார். அவர் பாக் நகர் (Bhag Nagar இப்போதைய ஹைதராபாத்) என்னும் நகரினை நிறுவியதுடன், தார்-உஸ்-ஷிஃபா (Dar-us-shifa) என்றதொரு பெரிய மருத்துவமனையையும் (படம் 22ஆ) முசி ஆற்றின் (River Musi) தென்கரையில் கி.பி. 1595இல் நிறுவினார்.[19] அது பல படுக்கைகள் கொண்ட 40 அறைகளுடன் இரண்டு மாடிக் கட்டிடத்தில் அமைக்கப்பட்டிருந்தது. மருத்துவமனைகளின் வரலாற்றில் உலகிலேயே மிகச் சிறந்த வடிவமைப்புக் கொண்ட கட்டிடமாக இந்த மருத்துவமனைக் கட்டிடம் புகழ் பெற்றிருந்தது.[20]

புகழ்பெற்ற மருத்துவர்கள் இங்கு பணியிலமர்த்தப் பட்டிருந்தனர். அரசாங்கக் கருவூலத்திலிருந்து அவர்களுக்கு மிக




படம் 22ஆ
'தார்–உஸ்–ஷிஃபா' மருத்துவமனை
(ஐதராபாத் – கி.பி. 1595)

உயர்ந்த சம்பளம் வழங்கப்பட்டது. மருந்துகள் மற்றும் சிகிச்சைக் கருவிகள் வாங்கப்போதுமான அளவில் நிதி ஒதுக்கப்பட்டது. நோயாளிகளுக்கு மருந்து, உணவு, மருத்துவம் பராமரிப்பு யாவும் இலவசமாக வழங்கப்பட்டன.[21] இரண்டு மாடிக் கட்டிடத்திலுள்ள தனிப்பிரிவு அறைகளில் (Special ward) தங்கி சிகிச்சை பெற நோயாளிகளுக்கு வசதிகள் செய்யப்பட்டிருந்தன.

# பிரிவு 3

## பண்டைய தென்னிந்திய மருத்துவர்கள்

பழங்காலத்தில் தென்னிந்தியாவில் மருத்துவச் சேவைக் கென தங்களையே அர்ப்பணித்துக் கொண்ட மருத்துவர்கள் பலர் இருந்திருக்கிறார்கள் என்ற விபரம் கல்வெட்டுக்கள் மூலமும் இலக்கியங்கள் வாயிலாகவும் தெரிய வருகிறது. அவர்கள் யாவரும் அரசர்களாலும் பிரபுக்களாலும் ஆதரிக்கப்பட்டு மருத்துவக் கலையை வளர்ப்பதற்காக ஊக்கமூட்டப்பட்டனர்.

**போதிசத்துவ நாகார்ஜுனா** (Bodisatva Naagaarjuna) என்பவர் ஆந்திரதேசத்தைச் சேர்ந்த சிறந்த மருத்துவரும், **மஹாயாண நெறி** (Mahaayaana Doctrine)யினைப் போதித்தவரு மாவார். அவர் குண்டூர் மாவட்டத்தில் கி.பி. முதல்/இரண்டாம் நூற்றாண்டில் **ஸ்ரீபர்வதா** (Sri Parvata)விலுள்ள புத்த மடா லயத்தில் வசித்து வந்தார். **விதர்பா பல்கலைக்கழகத்தில்** (Vidurba University) மருத்துவக் கல்வியைக் கற்றுமுடித்து, புகழ் மிக்க மருத்துவராகவும், ரஸவாதி (Alchemist)யாகவும், சாதவாஹன மன்னர்களுக்கு ஆலோசகராகவும் திகழ்ந்தார்.[1] அவர் **சுசுருதர்** (Suruta) இயற்றிய **சுசுருத தந்த்ரா** (Susruta tantra) என்ற மருத்துவ நூலை **உத்தர தந்த்ரா** (Suruta tantra) என்ற பெயரில் புதுப்பித்ததாகக் கூறப்படுகிறது. **மகப்பேறு மருத்துவம்** (Obstetrics), **கண் மருத்துவம்** (Opthalmology) மற்றும் குழந்தை மருத்துவம் (Paediatries) முதலிய மருத்துவப் பிரிவுகளை உத்தர தந்த்ரம் மூலமாக சுசுருத ஸம்ஹிதாவில் இணைத்துள்ளார். ரஸக **க்ஷபூதா** (Rasa kaksha puta), ரஸ ரத்னகாரா (Rasa Ratnakara), லோக சாஸ்த்ரா (Loha sastra), ரஸேந்திர மங்கலா (Rasendra Mangala) என்ற மருத்துவ நூற்களுடன் ரஸவாதம் (Alchemy) மற்றும் **தாது மருந்துகள்** (Mineral Drugs) பற்றியும் அவர் எழுதி யுள்ளார்.[2]

நாகார்ஜுனகோண்டா அகழ்வாய்விலிருந்து அங்கு ஒரு பல்கலைக்கழகம் இருந்ததும் அப்பல்கலைக்கழகத்தில் நாகர்ஜுனா மருத்துவப் பேராசிரியராகப் பணியாற்றியதும் தெரியவருகிறது.[3] இந்தியாவின் பல்வேறு பகுதிகளிலிருந்தும், வெளிநாடுகளி லிருந்தும் இங்கு கல்வி கற்பதற்காக மாணவர்கள் திரளாக வருமளவிற்கு இப்பல்கலைக்கழகம் புகழ்பெற்றிருந்தது. நாகார்ஜுனா தனக்கென சொந்தமாக ஒரு மருந்தகத்தை (Pharmacy) அமைத்து மூலிகை மருந்துகளைத் தனது நேரடி

மேற்பார்வையில் தயாரித்தார்.[4] மருத்துவத் துறையில் இவரது அளவிலாத் திறமையின் காரணமாக இவர் பரிந்தளித்த மருந்து விபரங்கள் (Prescriptions) வடநாட்டில் குப்தப் பேரரசு புகழோச்சி இருந்த காலத்தில் பாடலிபுத்திர வீதிகளில் நிறுவப்பட்ட கல்தூண்களில் பொறிக்கப்பட்டன.[5]

**பூஜ்யபாதர் (Pujyapaadhar)** என்பவர் கி.பி. 600ல் வாழ்ந்த ஒரு தத்துவ ஞானியும் மருத்துவருமாவார். இவர், **நடன முக்காவலி (Nadanamukkaavali) வைத்யகிரந்தா** (Vaidyagranta), **மதன காமரத்னா (Madanagaamaratna)** மற்றும் **ரத்னகாரத் யசதயோடெகிரந்தா (Ratnakaaradyasadayode granta)** ஆகிய மருத்துவ நூற்களை எழுதியுள்ளார்.[6] இவர் கர்நாடகாவில் வாழ்ந்தவரென்று சிலர் கூறுகின்றனர். மற்றும் சிலர் ஆந்திர தேசத்திற்கும் கர்நாடகத்திற்கும் பொதுவான ஸ்ரீசைலத்தில் வாழ்ந்தவர் என்று கூறுகின்றனர்.[7]

**உக்ராதித்யாச்சாரியா (Ugraadityyaachaarya)** என்பவர் கி.பி. 9ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த ஜைன மருத்துவராவார்.[8] புகழ்பெற்ற **கல்யாணகாரகா (Kalyaana Kaaraka)** என்னும் மருத்துவ நூலைத் தொகுத்தவர். இதில் மருத்துவ அறிவியலை **நோய்த் தடுப்பு (Prevention of disease), நோய்க்குணமாக்கல்** என இரு பகுதிகளாகப் பிரித்து எழுதியுள்ளார். பாதரஸம் **(Mercury)** மற்றும் பல உலோகக் கூட்டுப் பொருட்களைக் கொண்டு பலவிதமான புதிய சிகிச்சை முறைகளை அளித்துள்ளார். அவர் ஒரு ஜைன மத மருத்துவராயிருந்த போதிலும் இந்து சமயச் சடங்குகளான சாந்தி, ஹோமம் ஆகியவற்றை உடல்நல மேம்பாட்டிற்குரியவை களாக மதித்துள்ளார். நலம் தரும் உணவு பற்றி ஆராய்வதற்காக அறிஞர்கள் மற்றும் மருத்துவர்களடங்கிய ஒரு மாநாட்டினைக் கூட்டினார். அம்மாநாட்டில் மாமிசமும், மதுவும் மனிதனுக்குத் தேவையற்றவையென்று முடிவு செய்யப்பட்டது.[9]

ஆந்திர தேசம் நல்கொண்டா (Nalgonda) மாவட்டத்தில் புவனகிரி தாலுக்காவைச் சேர்ந்த **சைதாப்பூர்** (Saidaapur) கிராமத்தில் நிறுவப்பட்டுள்ள கல்தூண் கல்வெட்டொன்றில், பொது மருத்துவத்திலும் அறுவை மருத்துவத்திலும் சிறந்தோங்கி விளங்கிய **அக்கலய்யா (Aggalayyaa)** என்பவர் பற்றி விளக்கிக் கூறப்பட்டுள்ளது.[10] சாளுக்கிய மன்னன் **இரண்டாம் ஜெயசிம்மன் (Jayasimhan - II** : கி.பி. 1015 - கி.பி. 1042) ஆதரவுடன் புகழ்பெற்று விளங்கியவர். கல்வெட்டின் முதல் இரு பக்கங்களில் அக்கலய்யாவினால் நிறுவப்பட்ட இரு ஜைன மடங்களை

நிர்வகிக்கும் பொருட்டு முப்பண்ணப்பள்ளி (Muppannapalli) என்னும் ஊரின் தலைவர் அளித்த கொடைகள் பற்றி விவரிக்கப் பட்டுள்ளது. கல்வெட்டின் மூன்றாம் பகுதியில் அக்கலய்யாவின் மருத்துவச்சேவைகள் பற்றி சமஸ்கிருதமொழியில் கூறப் பட்டுள்ளது. அதன் சுருக்கம் பின்வருமாறு:

அக்கலய்யா ஒரு ஜைன மருத்துவர். மக்களின் உடல் நலப் பராமரிப்புக்காகவும், அவரது நண்பர்களின் உடல்நல மேம் பாட்டிற்காகவும், அவருடைய குருக்களின் ஆத்ம திருப்திக்காகவும், மருத்துவத் தொழிலில் மருத்துவர்களுக்கு ஏற்படுகின்ற ஐயப்பாடுகளைத் தீர்த்து வைப்பதற்காகவுமே அவர் செயல்பட்டு வந்தார். அறுவை மருத்துவத்தில் நிகரற்ற நிபுணர். அறுவை சிகிச்சை எங்கே யாரால் வெற்றிகரமாகச் செய்து முடிக்கப்பட்டாலும் அந்த வெற்றி அக்கலய்யாவின் நற்செயல் பாட்டிற்கும் ஜெயசிம்ம மன்னருக்கும் உரித்ததாக எண்ணும் அளவிற்கு அவரது மருத்துவச் சேவை எல்லோராலும் புகழ்ந்து பாராட்டப்பட்டது. எந்த நோயாவது பிற மருத்துவர்களால் குணப்படுத்த முடியாவிடில், அந்த நோயை, அது எத்தகைய கவலைக்கிடமான நிலையிலிருப்பினும், அக்கலய்யாவினால் மட்டுமே குணமாக்க முடியுமென்று மக்களனைவரும் உறுதியாக நம்பினர். இவ்வளவு திறமையும் புகழும் பெற்றிருந்த அக்கலய்யா **வைத்யரத்னாகரா** (Vaidyaratnaakara), **பிராணாசாரியா** (Praanaachaaryaa), **நரவைத்தியர்** (Naravaidya) என்ற பட்டங்களின் மூலம் சிறப்பித்துக் கௌரவிக்கப்பட்டார்."

**மருத்துவக் குலம்**

ஆந்திர தேசத்தில் மருத்துவத் தொழில் ஒரு பாரம்பரிய தொழிலாகச் சேவை மனப்பான்மையுடன் செயற்பட்டு வந்தது. எவ்விதச் சன்மானமும் எதிர்ப்பார்க்காமல் மக்களின் மேம் பாட்டிற்கான சேவையில் தங்களை அர்ப்பணித்துக் கொண்ட மருத்துவக் குலங்கள் பல இருந்தன. ஆந்திரசேத்தில் இத்தகைய மருத்துவக் குலங்கள் பல இடைக்காலத்தில் இருந்தமை பற்றிய தகவல்கள் கல்வெட்டுக்களில் காணப்படுகின்றன.

கி.பி. 1151 மற்றும் கி.பி. 1154ஐச் சேர்ந்த இரு கல்வெட்டுக்கள்[12] **பபட்லா** (Bapatla) என்ற இடத்திலிருந்து கிடைக்கப்பட்டுள்ளன. இவற்றில் **பெருமாநபி** (Perumaanabi) என்னும் மருத்துவர் பற்றியும் அவரது குடும்பத்தினர் அனைவரும் மருத்துவர்களாயிருந்தனர் என்ற விபரமும் குறிப்பிடப்பட்டுள்ளன. இக்கல்வெட்டுக்களில் **ஆனந்த் பட்டா** (Aananthbhatta)

என்பவரால் **பவநாராயணா** (Bhavanaaraayana) என்ற தெய்வத்திற்குக் கொடையாகச் சாற்றப்பட்ட அணையா விளக்குகள் (Perpetual lamps) பற்றியும் குறிப்பிடப்பட்டுள்ளது. இந்த ஆனந்த் பட்டா **வைத்திய சூரிய தேவ பண்டிதர்** (Vaidya Suryadeva Pandita) என்ற மருத்துவரின் மகன். **நாகதேவர்** என்பவரின் பேரன்; **சூரியா** என்பவரின் கொள்ளுப் பேரன். இவர்கள் யாவரும் பெருமா நபியின் குடும்பத்தைச் சேர்ந்த மருத்துவர்களாவர்.

**'சர்ஜ்னதார ஸம்ஹிதா'** (Sarjnadhaara Samhita) என்ற மருத்துவ நூலை எழுதிய **சர்ஜ்னதாரா** (Sarjnadhaaraa) என்பவர்[13] (கி.பி. 1320 - கி.பி. 1380) ஆயுர்வேத மருத்துவ வரலாற்றில் ஒரு புதிய சகாப்தத்தை ஏற்படுத்தியவர். இவர் **ஆரோக்ய சிந்தாமணி** (Aarogya Chintaamani) என்னும் மருத்துவ நூலை எழுதிய **தாமோதர பட்டர்** (Dhaamodhara Bhatta : பிறப்பு கி.பி. 1295) என்பவரின் மகன். தாமோதரபட்டர் மராட்டிய மருத்துவரான **விஷ்ணு பட்டர்** (Vishnu Bhatta) என்னும் **விஷ்ணுதேவ பட்டாச்சாரியா** (Vishnudeva Bhattaachaarya)வின் மகன். இவர் **விதல் காலன்ட்** (Vithal Galand) என்றும் அழைக்கப்பட்டார். இவர்களனைவரும் ஒரு மருத்துவ குலத்தைச் சேர்ந்தவர்களாவர்.

**ஸ்ரீகிரி பண்டிதர்** (Srigiri Pandita) என்னும் மருத்துவரை உறுப்பினராகக் கொண்ட ஒரு மருத்துவ குலம் பற்றி **பிராமணக்ரகு** (Bhahmanakraku) என்னும் சிற்றூரில் கிடைத்த கி.பி. 1376ஆம் ஆண்டைச் சேர்ந்த கல்வெட்டு தெரிவிக்கிறது.[14] அவர் ஒரு ஆயுர்வேத வல்லுநர் என்றும் அவருக்குக் கொடைகள் வழங்கப்பட்ட விவரங்கள் பற்றியும் கல்வெட்டில் விவரிக்கப் பட்டுள்ளது. அவர் **ஸ்ரீவல்லபர்** (Sri Vallabha) என்பவரின் மகனும் **வைத்திய வல்லபா** (Vaidya Vallabha) என்னும் மருத்துவ நூலினை எழுதிய **லட்சுமண பண்டிதர்** (Laxmana Pandita) என்பவரின் சகோதரனுமாவார். இவர்களனைவரும் மருத்துவர்களே.

### பராஹிதா மருத்துவக் குலம்

மருத்துவக் குலங்களிலேயே மிகவும் சிறப்பு வாய்ந்த குலமாகக் கருதப்படுவது **பராஹிதா மருத்துவக் குலமாகும்** (Paraahita Family of Physicians). இக்குலத்தைச் சேர்ந்த ஆறு பரம்பரையினர் தன்னலங்கருதா மருத்துவச் சேவையில் ஈடுபட்டிருந்தனர்.

இந்தப் பரம்பரையைச் சேர்ந்த மருத்துவர்கள் ஆந்திராவில் கி.பி. 1250 முதல் கி.பி. 1450 வரை **உயிரினங்களுக்குச் சேவை செய்தல்** (Service to living beings) என்ற குறிக்கோளுடன் மருத்துவச்சேவை புரிந்து வந்துள்ளனர். மனித குலத்திற்கு மட்டுமின்றி நாகம் போன்ற நச்சு இன உயிரினங்கள் உட்பட எல்லா உயிரினங்களுக்கும் சேவை புரியும் குறிக்கோளைக் கொண்டிருந்தனர்.

கி.பி. 1423 நாளிட்ட ஒரு செப்பேட்டில் கொண்ட வீடு வம்சத்தைச் (Kondaveedu dynasty) சேர்ந்த **வீரபத்திர ரெட்டி** (Veerabadhra Reddy) என்ற மன்னரின் ராணி **அனந்தலயாம்பிகா** (Queen Ananthalayaamabika)வினால் வழங்கப்பட்ட ஒரு கொடையைப்



படம் 23
பரிஹிதராயாவுக்கு வழங்கப்பட்ட செப்பேட்டு நன்கொடைப் பத்திரங்கள்

பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. (படம். 23) **பராஹிதராயா** (Paraahitaraaya) என்னும் மருத்துவருக்குக் கிழக்குக் கோதாவரி மாவட்டத்திலுள்ள **கலுவச்சேரி** (Kaluvachery) என்ற கிராமத்தை ராணி அனந்தலயாம்பிகா கொடையாக வழங்கினார். பராஹிதாராயா ஆந்திராவில் புகழ்பெற்ற **பராஹிதாகுலத்தின்** (Paraahitha Family) ஆறாவது பரம்பரையைச் சேர்ந்த அறுவை மருத்துவர். அவருடைய குலம் பற்றிய விபரங்களும் அக்குல உறுப்பினர்களின் மருத்துவச் சேவைகள் பற்றியும் செப்பேட்டில் விரிவாக விவரிக்கப்பட்டுள்ளது. இக்குலத்தின் மூன்றாவது தலை முறையைச் சேர்ந்த **பராஹிதா** (Paraahita) என்னும் அறுவை மருத்துவர் ஒரு நாகப்பாம்பின், இன்னல் களைந்த நிகழ்ச்சி பற்றி அதில் விளக்கப்பட்டுள்ளது. ஒரு தவளையை விழுங்க முயன்ற ஒரு நாகப்பாம்பு தவளையின் எலும்பு அதன் தொண்டைக்குள் சிக்கிக் கொண்டதன் விளைவாகத் தவளையை விழுங்கவும்

முடியாமல், வெளியே உமிழவும் முடியாமல் வேதனைப்பட்டுக் கொண்டிருப்பதைக் காணச் சகிக்க முடியாத பரஹிதா, பாம்பின் மீது கருணை கூர்ந்து, தனது சிகிச்சையின் மூலம் பாம்பின் வாயினின்றும் தவளையை வெளியே எடுத்து பாம்பின் இன்னலைத் தீர்த்து வைத்தார். கொடிய நச்சுப் பாம்பு என்றும் பாராது அதன் மீது இரக்கம் கொண்டு அதற்கு உதவிய அவரது பெருந்தன்மையைப் பாராட்டிக் கௌரவிக்கும் முகமாக அவருடைய குலத்திற்குப் **பராஹிதா குலம்** (Paraahita Family) என்ற பெயர்சூட்டிக் கௌரவிக்கப்பட்டது.[15]

மேலும், பாம்புக்கடி, தேள்கடி போன்ற நச்சுக் கடிகளுக்கு அளிக்கப்படும் சிகிச்சைக்குப் **பராஹிதாவிதி** (Paraahita Vidhi) என்றும் பெயர்சூட்டப்பட்டது.[16] இந்தப் பராஹிதா விதியின் படி இது போன்ற நச்சுக்கடிகளுக்குச் செய்யப்படும் சிகிச்சைகளுக்காக எவ்வித சன்மானமும் பெறக்கூடாது; மீறிப் பெறுவார்களாயின் அவர்கள் அளிக்கும் சிகிச்சைகள் பலனற்றுப் போய்விடும். மருத்துவ அறிவியலின் கீழ் இதுபோன்ற நச்சுக்கடிகளுக்கு அளிக்கப்படும் மருத்துவ சிகிச்சை **பராஹித சாரண வைத்தியம்** (Paraahita Chaarana Vaidya) என்றழைக்கப்பட்டது. நோயாளிகளிடமிருந்து எவ்விதச் சன்மானமும் பெறாமல் சிகிச்சையளிக்கும் மருத்துவர்கள் **பராஹிதாக்கள்** (Paraahitas) அல்லது **லோகோபகாரர்கள்** (Lokopakaaras) என்று அழைக்கப்பட்டனர். இந்தப் பராஹிதா குலத்தில் கி.பி. 16ஆம் நூற்றாண்டில் தோன்றிய **ஸ்ரீநாதபண்டிதர்** (Srinaatha Pandita) என்பவர் **பராஹித ஸம்ஹிதா** (Paraahita Samhita) என்னும் மருத்துவ நூலினைத் தொகுத்துள்ளார். மூன்று பாகங்களைக் கொண்ட இந்நூலின் முதற்பகுதி தெலுங்கு மொழியில் வெளியிடப்பட்டுள்ளது. மற்ற இரண்டு பாகங்களும் ஸ்ரீவெங்கடேஸ்வரா பல்கலைக்கழகத்தினரால் தேவநாகரி எழுத்தில் வெளியிடப்பட்டுள்ளன.[17]

பராஹிதா முறை மருத்துவச் சேவையினைப் பரவச் செய்த சேவையைப் பாராட்டி **பீமா** (Bhima) என்னும் மருத்துவருக்கு ஒரு நன்செய் நிலமும் ஒரு பூந்தோட்டமும் கொடையாக வழங்கப்பட்டுள்ளது என்று தெலுங்கானா மாவட்டத்திலுள்ள ஒரு சிதைந்த கல்வெட்டுத் தெரிவிக்கிறது.[18] **பராஹிதா முறையைப் பரப்பி வந்த அவர் வைத்திய வித்யாஹரா** (Medical teacher மருத்துவ ஆசிரியர்) என்று அழைக்கப்பட்டதாகவும் அக்கல்வெட்டுத் தெரிவிக்கின்றது. மேலும், அவர் சிறந்த மருத்துவக் குலத்தில் தோன்றியவரென்றும்,

மகப்பேறு சிகிச்சைகளில் திறன்மிக்கவரென்றும் அந்தக் கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது.

**அஷ்ட வைத்திய குலம்**

கேரளாவில் '**அஷ்ட வைத்தியர்கள்** (Ashta Vaidyas) என்று சொல்லப்படுபவர்கள் மிகவும் சிறப்புப் பெற்ற மருத்துவ குலத்தைச் சேர்ந்தவர்கள். பிராமண வகுப்பினைச் சேர்ந்த இவர்கள் பற்றிய நிறைவு தரும் பெருங்கதைகள் பல கேரளாவில் மிகவும் பிரபலமடைந்தவை.

ஆயுர்வேத வல்லுநர் **வாக்பட்டர்** (கி.பி. 7ஆம் நூ.ஆ.) (Vagbhatta) வெவ்வேறு குலங்களைச் சேர்ந்த எட்டுச் சீடர்களுடன் கேரளாவிற்கு வருகை தந்தார் என்றும், இந்த எட்டுச் சீடர்களின் குடும்பங்களே **அஷ்ட வைத்திய குலம்** (Ashta Vaidya Family) என்று அழைக்கப்பட்டதென்றும், அவர்களுடைய சந்ததியில் தோன்றிய மருத்துவர்கள் **அஷ்ட வைத்தியர்கள்** என்று அழைக்கப் பட்டனரென்றும் **அகில இந்திய ஆயுர்வேத வழிகாட்டு விதி நூலில்** (All India Ayurvedic Directory) கூறப்பட்டுள்ளது.[19]

ஆனால், நம்பூதிரி மருத்துவர்கள் (Namboodri Doctors) விட்டுச் சென்றுள்ள அடையாளங்களைக் கொண்டு இந்த அஷ்ட வைத்தியர்களின் மூலாதாரம் பற்றி **ஆனந்தாவுட்** (Ananda wood) என்பவர் வேறுவிதமாகக் கூறுகிறார். நம்பூதிரி மருத்துவர்களின் மூதாதையர்கள் மருத்துவ அறிவியல் பற்றிய தத்துவங்களைப் பரசுராமரிட (Parasuram)மிருந்து பெற்றனர்.[20] மருத்துவக் கல்வி வளர்ச்சிக்காகத் தங்களை அர்ப்பணித்துக் கொள்ளும் எட்டு மருத்துவர்களைப் பரசுராமர் நியமித்தார். இந்த எட்டு மருத்துவர்களே **அஷ்ட வைத்தியர்கள்** என்றழைக்கப் பட்டனர். அந்த எட்டு மருத்துவர்களின் குலமே அஷ்ட வைத்திய குலம் என்று அழைக்கப்பட்டது.[21]

ஆனால், **அஷ்ட வைத்தியர்** என்ற சொல் மருத்துவக் குலத்தைச் சேர்ந்த எட்டுக் குடும்பங்களைக் குறிக்கும் சொல்லன்று; **அஷ்டாங்க வைத்தியம்** (Ashtaanga Vaidya) என்று சொல்லப் படுகின்ற ஆயுர்வேதத்தை நன்கு கற்றுத்தேர்ந்த மருத்துவர்களைக் குறிப்பிடப்பயன்படும் சொல்லாகும் என்று **வாதக்கும்கூர்** (Vatakkumkur) கூறியுள்ளதாக **வாரியர்** (Warrier) குறிப்பிட்டுள்ளார்.[22] வாதக்கும்கூரின் வாதமும் பொருத்தமற்றதென ஒதுக்கித் தள்ளி விட முடியாது. ஆயுர்வேதம் எட்டுப் பிரிவுகளைக் கொண்ட மருத்துவ அறிவியல். இந்த எட்டுப் பிரிவுகளிலும் புலமை பெற்ற மருத்துவரை "**அஷ்ட வைத்தியர்**" என்று அழைப்பது மிகவும்

பொருத்தமாகவேயிருக்கும். இக்கருத்தின் அடிப்படையில் எண்ணிப் பார்த்தால், ஆயுர்வேதத்தின் எட்டுப்பிரிவுகளிலும் புலமை பெற்ற ஒரு மருத்துவர் இருந்திருக்க வேண்டும்; அவர் **அஷ்டவைத்தியர்** என்றழைக்கப்பட்டிருக்க வேண்டும். அவர் குடும்பத்தினரும், அவர் வழிவந்த தலைமுறை மருத்துவர்களும் **அஷ்டவைத்திய குலம்** என்றழைக்கப்பட்டிருக்க வேண்டுமென்று கருத இடமிருக்கிறது.

நம்பூதிரி இனத்தைச் சேர்ந்த அஷ்டவைத்திய குடும்பங்கள் இன்றும் மலபாரிலுள்ள ஆலபூர் (Aalabhur), புலமந்தாள் (Pulamanthol), வயஸ்கரை (Vayaskara), சீறிட்டமோன் (Cheerittamon), வெள்ளோடு (Vellodé) ஆகிய திருவிதாங்கூர் பகுதிகள் மற்றும் கொச்சிப் பகுதியிலுள்ள இளயாதி தாய்கட் (Elayathy Thaikat), பழநெல்லிப்புரத்துத் தாய்கட் (Pazhanellipuratthu Thaikat), குட்டன்சேரி (Kuttancheri) ஆகிய இடங்களில் வாழ்ந்துவருகின்றனவென்றும் இன்றுவரை இக்குடும்பத்தினர் யாவரும் தங்களுடைய சிறப்புமிக்கப் பாரம்பரியத்தைக் கடைப்பிடித்து வருகின்றனரென்றும் கூறப்படுகிறது.[23] இக்குடும்பங்கள் பல பெருமைமிக்க வைத்தியர்களை உருவாக்கியுள்ளன. அவ்வைத்தியர்களுக்கும் பெருமைமிக்கப் பல சீடர்கள் இருக்கின்றனர்.

முன்னாட்களில் ஒவ்வொரு நம்பூதிரிக் கிராமத்திலும் ஒரு அஷ்டவைத்திய குடும்பம் இருந்ததென்றும், எனவே மொத்தம் எத்தனை நம்பூதிரிக் கிராமங்கள் இருந்தனவோ அத்தனை அஷ்டவைத்திய குடும்பங்கள் இருந்தனவென்றும் வாரியர் எழுதுகின்றார். காலப்போக்கில் இவற்றுள் பல குடும்பங்கள் மறைந்துவிட சில எட்டு அல்லது ஒன்பது குடும்பங்களே தற்போது எஞ்சியுள்ளனவென்றும் குறிப்பிடுகின்றார்.[24]

கேரளாவில் எல்லாச் சமூகத்திலும் மருத்துவர்கள் புகழுடன் இருந்திருக்கின்றனர். பிராமண வகுப்பைச் சேர்ந்த அஷ்டவைத்தியர்கள் மட்டும் அரசாங்க மருத்துவர்களாகப் பெரும்புகழுடன் வாழ்ந்துள்ளனர்; ஈழவா (Ezhava), கணிக்கன் (Kanikkan), பணிக்கர் (Panikkar), வேலன் (Velan) மற்றும் பிற தாழ்ந்த வகுப்பைச் சேர்ந்த மருத்துவர்கள் அத்தகையதொரு உரிமையைப் பெறமுடியாவிடினும் அதற்குச் சமமான புகழுடன் மக்கட் செல்வாக்கைப் பெற்று வாழ்ந்து வந்தனர் என்று வாரியர் சுட்டிக் காட்டுகின்றார். அவர்களுள் பெரும்பாலோரின் இனப்

பெயர்கள் வைத்தியர் என்ற இறுதிச் சொல்லுடன் முடிவு பெறும்.[25]

அஷ்டவைத்திய குலத்தினர் பற்றி நாராயணன் நம்பூதிரி பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.[26]

> "அஷ்டவைத்திய குலத்தைச் சேர்ந்த மருத்துவர்கள் பொது மருத்துவத்துடன் அறுவை மருத்துவமும் செய்து வந்தனர். இவர்களுடைய வம்சாவழியினர் நாள் தோறும் தங்கள் வீடுகளிலுள்ள தன்வந்த்ரிக் (Dhanwantri) கடவுளை வணங்கிய பின்னரே தங்களுடைய தொழிலைத் தொடங்குகின்றனர். அவர்கள் யாவரும் தனிச்சிறப்புமிக்க ஆயுர்வேத மருத்துவர்களாக மதிக்கப் படுகின்றனர்."

## குறிப்பிடத்தக்கப் பிற மருத்துவர்கள்

**சாருந்தராயா** (Chaarundaraaya) என்பவர் கர்நாடக மாநிலம் முட்கல் (Mudgal) என்னுமிடத்தைச் சேர்ந்த மருத்துவ அறிஞர். இவர் சாளுக்கிய மன்னர் இரண்டாம் ஜெயசிம்மனின் (கி.பி. 1014 - கி.பி. 1042) அரசவை மருத்துவராகயிருந்து புகழ்பெற்றவர்.[27] மிகவும் மதிப்பு வாய்ந்த மருத்துவக் கலைக் களஞ்சியமான **லோகோபகாரி** (Lokopakaari) என்னும் நூலினை எழுதியவர். இந்நூல், **நராயுர்வேதம்** (மனித இன மருத்துவம்), **விஷ விஞ்ஞானம்** (Toxicology), **உறுப்பமைதியியல்** (Physiognomy) மற்றும் மருத்துவம் சார்ந்த இதர துறைகளையும் பற்றியது. மனித இன மருத்துவத்துக்கும் விஷவைத்தியத்திற்கும் மட்டுமே இந்நூலில் அதிக முக்கியத்துவம் கொடுக்கப் பட்டுள்ளது.

**ஜகதல சோமநாதன்** (Jagaddala Somanatha) என்பவர் கர்நாடகாவின் ஜைன மருத்துவர்.[28] இவர் கி.பி. 1150இல் **கர்நாடகக் கல்யாண காரகா** (Karnaataka Kalyaana Kaaraka) என்ற மருத்துவ நூலை இயற்றினார். இதில் மனித இனத்தைத் தாக்குகின்ற எல்லாவகை நோய்களின் காரணங்களும் சிகிச்சை முறைகளும் விவரிக்கப்பட்டுள்ளன.

கி.பி. 1200இல் **பாலகிரக சிகிச்சை** (Baalagraha chikitsa) என்ற குழந்தை மருத்துவ நூலை எழுதிய தேவேந்திர முனி,[29] கி.பி. 15ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த **ஸ்ரீதரதேவன், பச்சரசா**

ஆகிய ஜைன மருத்துவர்கள்,[30] மற்றும் தளபதி சன்னராஜாவின் அரசாங்கத்தில் மருத்துவராகப் பணியாற்றியவரும், கி.பி. 1570ல் **'வைத்திய சார சங்கிரஹா'** என்னும் தலைப்பில் ஆயுர்வேதத்தைக் கன்னடத்தில் எழுதியவருமான **நரசிம்ம பட்டர்** ஆகியோர் கர்நாடகத்தின் பிற குறிப்பிடத்தக்க மருத்துவர்களாவர்.[31]

**கார்ஸியா டா ஓர்தா** (Garcia da Orta) என்பவர் கி.பி. 1534இல் இந்தியாவிற்கு வந்த போர்ச்சுக்கீஸிய மருத்துவர். அவருக்குத் தெரிந்த அளவில் மருத்துவ மூலிகைகளைப் பற்றி சிறந்த ஞானம் பெற்றவர். அவருடைய வீட்டு வளாகத்தினுள் மருத்துவ மூலிகைகளைக் கொண்ட ஒரு தோட்டம் அமைத்துப் பராமரித்து வந்தார். கோவா அரசுப் பிரதிநிதிக்கு (Viceroy) மருத்துவராகவும் இருந்தார்.[32] **வயிற்றுப் போக்கிற்கு** (Dysentery) தனது மருந்துகளின் மூலம் வெற்றிகரமாகக் குணம் கண்ட போதிலும், மலபார் வைத்தியர்கள் கொடுக்கும் மூலிகை மருந்துகள் போன்று தனது மருந்துகள் வேகமாகப் பலனளிக்கவுமில்லை, பலனளிக்குமென்ற நிச்சயமுமில்லை என்று அபிப்பிராயப் பட்டார்.[33]

மேற்கூறப்பட்ட விபரங்களிலிருந்து தென்னிந்தியாவில் கிறித்துவ சகாப்தத்தின் தொடக்க காலத்தில் உள்ளூர் மற்றும் புத்த, ஜைன மத மருத்துவர்களால் செயல்படுத்தப்பட்டுவந்த மருத்துவத் தொழில் இடைக்காலத்தில் தோன்றிய மருத்துவ அறிஞர்களால் பெருமளவில் வளர்ச்சி பெற்றுள்ளதைக் காண முடிகிறது.

### அரசர்களின் தனி மருத்துவர்கள்

தனிச்சிறப்பு மிக்க மருத்துவர்களை அரசவை மருத்துவர்களாக நியமனம் செய்வது அந்நாளில் வழக்கமாகயிருந்தது. தலை சிறந்த, நம்பகமான மருத்துவர்கள் அரசர்களுக்குத் தனி மருத்துவர்களாக நியமிக்கப்பட்டனர். அரசர்களை நஞ்சூட்டிக் கொல்லும் அபாயங்களிலிருந்து பாதுகாப்பது தனி மருத்துவர்களின் தலையாய கடமையாகும். அரசருக்கு உணவு சமைக்கப்படும் சமயலறையையும், அரசருக்குப் பரிமாறப்படயிருக்கின்ற உணவுகளையும் நாள்தோறும் பார்வையிட்டுச் சோதனை செய்ய வேண்டும். நஞ்சு கலந்த உணவுகளை அடையாளம் கண்டு கொள்ள முழுமையான அறிவு பெற்றிருக்க வேண்டும்.[34] அரசர் தனது தனி மருத்துவர் விதிக்கும் விதிமுறைகளை மிகவும் கட்டுப் பாடுடன் பின்பற்ற வேண்டும்.

'அரசருக்குத் தனிமருத்துவராகும் நிலையை அடைவதுதான் மருத்துவத் தொழிலில் ஒரு மருத்துவர் பெறக் கூடிய உச்சநிலையாகும்' என்று நம்பப்பட்டது.[35]

புகழ்பெற்ற மருத்துவர் நாகார்ஜுனா கி.பி. முதல்/இரண்டாம் நூற்றாண்டில் சாதவாஹன அரசர்களுக்கு மருத்துவ ஆலோசகராக இருந்துள்ளார் என்ற விபரம் ஏற்கெனவே கூறப்பட்டது. கி.பி. 9ஆம் நூற்றாண்டில் மருத்துவ அறிஞர் **உக்கிராதித்யாச்சாரியா** (Ugraadityaachaarya), ராஷ்டிரகூட அரசர் **நிருபதுங்கா** (Nirpothunga)வின் அரசவையில் இடம்பெறும் பேறுபெற்றிருந்தார். கி.பி. 12ஆம் நூற்றாண்டில் **நோய் அறுதியிடுவதில்** (Diagnose) தனிச்சிறப்புப் பெற்றிருந்த **மாதவாச்சாரியா** விஜயநகர மன்னன் **வீரபுக்கருக்கு** (Vira Bukka) முதன் மந்திரியாக யிருந்தார்.[36] 15ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் **லக்ஷ்மண பண்டிதர்** (Laxmana Pandita) மன்னர் இரண்டாம் புக்கருக்குத் தனி மருத்துவராகயிருந்தார்.[37]

முஸ்லிம் மன்னர்களும் தங்களுக்கெனத் தனி மருத்துவர்களை வைத்துக் கொள்ளும் கொள்கையைக் கடைப் பிடித்துவந்தனர். எடுத்துக்காட்டாக, **அலாவுதீன் பாமன்ஷா** (Alaauddin Bahman shah) காலத்தில் **ஹக்கீம் அலிமுதீன்**, **ஹக்கீம் நாசீர்** ஆகியோர் அரசவை மருத்துவர்களாகயிருந் துள்ளனர்.[38]

### மருத்துவர்களுக்கிடையேயுள்ள ஏற்றத்தாழ்வுகள்

தென்னிந்தியாவில் தொடக்கக் காலங்களில் நாட்டு வைத்தியர்களாலும் பின்னர் புத்த விஹாரங்கள், ஜைன மடாலயங்கள் மற்றும் இந்துக் கோயில்கள் ஆகியவற்றின் மூலமும் மக்களுக்கு மருத்துவச் சிகிச்சைகள் வழங்கப்பட்டு வந்தன. இடைக்காலத்தில் எண்ணற்ற மருத்துவ அறிஞர்கள் தோன்றி மருத்துவ சேவை புரிந்து வந்தனர். இருப்பினும், மருத்துவர்களுக் கிடையே இன, வகுப்பு வேறுபாடுகளுக்கேற்ப ஏற்றத்தாழ்வுகளும் இருக்கத்தான் செய்தன.

கேரளாவில் பிராமண வகுப்பைச் சேர்ந்த அஷ்ட வைத்தியர்கள் மட்டுமே அரசவை மருத்துவர்களாகப் பணியாற்றும் உரிமை பெற்றிருந்தனர்.[39] ஆந்திராவில், அரசர்கள், அரசவை சார்ந்த பெரியோர்கள் மற்றும் சமூகத்தில் கல்விச் சிறப்புமிக்கப் பெரியோர்கள் மட்டுமே தேர்ச்சிபெற்ற மருத்துவ அறிஞர்களிடம் சிகிச்சை பெறும் உரிமைபெற்றிருந்தனர். மற்றைய பொது

மக்களும், நாட்டுப்புற மக்களும் போலி மருத்துவர்கள் (Quack Physicians) பரம்பரை வைத்தியர்கள் மற்றும் நாவிதர்கள் ஆகியோரையே மருத்துவ சிகிச்சைக்கென நாடவேண்டிய நிலையிலிருந்தனர்.[40]

இவ்வாறு கேரளாவிலும் ஆந்திராவிலும் மருத்துவர் களிடையே உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்ற பாகுபாடு உருவாக்கப் பட்டிருந்ததைக் காணமுடிகிறது. ஆனால் அப்பாகுபாடுகளுள், கேரளாவில் காணப்பட்டது பிறப்பு நிலையின் இனஅடிப்படையிலும், ஆந்திராவில் காணப் பட்டது கல்வி நிலையின் அடிப்படையிலும் அமைந்திருந்தன என்பது நோக்கற்பாலது.

### மருத்துவர்களுக்கு வழங்கப்பட்ட நன்கொடைகள்

மருத்துவக் கலையை வளர்ப்பதில் தென்னிந்திய மக்கள் அபரிமிதமான ஆர்வம் காட்டி வந்துள்ளனர். ஆட்சியாளர்களும் மேல்மட்ட மக்களும் மருத்துவ வளர்ச்சிக்காகப் பெருமளவில் நன் கொடைகள் வழங்கியுள்ளனர். அரசகுலத்தினர் கோயில் களுக்கும் மடாலயங்களுக்கும் மருத்துவமனைகளை நிர்வகிப்பதற் கென நன்கொடைகள் வழங்கியுள்ளனர். மருத்துவர்களின் சிறப்புக்களையும் திறனையும் கருத்திற் கொண்டு, திறன் மிகுந்த மருத்துவர்களை அரசர்கள் தங்களின் தனி மருத்துவர்களாகவோ அல்லது அரசவை மருத்துவர்களாகவோ நியமனம் செய்ததன் மூலம் மருத்துவர்களுக்கு ஊக்கமும் உற்சாகமும் அளித்துள்ளனர்.

மருத்துவ மையங்களை நிர்வகிக்கவும், மருத்துவத்தை வளர்ச்சி பெறச் செய்யவும் வழங்கப்பட்ட நன்கொடைகள் பற்றியும், மருத்துவர்களுக்கு ஆட்சியாளர்கள் அளித்து வந்த ஆதரவு பற்றியும் பல கல்வெட்டுக்கள் சான்றுகள் தந்துள்ளன.

கி.பி. 663ஐச் சேர்ந்த நெல்லூர் மாவட்டக் கல்வெட்டில், வஜ்ரவரா (Vajravara) என்னும் மருத்துவருக்கு மேலைச் சாளுக்கிய மன்னர் விக்ரமாதித்யர் (Vikramaaditya) எடுசாந்தி (Edusanti) எனும் கிராமத்தை நன்கொடையாக வழங்கிய விபரம் கூறப்பட்டுள்ளது.[41] வெமுலவாட சாளுக்கிய மன்னர் முதலாம் அரிகேசரி (Arikesari I) யின் ஆட்சிக் காலத்தில் (கி.பி. 780 - கி.பி. 800) முக்த சிவாசாரியா (Mugdha Sivaachaarya) என்ற மருத்துவரின் சேவையைப் பாராட்டி நன்கொடை வழங்கப் பட்டுள்ளது.[42]

'நிரோகா' என்னும் மருத்துவ அறிவியலில் தேர்ச்சிபெற்ற 60 அந்தணர்களுக்கு அளிக்கப்பட்ட கொடைபற்றி **பெனுகொண்டா செப்பேடுகள்** தெரிவிக்கின்றன.[43] 284 பிராமணர்களுக்கு நிலங்களாக வழங்கப்பட்ட நன்கொடையில் **அம்பலத்தடி பட்டர்** (Ambalattadi Bhatta) என்றழைக்கப்பட்ட பிரவாபிஷாஜா (Pravaabhishaja) என்னும் மருத்துவரும் ஒரு பங்கினைப் பெற்றதாக வெளியிடப்படாத செப்பேடு ஒன்று குறிப்பிடுகின்றது.[44] கி.பி. 1261-இல் ஒரு பொது மருத்துவமனையும் அதனுடன் இணைக்கப்பட்டிருந்த ஒரு மகப்பேறு இல்லத்தையும் பராமரிக்கும் பொருட்டு அளிக்கப்பட்ட மால்காபுரம் நன்கொடை பற்றி ஏற்கெனவே குறிப்பிடப்பட்டுள்ளது.

வடகனரா மாவட்டம் **பக்கல் பேதா** (கி.பி. 1336) (Bhakkal Petha)வைச் சேர்ந்த **சிராலி** (Sirali) என்ற இடத்திலிருந்து கிடைக்கப் பெற்ற கல்வெட்டு, சிராலியின் மருத்துவ குலத்தைச் சேர்ந்த **ஈஸ்வரா** (Isvara) என்ற மருத்துவருக்கு மதுசூதன கேசவர் என்பவரால் நிலம் வாங்கிக் கொடையாக வழங்கப்பட்ட விபரத்தைத் தெரிவிக்கிறது.[45] கி.பி. 1376இல் இரண்டாம் ஹரிஹரரால் (Harihara - II) வழங்கப்பட்ட 64 பங்குகள் கொண்ட **க்ரகு** (Kraku) நன்கொடையில் 31ஆவது பங்கு ஆயுர்வேதத்தை நன்கு கற்றறிந்த **ஸ்ரீகிரி** (Srigiri) என்ற மருத்துவருக்குக் கொடுக்கப்பட்டுள்ளது.[46]

ஆயுர்வதேத்தையும் பிற அறிவியல்களையும் நன்கு கற்றறிந்த பல அறிஞர்களை ரெட்டி அரசர்கள் (Reddy kings) ஆதரித்துள்ளனர். அவர்கள் பொது நலத்தையும் நல்லமுறையில் பாதுகாப்பதில் மிகுந்த அக்கறையெடுத்துக் கொண்டனர். பராஹிதா மருத்துவர்களுக்குப் பல நன்கொடைகளை வழங்கியுள்ளனர். பராஹிதா மருத்துவர்களுக்கு அளிக்கப்பட்ட நன்கொடைகள் பற்றி அறிவிக்கின்ற நான்கு கல்வெட்டு ஆதாரங்கள் பற்றி **சுப்பா ரெட்டி** கூறியுள்ள விவரம் வருமாறு:[47]

1. கி.பி. 1368இல் கொருகொண்டா (Korukonda)வைச் சேர்ந்த சிங்கண்ண நாயக்கரால் மூன்றாம் பராஹிதாவுக்கு வழங்கப்பட்ட **அக்கலப்பூதி** (Akkalapoodi) **நன்கொடை.**

2. கி.பி. 1402இல் கொண்டவீடுவைச் சேர்ந்த **பெத்தகோமட்டி** (Pedda Komati) என்பவரால் பராஹிதா குலத்தைச் சேர்ந்த **பாஸ்கரார்யா** (Baskorarya) என்பவருக்கு வழங்கப்பட்ட **பொன்னுப்பள்ளி** (Ponnupalli) **நன்கொடை.**

3. அதே நன்கொடையாளரால் கி.பி. 1410ல் **பெரியவில்ல பராஹிதா** (Periavilla Paraahita)வின் கொள்ளுப் பேரனான **சிங்கநரயன்** (Singanaraya) என்பவருக்குக் கொடுக்கப்பட்ட **பொன்னுப்பள்ளி நன்கொடை.**

4. கி.பி. 1423இல் **அனிதல்லி** (Anitalli) என்பவரால் நான்காம் பராஹிதாவிற்குக் கொடுக்கப்பட்ட **கலுவச் செருவு நன்கொடை.**

மேற்கூறப்பட்ட நன்கொடைகள் யாவும் அந்த மருத்துவர்களின் சிறந்த மருத்துவச் சேவைக்காக வழங்கப் பட்டவையாகும்.

கி.பி. 1424ஐச் சேர்ந்த ஒரு செப்பேட்டில்[48] **சம்பத்குமார்** என்பவருக்கு ஒரு கிராமத்தை நன்கொடையாக வழங்கப்பட்ட விபரம் குறிப்பிடப்பட்டுள்ளது. இவர் ஆயுர்வேதத்தில் சிறந்த புலமைபெற்றவரான **கோவிந்த பண்டிதரின்** புதல்வரும், அப்போதைய மருத்துவர்களுள் தலைசிறந்து விளங்கிய மருத்துவருமாவார்.

மருத்துவர்களை ஆதரிப்பதில் **பாமனி அரசர்களும்** (Bahamani kings) மிகுந்த அக்கறை செலுத்தியுள்ளனர். இரண்டாம் அலாவுதீன் (கி.பி. 1435 - கி.பி. 1459) தான் நிறுவிய **ஷிஃபாகானா** என்ற மருத்துவமனையின் பராமரிப்புச் செலவுக ளுக்காக பல கிராமங்களை நன்கொடையாக வழங்கியுள்ளார்.[49]

கி.பி. 1581-ல் **முகம்மது குலி குதுப்ஷா** (Mohamed Quli Qutab shah) என்ற மன்னர் தான் நிறுவிய **தார்–உஸ்–ஷிஃபா** (Dar-us-shifa) என்ற மருத்துவமனையின் பணியாளர்களுக்கு ஊதியங்களை உயர்த்திக் கொடுக்க ஏற்பாடு செய்ததுடன் நோயாளிகளுக்குத் தேவையான மருந்துகள், உணவுப் பராமரிப்பு ஆகியவற்றின் செலவுகளுக்காக அரசாங்கக் கருவூலத்திலிருந்து போதுமான பணம் கிடைக்க வழிவகை செய்துள்ளார்.[50]

இவ்வாறு மருத்துவத் தொழில் வளம்பெறும் வகையில் மருத்துவர்களுக்குப் பலவகையிலும் ஆக்கமும் ஊக்கமும் வழங்கி உற்சாகமூட்டப்பட்டுள்ளது.

# பிரிவு 4

## கல்வி நிறுவனங்களும் மருத்துவ வளர்ச்சியும்

கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் பேரரசர் அசோகரின் 18ஆவது ஆட்சியாண்டுக் காலத்தின் போது தென்னாட்டில் புத்தமதக் கல்விமையங்களை நிறுவுவதற்காக வடகனரா மாநிலத்திலுள்ள பனவாசி (Banavasi) என்னுமிடத்திற்கு தெரோ ரக்ஷிதர் (Thero Rakshita) என்ற புத்தத் துறவி அனுப்பிவைக்கப் பட்டார்.[1]

அதே காலத்தில், கடும் வறட்சியின் விளைவாக ஏராளமான வட இந்திய மக்கள் தென்னகத்திற்கு வந்ததாகவும் கூறப்படுகிறது. அவர்களுள் பெரும்பாலோர் ஜைனமதப் பற்றுடையவர்களாதலின் பல ஜைனப் பள்ளிகள் கர்நாடகத்தில் நிறுவப்பட்டன. புத்த மதத்தினரைப் போலவே ஜைனர்களும் தொடக்கத்தில் குன்றுகளிலமைந்துள்ள குகைகளில் தங்களது இருப்பிடங்களை அமைத்துக் கொண்டு, கல்வி மையங்களைக் குன்றுகளின் மேல் நிறுவித் தங்களது மதத்தைப் பரப்பத் தொடங்கினர்.[2] இந்த ஜைன மையங்கள் 'பள்ளிகள்' என்றும் இதேபோன்று அமைக்கப்பட்ட புத்த மையங்கள் 'விஹார்கள்' (Vihar's) என்றும் அழைக்கப்பட்டன. இவ்வாறு அமையப்பெற்ற புத்த, ஜைன மடங்கள் யாவும் மதபோதனைக் கூடங்களாகவும், கல்விமையங்களாகவும் செயல்பட்டன. நாளடைவில், தென்னிந்தியா முழுவதிலும் புத்த, ஜைன மதத்தினர் பரவித் தங்களது மடாலயங்களை நிறுவிக் கொண்டனர்.

ஆந்திராவில் ஜைனர்கள் அரசவைகளிலும், தலை நகரங்களிலுமே அடைக்கலம் நாடிச் சென்றனர். அவர்கள் பெண்களுக்கும் கல்வி கற்பித்து வந்தமையால் ராணிகள் அவர்களுக்கு ஆதரவளித்தனர். சோதிடக் கலையில் அவர்கள் சிறந்து விளங்கியதால் அரசர்கள் நற்செயற்களுக்கான நேரங்களைக் குறிப்பதற்கும். அவர்களுக்கு நேர இருக்கும் அபாயங்கள் குறித்து எச்சரிக்கையூட்டுவதற்கும் அரசர்களால் கவரப்பட்டார்கள்.[3]

கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் ஜைனர்கள் கர்நாடகம் மற்றும் தமிழ்நாட்டுப் பகுதிகளின் வழியாக கேரளாவிற்குள் புகுந்து சில குறிப்பிட்ட இடங்களில் தங்களது மடாலயங்களை நிறுவிக் கொண்டனர் என்று ஈப்பெல் (Eapel) என்பவர்

கருதுகிறார்.[4] இந்த மடாலயங்கள் ஏழைகளையும் குடியிருக்க வசதியற்றவர்களையும் ஆதரித்து அவர்களுக்குக் கல்வி கற்பித்ததுடன் மருத்துவத் தொழிலையும் ஒரு அறக்கட்டளை யாக நடத்தி வந்தன.[5] நாளடைவில், சேரமன்னர்கள் உட்பட கேரள மக்களும் ஜைனமதத்தில் ஈடுபாடு செலுத்தலாயினர். உதாரணமாக, தமிழ்க் காப்பியமான சிலப்பதிகாரத்தை எழுதிய "இளங்கோவடிகள்" கேரளாவின் **மதிலகம்** (Matilakam) என்ற இடத்தில் ஜைனமதத்தைத் தழுவி வாழ்ந்து வந்த இளவரசராவார்.[6]

புத்தமதமும் கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் கேரளப் பகுதிகளுக்குள் தோன்றியிருக்கக் கூடுமென்று ஶ்ரீதரமேனன் கருதுகிறார்.[7] சேர, சோழ, பாண்டிய மன்னர்கள் தங்கள் நாடுகளில் மக்களுக்கும் விலங்குகளுக்கும் நோய் வராமல் தடுக்கவும், நோய்களுக்குச் சிகிச்சையளிக்கவும் விரிவான ஏற்பாடுகள் செய்திருந்தனர் என்று அசோகரின் **கிர்னார்** (Girnar) பாறைக் கல்வெட்டுக் குறிப்புகள் தெரிவிக்கின்றன.[8]

ஆயினும், கி.பி. பத்தாம் நூற்றாண்டில் தான் மடாலயங்கள் நிறுவும் பணி தென்னகத்தில் முழுவேகத்துடன் நடைபெற லாயிற்று. அதன்பின்னர், இந்த மடாலயங்களை இந்துக் கோயில் களுடன் இணைப்பதென்பது மிகவும் சாதாரண நிகழ்ச்சியாக நடைபெறலாயிற்று. **பெஜவாடா** (Bezwada)வில் சிவன் மற்றும் மஹாசேனர் கோயில்களுடன் இணைக்கப்பட்டு இரண்டு மடங்கள் இருந்துள்ளமை தெரியவருகிறது. அவற்றுள் மதக் குருக்கள் தங்கியிருந்து ஏழைகளுக்கு உணவளித்தும், நோயாளிக்கு மருத்துவ சிகிச்சையளித்தும் சேவை புரிந்து வந்தனர்.[9]

இடைக்காலத் தென்னிந்தியாவில் மடாலயங்களும், பள்ளிகளும் முதன்முதலில் மதபோதனை மையங்களாகத் தான் செயல்பட்டு வந்தன. பின்னர், நாளடைவில் அவை கல்வி மையங்களாகவும், மருத்துவச் சேவை நிலையங்களாகவும் செயல்படலாயின. இந்த மையங்களில் ஆயுர்வேதம் கற்றுத் தரப்பட்டது. ஏழைகளுக்கும், நோயாளிகளுக்கும் உணவு மற்றும் மருந்துகள் இலவசமாக வழங்கப்பட்டன. ஆனால், மருத்துவச் சிகிச்சைக்கென எவ்வித ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தனவென்று கல்வெட்டுக்களில் ஏதும் குறிப்பிடப்படவில்லையென்று ரெட்டி (Reddy) கூறுகிறார்.[10]

புத்தத் துறவிகளின் சேவைகளின்கீழ் கேரளநாயர்கள் அறிவியலின் எல்லாப் பிரிவுகளையும் வியக்கத்தக்க அளவில்

கற்றுத் தேர்ச்சி பெற்றனர். 'ரஸவை ஸேஷிகா' (Rasavai seshika) என்னும் நூலை இயற்றிய **பதந்த நாகார்ஜுனா** (Bhadanta Naagaarjuna) என்பவர் புத்தத் துறவிகளால் பயிற்றுவிக்கப்பட்ட ஒரு புத்தத் துறவியாவார்.[11] புத்த சன்னியாசிகள் மருந்துகள் மற்றும் மருந்தெண்ணெய்கள் தயாரிப்பிலும், மடத்தைச் சேர்ந்த பக்தர்களின் உடல்நலப் பராமரிப்பிலுமே பெரும்பொழுதைக் கழித்து வந்தனரென்று கேரள மாநில வழிகாட்டு விதிநூலின் (Kerala State Gazatteer) பதிப்பாசிரியர் ராமச்சந்திரன் குறிப்பிட்டுள்ளார்.[12] அவருடைய கூற்றுப்படி, **ஆயுர்வேத கிரந்தா** (Aayurveda Grantha) மற்றும் **அஷ்டாங்க ஹிருதயா** (Ashtaanga Hrdya) என்ற மருத்துவ நூற்களை எழுதிய புகழ்பெற்ற **வாக்பட்டர்** (Vaagbhatta) புத்தமதத்தைச் சேர்ந்தவர் என்றும், அவருடைய நூற்கள் கேரள மக்களால் பெருமளவில் ஏற்றுக் கொள்ளப்பட்டு, கேரளாவுக்கும் புத்த மதத்திற்குமிடையே ஒரு நெருக்கமான உறவினை ஏற்படுத்தியிருந்ததென்றும் தெரிய வருகிறது.[13]

புத்தவிஹாரங்களும் ஜைனப் பள்ளிகளும் தவிர ஆந்திரா, கர்நாடக மாநிலங்களில் **பிரம்மபுரிக்கள்** (Bhahmapuris), **கடிகாக்கள்** (Ghatikas) மற்றும் **அக்ரஹாரங்கள்** (Agrahaaraas) போன்ற பிற மையங்களும் கல்வி வழங்குதலையே முதல் நோக்கமாகக் கொண்டு செயல்பட்டன. **பிரம்மபுரி** என்பது வெவ்வேறு இடங்களிலிருந்து குடிபெயர்ந்து வந்த பிராமணர் களைக் கொண்ட நகரமாகும். **கடிகா** என்பது அரசாங்க அதிகாரிகளால் நிறுவப்பட்டு, அரச புரோகிதர்களால் நடத்தப் படும் குடியிருப்புக் கல்வி நிறுவனமாகும் (Residential Educational Institution) **அக்ரஹாரம்** என்பது கல்வியிற் சிறந்த பிராமணர் களைக் கொண்டமைந்த தன்னிறைவு பெற்ற கூட்டுறவுக் கிராம மாகும்.

சோழர் மற்றும் சாளுக்கியர் ஆட்சிக் காலங்களில் அரசர்கள், அரசிகள், அரசகுருக்கள் மற்றும் தளபதிகள் ஆகியோர் கல்வியை வளர்ப்பதில் பெருமளவில் ஆர்வமும் உற்சாகமும் காட்டி வந்தனர். அக்ரஹாரங்கள் மீது அவர்கள் காட்டிய ஆதரவு கல்வியை வளர்ப்பதையே முதன்மை நோக்கமாகக் கொண்டிருந்த போதிலும், அவர்களுக்கும் அவர்களுடைய மூதாதையர்களுக்கும் புண்ணியத்தைத் தேடிக் கொள்வதும் நோக்கமாகயிருந்தது. இந்நிறுவனங்களின் பராமரிப்புக்கென நிலங்கள் கொடையாக வழங்கப்பட்டன. கற்றுச் சிறந்த பிராமணர்களின் நல்வாழ்விற்காகவும்,

நன்கொடைகள் வழங்கப்பட்டன. முழுநேரப் படிப்புக்கெனத் தங்களை அர்ப்பணித்துக் கொண்ட மாணவர்கட்கு இலவசமாகத் தங்கும் இடமும் உணவும் வழங்கப்பட்டன. இதுபோன்ற கல்வி மையங்கள் தக்ஷராமா (Dhaksharaama)விலும், பித்தாபுரி (Pithaapuri)யிலும் நூறு ஆண்டுகட்கு முன்பு இருந்தது பற்றிக் கல்வெட்டுத் தகவல்கள் கூறுகின்றன. இவற்றுள் சில அக்ரஹாரங்களில் சுமார் நூறு பிராமணக் குடும்பங்கள் வரையிருந்துள்ளன. விடுதிகளில் தங்கிப் படிக்கும் மாணவர்களின் எண்ணிக்கையும் அதிகமாக இருந்திருக்க வேண்டும். எனவே, இந்த அக்ரஹாரங்களில் தங்கியுள்ளோரின் உடல்நலம் காக்கத் தேவையான மருத்துவ வசதிகள் செய்து கொடுக்க வேண்டிய அவசியம் நேரிட்டது. இவ்வாறு கல்வி நிறுவனங்களுடன் மருத்துவமனைகளும் மருந்தகங்களும் நிறுவப்பட்டு மருத்துவ வசதி எழுச்சி பெறலாயிற்று.[14]

அக்ரஹார மாணவர்களுக்குத் தேவையான விடுதிகள், உணவு, உடை, எண்ணெய் மற்றும் மருத்துவ வசதிகளைச் செய்து கொடுப்பதற்காகும் செலவுகளுக்கென நன்கொடைகள் வழங்கப்பட்டன. சாளுக்கிய மன்னர் இரண்டாம் ஜகதேகமல்ல ஜெயசிம்மனின் (Jagadekamalla Jayasimha - II) அரசியார் சுக்கலா தேவி (Suggaladevi) இவ்வகையில் நிலமும், எண்ணெய் ஆலைகளும் நன்கொடையாக வழங்கியுள்ள விபரம் கி.பி. 1029 நாளிட்ட கல்வெட்டொன்றில் காணப்படுகின்றது.[15] இந்த நன்கொடையின் மூலம் கிடைக்கும் வருமானம் மாணவர் மற்றும் தபசிகளுக்கு உணவு, உடை மற்றும் மருத்துவ வசதியளிப் பதற்காகப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

ரவியண்ண பட்டர் (Ravianna Bhatta) என்ற தளபதி ஏவார் (Yewar) என்னுமிடத்தில் ஒரு மடத்தை நிறுவி, அந்த மடத்தில் தங்கிப் படிக்கும் மாணவர்கட்கு உணவும் உடையும் வழங்குவதற்காகவும் மற்றும் கோயில் பராமரிப்புக்காகவும் நன்கொடை வழங்கியுள்ளார் என்று ஒரு கல்வெட்டு மூலம் தெரியவருகிறது.[16] அந்த மாணவர்களின் மருத்துவச் செலவுக்காகவும் அந்த நன்கொடை பயன்படவேண்டுமென்று அக்கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது.

கி.பி. 1162ஐச் சேர்ந்த ஒரு கல்வெட்டில் கர்நாடக புஜபல சக்கரவர்த்தி திருபுவனமல்ல பிஜ்ஜலதேவ ராசா (Bujabala chakkaravarthi Tirubhuvanamalla Bijjaladeva Rasa)வின் ஆட்சிக் காலத்தில் கௌடிய மடம் (Kodiamatha) என்னுமிடம்

ஆதரவற்றவர்களுக்கும், நோயாளிகளுக்கும் நலம் காக்கும் மையமாகத் திகழ்ந்ததென குறிப்பிடப்பட்டுள்ளது.[17] புத்தத் துறவிகளின் மருந்துத் தயாரிப்புச் செலவுகளுக்காக கோவிந்த வர்ம மகாராஜா (Govinda Varma Maharaja) ஒரு நன்கொடை வழங்கியுள்ளார்.[18]

இவ்வாறு கல்வி நிறுவனங்களுக்கு வழங்கப்பட்ட நன்கொடைகள் அறச்செயல்களாகக் கருதப்பட்டனவென்றும், நன்கொடையாளர்கள் மிகவும் உயர்வாக மதிக்கப்பட்டன ரென்றும் கல்வெட்டுக்கள் மூலம் தெரியவருகிறது. கி.பி. 1193ஆம் ஆண்டைச் சேர்ந்த கல்வெட்டொன்றில் வாமசகிதேவர் (Vaamasaki deva) என்னும் அரசகுருவின் வள்ளல் தன்மை பற்றிப் பின்வருமாறு புகழ்ந்து கூறப்பட்டுள்ளதே இதற்குச் சான்றாகும். அக்கல்வெட்டில் கூறப்பட்டிருப்பதாவது:[19]

> "கற்றவருக்கு மரம்போல் நின்று பாதுகாப் பளித்தவர்; பல்கலைக் கல்விகளிலும் சிறந்து விளங்கியவர்; மாணவர்க்கும் ஏழைகளுக்கும் உணவு மற்றும் மருந்துகளை வழங்குவதில் முழுமையாகத் தன்னை ஈடுபடுத்திக் கொண்டவர்; எல்லா வகை மந்திர ஆற்றல் களிலும் மேலாண்மை பெற்றவர்."

மால்காபுரம் கல்தூண் கல்வெட்டில் (Maalkaapuram Stone-Pillar Inscription கி.பி. 1261 - கி.பி. 1262) முழுமை பெற்ற அக்ரஹாரம் ஒன்றின் செயல்பாடுகள் குறித்து விரிவாக விளக்கப்பட்டுள்ளது.[20] விஸ்வேஸ்வர சிவாசாரியர் (Visveswara (படம் 24) Sivaachaarya) என்பவருக்குக் காகத்ய மன்னர் கணபதி தேவர் (Ganapadi deva) மண்டலம் என்னும் கிராமத்தையும், அவரது ராணியார் ருத்ரம்மா (Rudramma) வேலகபூடி (Velagapudi) என்னும் கிராமத்தையும் கொடையாக வழங்கினர். விஸ்வேஸ்வரர் அவ்விரு கிராமங்களையும் ஒன்றாக இணைத்து விஸ்வேஸ்வர கோலகி (Visveswara Golaki) என்று தன் பெயரில் ஒரு அக்ரஹாரமாக மாற்றினார். அந்த அக்ரஹாரத்தில் அவர், விஸ்வேஸ்வரக் கடவுளுக்கு



படம் 24
மால்காபுரம் கல்தூண் கல்வெட்டு

ஒரு கோயில், ஒரு சிவாலய மடம், பல்திறப்பட்ட மக்களுக்கும் உணவளிப்பதற்கென ஒரு சத்திரம், ஒரு மகப்பேறு இல்லத்துடன் (Maternity Home) கூடிய ஒரு பொது மருத்துவ மனை (பிரசுத்தியாரோக்யசாலா - Prasutyaarogya saala) மற்றும் சமஸ்கிருத கல்வியின் பல பிரிவுகளையும் கற்பிப்பதற்கென ஒரு கல்லூரி ஆகியவற்றை நிறுவினார். மருத்துவமனையில் ஒரு மருத்துவரும் ஒரு மருந்து கொடுப்பவரும் நியமிக்கப்பட்டிருந்தனர். மருந்துகளைப் பாதுகாப்பாகச் சேமித்து வைக்கத் தேவையான வசதிகள் செய்யப்பட்டிருந்தன. மருத்துவக் கருவிகளைத் தயாரிப்பதற்கென தேர்ச்சிபெற்ற கைத்தொழில் வல்லுநர்களும், கலைஞர்களும் நியமிக்கப் பட்டிருந்தனர். தவிர, காளீஸ்வரம் (Kaaleeswaram), மந்திர கூடம் (Mantrakoota), சந்திரவல்லி (Chandravalli), கோமூர் (Komoor), ஏலேஸ்வரம் (Eleswaram), நிவுருதி (Nivriti), உத்தர சோமசீலா (Uttara Somaseela) ஆகிய இடங்களில் கோயில்களும், மடங்களும் விஸ்வேஸ்வரர் நிறுவியதாகவும் அக்கல்வெட்டில் கூறப்பட்டுள்ளது.[21]

கல்வெட்டில் காணப்படும் பிரசுத்தியாரோக்யசாலா என்னும் தொடர் அனைவரின் கவனத்தையும் ஈர்ப்பதாக அமைந்துள்ளது. கல்வெட்டுப் பதிப்பாளர் ராமய்யா பந்துலா (Ramayya pantula) இத்தொடருக்கு மகப்பேறு இல்லமும் பொது மருத்துவமனையும் (Maternity Home and General Hospital) என்று பொருள் கூறுகிறார். பிரசுத்தி யாரோக்ய சாலா என்னும் தொடரை பிரசுத்திய சாலா, ஆரோக்ய சாலா என இரண்டு சொற்களாகப் பிரித்தால், பிரசுத்திய சாலா என்பது மகப்பேறு இல்லத்தையும், ஆரோக்ய சாலா என்பது பொது மருத்துவ மனையையும் குறிப்பதாக ஏற்றுக் கொள்ளலாம். ஆனால், பிரசுத்தியாரோக்யசாலா என்பதை ஒரு இரட்டைச் சொல்லாக (Double-word) எடுத்துக் கொள்வோமாயின் அது மகப்பேறு இல்லத்துடன் கூடிய பொது மருத்துவமனை என்று பொருள் தரும். எவ்வாறாயினும், விஸ்வேஸ்வர சிவாசாரியா நிறுவிய மருத்துவமனையானது, மகப்பேற்றுப் பிரிவு (Maternity ward), பொதுப் பிரிவு (General ward) ஆகிய பிரிவுகளைக் கொண்ட ஒரு பெரிய மருத்துவமனையாகும் என்று கொள்ளலாம்.

இவ்வாறு, அக்ரஹாரங்களில் மருத்துவமனைகளோ, அல்லது மருந்தகங்களோ இருந்ததாக வேறு எந்தக் கல்வெட்டிலும் குறிப்பிடப்படாவிடினும், மற்ற அக்ரஹாரங் களும் விஸ்வேஸ்வரர் உருவாக்கிய அக்ரஹாரத்தைப் போன்று எல்லா வசதிகளும் கொண்டவையாக இருந்திருக்கலாம் என்று ஊகிப்பதில் தவறு இருக்க முடியாது.

# பிரிவு 5

## மருத்துவக் கல்வி

ஜைனர்களும், புத்தர்களும் வருவதற்குமுன் தென்னிந்தியாவில் குரு-சிஷ்யன் (Guru-Sishya) மாதிரியிலேயே கல்வி முறை அமைந்திருந்தது. ஆசிரியருக்கும் மாணவருக்கு மிடையேயுள்ள உறவு தந்தை - மகன் போன்ற உறவு முறையில் அமைந்திருந்தது. ஆசிரியர்களின் இல்லங்களும், பண்டிதர்களின் குடியிருப்புக்களுமே கல்விக் கூடங்களாகச் செயல்பட்டு வந்தன. இலக்கியம், இலக்கணம், நன்னடத்தை அறிவுரைகள் ஆகியவை கல்வித் திட்டத்தில் முக்கிய பங்கு பெற்றிருந்தன.

பாடங்களை ஒப்பித்தலைத் தொடர்ந்து பாடங்களுக் கான விளக்கமளித்தல், தனித்தனியாகச் சிந்தித்தல், குழுக்களாக விவாதித்தல் ஆகியவையே கற்பிக்கும் வழிமுறைகளாக விளங்கி வந்தன. ஆசிரியர் கற்பிக்கும் அனைத்தும் நினைவில் கொண்டு மனனம் செய்யப்பட்டன.[1] ஆயினும், கல்வி முறையில் மருத்துவமும் பாடமாகச் சேர்க்கப்பட்டிருந்ததற்கான ஆதாரம் எதுவும் காணப்படவில்லை.

ஜைனர், புத்தர்களின் குடியேற்றத்திற்குப் பின் மடாலயங்கள் நிறுவப்பட்டு அவர்களின் மதக்கோட்பாடுகள் கற்பிக்கப்பட்டன. பின்னர், பிராமணர்களுக்கும், சத்திரியர் களுக்கும் வேதம் மற்றும் புராணங்களைக் கற்பிப்பதற்கென அக்ரஹாரங்களும், பிரம்மபுரிகளும், கடிகைகளும் நிறுவப் பட்டன. எஞ்சிய பிரிவினராக வைசியர்களும், சூத்திரர்களும் தங்கள் குடும்பங்களிலேயே குலத்தொழிலைக் கற்றுக் கொள்ள வேண்டியிருந்தது.[2] இவ்வாறு குடும்பங்களிலேயே கற்றுத் தரப்படும் தொழில் குலவிருத்தி அல்லது குலக்கலை என்றழைக்கப்பட்டது. இக்குலத்தொழிலானது தலைமுறை தலைமுறையாக நடைமுறைப்படுத்தப்பட்டு வந்தது. மருத்துவத் தொழிலும் இது போன்றே குலத்தொழிலாகக் கருதப் பட்டமையால் வேதபாடங்களைப் போன்று ஆசிரியர்களால் கற்பிக்கப்படவில்லை.[3]

கேரளாவில் ஒவ்வொரு கிராமத்திலும் பையல் (Pyal) என்றழைக்கப்படும் பள்ளி இருந்தது. இதில் எளிமையான பாடங்கள் ஆசிரியர் ஒருவரால் மலையாள மொழியில் சிறுவர்களுக்கும் சிறுமிகளுக்கும் கற்பிக்கப்பட்டன. பையல் என்பது வீட்டின் முன்பகுதியில் தாழ்வாரம் போன்று உயர்த்திக்

கட்டப்பட்ட திண்ணையாகும். எனவே இந்தப் பையல் பள்ளியைத் **திண்ணைப் பள்ளி** அல்லது **திண்ணைப் பள்ளிக்கூடம்** என்றும் அழைப்பதுண்டு. பிற பாடங்களுடன் மருத்துவம் பற்றிய சூத்திரங்களும் (Verses) இங்கு கற்றுத் தரப்பட்டன. ஆசிரியருக்கான ஊதியம் பெரும்பாலும் பொருட்களாகவே தரப்பட்டன. பணமாகக் கொடுப்பது மிக அரிதாகவே இருந்தது.[4]

### பாரம்பரிய மருத்துவக் கல்விமுறை

கேரளாவில் குரு-சிஷ்யன் அல்லது தந்தை-மகன் முறையில் மருத்துவத்தைக் கற்பிக்கும் முறை பற்றி ஆனந்தா வுட் (Ananda Wood) விரிவான விளக்கமளித்துள்ளார்.[5] வழக்கமான முறையில் சமஸ்கிருத மொழியையும் சமஸ்கிருத சுலோகங் களையும் சில ஆண்டுகள் கற்றபின் மருத்துவ மாணவன் மருத்துவ ஏடுகளைப் பாராயணம் செய்தும், விவாதம் செய்தும் மருத்துவத் தத்துவங்களை முனைந்து படிப்பதில் பல ஆண்டுகள் கழிக்கின்றான். பின்னர், மருத்துவத் தொழில் புரியும் ஒரு மருத்துவரிடம் பயிற்சியாளனாகச் சேர்ந்து பல ஆண்டுகள் பயின்று மருத்துவத்தைக் கற்றுக் கொள்கின்றான். பயிற்சியின் போது, நோயாளியைப் பார்வையிட மருத்துவருடன் தானும் உடன்சென்று நோய் அறுதியிடல் (Diagnose) மற்றும் நோய்க்கான சிகிச்சை முறை ஆகியவற்றின் நுட்பங்களைக் கற்றுக் கொள்கின்றான். இவ்வாறு மரபு வழி மருத்துவத்தைப் பயிலும் மாணவன் தனது சொந்தத் திறனையே சார்ந்திருக்க வேண்டியிருந்தது. இவ்வாறு அறுவை சிகிச்சை மற்றும் பரிசோதனைக் கூடப் பயிற்சிகள் எதுவுமின்றி மரபுவழி மருத்துவமானது உடலமைப்புச் சமநிலைக் கொள்கைகளை வளர்த்து வந்தது. கர்நாடகாவில் ஜைன, புத்த மடாலயங்களும், கிராமப் பள்ளிக் கூடங்களும் தொடக்க நிலைக் கல்வி மையங்களாக இயங்கி வந்தன. அக்ரஹாரங்கள், பிரம்மபுரிகள், கடிகைகள் ஆகியவை உயர்நிலைக் கல்வி மையங்களாகத் திகழ்ந்தன. கடிகைகளில் சமயக் கல்வியுடன் சமயச் சார்பற்ற கல்விப் பாடங்களும் கற்பிக்கப்பட்டன.[6]

தென்னிந்தியா முழுவதிலும் கோயில்கள் இலக்கிய இயக்கத் தலங்களாக விளங்கி வந்தன. தத்துவம், இலக்கணம், அணியிலக்கணம் மற்றும் சமயப் பாசுரங்கள், பல்வேறு அறிவியல் பாடங்கள் ஆகியவை கற்பிக்கப்பட்டன.

கேரளா நீங்கலான தென்னகத்தில் மடங்கள் நிறுவும் பணி கி.பி. பத்தாம் நூற்றாண்டில்தான் வேகமாக நடைபெற்றது. அதன்பின்னர், அந்த மடங்கள் யாவும் ஒன்றன் பின் ஒன்றாக இந்துக் கோயில்களுடன் இணைக்கப்பட்டன.[7]

கேரளாவில் பள்ளிகள், கல்லூரிகள், நூலகங்கள் ஆகியவை ஜைன மற்றும் புத்த வழிபாட்டுத் தலங்களின் இணைப்புக்களாக இயங்கிவந்தன. கி.பி. எட்டாம் நூற்றண்டிற்குப் பின்னர், புத்தமும் ஜைனமும் மறையத் தொடங்கியதும் இவ்வழிபாட்டுத் தலங்கள் யாவும் இந்துக் கோயில்களுடன் இணைக்கப்பட்டன. ஆனால், கல்வி மற்றும் கலாச்சார நிறுவனங்கள் எவ்வித இடையூறுமின்றி தொடர்ந்து இயங்கி வந்தன.[8] பெரிய கோயில்களுடன் இணைக்கப்பட்ட பள்ளிகள், கல்லூரிகள் ஆகியவை சாலைகள் என்றழைக்கப் பட்டன. இச்சாலைகள் மக்களின் கலாச்சார வாழ்க்கையில் பெரும்பங்காற்றி வந்தன. இந்த சாலைகளுள், கன்னியா குமரியிலுள்ள **ஸ்ரீவல்லபப் பெருஞ்சாலை** (Sri Vallabha Perunchaalai), **பார்த்திவ சேகரபுரச் சாலை** (Paarthiva Sekarapura Chaalai) மற்றும் **காந்தளூர்ச் சாலை** (Kaanthalur Chaalai) ஆகியவை குறிப்பிடத்தக்க முக்கியத்துவம் வாய்ந்தவையாகும்.[9] மிகுந்த ஒழுங்குமுறைகளுடனும் கண்டிப்பான கட்டுப்பாடு களுடனும் இயங்கி வந்ததன் காரணமாக காந்தளூர்ச் சாலையைத் **தென்னகத்தின் நாளந்தா** (Naalanda of the South) என்று கவிமணி தேசிகவிநாயகம்பிள்ளை (Kavimony Desika Vinaayagam pillai) குறிப்பிட்டுள்ளார்.[10]

பின்னர் தொடங்கப்பட்ட **திருவள்ளா சாலை** (Thiruvalla saalai) மற்றும் **முழிகுளம் சாலை** (Muzhikulam saalai) ஆகியவை நூற்றுக்கணக்கான மாணவர்களுக்கு இலவச உணவு, தங்கும் விடுதி ஆகிய வசதிகளுடன் பலவிதமான தனிச்சிறப்புப் பயிற்சிகளையும் (Special courses) இலவசமாகக் கற்பித்தன. ஆயினும் மருத்துவத் துறைக் கல்வி பற்றிய குறிப்பு எங்கேயும் காணப்படவில்லையென்று கேரள மாநில கருப்பொருட் களஞ்சியம் (Kerala State Gazatteer) குறிப்பிட்டுள்ளது.[11]

### எழுத்துப் பள்ளி (கிராமப் பள்ளிக்கூடம்)

கி.பி. பதினொன்றாம் நூற்றாண்டில் நிகழ்ந்த சேர சோழப் போரின் விளைவாக இந்தச் சாலைகள் யாவும் மறைந்து, **சபா மடங்கள்** (Sabha Mutts) என்ற அமைப்பில் மற்றொரு வகையான தொடர் கல்வி நிறுவனங்கள் ஏற்படலாயிற்று. இச்சபா மடங்கள் யாவும் நம்பூதிரி இளைஞர்களுக்கு மட்டும் வேதம் மற்றும் சாத்திரங்களைக் கற்பிக்க முனைந்தன. எனவே,

அவற்றிற்கு இணையாக பிராமணரல்லாத இளைஞர்களுக்கென **எழுத்துப் பள்ளி** என்றழைக்கப்பட்ட கிராமப் பள்ளிக்கூடங்கள் தோன்றலாயின.[12] ஒவ்வொரு கிராமத்திலும் **எழுத்தச்சன்** அல்லது **ஆசான்** என்றழைக்கப்பட்ட ஆசிரியரின் கீழ் அந்த ஆசிரியரின் இல்லத்தில் அல்லது அக்கிராமத்திலுள்ள முக்கியமான மனிதரின் வீட்டில் அந்த எழுத்துப் பள்ளி இயங்கியது. தொடக்க நிலைக் கல்வியில் வாசித்தல், எழுதுதல், கணிதம் ஆகியவை கற்பிக்கப்பட்டன. மேல்நிலைக் கல்வியில் ஆண், பெண் ஆகிய இருபாலருக்கும் **காவியங்கள்** (Kaavyaas) **அலங்காரங்கள்** (Alankaaraas), நாடகங்கள் (Dramas), தருக்கம் (Logic) மற்றும் **இலக்கணம்** (Grammar) ஆகியவற்றுடன் விரிவான அளவில் **ஆயுர்வேதமும்** (Aayurveda) கற்பிக்கப்பட்டன.[13]

தன்னுடைய சேவைக்காக ஆசான் பணம் எதுவும் வாங்குவது இல்லை; ஆனால் மாணவர்களே தங்களுடைய ஆசானுக்கு ஏதேனும் பொருட்களைத் தட்சணையாக வழங்குவார்கள். மாணவர்களிடமும் அவர்களின் பெற்றோர் களிடமும் ஆசானுக்கு அளவு கடந்த செல்வாக்கு உண்டு. அதன் காரணமாக, கிராமத்தின் சமூக வாழ்க்கையில் ஆசான் ஒரு முக்கிய பிரமுகராகக் கருதப்பட்டார். கி.பி. பத்தொன்பதாம் நூற்றாண்டில் ஆங்கில முறைக் கல்வி பரவும் வரை இந்த கிராமக் கல்விமுறை நீடித்திருந்தது.[14]

தென்னகத்தில் மிகப்பெரிய கல்விமையம் இருந்ததற்கான மிகத் தொன்மையானதும் மிகவும் குறிப்பிடத்தக்கதுமான ஆதாரம் ஆந்திர தேசத்தில் நாகார்ஜுனகோண்டா அகழ்வாய்வின் போது கிடைத்தது தான் (ஏற்கெனவே கூறப்பட்டுள்ளது). அகழ்வாய்வு செய்யப்பட்ட பகுதியில் புகழ் பெற்ற பல்கலைக் கழகம் ஒன்று இருந்தது கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. **சுசுருத ஸம்ஹிதாவைப்** புதுப்பித்த நாகார்ஜுனா (Naagaarjuna) கி.பி. ஒன்று/இரண்டாம் நூற்றாண்டில் இப்பல்கலைக்கழகத்தில் மருத்துவ ஆசிரியராகப் பணியாற்றி உள்ளார். இந்தியாவின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் வெளிநாடு களிலிருந்தும் இங்கு கல்வி கற்பதற்காக மாணவர்கள் திரளாக வந்துள்ளனர் என்றும் தெரியவருகிறது.[15]

கி.பி. 12 மற்றும் 13ஆம் நூற்றாண்டுகளில் கர்நாடகாவில் **பைத்தான்** (Paithaan), நாசிக் (Naasik), வகாளி (Vaghaali), தானா (Thaanaa) மற்றும் **சல்டோகி** (Saltogi) ஆகிய புறநகர்ப் பகுதி களிலும், **கல்யாண்** (Kalyaan), மான்யகேதா (Maanyaketha) மற்றும் தேவகிரி (Devagiri) ஆகிய பெருநகர்ப் பகுதிகளிலும் புகழ்பெற்ற கல்வி மையங்கள் பல இயங்கி வந்துள்ளன. ஆனால், இவற்றில்

மருத்துவமும் ஒரு பாடமாகக் கற்பிக்கப்பட்டது என்பதற்கான ஆதாரம் ஒன்றுகூட இல்லையென்று ஓங்கார பிரசாத் வர்மா (Onkara Prasad Varma) கூறுகிறார்.[16]

பெரும்பாலான கல்வி மையங்களில் மருத்துவமும் ஒரு பாடமாகக் கற்பிக்கப்பட்டதற்கான ஆதாரம் எதுவும் இல்லை என்ற போதிலும் தமிழ்நாட்டிலும் ஆந்திர தேசத்திலும் சில கல்வி மையங்களில் மருத்துவம் கற்பிக்கப்பட்டதற்கான சில ஆதாரங்கள் கிடைத்துள்ளன.

தமிழ்நாட்டில் வாக்பட்டரின் அஷ்டாங்க ஹிருதயமும், சரகஸம்ஹிதாவும் பாடங்களாகக் கற்பிக்கப்பட்ட மருத்துவப் பள்ளியொன்று இருந்துள்ளதென்று கி.பி. 1121ஐச் சேர்ந்த விக்கிரம சோழனின் கல்வெட்டு குறிப்பிடுகிறது.[17]

ஆந்திர சேதத்தில் கி.பி.13ஆம் நூற்றாண்டில் விஸ்வேஸ்வர சிவாச்சாரியாரால் நிறுவப்பட்ட அக்ரஹாரத்தில் மருத்துவக் கல்விக்கான வசதியும் அக்ரஹாரத்துடன் இணைக்கப்பட்டிருந்த மருத்துவமனையில் மருத்துவ மாணவர்களின் செய்முறைப் பயிற்சிக்கான வசதியும் செய்யப்பட்டிருந்தன என்பது ஏற்கெனவே இந்நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது.[18] ஆசிரியர் களையும் மாணவர்கட்கு ஆயுர்வேதத்தில் பயிற்சியளித்த மருத்துவரையும் பராமரிக்க வசதிகள் செய்யப்பட்டிருந்ததென்று பித்தாபுரம் செப்பேடுகள்[19] (Pitthaapuram plates) தெரிவிக்கின்றன.

கி.பி. 14ஆம் நூற்றாண்டில் ஆந்திரதேசத்தில் விலாசா (Vilasa) என்னுமிடத்திலுள்ள அக்ரஹாரத்தில் ஆயுர்வேதமும் ஒரு பாடமாகக் கற்பிக்கப்பட்டுள்ளது.[20]

கி.பி. 14ஆம் நூற்றாண்டில் இந்து மன்னர்களின் ஆட்சியின் கீழ் ஆந்திரதேசத்தில் மடங்களும் அக்ரஹாரங்களும் பெரும்புகழுடன் இயங்கி வந்தன. ஆனால் முகம்மதியர்களின் படையெடுப்பின்போதும் முகமது பின் துக்ளக்கின் ஆட்சியின் போதும் அவற்றின் இயக்கத்திற்குப் பெரும் பின்னடைவு ஏற்பட்டது.[21]

## மருத்துவக் கல்வியும் இளவரசர்களும்

தென்னிந்தியாவில் இடைக்கால மன்னர்கள் நஞ்சூட்டிக் கொல்லும் வஞ்சக அபாயங்களினின்றும் தங்களைக் காத்துக் கொள்வதற்கென்று தனக்னெத் தனி மருத்துவர்களை நியமித்துக் கொள்ளும் அவசியம் தவிர்க்க முடியாததாயிருந்தது. இதன் காரணமாக, தங்களுடைய உடல்நலத்தைப் பாதுகாத்துக் கொள்ளவும், நஞ்சூட்டு அபாயங்களிலிருந்து தங்களைத் தாங்களே காப்பாற்றிக் கொள்ளவும் மருத்துவ அறிவினைப் பெற வேண்டிய அவசியம் நேரிட்டது.

கர்நாடக மன்னர்களும் இளவரசர்களும் பிற கல்விகளுடன் மருத்துவக் கல்வியிலும் மிகுந்த தேர்ச்சி பெற்றிருந்தார்கள் என்பதற்கான சான்றுகள் பல காணப்பட்டுள்ளன.

நீதிமார்க்க மன்னரின் மூத்தமகன் நரசிம்மதேவன்,[22] இளவரசர் சத்யவாக்கிய **நொலம்ப தேவன்**[23] மற்றும் இளவரசர் **மூன்றாம் ராசமல்லன்**[24] ஆகியோர் தாங்கள் கற்கும் வழக்கமான பாடங்களுடன் மருத்துவத்தையும் ஒரு பாடமாகக் கற்றுள்ளனர்.

கர்நாடக மன்னர்கள் மருத்துவத்தை மதித்தார்கள். எனவே மருத்துவர்களுக்கு மரியாதையளித்தார்கள். உதாரணமாக, ஹொய்சல மன்னர் நரசிம்ம தேவரின் (Narasimha Deva) மந்திரியான பீமய்யா தன்னாயகா (Bimaya Dannaayaka)வின் தாயாருக்கு மருத்துவராகப் பணியாற்றிய **தேவப்பிள்ளையண்ணா** (Devapillayanna) சிதைந்துகிடந்த சென்னகேசவ ஆலயத்தைப் புதுப்பிக்குமாறு மன்னரிடம் (கி.பி. 1286இல்) வேண்டியபோது அவரது வேண்டுதல் மரியாதையுடன் ஏற்றுக் கொள்ளப்பட்டு, ஆலயத்தைப் புதுப்பிக்கும் வேலையும் அவர் மூலமாகவே நிறைவேற்றப்பட்டது.[25] இதிலிருந்து மருத்துவரிடம் மன்னர் கொண்டிருந்த மதிப்பும் மரியாதையும் தெரியவருகிறது.

மேற்கூறப்பட்ட விவரங்களிலிருந்து, இடைக்காலத் தென்னிந்திய மன்னர்கள் மருத்துவத் தொழிலை எவ்வாறு மதித்தனர் என்றும், மருத்துவர்களை தங்களின் தனி மருத்துவர்களாக நியமித்து எவ்வாறு கௌரவித்துள்ளனர் என்றும் தெரிந்து கொள்ளலாம்.

தென்னிந்திய மக்கள் தங்கள் உடல்நல மேம்பாட்டிற்காகக் கடவுள் மீது அபரிமிதமான நம்பிக்கை கொண்டிருந்தனர். கேரளாவில் சில குறிப்பிட்ட கோயில்கள் சில குறிப்பிட்ட நோய்களைக் குணமாக்கக் கூடிய அபூர்வ சக்தியைப் பெற்றிருப்பதாக நம்பப்படுவதுடன் அந்த நம்பிக்கை உண்மையென்றும் சில சான்றுகள் நிரூபித்துக் காட்டியுள்ளன. இத்தகைய நம்பிக்கை நிவாணரங்கள் தென்னிந்திய மக்களிடையே இன்றும் நடைமுறையில் காணப்பட்டு வருகின்றன. இந்த நம்பிக்கை நிவாரணங்களின் பின்னணியில் புதைந்துள்ள அறிவியல் உண்மைகளை ஆழ்ந்த ஆய்வுகளின் மூலம் வெளிக் கொணர வேண்டும்.

# அடிக்குறிப்புகள்.....

## பிரிவு – 1

## தென்னிந்திய மருத்துவத்தின் தொடக்ககால வளர்ச்சி

1. K.R. Sri Kantha Murthy, 'Treatises in Kannada Dealing with Medicine and Allied Science', **RSCW - HMI - R.**
2. B. Rama Rao, 'Ayurvedic Literature in Telugu', **BIIHM,** Vol. IV, p. 81.
3. N.V.K. Warrier, 'Ayurveda in Kerala', **IHC Souvenir,** p. 64, Calicut University, 1976.
4. B. Rama Rao, 'Contribution of Andhra to Ayurveda in Sanskrit', (RP) **BIIHM,** Vol. VIII, Nos. 1-4, 1978, p. 8.
5. N.V.K. Warrier, **Op.cit.,** p. 64.
6. **Ibid.**
7. K.R. Srikanta Murthy, **Op.Cit,** p. 60.
8. Veturi Sankara Sastri, 'Medical Treatises Printed or Manuscripts in Telugu, their Names, Authors, Dates of Composition and their significance to the History of Medicine in Andhra Desa, **RSCW HMI-R,** p. 70.
9. Ananda wood, **Knowledge - Before Printing and After the Indian Tradition Changing Kerala,** p. 107.
10. **Ibid.,** p. 111.
11. **Ibid.,**
12. B. Rama Rao, 'Ayurvedic Literature in Telugu' **BIIHM,** vol. IV, pp. 77-80.
13. T. Kodanda Ramaiah, 'Some Medical References in the works of Palkuriki Somana', **RSW- HMI-R,** p. 101.
14. **Ibid.,** p. 102.
15. **Ibid.,** p. 103.
16. Onkar Prasad Varma, the **Yadava and their times,** p. 314.
17. R.L. Verma and N.H. Keswani, 'Unani Medicine in Medieval India'. The Science of Medicine and Physiological Concepts in Ancient and Medieval India (Ed.) N.H. Keswani, p. 131.
18. N.S. Mooss (Ed.,) The All India Ayurvedic Directory, p. 58.
19. **Kerala State Gazetteer,** p. 240 fn.
20. T. Kodanda Ramaiah, **Op.Cit, RSCW - HMI-R,** p. 100.
21. N.V.K. Warier, 'Ayurveda in Kerala', **IHC Souvenir,** p. 65.

22. K.P. Padmanabha Menon, **History of Kerala Notes on Visshar's Letters from Malabar,** p. 139.
23. **Ibid.,** p. 141.
24. **Ibid.**
25. **Ibid.,** p. 123.
26. **Ibid.**
27. **Kerala State Gazetteer,** p. 295
28. K.P. Padmanabha Menon, **Op.Cit,** p. 131.
29. **Ibid.**
30. **Ibid.,** p. 132.
31. **Kerala State Gazatteer,** pp. 239-240.
32. T. Kodanadaramaiah, **Op.Cit., RSW HMI,** p. 105.
33. B. Rama Rao, 'Ayurvedic Literature in Telugu', **BIIHM,** Vol. IV, pp. 78-79.
34. D.V.S. Reddy & B. Rama Rao, 'A Rare Sanskrit Medical Manuscripts of Early Period of Vijayanagar Kingdom', **(RP) BIIHM,** Vol II, No.2, April 1972, pp. 61-64.
35. B. Rama Rao, 'References to Ayurveda in the comentaries of Mallinatha (RP) **BIIHM,** Vol. IX, 1979, p. 15.
36. **Ibid.**
37. Moos., N.S. **Op.Cit.,** p. 57.
38. P.P. Narayana Nambudri, "Aryans in South India, w.s.r. to the Nammbudris of Kerala', Ph.D., Thesis, p. 304.
39. ....... **BITC,** Pt. II, Vol. MMLXV, 1965, p. 413.
40. **Ibid.**
41. **Ibid.**
42. **Malabar Quaterly Review.**
43. P.P. Narayanan Nambudri, **Op.Cit.,** p. 304.
44. **Ibid.,** T. Kodanda Ramaiah, **Op.Cit., RSCW - HMI-R,** p. 104.
45. T. Kodanda Ramaiah, **ibid.,**
46. **BITC** Pt. II, Vol. MCMLXL, 1965, p. 43.
47. N.V.K. Warrier, **Op.Cit., IHC, Souvenir,** p. 6.
48. A. Sreedhra Menon, **Cultural Heritage of Kerala,** p. 37.
49. K. Mahadeva Sastri (Ed.) **A descriptive Catalogue of Sanskrit Manuscripts in the Curators office Library - Trivandrum, Introduction.** p. vi.
50. **Ibid.**

## பிரிவு - 2
## பண்டைய தென்னிந்திய மருத்துவமனைகள்


1. R. Subramaniyam, **'History of Indian Medicine'**, p. 113.
2. **Ibid.,**
3. Leelananda Prematilake & Arjuna Alurvihare: 'Ancient Hospital Systems of Sri Lanka', **Sri Nagabhinandanam felicitation**, vol. pp. 768-771.
4. **Ibid.**
5. **Museum Guide,** pt. II, p. 31.
6. A. Sreedhara Menon, **Social and Cultural History of Kerala,** p. 281.
7. **T.A.S.,** Vol II, pt. III, The Hosur Office Plates, Section 13, p. 149.
8. A. Sreedhara Menon, **Cultural Heritage of Kerala,** p. 205.
9. P. Hymavathi, 'Temple and Mathas as Medical Service Centres in Medieval Andhra', **APHC-P XIII** Session Srisailam 1978, p. 119.
10. **Ibid.,**
11. **Ibid.,** p. 119.
12. **Ibid.,**
13. I. Sanjiva Rao, 'Rasa Siddhas of Alampur', **BIIHM,** Vol. XIII, pp. 39-40.
14. P. Hymavathi, **Op.Cit.**
15. Rebber Farooque, 'Medicine in the Decan', **BIIHM.,** Vol XVI, Nos. 1 & 2, 1986, p. 39.
16. Lourder Bravo Da costa, 'Medical Conditions in Goa of 16th and 17th centuries: A Study of Foreign Travelogues, **BIIHM,** Vol. XVII, No. 1, Jan 1987, p. 59.
17. **Ibid.**
18. **Ibid.,** pp. 63-66.
19. **Museum Guide,** pt. II, p. 54.
20. **Ibid.**
21. Rehber Farooque, 'Medicine in the Decan', **BIIHM,** Vol. XVI, Nos. 1 & 2, 1986, p. 43.

## பிரிவு - 3

## பண்டைய தென்னிந்திய மருத்துவர்கள்

1. **Museum Guide**, p. 31.
2. **Ibid.**
3. **Ibid.**
4. **Ibid.**
5. D.V.S. Reddy, 'Medical Relief in Medieval South India', **BHM**, Vol. 9, 1941, p. 386.
6. P. Hymavathy, **'Scientists of Andhra Desa'**, pp. 25-26.
7. **BIHM**, Vol. VIII, 1978, p. 8.
8. **BDHM.**, Vol II, No. 4, 1964, pp. 203, 210.
9. D.V.S. Reddy, 'Medical Relief in Medieval South India', **BHM**, Vol. 9, 1941, p. 387.
10. **Indian Archeaology - A Review**, 1978-79, No. 6, pp. 77-78; Jawaharlal, 'Aggalayya ; The Great Royal Physician of 11th C. A.D. **APHC-P**, Vol XVI, Karim nagar, 1972, pp. 58-60.
11. P.V. Parabramha Sastri, 'Epigraphical Allusion to Surgery in Ayurveda', **BIHM**, Vol. VII, Nos. 3 & 4, pp. 127-128.
12. **SII**, Vol VI, Nos. 127, 156.
13. B. Rama Rao, 'A Note on Vithal Galand and His works including one unknown work called Vaidya Vallabha Sàmhita', **BIIHM**, Vol. III, No. 1, 1973, pp. 1-2.
14. **E.A.** Vol. II, pp. 73-87.
15. **Museum Guide**, Pt. II, pp. 39-40; B. RamaRao, 'Contribution of Andhra to Ayurveda in Sanskrit', (RP) **BIIHM**, Vol. III, Nos. 1-4, 1978, p. 10.
16. **A Corpus of Telengana Inscriptions**, pt. IV, pp. 104-109.
17. B. Rama Rao, 'Contribution of Andhra to Ayurveda in Sanskrit, (RP), **BIIHM**, Vol. III, Nos. 1-4, 1978, p. 10.
18. **A Corpus of Teengana Inscriptions**, Pt IV, 1973, Inscription No. 54.
19. **The All-India Ayurvedic Directory**, Pt, II, p. 57.
20. According to legend, Kerala was a gift of the Arabian Sea to Parasurama, one of the 10 Avatars of Lord Vishnu, The Legend says that Parasurama threw his 'Parasu' (axe) across the sea from Gokarnam towards Kanniyakumari when the seawater recoded upto the spot where the parasu fell, and the tract of the territory so thrown up constituted the land of Kerala.

A Sreedharamenon, **A Survey of Kerala History**', p. 11; Ananda wood, **Op.cit**, p. 108.

21. Ananda wood, **Op.cit**, p. 108.
22. N.V.K. Warrier, **Op.cit**, p. 66.
23. **The All India Ayurvedic Directory**, Pt. II, p. 72.
24. N.V.K. Warrier, **Op.cit**, p. 66.
25. **Ibid.**,
26. P.P. Narayanan Nambudiri, **Op.cit**, Thesis, p. 299.
27. K.R. Srikanta Murthy, 'Treatises in Kannada Dealing with Medicine and Allied Sciences', **RSW-H, MIR**, pp.60-61.
28. **Ibid.**, p. 61.
29. **Ibid.**,
30. **Ibid.**, p. 62.
31. **Ibid.**, p. 63.
32. **Museum Guide**, Pt II, p. 66.
33. Lourdes Bravo Da Osta, **Op.cit**, **BIIHM**, Vol. XVII, Jan 1987, p. 61.
34. Henry R. Zimmer, **Hindu Medicine**, p. 85.
35. **Ibid.**,
36. **Ibid.**, p. 60.
37. P. Hymavati, **Op.cit.**, p. 62.
38. K.V. Srinivasamurthy & R. Ramakrishnan, **A History of Karnataka**, p. 269.
39. N.V.K. Warrier, **Op.cit.**, p. 64.
40. D.V.S. Reddy, 'Medical Relief in Medieval South India Centres of Medical Aid and Types of Medical Institutions, Based on Epigraphical Evidences', **BHM**, Vol. 9, 1941, pp. 385-400.
41. P. Hymavati, **Op.cit**, p. 4.
42. **Ibid.**,
43. **E.I.** XXXV, Penugonda Copper Plates, pp. 145-150.
44. N. Ramesan, **Studies in medieval Decan History based on two unpublished copper plates, Inscripions of the state Museum**, Hyderabad, Vol. III, p. 119.
45. **Karnataka Inscriptions**, Vol. III, Pt. I, No. 45\1940-41.
46. **E.A.** Vol. II, pp. 73-78.
47. D.V.S. Reddy, 'Parahita Samhita', **BIIHM**, Vol. II, No.4, October, 1972, p. 204.
48. **E.I.** VIII, pp. 307-317.

49. Rehber Farooque, 'Medicine in Decan', **BIIHM,** Vol XVI, Nos. 1 & 2, 1986, p. 39.

50. **Ibid.**, p. 43.

## பிரிவு – 4

## கல்வி நிறுவனங்களும் மருத்துவ வளர்ச்சியும்

1. P. Veerappan, 'The Educational system of Ancient Tamilnadu and Karnataka - A comparative study', **Heritage of the Tamils, Education and Vocation**, (Eds.) S.V. Subramanian & V.R. Madhavan.
2. **Ibid.**
3. Y. Kumarasamy, 'Educational Institutions during the Chalukyan Times', **Heritage of the Tamils, Education and Vocation,** p. 6.
4. K.V. Eapel, **A study of Kerala History,** p. 71.
5. **Ibid.**
6. A. Sreedhara Menon, **Cultural Heritage of Kerala,** p. 11.
7. **Ibid.**, p. 12.
8. Radha Govinda Basak, (Ed.), **Asokan Inscriptions,** pp. 7-8.
9. **Karnataka District Gazateer,** p. 34.
10. D.V.S. Reddy, 'Medical Relief in Medieval South India', **BHM,** Vol. 9, 1941, pp. 395-396.
11. **Kerala State Gazetteer,** Vol, II, p. 249.
12. **Ibid.,**
13. **Ibid.,**
14. D.V.S. Reddy, **Op.cit,** p. 39.
15. **SII,** Vol. XX, No. 23.
16. **E.I.** Vol. XII, p. 290.
17. D.V.S. Reddy, **Op.Cit.,** p. 396.
18. **APHC-P, XIII,** Session, **Op.cit.,** p 117.
19. D.V.S. Reddy, **Op.cit.,** p. 396.
20. **SII,** Vol. X, No. 395.
21. **IAP,** No. 183, p. 245.

## பிரிவு - 5
## மருத்துவக் கல்வி

1. K.R. Hanumanthan, 'The Role of Buddhism and Jain Schools in Tamil Educational System', **Heritage of the Tamils, Education and Vocation,** p. 55.
2. Y. Kumarasamy 'Educational Institutions During the Eastern Chalukya TImes', **Heritage of the Tamils Education & Vocation,** pp. 6-7.
3. **Ibid.**
4. **Kanniyakumari District Gazatteer,** Ch. 15, pp. 839-841.
5. Ananda Wood, **Op.cit.,** p. 21.
6. H.V. Sreenivasa Murthy & R. Ramakrishnan, **A History of Karnataka,** p. 61.
7. T.S. Veliah, 'Education and Vocation as revealed in Periyapuranam', **Heritage of the Tamils Education and Vocation,** p. 192.
8. A Sreedhara Menon, **Social and Cultrual History of Kerala,** pp. 281-296.
9. **Kerala State Gazetteer,** Vol. II, p. 161.
10. A. Sreedara Menon, **Op.cit,** p. 283.
11. **Ibid.,**
12. **Ibid.,** p. 287.
13. **Ibid.,**
14. **Ibid.,** p. 288.
15. **Museum Guide,** p. 31.
16. Onkar Prasad Varma, **The Yadavas and their times,** p. 257.
17. For details refer, Ch. IV of this work.
18. Malkapuram Inscriptions, **ARE** 94/1917, SII Vol. X, No. 395.
19. E.I. Vol, XXIII, The Pitthapuram Plates of Viraoda Deva: **SITI,** Pt. II, p. 204.
20. R.S. Soma Reddy, '**Hindu and Muslim Religious Institutions,** Andhra (1300-1600 A.D.) p. 15.
21. **Ibid.,** p. 192.
22. M.A. Krishna Rao, **Gangas of Talakad,** p. 251.
23. **Quarterly Journal of the Mythic Society,** Vol XIV, p. 12.
24. **Mysore Archaeological Report,** 1921, p. 197.
25. .......... A Note on Jakkanacharya, **Karnataka Historical Review,** (Ed.,) A. Padmanabhan, p. 39.



## அத்தியாயம் – 4

# தமிழ்நாட்டு மருத்துவம்

தமிழ்நாடு நீங்கலாக உலகின் மற்றைய பகுதிகளில் மருத்துவத்தின் வரலாறு மற்றும் வளர்ச்சி பற்றி இதுவரை முந்திய அத்தியாயங்களில் விவாதிக்கப்பட்டது. தமிழ்நாட்டில் பல நூற்றாண்டுகளாக நிலவி வந்த மருத்துவத்தின் தன்மை பற்றியும் அதன் வளர்ச்சி பற்றியும் இலக்கியம், கல்வெட்டு மற்றும் சிற்பங்கள் ஆகியவற்றை ஆதாரமாகக் கொண்டு மிகவும் விரிவாக இவ்வத்தியாயத்தில் விவரிக்கப்பட்டுள்ளது.

தமிழகத்தில் முற்காலப் பகுதியைப் பொறுத்தவரை, அக்கால மக்களின் சமூக, பொருளாதார, கலாச்சார, அரசியல் நிலைமைகளைக் கண்ணாடி போல் காட்டுகின்ற ஏராளமான குறிப்புகளைத் தாங்கி நிற்கும் இலக்கியங்களை மட்டுமே ஆதாரமாகச் சார்ந்திருக்க வேண்டியுள்ளது. இத்தகைய ஆதாரங்களுள், அன்றைய மக்களின் மருத்துவ அறிவு மற்றும் நோய்களைக் குணப்படுத்த அவர்கள் மேற்கொண்ட சிகிச்சை முறைகள் பற்றிய குறிப்புக்களும் அடங்கும். ஆனால், இடைக் காலத்தைப் பொறுத்தவரை, இலக்கியங்களுடன் கல்வெட்டுக் களும் மருத்துவ வளர்ச்சியின் தன்மை பற்றி விளக்கும் சான்றுகளாக விளங்குகின்றன.

தமிழ்நாட்டு மருத்துவ வரலாற்றினை ஆழ்ந்து ஆய்வு செய்யும் மூலமாக இவ்வதிகாரம் தொடக்க நிலை மருத்துவம், சத்துணவும் உடல்நலப் பராமரிப்பும், நோய்கள், மருந்து, மருத்துவச் சிகிச்சை, அறுவை மருத்துவம், மருத்துவமனைகள், மருத்துவக் கல்வி, மருத்துவர்களின் தகுதி நிலை மற்றும் மருத்துவத் தெய்வங்கள் என, பத்துப் பிரிவுகளாகப் பிரிக்கப் பட்டுள்ளது. இப்பிரிவுகள் ஒவ்வொன்றும் தொடக்க காலம் முதல் கி.பி. 16ஆம் நூற்றாண்டு வரையிலான மருத்துவ வளர்ச்சியின் ஒரு குறிப்பிட்ட பண்பினைப் பற்றி விவரிப்பதாக அமைந்துள்ளது.

# பிரிவு 1

## தமிழ் மருத்துவம்
## (தொடக்க நிலை மருத்துவம்)

இந்த அத்தியாயத்தின் தொடக்கப் பிரிவில் தமிழ்நாட்டில் ஆதிகாலத்தில் நிலவி வந்த மருத்துவம் பற்றி ஒரு பகுப்பாய்வு செய்யப்பட்டுள்ளது. தமிழ் சித்த மருத்துவ முறையினைத் தோற்றுவித்தவர் அகத்தியர் என்பது யாவரும் ஏற்றுக் கொண்ட கருத்தாகயிருந்த போதிலும் அவர் வாழ்ந்த காலம் பற்றி முரண்பட்ட கருத்துக்கள் கூறப்படுகின்றன. இத்தகைய மாறு பட்ட கருத்துக்கள் இப்பிரிவின் கீழ் விரிவாக ஆய்வு செய்யப் பட்டுள்ளன.

### 1. சித்த மருத்துவத்தைத் தோற்றிவித்தவர் – அகத்தியர்

அகத்தியரின் காலம் பற்றிப் பலதிறப்பட்ட யூகங்கள் நிலவுகின்றன. **அகத்தியர்** (படம் 25அ) இமயமலைகளுக்கும் விந்திய மலைகளுக்கும் இடைப்பட்ட பகுதியில் அமைந்துள்ள **ஆரிய வர்த்தா** (Aariyavarta)வைப் பூர்வீக மாகக் கொண்டவரென்றும் பாண்டிய அரசினைத் தோற்றுவித்த குலசேகரப் பாண்டியனின் ஆதரவின் கீழ் தென்னிந்தியாவில் குடியேறியவ ரென்றும் **சைமன் காசிசிட்டி** (Simon Casie Chitty)[1] என்பவர் எழுதிய "The Tamil Plutarch" எனும் நூலின் (மறுமதிப்பு) மூலம் தெரிய வருகிறது. கொழும்பு மன்னர் **விஜயா** (Vijaya)விற்கும் பாண்டிய மன்னரின் மகளுக்கும் நடைபெற்ற திருமண உறவின் மூலம் பாண்டிய மன்னரின் காலம் கி.மு. 9ஆம் நூற்றாண்டிற்கும் பிந்தியதாக இருக்க முடியாதென நம்பப்படுகிறது. பின்னர், அகத்தியர் குலசேகர பாண்டிய மன்னனின் அரசவையை விட்டுப் பிரிந்து, துறவறம் மேற்கொண்டு



படம் 25அ
அகத்திய முனிவர்

பொதிகை மலையில் எஞ்சிய வாழ்நாளைக் கழித்தார் எனக் கூறப்படுகிறது. (படம் 25ஆ)



படம் 25ஆ
பொதிகை மலை (அகத்தியரின் இருப்பிடம்)

சச்சிதானந்தம் பிள்ளையின் கருத்துக்களை மேற்கோள் காட்டி, **துவாரகநாத்**[2] (Dwarakanath) என்பவர் பின்வருமாறு எழுதுகிறார்:

> "அகத்தியர் வடநாட்டினைப் பூர்வீகமாகக் கொண்டவரென்று பல கதைகளிருந்த போதிலும், அவர் தமிழ்நாட்டின் தென் கோடியிலுள்ள பொதிகை மலையின் மேல் தன் இருப்பிடத்தை அமைத்துக் கொண்டு வாழ்ந்து வந்தார் என்ற கருத்தினை எல்லாக் குறிப்புக்களும் ஏற்றுக் கொள்கின்றன. அவர் ஒரு தமிழ் முனிவர் என என்றுமே போற்றப் படுகின்றார். முதல் தமிழ் இலக்கண நூலை இயற்றியவர் என்று பாராட்டப்படுகின்றார்."

**ஷியாம் மனோகர் மிஸ்ரா** (Shyam Manohar Misra)[3] என்பவர் "அகத்திய முனிவர்" (Sage Agathiya) என்னும் தனது திறனாய்வு நூலில் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.

> "அகத்தியரை ஒரு துறவியாக ரிக்வேதத்தில் (Rig veda) சித்தரிக்கப்பட்டுள்ளமையே அகத்தியர் பற்றிய முதல் குறிப்பீடாகும். புகழ்மிக்கத் தமிழ்க் காப்பியமான சிலப்பதி காரத்தில் அகத்தியர் **பிரம்மா** (Brahma)வுக்கு

> அடுத்தபடியாக வழிபடக் கூடிய முனிவர் என்றும், பொதிகை மலையைத் தன் இருப்பிடமாகக் கொண்டு வாழ்ந்தவரென்றும் விவரிக்கப்பட்டுள்ளது."

> **"குள்ளமான தோற்றத்தின் காரணமாகக் குறுமுனி என்றும் அழைக்கப்பட்ட அகத்தியர் தென்மதுரையில் நடைபெற்ற முதல் தமிழ்ச் சங்கத்தை அலங்கரித்தவர்"**

என்ற குறிப்பு கன்னியாகுமரி மாவட்ட கருப்பொருட் களஞ்சியத்தில் (Gazetteer) காணப்படுகின்றது.[4] முதல் ஊழியின் இறுதியில் தென் மதுரையில் நடைபெற்ற முதல் தமிழ்ச் சங்கத்தை அலங்கரித்தவர் அகத்தியர் என்னும் பொருள்பட

> **"முதல் ஊழியிறுதிக் கண் தென் மதுரை யகத்துத் தலைச் சங்கத்து அகத்தியர்"**

என்று சிலப்பதிகார உரையாசிரியர் அடியார்க்கு நல்லார் கூறுகின்றார்.[5]

பாளையங்கோட்டை சித்தமருத்துவக் கல்லூரி மாணவர்கள் கண்டெடுத்த கல்வெட்டொன்றினை மேற்கோள் காட்டிக் குறிப்பிடும் **சுப்பிரமணியம் மலையாண்டி** என்பவர், அக்கல்வெட்டு வரலாற்றுக்கு முந்திய காலத்தைச் (Pre-Historic Period) சேர்ந்ததென்றும், அக்கல்வெட்டில் அகத்தியர் முத்தமிழ் ஆசிர் எனக் குறிப்பிடப்பட்டுள்ளார் என்றும், எனவே அகத்தியர் அதற்கும் முந்திய காலத்தைச் சேர்ந்தவராகயிருக்க வேண்டுமென்றும் கூறுகிறார்.[6]

> "மருத்துவத்தின் பல்வேறு துறைகளைப் பற்றிய பெரும்பாலும் நாளிடப்படாத - மருத்துவப் பிரதிகளின் மிகப்பெரிய தொகுப்பினைக் கொண்டதென்ற பெருமை படைத்த சித்த மருத்துவ முறையினைத் தோற்றிவித்தவர் அகத்தியர்" என்று **ரெட்டி** (Reddy) என்பவர் கூறுகிறார்.[7]

ஆனால், அகத்தியருக்குப் பின்வந்த மருத்துவப் புலவர்கள், அகத்தியரின் சித்த மருத்துவத்தைப் போற்றிப் பேணி வந்தனரென்றும், தாங்கள் இயற்றிய மருத்துவ நூற்களுக்கு அகத்தியரை ஆசிரியராக உரித்தாக்கினரென்றும் சுப்பிரமணியம் மலையாண்டி குறிப்பிட்டுள்ளார்.[8]

“பல அகத்தியர்கள் பல்வேறு காலங்களில் வசித்து வந்திருப்பதாகத் தோன்றுகிறது'' என்று ரத்னவேலு சுப்பிரமணியம் கூறுகின்றார்[9] இந்தச் சந்தர்ப்பத்தில், சீனிவாச ஐயங்காரின் குறிப்புக்களை மேற்கோளாகக் காட்டுவது சிறப்பாகயிருக்கும் :

> “சமஸ்கிருத நூற்களில் குறிப்பிடப்பட்டுள்ள அகத்தியர்கள், வசிஷ்டர்கள், விசுவாமித்திரர்கள் ஆகியோர் ஒவ்வொரு காலகட்டத்திலும் தோன்றி, மறைந்து, மீண்டும் தோன்றி அந்நூற்களைப் படிப்போரைக் குழப்பத்தில் ஆழ்த்துகின்றனர்; இவர்கள் யாவரும் ஒரே அகத்தியர், ஒரே வசிஷ்டர், ஒரே விசுவா மித்திரர் அன்று; அவர்கள் யாவரும் இப்பெயர் களைக் குடும்பப் பெயர்களாகக் கொண்டு தொடர்வரிசையாகத் தோன்றிய பல்வேறு மனிதர்களாவார்”[10]

இந்த அனுமானத்தை ஏற்றுக் கொண்டால், சித்த மருத்துவத்தைத் தோற்றுவித்த அகத்தியரின் காலம் பற்றி எவ்விதக் குழப்பமும் ஏற்படாது.[11]

அகத்தியரை இனஉறுதி செய்து கொள்வதில் பல்வேறு மாறுபட்ட கருத்துக்களை வெளியிட்டுள்ள பலதிறப்பட்ட நூலாசிரியர்களின் மத்தியில் சண்முகவேலன் என்பவர் பின்வரும் பயனுள்ள கருத்தினைக் கூறியுள்ளார்.[12]

> “மருத்துவம், சோதிடம், தத்துவம், இரசவாதம் முதலிய பல்வேறு துறைகளில் பல ஆய்வேடுகள் அகத்தியரால் எழுதப்பட்டவை எனக் கூறப்படுகின்றது; ஆனால் இவையாவும் அகத்தியரால் எழுதப்பட்ட மூல நூற்களாகக் கருதப்பட முடியாது; அவையாவும் பிற்றைய ஆசிரியர்களால் எழுதப்பட்டு, அகத்தியர் என்ற பெயரில் உரித்தாக்கப்பட்டவையாகும். இவையாவும் பிற்றை ஆசிரியர்களால் அகத்தியரின் பெயரில் உருவாக்கப்பட்ட பிழை மலிந்த போலி இலக்கியங்களாகும்; எனவே, இந்த நூற்களால் பயனுள்ள நோக்க மெதுவும் நிறைவேறப் போவதில்லையென்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர்”



படம் 26அ
அகத்திய முனிவர்

இக்கருத்தினை மன நிறைவான வாதமாக ஏற்றுக் கொள்ளலாம். எனவே, சித்த மருத்துவத்தைத் தோற்றுவித்தவரும் முதல் தமிழ்ச் சங்கத்தை அலங்கரித்தவருமான அகத்தியர், (படம் 26அ) பிற்காலத்தில் அகத்தியர் என்ற பெயரில் பல மருத்துவச் சுவடிகளை எழுதிய அகத்தியர்களினின்றும் வேறுபட்டவர் என உய்த்துணரலாம்.

## 2. சித்தர்கள்

சித்தர்கள் எனப்படுபவர்கள் உயர்கலாச்சாரமும், அறிவுத் திறனும், இயல்மீறிய சக்தியுடன் கூடிய ஆன்மயியல் வினைத் திறனும் கொண்ட மனிதர்களாகக் குறிப்பிடப்படுகின்றனர். இந்திய மருத்துவ வரலாற்று நிறுவனத்தினால் (Indian Institute of Hisotry of Medicine) வெளியிடப்பட்ட கட்டுரையொன்றில், சித்தர்கள் எல்லாவகை மருந்துகளையும், தாதுக்களையும் (Minerals) மற்றும் வேதியியல் (Chemical) பண்புகளையும் முற்றிலும் ஆராய்ந்து, அவற்றுள் பயனுள்ளவை எவை, பயனற்றவை எவை யென்று கற்றறிந்தார்கள் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.[13] ஆதியில் மூலவர்க்க சித்தர்கள் என்றழைக்கப்படுகின்ற பதினெட்டு உறுப்பினர்களைக் கொண்ட ஒரு சிறந்த அறிஞர் குழுவைச் சேர்ந்தவர்கள் இந்தச் சித்தர்கள் என்று அக்கட்டுரையில் மேலும் குறிப்பிடப்பட்டுள்ளது.

### மூலவர்க்க சித்தர்கள்

1. நந்தி (Nandhi)
2. அகத்தியர் (Agatthiyar)
3. திருமூலர் (Tirumoolar)
4. புண்ணக்கீசர் (Punnakkeesar)
5. புலஸ்தியர் (Pulasthiyar)
6. பூனைக்கண்ணர் (Poonaikkannar)
7. இடைக்காடர் (Idaikkaadar)
8. போகர் (Bogar)
9. புலிக்கைசர் (Pulikkaisar)
10. கரூரார் (Karooraar)
11. கொங்கணவர் (Konkanavar)
12. காளங்கி (Kaalangi)
13. அழுகண்ணி (Azhuganni)
14. அகப்பையன் (Agappyyan)
15. பாம்பாட்டி (Paambaatti)
16. தேரையர் (Teraiyyar)
17. குதம்பை (Kutambai)
18. சட்டைநாதர் (Sattainaathar)

இப்பட்டியலில் குறிப்பிட்டுள்ள பெயர்களுள் சில பெயர்கள் வெவ்வேறு ஆசிரியர்களுக்கேற்ப மாறுபடுவதாகவும், அந்தக் கட்டுரையில் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.[14] தமிழ்ச் சொற் களஞ்சியத்தில் தரப்பட்டுள்ள சித்தர்களின் பட்டியலில் **இராம தேவர், கும்பமுனி, தன்வந்த்ரி, வால்மிகி, மேலமுனி, மச்சமுனி, பதஞ்சலி, நந்திதேவர், போதகுரு, சந்தீரானந்த தேவர்** ஆகியோர் மேற்கண்ட பட்டியலிலுள்ள சிலருக்குப் பதிலாக இடம்பெற்றுள்ளனர்.

### திருமூலர்

திருமூலர் (படம் 26அ) மிக அதிக காலத்திற்கு முற்பட்டவ ரென்றும், சித்தர்களின் பள்ளியை (School of Siddhars) நிறுவியர் அவரேயென்றும், சித்தர்களின் மருத்துவக் கல்விக் குழுவினைத் தலைமையேற்று நடத்தியவர் என்றும் சண்முகவேலன் கருது கிறார்.[15] நீலகண்ட சாஸ்திரியின் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு **துவாரகநாத்** (Dwaraka nath) பின்வருமாறு எழுதுகிறார்[16]



படம் 26ஆ
திருமூலர் (சித்த மருத்துவத்தின் தந்தை)

“திருமூலர் கைலாசத்திலிருந்து தென்னகத்திற்கு வந்து, இறந்து போன மாட்டிடையனின் சடலத்தில் **கூடுவிட்டுக் கூடு பாய்தல்** என்ற முறையில் தன்னுயிரேற்றித் **திருமந்திரம்** (Tirumantiram) என்னும் மிகக் கடினமான நூலினை கி.பி. முதலாம் நூற்றாண்டிலிருந்து கி.பி. 9ஆம் நூற்றாண்டு வரையிலான காலகட்டத்தில் சுமார் 300 ஆண்டுகளில் எழுதி முடித்தார்”

திருமூலர் கி.பி. 5ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவரென்றும், மருத்துவத் துறையில் மருத்துவத்திற்கு அடிப்படையான வழி முறைகளை வகுப்பதற்குக் காரணமான அடிப்படைத் தத்துவக்

கோட்பாடுகளைத் தனது ஆய்வேட்டில் குறிப்பிட்ட முதல் சித்தர் இவரேயென்றும் சம்பத் கருதுகின்றார்.[17]

திருமூலரின் நேரடிச் சீடர் **காளங்கிச்** சித்தரென்றும், காளங்கிச் சித்தரின் சீடர் **போகர்** என்றும் சண்முகவேலன் குறிப்பிடுகின்றார்.[18] **போகரும் புலிப்பாணியும்** சீனாவைப் பூர்வீகமாகக் கொண்டவர்களென்றும், சுமார் 1600 ஆண்டுகட்கு முன்னர் தென்னிந்தியாவிற்கு வந்து சித்தர்களின் பள்ளியில் சேர்ந்து தமிழ் மருத்துவம், இரசவாதம் (Alchemy) முதலியவற்றை முற்றிலும் நன்றாகக் கற்றறிந்தனரென்றும் அவர் மேலும் குறிப்பிட்டுள்ளார். போகர், சீனா, ரோம் மற்றும் வேறு பல இடங்களையும் பார்வையிட்டபின், கி.பி. 17ஆம் நூற்றாண்டில் **பழநி** (Palani)யில் குடியேறினார். பழநியில் அவருடைய சமாதி இன்றும் போகரின் பெயரால் போற்றப்பட்டு வருகிறது.[19]

## 3. சித்த மருத்துவத்தின் தனிச்சிறப்புக்கள்

பாதரசத்தை (Mercury) அடிப்படையாகக் கொண்டு, நீண்ட கால வாழ்விற்கு ஆதாரமான இரசவாத (Alchemical) கருத்துக்களைக் கொண்டமைந்தது சித்த மருத்துவமுறை. இரசவாதம் என்பது குறை மதிப்பு உலோகங்களை (Base Metals) உயர்மதிப்பு உலோகங்களாக (Noble Metals) மாற்றும் முறை மற்றும் இறப்பற்ற நிலையினை அடைவதற்கான **உயிர் மருந்து** (Elixir of Life) தயாரிக்கும் முறை ஆகிய இரு பருப்பொருட்களை மையமாகக் கொண்டமைந்தது.[20]

## 4. சித்த மருத்துவம் – தமிழ் மருத்துவம்

பிற மருத்துவ முறைகளினின்றும் சித்த மருத்துவத்தில் விஞ்சிநிற்கும் பண்பு என்பது வேறு எந்த மருத்துவ முறையிலும் சொல்லப்படாத முப்பு (Muppu) எனப்படும் முழுநிறை **இயைபியக்க ஊக்கி** (Universal Catalyst)யைத் தயாரிப்பதில் அமைந்துள்ளது. **முப்பு** என்பது **பூநீறு** (Carbonate - கார்பனேட் எனும் உப்புக்களின் கலவை), **கல்லுப்பு** (Rock-Salt), **அண்டக்கல்** (Calcium Carbonate) ஆகிய மூன்று வகை உப்புக்களின் சேர்மமாகும். இந்த முப்பு குறை மதிப்பு உலோகங்களைத் தங்கமாக மாற்றவும், மனித உடலுக்குப் புத்துயிரளிக்கவும் வல்லமைமிக்க வியத்தகு சக்தி படைத்தது. மேலும், பூநீறு

சேகரிக்கப்படக் கூடிய இடங்களாகத் தமிழ்நாட்டில் சுமார் 35 இடங்கள் இருப்பதாக சுப்பராயப்பா குறிப்பிட்டுள்ளார்.[21]

இத்தகைய தனிப்பெருஞ் சிறப்புக்களின் காரணமாக, சித்த மருத்துவமானது தமிழ்நாட்டின் தனிப்பெரும் மருத்துவ முறையென்றும், இக்கருத்தின் அடிப்படையிலும் குருசிரோன் மணி (Gurusironmani) என்பவரால் தொகுத்தளிக்கப்பட்ட பின் வரும் காரணங்களாலும் சித்த மருத்துவமானது **தமிழ் மருத்துவம்** (Tamil Medicine) என்று எல்லோராலும் பாராட்டப்படுகின்றது.[22]

1. சிறப்புமிக்க சித்த இறைஞானிகள் பெரும்பாலும் தமிழ் நாட்டிலிருந்து வந்தவர்கள்.
2. சித்த மருத்துவ ஆய்வேடுகள் பெரும்பாலும் தமிழ் மொழியிலேயே உள்ளன.
3. சித்த மருத்துவத்தின் பயிற்சிகளும் விதிமுறைகளும் தமிழ்நாட்டு முறைப்படி தமிழ்நாட்டு எல்லைக்குட் பட்டுள்ளன.
4. சித்த மருத்துவர்களால் கையாளப்பட்டுள்ள மறைமுக குழூஉக் குறிகள் (Cryptic Code) தமிழ்நாட்டைத் தவிர வேறெங்கும் காணப்படவில்லை.

எனவே, தமிழ்நாட்டில் நடைமுறையிலிருந்து வந்த மருத்துவ முறை சித்த மருத்துவ முறையேயாகும்.

தமிழ்நாட்டில் சித்த மருத்துவமுறை மிகவும் பிரபல்ய மடைந்ததற்கான முக்கிய காரணங்கள்:[23]

- சித்த மருத்துவத்தில் பயன்படுத்தப்படும் மருந்துகள் யாவும் எளிதில் பெறக்கூடியவை;
- மருந்துகளின் பயன்பாட்டுறுதி;
- மருந்துகளின் தயாரிப்புக்கு இயல்பாகக் கிடைக்கக்கூடிய கனிமப் பொருட்களின் பயன்பாடு;
- மருந்துகள் தயாரிப்பில் பயன்படக்கூடிய மூலிகைகள் யாவும் தமிழ் நாட்டிலேயே எளிதில் கிடைத்தற் கூடியவையா யிருப்பது.

தமிழ்நாட்டில், எந்தவொரு சிற்றூரிலும், எந்தவொரு வீட்டிலும் கூட இம்மருத்துவ முறையினைப் பற்றி அறியாதோர் இருக்கமாட்டார் என்று சொல்லுமளவிற்கு இதன் முக்கியத்துவம் விரிந்து பரந்து பிரபல்யமடைந்துள்ளது. ஒவ்வொரு பெண்ணும் சாதாரண நோய்களுக்குத் தனக்கும், தன் குழந்தைகளுக்கும் தானே சிகிச்சை செய்து கொள்ளும் அளவிற்கு **"வீட்டு வைத்தியம்"** (Home Remedies) என்று சொல்லப்படுகின்ற எளிய சிகிச்சை முறைகளை அறிந்தவர்களாகவோ அல்லது அவற்றுடன் தொடர்பு கொண்டவர்களாகவோயிருப்பார்கள். இந்த **வீட்டு வைத்திய** மருத்துவ அறிவு அவள் தனது முன்னோர்களிடமிருந்து பாரம்பரியமாகப் பெறப்படுவதாகும்.[24] பொதுவாக, ஒவ்வொரு இல்லத்திலும் வயது முதிர்ந்த **பாட்டி** (Grandmother) தனது பிள்ளைகளுக்கும் பேரப்பிள்ளைகளுக்கும் தானறிந்த இந்த மருத்துவ முறையினைச் சொல்லித் தருவதால் இது **'பாட்டி வைத்தியம்'** என்றும் அழைக்கப்படுகிறது.

குருசிரோன்மணி கூறியிருப்பது போல், சித்த மருத்துவத்தில் உணவு என்பது அனைத்து நோய்களையும் தீர்க்கக் கூடிய சஞ்சீவி மருந்தாகக் கருதப்படுகிறது. இயற்கை உணவு முறையினையும், இயற்கையோடியைந்த பழக்கவழக்கங்களையும் கொண்ட தன்னொழுக்கக் கட்டுப்பாட்டு வாழ்க்கை (Austere life) முறையினைக் கடைப்பிடிப்பதன் மூலம் உடல்நலத்தையும் உளநலத்தையும் நன்கு கட்டிக் காக்க முடியுமென்று மாபெரும் சித்த முனிவர்கள் பரிந்துரைத்துள்ளனர்.[25]

# பிரிவு 2

## சத்துணவும் உடல்நலப் பராமரிப்பும்

மக்கள் உண்ணும் உணவும், அவர்களின் உணவுப் பழக்க வழக்கங்களுமே அவர்களின் உடல்நல நிலைமைகளைத் தீர்மானிக்கின்றன. எனவே, பழங்காலத் தமிழ்நாட்டில் நடைமுறையிலிருந்த மருத்துவமுறையினைப் பற்றி ஆராயு முன்னர் பழந்தமிழ் மக்கள் உட்கொண்ட உணவுப் பொருட்களைப் பற்றிய ஒரு பகுப்பாய்வு செய்ய வேண்டியது மிகவும் அவசியமாகிறது.

"நோய்க் குணமாக்குதலைவிட நோய்த் தடுத்தலே சிறந்தது" (Prevention is better than cure) என்பது ஒரு சிறந்த பழமொழியாகும். இயல்நிலை உணவுகளை உட்கொள்ளுவதும் நல்ல உணவுப் பழக்கவழக்கங்களைக் கடைப்பிடிப்பதும் உடல்நலப் பாதுகாப்பிற்குத் தேவையான நோய்த் தடுப்பு முறைகளாகும்.

### 1. உணவும் உடல்நலமும்

முன் கூறப்பட்டது போல், பல்வேறு மருத்துவ முறைகளுக்கிடையே காணப்படுகின்ற, மிகவும் குறிப்பிடத்தக்க, ஒற்றுமை **உயிர்த்தாதுக் கோட்பாடு** (Humoral Theory) என்பதாகும். **உடற்கூற்றிலமைந்துள்ள உயிர்த்தாதுக்கள் சமநிலையிலிருப்பின் உடல்நலம் நல்லநிலையில் பாதுகாக்கப்படும்; ஆனால் அவை சமநிலையினின்றும் மாறுபட்டு இயங்குமானால் உடல்நிலை பாதிக்கப்படும்** என்பதுவே உயர்த்தாதுக் கோட்பாடாகும்.

இதே கருத்தினைத் தமிழ்ப் புலவர் திருவள்ளுவரும் தமது திருக்குறளில் பின்வருமாறு வலியுறுத்திக் கூறியுள்ளார்.

மருத்துவ அறிஞர்களால் வாதம், பித்தம், கபம் என்று எண்ணப்படுகின்ற வாதம் முதலான மூன்று தாதுக்கள் உடம்பில் மிகுந்தாலும் அன்றி குறைந்தாலும் உடலில் நோய் ஏற்பட ஏதுவாகிறது.

> "மிகினும் குறையினும் நோய்செய்யும் நூலோர்
> வளிமுதலா யெண்ணிய மூன்று"[1]

சிலவகை தாதுக்களும் (Minerals), ஊட்டச்சத்துக்களும் (Vitamins) நிறைந்த உணவு உகந்ததொரு தடைக் காப்புறுதி வினைக்குத் (Immune function) துணைபுரிவதன் மூலம் உடம்பில் ஒரு சமநிலையை ஏற்படுத்துகின்றனவென்னும் இந்த உயிர்த்தாதுக் கோட்பாட்டினை அடிப்படையாகக் கொண்டே **உணவும் உடல் நலமும்** பற்றிய தற்காலக் கருத்து அமைந்திருப்பதாக **பெக்ஜோர்டன்** (PegJorden) என்பர் கூறுகின்றார்.[2] தடைக் காப்புறுதி வினைக்குறைவு உடலில் ஏற்படும் போது நீர்க்கோப்பு (Cold) மற்றும் சளிக்காய்ச்சல் (Influenza) போன்ற சாதாரண உடல்நலக்கேடு முதல் புற்றுநோய் (Cancer) போன்ற கடுமையான நோய் வரையிலான பல திறப்பட்ட உடல் நலச் சீர்கேடுகளை உருவாக்குகிறது.

ஒருவன் உண்ணும் உணவின் வகைகள் மற்றும் அவனது உணவுப் பழக்கவழக்கங்களே அவனது உடம்பில் **உயிர்த் தாதுச் சமநிலை** (Humoral Equilibrium) ஏற்படவோ அல்லது பாதிக்கப் படவோ முக்கிய காரணிகளாகும். நோய்களுக்கெதிரான தடுப்பு முறைகளுக்கு உயிர்த் தாதுச் சமநிலையினைக் கட்டிக்காப்பது அவசியமாகும். இதற்கு ஒழுங்குமுறைப்படுத்தப்பட்ட உணவுகளும், நல்ல உணவுப் பழக்கவழக்கங்களும் அத்தியாவசியமாகும். எல்லா மருத்துவ முறைகளிலும் இக்கொள்கை வலியுறுத்தப் பட்டுள்ளது. இக்கொள்கையின் அடிப்படையிலேயே, எவ்வகை உணவுகள் உடல்நலத்தை மேம்படுத்துகின்றன, எவ்வகை உணவுகள் நோய்களுக்குத் துணைபுரிகின்றன என்று வேறுபடுத்திக் கண்டறிவதற்கான விவாதங்களைச் சமீபத்திய சர்வ **தேச சத்துணவு மாநாடுகள்** (International Nutrition Conferences) மேற்கொண்டு வருகின்றன என்று ஜோர்டன் கூறியுள்ளார்.[3]

ஒருவர் உட்கொள்ளும் உணவு வகைகள் அவரது உடம்பில் வாதம், பித்தம், கபம் என்ற முத்தாதுக்களைச் சம நிலையில் வைத்திருக்கத் தகுதியுடையவையாகயிருத்தல் வேண்டும். இத்தகைய உணவுப் பொருட்களின் சேர்மானம் தான் **சமநிலை உணவு** (Balanced Food) எனப் பழங்கால மருத்துவத்தில் உணர்த்தப்பட்டுள்ளது.

தற்காலக் கருத்துப்படி, **புரதம்** (Protein), **கொழுப்பு** (Fat), **கரிநீரகி** (மாச்சத்து - Carbohydrate), **கனிமங்கள்** (Minerals) மற்றும் **நுண்ணூட்டச் சத்துக்கள்** (Vitamis) ஆகியவை உணவின் பல்வேறு கூறுகளாகும். இக்கூறுகள் யாவும் மொத்தமாக **ஊட்டச்**

**சத்துக்கள்** (Nutrients) என்றழைக்கப்படுகின்றன. இந்த ஊட்டச் சத்துக்கள் யாவும் சரியான விகிதாச்சாரத்தில் உடலுக்கு வழங்கப்படும்போதுதான் உடல்நலம் நன்கு பேணப்படுகின்றது. எந்தவொரு தனி உணவும் மேற்கூறப்பட்ட எல்லாவிதமான ஊட்டச்சத்துக்களையும் தகுந்த விகிதாச் சாரத்தில் பெற்றிருப்ப தில்லை. எனவே, எல்லாவகை ஊட்டச் சத்துக்களையும் தேவையான விகிதாச்சாரத்தில் அளிக்கக்கூடிய உணவுப் பொருட்களின் சரியான கலவையே **சமநிலை உணவு** அல்லது **சரிவிகித உணவு** (Balanced Diet) ஆகும்.[4]

## நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்

உணவுக்கும் உடல்நலத்துக்கும் நெருங்கிய தொடர் புண்டு, உடல்நலத்தைப் பேணிக் காக்கவேண்டுமாயின் ஒருவன் தனது உணவுப் பழக்கவழக்கங்களில் மிகவும் கவனமாக இருத்தல் வேண்டும். "**மிகஅதிகமாக உட்கொள்ளாதே; மிகக் குறைவாக உடற்பயிற்சி செய்யாதே**" (Eat not too much; exercise not too little) என்பது பழம்பெரும் மருத்துவர் ஹிப்போகிரேட்ஸ் (Hippocrates) அருளிய பொன்மொழியாகும்.[5] "**அளவுக்கு மிஞ்சினால் அமுதமும் நஞ்சு**" என்பது பழந்தமிழரின் உடல்நலம் பற்றிய நெறிமுறை விதியாகும்.

## 2. உணவும் ஒரு மருந்தே

**பசித்துப் புசி** என்பது ஒரு பண்டைய நெறிமுறை விதியாகும். தான் முன்னர் உண்ட உணவு செரிமானம் ஆகிவிட்டதை உறுதி செய்தபின்னரே அடுத்த நேர உணவினை உட்கொள்ளும் பழக்கமுடைய ஒருவனுக்கு மருந்து எதுவும் தேவையே இல்லை.[6] பசி என்பது ஒரு மோசமான நோய் என்பதைத் திருவள்ளுவர் **பசி என்னும் தீப்பிணி** என்று கூறுகிறார்.[7]

### பசிப்பிணி மருத்துவம்

ஒரு நோயினால் உடல் பாதிக்கப்படும்போது அந்நோய் தொடர்பான உறுப்பு அல்லது உறுப்புக்கள் மட்டுமே பாதிக்கப் படுகின்றன. ஆனால், பசியென்னும் பிணியினால் பாதிக்கப்படும் போது "**பசிவந்திடப் பத்தும் பறந்து போம்**" என்ற பழமொழிக் கிணங்க உடலுறுப்புக்களனைத்தும் ஒரு சேர செயலிழந்து விடுகின்றன. இதன் காரணமாகவே, பசி அல்லது பட்டினி என்பது ஒரு பயங்கர நோயாகக் கருதப்படுகிறது. ஆகவே, பசி அல்லது பட்டினியை ஒரு நோயாகக் கருதும்போது, அந்நோயினால்

வாடும் ஒருவனுக்கு உணவினையளித்து அவனுடைய பசி நோயினைத் தீர்க்கும் ஒருவனைப் **"பசிப்பிணி தீர்க்கும் மருத்துவன்"** என்று சங்க காலத்தில் அழைத்துள்ளனர்.

இவ்வாறு பசிப்பிணி தீர்த்த **பண்ணன்** என்னும் வள்ளல் ஒருவன் இருந்ததைக் கேள்வியுற்ற **மன்னன் குளமுற்றத்துஞ்சிய கிள்ளிவளவன்,** அவ்வள்ளல் தான்வாழும் காலம் வரை வாழ வேண்டும் என்று வாழ்த்தி, அவ்வள்ளலது இல்லம் அருகில் உள்ளதோ என்று விளித்துப் பாராட்டியப் புறநானூற்றுப் பாடலில் பாணனின் இல்லத்தை சோழன் **"பசிப்பிணி மருத்துவன் இல்லம்"** என்று சிறப்பித்துக் கூறுவதாக அமைந்துள்ளது:

"பசிப்பிணி மருத்துவன் இல்லம்
அணித்தோ சேய்த்தோ கூறுமி னெமக்கே"[7அ]

மணிமேகலை இலக்கியத்தில் தனது **அமுதசுரபி** யிலிருந்து உணவளித்து ஏழை மக்களின் பசியைப் போக்கிய மணிமேகலை, **"ஆருயிர் மருத்துவி"**[7ஆ] என்று போற்றப் படுகின்றாள்; பசிப்பிணியைப் போக்க அளவிலடங்கா உணவினை அள்ளித் தந்தருளிய **அமுதசுரபி, பசிப்பிணி மருந்து**[7இ] என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.

**உணவருந்தும்** நயம் பற்றி மருந்து எனும் அதிகாரத்தின் கீழ் பலநெறிமுறை விதிகளைத் திருக்குறள் வழங்கியுள்ளது.

உடல் நலவிதிமுறைகளை மீறி மட்டுமீறி உணவருந்தும் ஒருவன் எண்ணற்ற நோய்களால் பாதிக்கப்படுவான்.[8]

மிதமான அளவுடன் உணவுகளை உட்கொள்பவன் நோயினால் துன்புறமாட்டான்[9]

**உணவும் ஒரு மருந்துதான்** எனும் நெறிமுறை விதியினைக் கருத்திற்கொண்டு எல்லா ஊட்டச்சத்துக்களும் நிறைந்த முழுமையான உணவினைச் சரியான அளவில் சாப்பிடும் ஒருவன் நீண்ட ஆரோக்கியமான வாழ்வை மகிழ்ச்சியோடு அனுபவிப்பான்.

# பிரிவு 3

## நோய்கள்

பழந்தமிழ் மக்கள் பொதுவான எல்லாவித ஊட்டச் சத்துக்களும் நிறைந்த பலவகை உணவுகளையும் உட்கொள்ளும் பழக்கமுடையவர்களாயிருந்தனர் என்று அறிந்து கொள்ள முடிகிறது. மேலும் உணவு உட்கொள்ளுவதில் சிறந்த நெறிமுறை விதிகளையும் பின்பற்றிவந்துள்ளனர். ஆனால், இது ஒரு பொதுவான கருத்தேயன்றி, இதன்மூலம் ஒவ்வொரு சங்கத் தமிழனும் முழுமையான உணவினை நெறிமுறைகளுக்குட்பட்டுச் சாப்பிட்டு நல்ல உடல்நலத்துடனிருந்திருப்பானெனக் கருதிவிட முடியாது.

சங்ககாலத்தில் தமிழ்த் தேசமானது புவியியல் தட்ப வெப்ப நிலைகளுக்கேற்ப குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என ஐவகை நிலங்களாகப் பாகுபாடு செய்யப் பட்டிருந்தது. அந்தந்த நிலப்பகுதியின் தன்மைக்கேற்ப மக்களும் வெவ்வேறு வகையான தொழில்களை மேற்கொண்டிருந்தனர். அவர்களின் தொழில்களுக்கேற்ப அவர்களின் உணவு முறைகளும் மாறுபட்டிருந்தன. அதன் காரணமாக, அவர்கள் பல்வேறு வகையான நோய்களால் பாதிக்கப்படக் கூடிய காப்பற்ற நிலையிலிருந்தனர்.

எனவே, அக்காலத்தில் மக்களிடம் பரவலாகக் காணப் பட்ட பல்வேறு வகையான நோய்களும், அவற்றைக் குணப்படுத்த மக்கள் மேற்கொண்ட சிகிச்சை முறைகளும் பல்வேறு சங்க இலக்கியங்களிலும், பிற்கால இலக்கியங்களிலும் பிரதி பலிப்பாகத் தெரியவருகின்றன.

### 1. நோய் பற்றிய வரையறை

மிகப்பழமையான நூலாகிய **தொல்காப்பியத்தில்** நோய் என்பது இருவகையாக வரையறுக்கப்பட்டுள்ளது. மன வருத்தம் தருகின்ற துயரங்கள் **நோய் (பையுள்)** என்றும், உடல் வருத்தம் தருகின்ற துயரங்கள் **பிணி (சிறுமை)** என்றும் வரையறுக்கப் பட்டுள்ளது.

'பையுளும், சிறுமையும் நோயும் பொருளும்'

ஒரு மனிதனுக்கு உடலாலும் உள்ளத்தாலும் துயரங்கள் தருவது நோயாகும். நோய் பற்றி அக்கால மருத்துவர்கள் அறிந்துள்ள

நுட்பத்தினை எடுத்துக்காட்டுவது போல் தொல்காப்பிய வரையறை அமைந்துள்ளது. சித்த மருத்துவர் வேங்கடேசனும் உள்ளத்திற்கு ஏற்படும் துன்பத்தினை நோய் என்றும் உடலுக்கு ஏற்படும் துன்பத்தினைப் பிணி என்றும் வகைப்படுத்திக் கூறியுள்ளார்.[2] ஆனாலும், தற்காலத்தில் நோய், பிணி ஆகிய இரண்டு சொற்களுமே பொதுவாக உடல்நலக்கேடு என்ற பொருளில் வழங்கப்படுகிறது.

இடைக்காலத்தில் நோய் என்பது **வியாதி** என்னும் சொல்லின் மூலம் குறிப்பிடப்பட்டுள்ளதைக் காணமுடிகிறது. சோழர்காலத்தைச் சேர்ந்த திருமுக்கூடல் கல்வெட்டில் நோயினால் பாதிக்கப்பட்டவர்கள்,

**'வியாதி பட்டுக் கிடப்போர்'**[3]

என்றும், குலோத்துங்க சோழனின் கல்வெட்டொன்றில் நோய் என்பது **வியாதி** என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.

"................... குலத்
துங்கசோழ - மூவரைய
னுக்கு **வியாதி தொற்ற**"[4]

நோய் என்பது **உடல்நலக்கேடு** அல்லது **உடல்நலக் கோளாறு** என்றும் அது முதிர்ச்சியடைந்தால் உடம்பினைக் கொன்று விடும் என்றும் கூறப்படுகிறது. இக்கருத்தின் அடிப்படையில், தமிழில் ஒரு பழமொழி அமைந்துள்ளது:

**'உடன் பிறந்தே கொல்லும் வியாதி'**[5]

## 2. நோயின் காரணங்கள்

முறையான நல்ல உணவுப் பழக்கவழக்கங்கள் நோய் வராமல் தடுப்பதற்காக மேற்கொள்ளப்படவேண்டிய நடைமுறைகளாகுமென முந்திய பிரிவின் கீழ் விவரிக்கப்பட்டது.

ஒழுங்கற்ற உணவுமுறை, முன்னர் சாப்பிட்ட உணவு செரிமானமாகுமுன் மீண்டும் உணவு உண்ணுதல், அளவுக்கு அதிகமான உணவினை உட்கொள்ளுதல் ஆகிய உணவு நெறி முறைகளை மீறிய செயல்களே நோய் ஏற்படுவதற்கான காரணிகளாகுமென்று திருவள்ளுவர் கூறியுள்ளார்.

நல்ல உணவு முறையினைப் பின்பற்றாமை, அளவுக்கு மிஞ்சிய வேலை, மன அழுத்தம், செரிமானமின்மை, போதுமான அளவில் உணவு கிடைக்காமை, முழுமையான குளியல்

இல்லாமை, அறச்செயல்களை இகழ்ந்து பேசுதல் ஆகியவையே நோயின் காரணங்களாகும் என்று இடைக்கால நீதிநூலாகிய விவேக சிந்தாமணியில் பட்டியலிடப்பட்டுள்ளது.[6]

குமரேச சதகம்[7] போன்ற பல தமிழ் இலக்கியங்களிலும் நோய்களினின்று உடம்பினைப் பாதுகாக்கக்கூடிய இவைபோன்ற நெறிமுறைகள் வலியுறுத்தப்பட்டுள்ளன.

இத்தகைய நீதிநூற்களிலெல்லாம் நோய்த்தடுப்பு நெறிமுறைகள் வலியுறுத்தப்பட்டிருப்பதிலிருந்து நோய்த் தடுப்பு முறைகளுக்குப் பழந்தமிழர்கள் எத்தகைய முக்கியத்துவம் தந்துள்ளனர் என்பதை அறிய முடிகிறது. இருப்பினும், தற்காலத்தில் நம்மைப் பாதிக்கின்ற பெரும்பாலான நோய்கள் அக்காலத்திலும் இருந்துள்ளன என்பதை இலக்கிய நூற்களில் குறிப்பிடப்பட்டுள்ள நோய்களைப் பற்றிய விபரங்கள் தெரிவிக்கின்றன.

அக்காலத்தில் மக்களைப் பீடித்த நோய்களின் பெயர்கள் பற்றிய குறிப்புக்கள் தமிழ் இலக்கிய நூற்களில் ஏராளமாகக் காணப்படுகின்றன. அவற்றுள் சில கீழே குறிப்பிடப்பட்டுள்ளன.

## 3. இலக்கிய நூற்களில் நோய்கள்

சிறுபஞ்ச மூலம் என்ற நூலில் பின்வரும் நோய்கள் குறிப்பிடப்பட்டுள்ளன.

1. சிக்கர் (தலைவலி Headache)
2. சிதடர் (பைத்தியம், பித்து - Insanity)
3. சிதலைப் போல் வாயுடையர் - Insanity
4. துக்கர் (காசநோய் - Tuberculosis)
5. துரு நாமர் (மூலம் - Piles)
6. தொக்குவரு நோய்கள் (தொத்து நோய்கள் - Infectious diseases)

**"சிக்கர் சிதடர் சிதலைபோல் வாயுடையர்**
**துக்கர் துருநாமர் துக்குங்கல் தொக்கு**
**வரு நோய்கள்"[8]**

அக்கால நோய்கள் பற்றி ஏலாதி என்னும் நூலில் கூறப்பட்டுள்ள மற்றொரு தொகுப்பில் காணப்படும் நோய்கள் வருமாறு:

1. கருஞ்சிரங்கு (Black itch)
2. வெண்டொழு நோய் (White Leprosy)

3. கல்வலி (சிறுநீரகக் கல்லடைப்பு (Vesicle Calculus)

4. பெருஞ்சிரங்கு (Scabies)

5. பெருவயிற்றுத்தீ (யானைப் பசி - Elephant Hunger)

"கருஞ்சிரங்கு வெண்டொழுநோய் கல்வலி – கயம்
பெருஞ்சிரங்கு பேர்வயிற்றுத்தீ யார்க் – கருஞ்சிரம்
மாற்றியு நீட்டவை தீர்த்தர்"[9]

அறச்செயல் புரிவோரை அணுகாது சில நோய்கள் என்று பரிந்துரைக்கும் இடைக்கால இலக்கியமான திருமந்திரம் என்னும் நூலில் சில நோய்கள் குறிப்பிடப்பட்டுள்ளன.

1. இருமல் (Caugh)

2. சோகை (Anaemia)

3. ஈளை (Phlegm)

4. வெப்பு (Feverishness)

5. கழலை (Tumour, Tubercle)

"இருமலும் சோகையும் ஈளையும் வெப்பும்
தருமஞ் செய்தவர் தம்பால் தகு
உருமிடி நாகமுரோணி கழலை
தருமஞ் செய்வார் பக்கல் தலக்கிலலே"[10]

தணிகைப் புராணத்தில் பின்வரும் நோய்கள் குறிப்பிடப் பட்டுள்ளன:

1. குட்ட நோய் (Leprosy)

2. குருதி ஒழுக்கு (Bleeding)

3. கால் பிணி (Callosity of the sole)

4. முயலகன் (வலிப்பு - Epilepsy)

5. வாத நோய் (Rheumatism)

6. சூலை (Arthritic Complaint)

"குட்டநோய் பெரும்பிணி குருதி கால்பிணி
முட்டிய முயலகன் முருக்கும் வாதநோய்
தொற்றுயிர் விளங்குறும் சூலை"[11]

இதே மாதிரியானதும், மற்றும் சில நோய்களும் பெரிய புராணத்தில் குறிப்பிடப்பட்டுள்ளன:

"குட்டநோய் பெருநோய் வாதம் குன்மநோய்
தொழுநோய் காசம்
முட்டிய சலநோய் கண்ணோய் முயலகன்
முடநோய்"[12]

1. குன்மம் (வயிற்று நோய் - Chronic Dyspepsia)

2. காசம் (சயரோகம் - Tuberculosis)

3. சலநோய் (நீரிழிவு - Diabetes)

4. கண்ணோய் (Eye Disease)

5. முடநோய் (முடக்குவாதம் - Paralysis)

பெரியபுராணத்தில் சூலை நோய் எனும் மற்றொரு நோய் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது.[13] இந்த நோய்க்கான அறிகுறிகள் கடுமையான வயிற்றுவலி, குடலிழுப்பு, நடுக்கம் முதலியனவாகும். சூலம் எனும் கூரிய ஆயுதத்தால் வயிற்றில் குத்தியது போன்று வயிற்றில் பயங்கரமான வலி ஏற்படுவதால் இந்நோய் சூலை நோய் எனக் குறிப்பிடப்படலாயிற்று.

"பெருஞ்சூலையவர் வயிற்றிடை புக்கலால்"[14]

இதே பெரியபுராணத்தில் சூலை நோயினால் ஏயர்கோன் கலிக்காமன் என்பவர் படும் வேதனைகளைக் குறிப்பிடும் சம்பவம் ஒன்று விளக்கப்பட்டுள்ளது:

"ஏயர்குரிசிலார் தம்பால் மேனி
வாடுறுசூலை தன்னை"[15]

மேற்கூறப்பட்ட அறிகுறிகளைக் கொண்டு நெடுஞ்செழியன் என்பவர் சூலை நோய் என்பது இரைப்பை அழற்சி (Peptic Ulcer)[16] என்றும் செல்வராஜ் என்பவர் மூட்டுவலி நோய் (Arthritic Complaint)[17] என்றும் கூறுகின்றனர்.

சம்பந்தர் புராணத்தில்[18] வெப்புநோய் எனும் ஒருவகை நோய் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. உடலில் மிதமிஞ்சிய வெப்பத்தினால் நின்றசீர் நெடுமாறன் என்ற பாண்டிய மன்னன் துன்புற்றதாகக் கூறப்பட்டுள்ளது.

இதே புராணத்தில் கொல்லிமழவன் என்பவனின் மகள் முயலகன் என்னும் ஒரு விநோதமான நோயினால் துன்பப் பட்டதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இந்நோயினால் பாதிக்கப் பட்டவர் உணர்ச்சியற்ற நிலையில் வலிப்பு நோயினால் அவதிப் படுவதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.[19]

தமிழ் நூற்கள் சிலவற்றில் சில நோய்கள் பற்றி அவற்றின் அறிகுறிகளுடன் குறிப்பிடப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டாக, **தொழுநோய்** என்பது **ஏலாதியில் வெண்டொழுநோய்** என்றும் **பேரூர் புராணத்தில்** தொழுநோய் என்றும் விவரிக்கப் பட்டுள்ளது. உலகெங்கிலும் பரவி அச்சுறுத்திக் கொண்டிருக்கும் இத்தொழுநோய் தொன்றுதொட்டே ஒவ்வொரு நாட்டிற்கும் ஒரு கடுமையான பிரச்சினையாக இருந்து வருகிறது. **ஆயுர்வேத ஸம்ஹிதாக்களில்** இந்நோய் **குஷ்டம்** என்றும் **மஹாகுஷ்டம்** என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.[20] **குட்டம்** என்பது குஷ்டம் என்பதன் தமிழ் வடிவம். சில தமிழ் நூற்களில் இந்நோய் அதன் அறிகுறிகளின் மூலமும், இந்நோயினால் பீடிக்கப்பட்டவரின் உடலில் ஏற்படும் கடுமையான விளைவுகளைக் கொண்டும் விவரிக்கப்பட்டுள்ளது. தொழுநோயில் பல வகைகளுள்ளன.

**கலித்தொகை** எனும் நூலில் **கருங்குட்டம்** என்ற ஒரு வகைத் தொழுநோய் பற்றி விவரிக்கப்பட்டுள்ளது. இந்நோயினால் பீடிக்கப்பட்டவர், கைகால் குறைந்து (காறக்குறைந்து), தலை முடியுதிர்ந்து (தீரத்தறைந்த தலை) தோல் வெளிறி (கறைபட்டு)த் துன்புறுவர்.

> "தீரத்தறைந்த தலையும் தம்கம்பலும்
> காறக்குறைந்த கறைபட்டு"[21]

**யசோதர காவியத்தில்** மற்றுமொரு வகையான தொழுநோய் பற்றி விவரிக்கப்பட்டுள்ளது. இந்நோயினால் பாதிக்கப்பட்டவரின் உடல் அழுகிச் சிதைந்துவிடும். (அழுகி உடல் நைந்து உடல் நஃகும்); கைகால்கள் குறைபட்டு (அவயவத்து ஒழுகுபுண்) அழுகி துர்நாற்றத்துடன் எப்போதும் சீழ் வடிந்து கொண்டேயிருக்கும் (முழுகு சீயில் முடைப்பொலி மேனி); இதன் மூலம் வேறு பல நோய்கள் ஏற்பட வழிவகுக்கும் (பல்லின நோய்களும் துன்னினால்)

> "அழுகி நைந்து உடல் நஃகும் அவயவத்து
> ஒழுகு புண் இவருள் இனலாயினால்
> முழுகு சீயில் முடைப்பொலி மேனியால்
> தொழுவால் பல்லின நோய்களும் துன்னினால்"[22]

**வெண்டொழுநோய்** என்பது மற்றொருவகைத் தொழு நோய். இதனால் பாதிக்கப்பட்டவரின் உடல் முழுவதும் தோல் வெண்மையாக மாறிவிடும். **ஏலாதியில்** இந்நோய் பிறசில

நோய்களுடன் குறிப்பிடப்பட்டுள்ளது. வெண்குட்டம் என்று கூறப்படும் இவ்வெண்தொழு நோய் உடம்பிலுள்ள தோல் சிதையா வண்ணம் தோல் முழுவதும் இயல்பு நிறம் மாறி திட்டுத்திட்டாக வெண்மை படரும் தன்மை கொண்டது.[23]

இந்நோய்க்கான காரணங்கள் பற்றிய முழு ஆய்வும் இந்நோயினைக் குணமாக்கத் தேவையான மருந்துகள் தயாரித்து சிகிச்சையளிக்கும் முறைகளும் 'அங்காரகன் அமர்ந்த பாவம்' என்ற தலைப்பில் அகத்தியரால் விவரிக்கப்பட்டுள்ளன.[24]

Fundamentals of Ayurvedic Medicine என்னும் ஆயுர்வேத மருத்துவத்தின் அடிப்படைத் தத்துவங்களை விவரிக்கின்ற நூலில் தொழுநோயைக் குணப்படுத்தவல்ல மருந்துகளெனக் குறிப்பிடப்பட்டுள்ள வாசாஹரிதகி, பல்லாடகா ஹரிதகி என்னும் மருந்துகள் கி.பி. 11ஆம் நூற்றாண்டில் திருமுக்கூடலில் அமைக்கப்பட்டிருந்த வீரசோழன் ஆதுலர்சாலை என்ற மருத்துவமனையில் ஒராண்டிற்குத் தேவையான அளவில் சேமித்து வைக்கப்பட்டிருந்தன என்பது குறிப்பிடத்தக்கதொரு செய்தியாகும்.

எனவே, இடைக்காலத்தில் தமிழ்நாட்டில் இந்நோய் பரவியிருந்துள்ளதெனவும், அதைக்குணமாக்கவல்ல சக்திவாயந்த மருந்துகளைக் கொண்டு இந்நோய்க்கான சிகிச்சைகள் மேற்கொள்ளப்பட்டிருந்தனவென்றும் தெரியவருகிறது. (இது பற்றிய விவரங்களுக்குப் பிரிவு-4இல் மருந்து எனும் தலைப்பின் கீழ் பார்க்கவும்)

ஏலாதியில் கூறப்பட்டுள்ள கருஞ்சிரங்கு, பெருஞ் சிரங்கு என்பன சாதாரணமாகத் தோலின் மேல் எரிச்சலுடன் ஏற்படக்கூடிய தோல்சம்பந்தப்பட்ட நோய்களாகும்.

தோலின் மேல் திடீரென கொப்புளங்களேற்பட்டு அவை நிரந்தரமாகக் கரும்பளுப்பு அல்லது கறுப்பு நிறத்துடன் தோலின் மேல் தழும்புகள் ஏற்படுத்துவது இந்த நோய்களின் அடையாளங் களாகக் குறிப்பிடப்பட்டுள்ளன.[25] குணமடைந்தபின் கறுப்புத் தழும்புகளை விட்டுச் செல்வது கருஞ்சிரங்கு என்றும் பெரிய பருக்களுடன் வெடிக்கின்ற இத்தகைய நோய் பெருஞ்சிரங்கு என்றும் அழைக்கப்படுகின்றன.

*ஏலாதியில்* **கல்வலி**[26] என்னும் மற்றொரு நோய் குறிப் பிடப்பட்டுள்ளது. இது சிறுநீரகத்தைச் சரியாக இயங்கவிடாமல் அடைத்துக் கொள்கின்ற **கல் அடைப்பு** எனக் கூறப்படும் சிறுநீரகக் கோளாறைக் குறிக்கும். இது உலகின் பிற பகுதிகளில் சிறுநீரகக் கல் நீக்கும் அறுவை சிகிச்சை (Lithotomy) மூலம் குணப் படுத்தப்படுகிறது. ஆனால் தமிழ்நாட்டில் இந்நோய் சிறுநீரகக் கோளாறுகளை நீக்கவல்ல தசமூலாஹரிதகி, கண்டூரா, மண்டூகர வடிகா போன்ற மூலிகை மருந்துகளால் குணமாக்கப்படுகின்றன. மேலே குறிப்பிடப்பட்ட திருமுக்கூடல் மருத்துவமனையில் இந்த மூலிகை மருந்துகள் ஓராண்டிற்குத் தேவையான அளவில் சேமித்து வைக்கப்பட்டிருந்தன எனும் கல்வெட்டுச் செய்தி இதற்குச் சான்று பகர்கின்றது (பிரிவு - 4ஐப் பார்க்க).

ஏலாதியில் கூறப்பட்டுள்ள மற்றொரு நோய் **பேர்வயிற்றுத்தீ**[27] என்பதாகும். பசியுள்ள யானை வேண்டுவது போன்று பெருமளவிலான உணவைக் கொண்டும் தீர்க்க முடியாத கடும்பசியினால் இந்நோய் ஏற்படுகின்றது. இந்நோய் கண்டவரின் வயிற்றில் தீயினால் எரியுண்டது போன்ற கடும் எரியுணர்வு தோன்றி வலியேற்படும். இதன் காரணமாக, இந்நோய் **யானைத்தீ நோய்** என்று தமிழ்க் காப்பியமான **மணி மேகலையில்** குறிப்பிடப்பட்டுள்ளது. இந்த யானைத் தீ நோயினால் துன்புற்ற மக்களின் அரும்பசியினைப் போக்க, மணிமேகலை தனது கையிலேந்தியிருந்த அமுதசுரபி என்னும் பாத்திரத்திலிருந்து உணவை அள்ளிக் கொடுத்து நோய் தீர்த்தாகக் கூறப்பட்டுள்ளது.

"இன்று நீர் கையிலேந்திய பாத்திரம்
ஒன்றே யாயினும் உண்போர் பலரால்
ஆனைத்தீ நோய் அரும்பசி களைய"[28]

*சிறுபஞ்சமூலம்*[29] என்ற நூலில் **சிதடர்**[30] என்னும் ஒருவகை நோய் குறிப்பிடப்பட்டுள்ளது. தமிழ்க் கலைக் களஞ்சியம் இந்நோயினால் அவதிப்படுபவரைப் பித்தன் (Insane Person) என்றும், குருடன் என்றும் குறிப்பிடுகின்றது. ஆனால் குருட்டுத் தன்மையென்பது உடலூனத்தைக் குறிக்கும் சொல்லாகும். நூலின் வரிகளில் காணப்படும் பிற சொற்கள் யாவும் பலவித நோய்களைக் குறிப்பதால் **சிதடர்** எனும் இந்தச் சொல்லும் **பித்தன்** என்ற பொருளிலேயே பயன்படுத்தப் பட்டிருக்க வேண்டும். ஆகவே, **சிதடர்** எனும் சொல் மனநலம் குன்றிய **பித்தன்** ஒருவனைக் குறிக்கும் சொல்லாகும்.

ஒருவனுடைய செல்வ வளத்திற்கு (ஆக்கம்) முக்கிய ஆதாரம் அவனது **மனநலமாகும்** என்று திருவள்ளுவர் தமது குறளில் குறிப்பிட்டுள்ளார்:

**"மனநலம் மன்னுயிர்க்கு ஆக்கம்"**[31]

*மனநலம் குன்றிய ஒருவனுடைய (சிதடர்) நடவடிக்கை யானது இயல்பு நிலைக்கு மாறுபட்டிருக்கும்; ஆனால் அவனது இயல் மீறிய நடவடிக்கை பற்றி அவன் ஏதும் உணரமாட்டான்.* இத்தகைய மனநோயாளி ஒருவன் **மணிமேகலையில் மையலுற்றோன் (பித்தன்)** என்று சித்தரிக்கப்பட்டுள்ளான்.

*பித்தன் ஒருவன் (மையலுற்ற மகன்)* தெருவில் பொது *மக்களின் மத்தியில்* நெறிதவறி இயல்புமீறிய செயலில் *ஈடுபட்டிருந்தான்; அவன் எருக்கு* (Calotropis Gigantea) *மாலையைக் கழுத்தில் அணிந்திருந்தான் (முகில் எருக்கு மாலையன்); சிறுசிறு துண்டுத்துணி (சிதவல் துணி)களையும் ஒரு மரத்தில் ஒடித்தெடுக்கப்பட்ட கிளைகளையும் (நெடுஞ்சிரைத் தாதர்வில் பொடித்து) அணிந்திருந்தான்; உடல்முழுவதும் திருநீற்றையும் (வெண்பலி) சந்தனத்தையும் (சாந்தம்) பூசியிருந்தான், பண்பற்ற மொழிகளைப் பலரிடமும் பேசிக் கொண்டிருந்தான் (பண்பில் கிளவி பலரோடு உரைத்து); அழுதான் (அழூஉம்); கீழே விழுந்தான் (விழூஉம்), அரற்றினான்; தொழுதான் (தொழூஉம்); பின் எழுந்தான் (எழூஉம்); சுழன்றான் (சுழலும்); ஓடினான் (ஓடலும்); பின் தெருவின் ஒரு பக்கம் ஒதுங்கிச் சிறிது நேரம் நின்றான் (ஒரு சிரல் ஒதுங்கி நீடலும்); பின் அவனது சொந்த நிழலுடன் தானே சண்டையிட்டான் (நீடு நிழலோடு மாரலும்);*

"குவிமுகில் எருக்கில் கோத்த மாலையன்
சிதவல் துணியோடு சேனான்கு நெடுஞ்சிரைத்
தாதர்வில் பொடித்துக் கட்டிய உடையினன்
வெண்பலி சாந்தம் மெய்முழு தூரியிப்
பண்பில் கிளவி பலரோடும் உரைத்து ஆங்கு
அழூஉம் விழூவும் அரற்றுங் கூவும்
தொழூஉம் எழூஉம் சுழலும் சுழலும்
ஓடலும் ஓடும் ஒருசிரல் ஒதுங்கி
நீடலும் நீடு நிழலோடு மாரலும்
மையலுற்ற மகன்"[32]

*மனநலங் குன்றிய மனநோயாளி ஒருவனின் மிகவும் பரிதாபகரமான நிலையினை மேற்கண்ட பாடல் வரிகள் சித்தரிக்கின்றன.*

### 4. மனநோய்ச் சிகிச்சையில் கோயில்களின் பணிகள்

தமிழ்நாட்டில் கோயில்கள் வழிபாட்டுத் தலங்களாக மட்டுமின்றி, உடல் மற்றும் உளரீதியான நோய்களுக்கும் மத ரீதியான நிவாரணங்கள் அளிக்கும் இடங்களாகவும் இருந்து வந்திருக்கின்றன. அவற்றுள் சில உளநிலைக்கோளாறுகளால் துன்புற்ற நோயாளிகளைப் பெரிதும் கவர்ந்துள்ளன. திருச்சி அருகேயுள்ள குணசீலம், கோயம்புத்தூர் அருகேயுள்ள திருமுருகன் பூண்டி, செங்கல்பட்டு அருகேயுள்ள அனுமந்த புரம், சோழிங்கர் அருகேயுள்ள சோழசிம்மபுரம் ஆகிய இடங்கள் மனநலம் குன்றிய நோயாளிக்கு மதரீதியான சிகிச்சை வழங்கும் இடங்களாகத் திகழ்கின்றனவென்று உளவியல் வல்லுநர் சோமசுந்தரம் சுட்டிக்காட்டுகின்றார்.[33] மனநோயாளிகளுக்கு இத்தலங்களில் அளிக்கப்படும் மதரீதியான சிகிச்சை பற்றி அவர் பின்வருமாறு விவரித்துக் கூறியுள்ளார்.

நரம்பியல் மற்றும் உளவியல் கோளாறுகளினால் துன்புறும் நோயாளிகள் திருச்சி அருகே குணசீலம் என்னுமிடத்திலுள்ள வைணவக்கோயிலில் குறைந்தது ஒரு மண்டலமாவது (48 நாட்கள்) தொடர்ச்சியாகத் தங்கியிருந்து சிகிச்சை பெறுகின்றனர். நோயாளிகள் நாள்தோறும் காலையில் அருகிலுள்ள காவிரியாற்றில் குளித்துவிட்டு, கோயிலில் நடைபெறும் முக்கால பூசைகளிலும் கலந்து கொள்ள வேண்டும். பூசைக்குப் பின்னர் கோயிலதிகாரிகள் பரிந்துரைக்கின்ற கட்டுப்பாடான உணவுகளையே உண்ண வேண்டும்.

கோயம்புத்தூர் அருகேயுள்ள திருமுருகன் பூண்டி ஆலயம். (படம் 27) ஆயிரம் ஆண்டுகட்கு முன்னர் கொட்கைச்



படம் 27 முருகநாதர் ஆலயம் (திருமுருகன் பூண்டி)

சோழன் முதலாம் விக்ரமனால் கட்டப்பட்டது. அங்கு **பிரம்ம தீர்த்தம், ஞானதீர்த்தம், சுப்பிரமணிய தீர்த்தம்** என்னும் மூன்று புனித தீர்த்தக் குளங்கள் உள்ளன. மனநோயாளியை நாள் தோறும் இம்மூன்று தீர்த்தங்களிலும் குளிக்கச் செய்து கோயிலை வலம் வரச் செய்கின்றனர்.

செங்கல்பட்டு அருகேயுள்ள அனுமந்தபுரத்தில், மன நோயாளிகள் அங்குள்ள கோயிலுக்கருகே அமைந்திருக்கும் ஓய்வு விடுதியில் தங்கவைக்கப்படுகின்றனர். அவர்கள் நாள் தோறும் காலையில் கோயில் குளத்தில் முழுகிக் குளித்துப் பின்னர் அங்குள்ள எல்லாக் கோயில்களுக்கும் சென்று தெய்வங்களை வழிபடவேண்டும்.

அரக்கோணம் தாலுகாவில் சோழசிம்மபுரம் அருகே அமைந்துள்ள கடிகாச்சலம் என்ற இடத்தில் **பெரியமலை, சின்னமலை** என இரு செங்குத்துக் குன்றுகள் உள்ளன. இவற்றின் மீது யோக நரசிம்மமூர்த்தி, யோக ஆஞ்சனேயர் என இரு தெய்வங்கள் வீற்றிருக்கின்றனர். மனநோயாளிகள் தினம் காலையில் வெறும் வயிற்றுடன் பெரியமலைக்குச் சென்று நரசிம்மமூர்த்தி சன்னிதானத்தை 108 முறை வலம் வர வேண்டும்; பின்னர் மாலையில் சின்னமலை சென்று இதேபோன்று 108 முறை வலம் வரவேண்டும். நோயாளிகள் இச்சடங்கு முறையினைத் தொடர்ந்து 12 நாட்கள் செய்து வர வேண்டும். இரவில் கோயில் மண்டபத்தினுள்ளேயே படுத்துறங்க வேண்டும். இரவில் அக்கோயிலின் உற்சவமூர்த்தி நோயாளியின் கனவில் காட்சியளித்தால் அவன் குணமடைந்து விடுவதற்கான நல்ல சகுனமாகக் கருதவேண்டும். இம்மரபு ஆதிகாலத்தில் மேலை நாடுகளில் நிலவிவந்த **கோயில் தூக்கம்** (Temple Sleep) என்னும் மரபினை ஒத்துள்ளது.

## 5. உடல் ஊனங்கள்

உடல் ஊனமுற்றவர்களும் குறைபாடுடையவர்களும் சங்க காலத்தில் இருந்ததாக இலக்கிய ஆதாரங்கள் காட்டுகின்றன.

**சிதடு** (குருடு), **உறுப்பில் பிண்டம்** (உருவமில்லாப் பிண்டம்), **கூன், குறள்** (குள்ளம்), **ஊம்** (ஊமை), **செவிடு, மா** (விலங்கு போன்ற பிறவி), **மருள்** (அறிவில்லாப் பிறவி) என எட்டுவகையான குறைப் பிறவிகள் பற்றிப் **புறநானூறு** சுட்டிக் காட்டுகின்றது. மேலும் இந்த எட்டுவகையான அவப்பேறுகளும் உயிர்வாழும் மக்களுக்கு எந்த வகையிலும் பயனற்ற **எண்பேரச் சங்களாகும்** என்றும் அந்நூல் கூறுகின்றது.

"சிறப்பில் சிதடு உறுப்பில் பிண்டமும்
கூனும் குறளும் ஊமும் செவிடும்
மாவும் மருளும் உலப்பட வாழ்நர்க்கு
எண்பேரச்சம்"[34]

தமிழ்க் காப்பியமாகிய சிலப்பதிகாரம், கூன், குறள், ஊம், செவிடு ஆகிய குறைபாடுகளைக் குறிப்பிட்டு, இலஞ்சி மன்றம் என்றதொரு புண்ணிய தீர்த்தமொன்றுள்ளதென்றும், அத்தீர்த்தத்தில் நீராடி அம்மன்றத்தை வலம் வந்தால் மேற்கூறப் பட்ட குறைபாடுகள் யாவும் களையப்பட்டுவிடு மென்றும் குறிப்பிடுகின்றது.

"கூனும் குறளும் ஊமும் செவிடும்
அழகுமேனி யாளரு முழுகின ராடிப்
பழுதில் காட்சி நன்னிறம் பெற்று
வலஞ்செயக் கழியு இலஞ்சி மன்றம்"[35]

இன்று போல் அன்றும் பலவிதமான நோய்களாலும் உடல் ஊனங்களாலும் மக்கள் பாதிக்கப்பட்டிருந்தனரென்று தமிழ் இலக்கிய நூற்கள் நன்கு வெளிப்படுத்தியுள்ளன. அக்காலத்தில் காணப்பட்ட நோய்கள் மற்றும் பிறவிக் குறை பாடுகள் யாவும் இன்றும் எங்கும் பரவியிருத்ததலைக் காணலாம். இந்நோய்கள் யாவற்றின் தீர்வுக்கான மருந்துகளையும் அவற்றின் சிகிச்சை முறைகளையும் அக்கால மக்கள் நன்கு அறிந்திருந்தனர். பழங்காலத்திலும் இடைக்காலத்திலும் சகலவிதமான நோய்களின் சிகிச்சை முறைகளில் மக்கள் பயன்படுத்திய மருந்துகள் பின்வரும் பிரிவின் கீழ் 'மருந்து' என்னும் தலைப்பில் விவரிக்கப்பட்டுள்ளன.

# பிரிவு 4

## மருந்து

### 1. மருந்து – வரையறை

இலக்கிய நூற்கள் மற்றும் மருத்துவ நூற்கள் பலவற்றிலும் மருந்து பற்றி அறிஞர்கள் பலரும் பலவாறாக வரையறுத்துக் கூறியுள்ளனர். பழந்தமிழ்ப் புலவர் பலரும் தங்களுடைய நூற்களில் ஒரு நல்ல மருந்தின் நற்பண்புகள் பற்றிக் கூறி வாய்ப்புள்ள இடங்களிலெல்லாம் தங்களுடைய மருத்துவப் புலமையை அழகுற வெளிப்படுத்தியுள்ளனர்.

நோயாளியின் துன்பத்தையும் வேதனையையும் துடைப்பது மருந்து என்று நற்றிணை கூறுகிறது.

"அருந்துயர் அவலம் தீர்க்கும் மருந்து"[1]

கலித்தொகையின் குறிஞ்சிக்கலியிலும் மருந்துக்கு இது போன்றதொரு வரையறை கூறப்பட்டுள்ளது. நோயாளியின் அருந்துயரையும் கடும் வேதனையையும் தீர்ப்பது மருந்து ஆகும்.

"அருந்துயர் ஆரமர் தீர்க்கும்
மருந்து"[2]

உயிர் காப்பது மருந்து என்று மருந்தினை உயிரைப் பாதுகாக்கும் பொருளாக வரையறுத்துள்ளது பாலைக் கலி.

"இன்னுயிர் செய்யும் மருந்து"[3]

ஆயினும் மருந்துக்கு மாமுனி திருவள்ளுவர் வழங்கி உள்ள வரையறையே மிகவும் குறுகியதாகவும் பொருளில் முழுமை பெற்றதாகவும் கருதப்படுகிறது. மருந்தின் முக்கியத் துவத்தைக் கருத்திற்கொண்டு அதன் பல்வேறு பண்புகளை விளக்கிக் கூறுமுகமாக மருந்து என்ற தலைப்பில் ஒரு தனி அதிகாரமே ஒதுக்கியுள்ளார். மருந்து என்பது நோயாளி (உற்றவன்), மருத்துவன் (தீர்ப்பான்), மருந்து, தாதி (உழைச் செல்வான் - Nurse) என்ற நான்கு கூறுகளைக் கொண்டதென வரையறுத்துள்ளார். இந்நாற்கூறுகளும் ஒன்றோடொன்று இயைந்து செயற்பட்டால் மட்டுமே நோய் குணமடையுமென்று இதன்மூலம் வலியுறுத்தியுள்ளார்.

"உற்றவன் தீர்ப்பான் மருந்து உழைச்செல்வான் என்று
அப்பால் நாற்கூற்றே மருந்து"[4]

**உழைச்செல்வான்** என்ற சொல்லுக்கு மருத்துவர் கண்ணப்பன் வேறொரு விதமாகப் பொருள் கூறுகிறார்.[5] உழைச் செல்வான் என்னும் சொல் **உடலிலுள்ள பிணித்தடை காப்புப் பொருட்களைக்** (Immunological Substances) குறிக்குமென்று பொருள் கூறிய அவர் அவ்வாறு பொருள் கூறியதற்கான விளக்கம் எதுவும் கூறவில்லை; எனினும் இடம்பொருள் கருதி அவருடைய கருத்தும் ஏற்புடைத்தாயிருக்கின்றது.

பிற்காலச் சங்க இலக்கியமான பெருங்கதையில்[6] **உழைச் சுற்றாளர்** என்னும் சொல் காணப்படுகிறது. சிறந்த உரையாசிரிய ரான சாமிநாத ஐயர் **உழைச்சுற்றாளர்** எனும் இச்சொல்லுக்கு **நோயாளியின் அருகிலமர்ந்து பணிபுரிபவர்** என்று பொருள் கூறுகிறார். தமிழ்ச் செல்லகராதியிலும்[7] இதே பொருள்பட நோயாளியின் அருகிலமர்ந்து மருந்து முதலியன கொடுப்பவர் என்று விளக்கமளிக்கப்பட்டுள்ளது. எனவே, **உழைச்செல்வான்** என்னும் இச்சொல்லானது, நோயாளிக்குத் தேவையான பணி விடைகளை முடித்துச் செல்பவன் (செல்வான்) என்ற பொருளில் பயன்படுத்தப்பட்டிருக்க வேண்டும் என்று கொள்ளலாம்.

மருத்துவ சிகிச்சையில் மேற்கூறப்பட்ட நான்கு கூறுகளின் ஒருமித்த சேவையின் அத்தியாவசியத் தேவையினை வலியுறுத்தித் திருவள்ளுவரும் ஆயுர்வேத மாமருத்துவர் சுசுருதாவும் கூறிய கருத்துக்களின் நெருங்கிய ஒப்புமை ஆச்சரியப்படத்தக்கதா யுள்ளது. மருத்துவன் **(பிஷக்)**, மருந்து, தாதி (உபதாதா - Nurse), நோயாளி (ரோகி) ஆகிய நான்கும் நான்கு தூண்கள் போன்று செயல்பட்டு சிகிச்சையின் வெற்றிக்குக் காரணமாகின்றன என்று சுசுருதா கூறியுள்ள கருத்து[8] திருவள்ளுவருடைய கருத்துடன் நெருங்கிய ஒப்புமை கொண்டுள்ளதென்பது தெற்றென விளங்கும்.

மாபெரும் சித்தராகிய திருமூலர் தனது திருமந்திரத்தில் மருந்து பற்றி மிகவும் சுவையானதொரு வரையறை தந்துள்ளார். அவரது கருத்துப்படி, **நோய்** என்பது **உடல்நோய்** என்றும் **உளநோய்** என்றும் இருவகையாக வகைப்படுத்தப்படுகின்றது. மருந்து என்பது உடல்நோயினைத் தவிர்ப்பது (மறுப்பது உடல்நோய்); உளநோயினைத் தவிர்ப்பது (மறுப்பது உளநோய்); இனி நோய் வராமல் தடுப்பது (இனி நோய் வராதிருப்பது); மரணத்தைத் தடுப்பது (மறுப்பது சாவை) என்பது திருமூலர் கூறும் வரையறையாகும்.

"மறுப்பது உடல்நோய் மருந்து எனலாகும்
மறுப்பது உளநோய் மருந்து எனலாகும்
மறுப்பது இனிநோய் வராதிருப்ப
மறுப்பது சாவை மருந்து எனலாகும்"[9]

## 2. மூலிகை மருந்து

பழங்காலத் தமிழ் தேசத்தில் மருத்துவம் மிகுந்த அளவில் வளர்ச்சியடைந்திருந்தது. மக்களும் மூலிகைகள் பற்றியும் மூலிகைச் சிகிச்சைகள் பற்றியும் நன்கு பழக்கப்பட்டிருந்தனர். எனவே, தமிழ்ப் புலவர்களும் மருத்துவ அறிவு பெற்றிருந்ததோடு நலவாழ்வின் ஒழுக்கமுறைமை மற்றும் நீதிநெறிக்கோட்பாடுகள் பற்றித் தாங்கள் எழுதிய நூற்களின் பெயர்களை மூலிகைப் பெயர்களால் தலைப்புகளிட்டனர். மருத்துவ நெறிகளுடன் ஒழுக்க நெறிமுறைகளைக் கலந்து கூறியமையால் மக்கள் அவற்றை எளிதில் புரிந்து கொண்டு கடைப்பிடிக்க ஏதுவாக இருந்தன.

**திரிகடுகம், சிறுபஞ்சமூலம், ஏலாதி** என்பன இவ்வகை சார்ந்த நன்னெறி நூற்களாகும். இவை முறையே **மூன்று, ஐந்து, ஆறு** மூலிகை மருந்துகளின் தொகுப்புக்களைத் தலைப்புக்களாகக் கொண்டவையாகும். மூலிகை மருந்துகளைச் சரியான முறையில் உட்கொள்ளுவதன் மூலம் உடலிலுள்ள நோய்கள் குணமாகி உடல்நலம் பாதுகாக்கப்படுதல் போன்று இந்நூற்களில் கூறப் பட்டுள்ள நல்லொழுக்க நெறிமுறைக் கோட்பாடுகளை முறையாகப் பின்பற்றி நடப்பதன் மூலம் துயருற்ற மனமும் ஆன்மாவும் குணமடைந்து மனநலமும் ஆன்மீக நலமும் பெற முடியும்.

மிகவும் உயர்நிலை மருத்துவ அறிவினைப் பெற்றுள்ள தற்கால மருத்துவர்களுக்குப் புதிராகத் தோன்றக் கூடியதும் தனிச்சிறப்புமிக்கதும் மிக முக்கியமானதுமான நோய் நீக்கும் சக்திகளைக் கொண்ட சில அபூர்வ மூலிகை மருந்துகள் அக்காலத்தில் இருந்தமை பற்றிய விபரங்களை சித்தர்களும் கம்பரும் தங்களது நூற்களில் குறிப்பிட்டுள்ளனர்.

மருத்துவர் கண்ணப்பரின் கூற்றுப்படி, பழங்காலத் தமிழ்நாட்டில் வாழ்ந்து வந்த சித்தர்கள் கொங்கு நாடு, குடகுநாடு, சேரநாடு ஆகியவற்றில் கிடைக்கக்கூடியவையாக அவர்கள் கருதுகின்ற எட்டுவகையான மிகவும் அபூர்வமானதும் விநோதமானதுமாகிய மூலிகைகள் பற்றித் தங்களது மருத்துவ நூற்களில் அறிமுகம் செய்துள்ளனர். இந்த எட்டுவகை மூலிகைகளும் வளரக்கூடிய இடங்களுக்கு அவர்கள் **அட்ட மங்கலம்** எனப் பெயரிட்டுள்ளனர்.[10]

மருத்துவர் கண்ணப்பரின் கூற்றுப்படி இந்த எட்டு வகை மூலிகைகளின் பெயர்கள் பின்வருமாறு:

1. சுவர்ணகரணி : ஒன்பது வகையான உலோகங்களையும் ஒன்பது வகையான பாஷாணங்களையும் உருக்கக்கூடிய தன்மை வாய்ந்தது.

2. சஞ்சீவகரணி : இழந்த உயிரை மீட்டுத் தருவது.

3. சல்லியக் கரணி : உடலின் துண்டிக்கப்பட்ட உறுப்புக் களை ஒட்டவைத்து மீண்டும் முன் போல் செயல்படச் செய்வது.

4. விசல்யகரணி : உடலைத் துளைக்கும் ஆயுதத் துகள்களினால் உடல் அழிவதினின்றும் உடலைப் பாதுகாப்பதுடன் அத்துகள் களை அழிக்கும் தன்மை கொண்டது.

5. சந்தான கரணி : உயிர்த் தோன்றலுக்கான அடிப்படை மருந்து.

6. அமிர்த சஞ்சீவி : ஆயுட் காலத்தை நீட்டிக்க உதவுவது.

7. சாமானிய கரணி : சித்துவின் பணியினைச் செய்வது.

கண்ணப்பர் அளித்துள்ள பட்டியலில் மேற்கண்ட ஏழு மூலிகைகள் மட்டுமே இடம்பெற்றுள்ளன; எட்டாவது மூலிகை காணப்படவில்லை. ஆனால் இதே போன்ற மற்றுமிரு மூலிகைகள் கம்பராமாயணத்தில் இடம்பெற்றுள்ளன. அவையாவன:

8. உடம்பின் பகுதியோ அல்லது முழுமையுமோ சிதை யுண்டிருந்தால் அதனை முன்னர் இருந்த நிலைக்கு அதன் மூல வடிவத்துடன் மீண்டும் கொண்டுவரும் மூலிகை.

9. சாகுந்தருவாயிலிருக்கும் உயிரை மீட்டுக் கொணரும் மூலிகை.

மேற்கூறப்பட்ட 8வது, மற்றும் 9வது மூலிகைகள் மருத்துவர் மூலிகைமணி வேங்கடேசன் அவர்களால் சாவல்ய கரணியென்றும், மிருதசஞ்சீவினியென்றும் குறிப்பிடப் பட்டுள்ளன."

அவருடைய கூற்றுப்படியும் தமிழ்க்கலைக் களஞ்சியத்தில் குறிப்பிட்டுள்ள படியும் மேலே தரப்பட்ட

பட்டியலில் கூறப்பட்ட 2 மற்றும் 3வது பண்புகளைப் பெற்றுள்ள மூலிகைகள் முறையே **சந்தானகரணி**யென்றும் **சல்லியகரணி**யென்றும் அழைக்கப்படுகின்றன.[12]

மேற்கூறப்பட்ட மூலிகை மருந்துகளின் மாபெரும் சிறப்புக்களை மனிதிற்கொண்டு சிலப்பதிகார உரையாசிரியர் அடியார்க்கு நல்லார்[13] தம்பதியர்க்கிடையேயுண்டாகும் ஊடல் பற்றி விரித்துரைக்கும் போது இத்தகு ஊடல்களினால் தம்பதியர்க்கு நேரும் துயரங்களைக் களையத் தக்கதொருமருந்து **சல்லியக் கரணி, சந்தான கரணி, சாமந்திய கரணி** மற்றும் **மிருத சஞ்சீவினி** போன்ற சக்திமிகு மருந்துகளைக் கொண்டுள்ள இப்பரந்த உலகினில் காணமுடியவில்லையே என்று வருத்தத்துடன் குறிப்பிடுகின்றார். மேலும் அவர் மிருத சஞ்சீவினி என்னும் மருந்து பிரிந்து கொண்டிருக்கும் உயிரினைக் கண் சிமிட்டும் நேரத்திற்குள் மீட்டு நிலை நிறுத்தும் தன்மை பெற்றிருத்தலால் அதை **உயிர் மருந்து** என்றும் குறிப்பிடுகின்றார்.[14]

இம்மருந்துகளின் பெயர்கள் எவ்வாறிருப்பினும், இத்தகைய சிறப்புக்கள் பெற்ற மிகவும் பயனுள்ள மூலிகை மருந்துகள் அக்காலத்தில் இருந்துள்ளனவென்பதும், இம்மூலிகைகளைச் சித்தர்கள் அடையாளம் கண்டறியும் திறன் பெற்றிருந்தனரென்பதும் குறிப்பிடத்தக்கதோர் செய்தியாகும். ஆனால் மேற்கூறப்பட்ட ஒன்பது வகை அரிய மூலிகை மருந்துகளுள் ஐந்து வகை மூலிகை மருந்துகள் பற்றிய விவரங்களுடன் **கம்பராமாயணத்தில்**[15] குறிப்பிடப்பட்டுள்ளனவென்பது குறிப்பிடத்தக்க மற்றொரு செய்தியாகும்:

1. *மாண்டாரை உய்விக்கும் மருந்து ஒன்று : (இறந்தவரின் உயிரை மீட்டுத் தரும் மருந்து)* - **சஞ்சீவகரணி.**
2. **மெய்வேறு வகிர்களாகக் கீண்டாலும் பொருந்துவிப்பதொருமருந்து** : (துண்டிக்கப்பட்ட உடலின் பாகங்களைப் பொருத்திமுன் போல் இயக்குவிக்கும் மருந்து) - **சல்லிய கரணி**
3. **படைக்கலங்கள் கிளர்ப்பதொன்றும்** : (உடற்குள் புகுந்த ஆயுதத் துகள்களை வெளிக்கொணரும் மருந்து) - **விசல்ய கரணி.**
4. **மீண்டேயும் தம் உருவே அருள்வதோர் மெய்ம்மருந்து** : (சிதைந்த உடல் அல்லது உடலின் பாகங்களை முன்னிருந்த

உருவ வடிவமைப்புக்கு மீட்டுத் தரும் மருந்து) - **சாவல்ய கரணி.**

மேற்கூறிய இதே விளக்கங்களுடன் கூடிய மற்றுமொரு பாடலும் இடம்பெற்றுள்ளது.[15அ]

**“சல்லிய மகற்றுவ தொன்று**
(உடலில் தைத்த ஆயுதங்களைப் போக்குவது)

**சந்துகள் புல்லுறப் பொருந்துவ தொன்று**
(மூட்டு வாய்களை ஒன்றுபடுமாறு இயைப்பது)

**போயின நல்லுயிர் நல்குவ தொன்று**
(பிரிந்து போன சிறந்த உயிரை மீட்டுத் தருவது)

**நன்னிறந் தொல்லைய தூக்குவ தொன்று”**
(நல்ல உடலை முன்னிருந்தபடி செய்வது)

மேலும் உருக்காட்டுப் படலத்தில், சாகுந் தருவாயிலுள்ள உயிரினை மீட்டுத் தரும் தன்மை கொண்ட மற்றுமொரு மருந்து குறிப்பிடப்பட்டுள்ளது.

**“வீயும் உயிர் மீளும் மருந்து”**[16] மிருத சஞ்சீவினி

இந்த மிருத சஞ்சீவினியானது ‘உணர்விழந்த மயக்கநிலை’ (Coma)யினையும் குணமாக்கவல்லதெனவும் குறிப்பிடப் பட்டுள்ளது.[17]

கோயம்புத்தூரைச் சேர்ந்த அறிவியல் வல்லுநர் ஜி.டி. நாயுடு,[18] 1968ஆம் ஆண்டு ஜனவரித் திங்களில் சென்னையில் நடைபெற்ற இரண்டாம் உலகத் தமிழ் மாநாட்டின்போது செய்து காட்டிய செயல்முறை விளக்கச் சம்பவமொன்றினை இங்கு குறிப்பிடுவது சாலப் பொருத்தமாகயிருக்கும்.

**சதசஞ்சீவினி** என்றதொரு காய்ந்த வேருடன் கூடிய மூலிகைச் செடியினை கொதிக்கும் நீரில் அமிழ்த்தியவுடன் அதன் இலைகள் யாவும் புத்தம்புதிய இளம் பசுந்தளிராக மாறியதுடன், அதன் வேர்கள் முன்னிருந்த நீளத்தைப் போன்று 20 மடங்கு வளர்ந்த அற்புதத்தைச் செய்து காட்டினார்.

இதுபோன்ற அரிய பண்புகளைக் கொண்ட **ராமபாணம், மயூரசகி** போன்ற இன்னும் சில அற்புத மூலிகைகள் இருப்பதையும் ஜிடி. நாயுடு சுட்டிக் காட்டியுள்ளார்.

இத்தகைய விநோதப் பண்புகள் கொண்ட அற்புத மூலிகைகள் இருந்துள்ளமையை ஒரு பொது மாநாட்டின் மத்தியில் செய்முறையின் மூலம் நிறுவிக் காட்டியுள்ளார் ஜி.டி. நாயுடு.

எனவே, மேலே குறிப்பிடப்பட்ட பட்டியலில் குறிப்பிடப் பட்டுள்ள மூலிகைகள் யாவும் கற்பனைப் படைப்புக்களென ஒதுக்கிவிடமுடியாதென்றும், இன்றும் அந்த மூலிகைகள் இருக்கக் கூடுமென்றும் எண்ணுவது தவறாக இருக்க முடியாது. கிடைத்தற்கரிய இந்த மூலிகைகளைக் கண்டறிய தீவிரமான விரிந்த ஆய்வு மேற்கொள்வதன் மூலம் தமிழ் மருத்துவ வளர்ச்சிக்குப் புதியதொரு வழிகாண முடியும்.

சித்த மற்றும் ஆயுர்வேத மருத்துவமுறைகளில் மருந்துகள் தயாரிப்பில் சேர்க்கப்படும் துணை மூலிகைப் பொருட்களை அவற்றின் மூலநிலையில் அப்படியே பச்சையாகப் (Raw stage) பயன்படுத்தமுடியாது. அவற்றைச் சுத்தப்படுத்திப் பதப்படுத்திய பின்னரே மருந்துகள் தயாரிப்பில் சேர்க்க முடியும். சிலவகை மருந்துகள் தயாரிப்பில் மருந்துகளின் சக்தியை அதிகரிப்பதற்காக மீண்டும் மீண்டும் பலமுறைப் புடம் போட வேண்டியதிருக்கும்; எனவே, இம்மாதிரியான மருந்துகளைத் தயாரிக்க நாட்கள் பல ஆகும். இவற்றைத் திடீரெனத் தயாரித்து விடமுடியாது. அவசரச் சிகிச்சைகளுக்கு இம்மருந்துகளைப் பயன்படுத்த வேண்டுமாயின் ஏற்கெனவே இவை தயாரிக்கப் பட்டுச் சேமிப்பில் வைக்கப்பட்டிருக்க வேண்டும். எனவே இத்தகைய மருந்துகளைத் தயாரித்துப் பின்னாட்களில் அவசரத் தேவைகளுக்குப் பயன்படும் வகையில் அவற்றின் மருத்துவக் குணங்களும் சக்தியும் கெடாமல் பல நாட்களுக்குப் பாதுகாப்பாகச் சேமிக்கப்படல் வேண்டும்.

இவ்வாறு தயாரிக்கப்படும் மருந்துகளைப் பிற்றைய நாட்களின் பயன்பாட்டிற்கென அவற்றின் தன்மையும் சக்தியும் கெடாத வகையில் சேமித்து வைப்பதற்கான முறையினை இடைக் காலத் தமிழ் மருத்துவர்கள் நன்கு அறிந்திருந்தனர். இக்கருத்திற்குச் சான்று கூறும் வகையில் கி.பி. 11ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த வீரராசேந்திர சோழனின் திருமுக்கூடல் கல்வெட்டுச் செய்தியில்[19] 'வீரசோழன் ஆதுலர் சாலையில் (மருத்துவனையில்) ஓராண்டு காலப் பயன்பாட்டிற்குத் தேவையான 20 வகையான மருந்துகள் சேமித்து வைக்கப்பட்டிருந்தன' என்னும் விபரம் அடங்கியுள்ளது.

மிகநீண்ட கல்வெட்டுப் பொறிப்புகளை உடைய பெருமை உடையது இக்கோயில் சுவர் (படம் 27அ).



படம் 27அ
திருமுக்கூடல் கல்வெட்டுச் சுவர்

அந்த மருத்துவமனையில் சேமித்து வைக்கப்பட்டிருந்த மருந்துகளின் பட்டியல் கீழே தரப்பட்டுள்ளது:

1. பிராம்மியம் - கடும்பூரி (Brāhmyam - Kaḍumbūri)
2. வாஸா ஹரிதகி (Vāśā - haritaki)
3. கோ-மூத்திராஹரிதகி (Gō-mūtrā-haritaki)
4. தசமூலாஹரிதகி (Dasa-mūlā-haritaki)
5. பல்லாடகா - ஹரிதகி (Bhallāṭakā - haritaki)
6. கண்டீரா (Gaṇḍīrā)
7. பலாகேரண்ட தைலம் (Balākēraṇḍa - taila)
8. பஞ்சக தைலம் (Pañchaka - taila)
9. லசுனாதி ஏரண்டதைலம் (Lasunady-eraṇḍa-taila)
10. உத்தம - கார்னாதி தைலம் (Uttama - kārnādi - taila)
11. சுக்லா சா கிருதா (Suklā - sa - ghritā)

12. பில்வாதி கிருதா (Bhilvādi - ghritā)

13. மண்டூகர வடிகா (Maṇḍukara - Vaṭikā)

14. திராவட்டி (Drāvaṭṭi)

15. விமலா (Vimalā)

16. சுனேத்ரி (Sunētri)

17. தாம்ராதி (Tāmrāḍi)

18. வஜ்ரகல்பம் (Vajra kalpa)

19. கல்யாணக லவணா (Kalyāṇa kalavaṇā)

20. புராணகிருதா (Purāṇa ghritā)

அட்டவணை 1 : வீரசோழன் மருத்துவமனையின் சேமிப்பு மருந்துகளால் தீர்க்கப்படக் கூடிய நோய்களின் பட்டியல்

| எண் | நோய்கள் | மருந்துகள் | தகவல் குறிப்பீடு |
|---|---|---|---|
| 1. | அடிவயிற்று நோய்கள் (Abdomenic diseases) | கல்யாணக லவணா | சுசுருத ஸம்ஹிதா IV (சிசிச்சை ஸ்தானம்) |
| 2. | இரத்த சோகை (Anaemia) | மண்டூகர வடிகா | அஷ்டாங்க ஹிருதயம் XVI, சரக ஸம்ஹிதா XX |
| 3. | காசம் (ஆஸ்த்மா) | தசமூலா ஹரிதகி | அஷ்டாங்க ஹிருதயம் XVII, தமிழ்-ஆங்கில அகராதி IV |
| 4. | இருமல் (Cough) | தசமூலா ஹரிதகி, வாசாஹரிதகி | அஷ்டாங்க ஹிருதயம் XVII, குணபாடம் |
| 5. | சுவையின்மை | தசமூலா ஹரிதகி | அஷ்டாங்க ஹிருதயம் XVII, தமிழ்-ஆங்கில அகராதி IV |
| 6. | நீர்க்கோவை (Dropsy) | கண்டீரா, தசமூலா ஹரிதகி | சரக ஸம்ஹிதா XVII, XX அஷ்டாங்க ஹிருதயம் XVII, XVI |
| 7. | கண் நோய்கள் | விமலா சுனேத்ரி | EI XXI, No. 38, p. 225 நேத்ரரோக பிரகாரமா |
| 8. | சோர்வு (Fatigue) | பிரம்மியம் கடும் பூரி | சரக ஸம்ஹிதா I, அஷ்டாங்க ஹிருதயம் XXXIX |
| 9. | காய்ச்சல் (Fever) | தசமூலா ஹரிதகி | அஷ்டாங்க ஹிருதயம் XVII, தமிழ்-ஆங்கில அகராதி IV |
| 10. | புண்புரை (Fistula) | கண்டீரா | சரக ஸம்ஹிதா XVII |
| 11. | மூலநோய்கள் (Haemorhoids) | தசமூலா ஹரிதகி கண்டீரா மண்டூகர வடிகா | அஷ்டாங்க ஹிருதயம் XVII, சரக ஸம்ஹிதா XVII |
| 12. | விக்கல் (Hiccup) | கண்டீரா | சரக ஸம்ஹிதா XVII |
| 13. | உடல் வலிமை | வஜ்ர கல்பா | தமிழ்-ஆங்கில அகராதி I |
| 14. | நினைவாற்றல் மேம்படுத்த | பிரம்மியம் கடும்பூரி | சரக ஸம்ஹிதா I |
| 15. | செரிமானமின்மை (Indigestion) | தசமூலா ஹரிதகி திராவட்டி | தமிழ்-ஆங்கில அகராதி IV, சரக ஸம்ஹிதா XX அஷ்டாங்க ஹிருதயம் XVI |

| எண் | நோய்கள் | மருந்துகள் | தகவல் குறிப்பீடு |
|---|---|---|---|
| 16. | மஞ்சட்காமாலை (Jaundice) | கோ-மூத்திராஹரிதகி மண்டூகர வடிகா | வாக்பட்டா XVI சரக ஸம்ஹிதா IX அஷ்டாங்க ஹிருதயம் XVI |
| 17. | உடல்மெலிவு | கண்டீரா | சரக ஸம்ஹிதா XVII |
| 18. | நீடித்த ஆயுள் | பிரம்மியம்கடும்பூரி | சரக ஸம்ஹிதா I |
| 19. | தொழுநோய் (Leprosy) | வாசாஹரிதகி பல்லாடகா ஹரிதகி | Fundamentals of Ayurvedic medicine |
| 20. | நுரையீரல் நோய்கள் (Lung Diseases) | தசமூலா ஹரிதகி | அஷ்டாங்கஹிருதயம் XVII |
| 21. | நரம்புக் கோளாறுகள் (Neuro-Defects) | லசுனாதி | Fundamentals of Ayurvedic Medicine |
| 22. | சளி (Phlegm) | மண்டூகர வடிகா | அஷ்டாங்க ஹிருதயம் XVI |
| 23. | மூலநோய் (Piles) | பல்லாடக ஹரிதகி; கோ-மூத்திராஹரிதகி மண்டூகர வடிகா | Fundamentals of Ayur Medicine சுசுருத ஸம்ஹிதா VI, சரக ஸம்ஹிதா VI, அஷ்டாங்கருதயா XVI |
| 24. | ரத்த-பித்த ரோகம் (Haemorrhage) | வாசா ஹரிதகி | Fundamentals of Ayurvedic Medicine |
| 25. | கீல்வாதம் (Rheumatism) | தசமூலா ஹரிதகி | அஷ்டாங்க ஹிருதயம் XVII |
| 26. | அறிவுத்திறன் கூர்மை | பிரம்மியம் கடும்பூரி | சரக ஸம்ஹிதா I அஷ்டாங்க ஹிருதயம் XXXIX |
| 27. | தோல் நோய்கள் (Skin Diseases) | கண்டீரா மண்டூகர வடிகா | சரக ஸம்ஹிதா XVII அஷ்டாங்க ஹிருதயம் XVI, சரக ஸம்ஹிதா XX |
| 28. | பாம்புக் கடி (Snake bite) | பில்வாதி கிருதா | தமிழ்-ஆங்கிலஅகராதி I |
| 29. | கருவுயிர் நோய்கள் (Sperm Diseases) | தசமூலா ஹரிதகி மண்டூகர வடிகா | அஷ்டாங்க ஹிருதயம் XVII, அஷ்டாங்க ஹிருதயம் XVI |
| 30. | எலும்புருக்கி (Tuberculosis) | தசமூலா ஹரிதகி பஞ்சக தைலம் வாசா ஹரிதகி | அஷ்டாங்க ஹிருதயம் XVI, சரக ஸம்ஹிதா Fundamentals of Ayurvedic Medicine |

| எண் | நோய்கள் | மருந்துகள் | தகவல் குறிப்பீடு |
|---|---|---|---|
| 31. | மண்ணீரல் கோளாறுகள் (Spleen Defects) | தசமூலா ஹரிதகி மண்டூகர வடிகா | அஷ்டாங்க ஹிருதயம் XVII, அஷ்டாங்க ஹிருதயம் XVI |
| 32. | கழலைக்கட்டி (Tumour) | பல்லாடகா ஹரிதகி | Fundamentals of Ayurvedic Medicine |
| 33. | சிறுநீரகக் கோளாறுகள் (Urinary Disorders) | தசமூலா ஹரிதகி கண்டீரா மண்டூரக வடிகா | அஷ்டாங்க ஹிருதயம் XVII, தமிழ்-ஆங்கில அகராதி IV, சரக ஸம்ஹிதா XVII, XX, அஷ்டாங்க ஹிருதயம் XVI |
| 34. | வாதம் (Neuralgia) | கல்யாணக லவணா | தமிழ்-ஆங்கில அகராதி II |
| 35. | வாய்வு | தசமூலா ஹரிதகி கண்டீரா | அஷ்டாங்க ஹிருதயம் XVII, சரக ஸம்ஹிதா |
| 36. | பூச்சித் தொல்லைகள் | கண்டீரா | சரக ஸம்ஹிதா XVII |

# பிரிவு 5

## மருத்துவ சிகிச்சை

### 1. நல்ல மருத்துவனின் நற்பண்புகள்

சங்க கால மக்கள் ஏராளமான மூலிகைகள் பற்றியும், அவற்றின் நோய் தீர்க்கும் பண்புகள் பற்றியும் நன்கு அறிந்திருந்தனர் என்ற விபரம் சங்க இலக்கியங்கள் மூலமாகத் தெரியவருகிறது. மூலிகைப் பண்புகளை அறிந்திருந்தால் மட்டுமே நோய்களுக்கான சிகிச்சையை மேற்கொண்டுவிட முடியாது. நோயாளிக்கு சிகிச்சையளிக்கும் மருத்துவன் மீது நோயாளிக்கு நம்பிக்கையேற் படும் அளவிற்கு அம்மருத்துவன் மருத்துவத்தில் நன்கு தேர்ச்சி பெற்றிருத்தல் வேண்டும். சங்க இலக்கியங்களில் ஒரு நல்ல மருத்துவனின் நற்பண்புகள் குறித்து நன்கு வரையறுக்கப் பட்டுள்ளது.

மருத்துவச் சிகிச்சையை மேற்கொள்ளும் ஒரு நல்ல மருத்துவனிடம் இருக்க வேண்டிய நற்பண்புகள் குறித்த விதிமுறைக் கோட்பாடுகள் **திருக்குறளில்** வகுக்கப்பட்டுள்ளன.

நோயினை சரியாகக் கண்டறிதல் (நோய் நாடி), நோயின் மூல காரணத்தைக் காணுதல் (நோய் முதல் நாடி), அந்நோயினைத் தீர்க்கும் சரியான சிகிச்சை முறையினைத் தீர்மானித்தல் (அது தணிக்கும் வாய்நாடி), மருத்துவ விதிமுறைக்கேற்ப சிகிச்சையை முறையாக மேற்கொள்ளுதல் (வாய்ப்பச் செயல்) ஆகியவையே சிகிச்சையின் போது மருத்துவன் கடைப்பிடிக்க வேண்டிய இன்றியமையாத கூறுகளாகும்.

> "நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்
> வாய்நாடி வாய்ப்பச் செயல்"[1]

நோயாளிக்குச் சிகிச்சையளிக்கும் மருத்துவன் தன்னையே அந்த நோயாளியாகப் பாவித்து சிகிச்சையளிக்க வேண்டுமென்று **கலித்தொகை** பரிந்துரைக்கின்றது.

> "பிறர்நோயும் தம்நோய்போல் போற்றி அறன்அறிதல்
> சான்றவர்க்கு எல்லாம் கடன்"[2]

சிகிச்சையைத் தொடங்கும்முன் மருத்துவன் கவனிக்க வேண்டிய சில குறிப்புக்கள் திருக்குறளில் தரப்பட்டுள்ளன. நோயாளியின் உடம்பிலுள்ள நோய் எதிர்ப்புச் சக்தியின் அளவு

(உற்றவன் அளவும்) நோயின் கடுமையும் (பிணியளவும்), எதிர் பார்க்கும் நிவாரண காலம் (காலமும்) ஆகிய காரணிகளைக் கண்டறிந்து அதன் பின்னரே மருத்துவன் தனது சிகிச்சையைத் தொடங்க வேண்டும் (கருதிச் செயல்)

> **"உற்றவன் அளவும் பிணியளவும் காலமும்**
> **கற்றான் கருதிச் செயல்"[3]**

மருத்துவன் நன்கு கற்றறிந்தவனாகயிருத்தல் வேண்டும் என்பதனாலேயே கற்றான் என்ற சொல் மருத்துவனைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

நோயாளிக்குத் தேவையான மருந்தையும் உணவையும் தீர்மானிப்பதில் மருத்துவன் மிகவும் கவனமாகவும் கண்டிப்புடனும் இருக்க வேண்டுமென்று **நற்றிணை** அறிவுறுத்துகிறது. கடுமையான நோயினால் பாதிக்கப்பட்ட நோயாளிக்கு (அரும்பிணி உறுனர்க்கு) நேயாளியின் விருப்பத்திற்கு ஏற்ப மருந்தோ, உணவோ, வகுத்துரைக்காமல் (வேட்டது கொடாது), நோயின் தன்மையை நன்கு ஆராய்ந்து, அந்நோயினைக் குணமாக்கக் கூடிய மருந்துகளைத் தீர்மானித்த பின்னரே நோயாளிக்கு மருந்துகளை வகுத்துரைக்க வேண்டும் (மருந்தாய்ந்து கொடுத்த). இவ்வாறு சிகிச்சையளிக்கும் மருத்துவனே **அறவோன்** (Medical Scholar) என்று கௌரவிக்கப் படுகிறான்.

> "அரும்பிணி உறுநர்க்கு வேட்டது கொடாது
> மருந்தாய்ந்து கொடுத்த அறவோன்"[4]

பெரும்பாலான சங்கப் புலவர்கள் மருத்துவத்திலும் சிறந்து விளங்கியிருந்தனர் என்பது அவர்கள் தங்களுடைய படைப்புக்களில் மருத்துவக் குறிப்புக்களை வெளியிட்டிருப்பதி லிருந்து அறிந்து கொள்ளலாம். **மருத்துவன் தாமோதரனார்** என்பவர் மருத்துவத்திலும் தேர்ச்சி பெற்ற இத்தகைய புலவராவார். அவருடைய **திருவள்ளுவ மாலை** என்னும் நூலில் தலைவலிக்கு நிவாரணமளிக்கும் மருந்தொன்றைப் பரிந்துரைத்துள்ளார்.

சீந்தில் என்னும் மூலிகையின் சர்க்கரை (சீந்தில் நீர்க்காண்டம்) சுக்குப் பொடி (தெரிசுக்கு), தேன் ஆகியவற்றின் கலவையை முகர்ந்து பார்த்தபின் (மோந்தபின்) யாருக்கும் தலைவலியிருக்காது (யார்க்கும் தலைக்குத்து இல்).

"சிந்திநீர்க் காண்டம், தெரிசுக்குத் தேனளாய்
மோந்தபின் யார்க்கும் தலைக்குத்து இல்"[5]

மருத்துவர் வேங்கடேசன்[6] **மோந்த பின்** என்ற சொல்லுக்கு ஒரு திருத்தம் அளிக்கிறார். **மோந்த பின்** என்ற சொல்லின் பொருள் **முகர்ந்தபின்** என்றும், சீந்தில் சர்க்கரையையும், சுக்குப் பொடியையும் தேனில் கலந்தபின், அக்கலவையானது குழைந்த நிலையில் அரை திடப்பொருளாக (Semi solid), சாப்பிடக்கூடிய நிலையில் இருக்குமேயன்றி முகர்ந்து பார்க்கும் நிலையிலிருக்காது என்பது அவரது வாதம். ஆனால், மோந்தபின் என்ற சொல்லுக்குப் பதிலாக **சாப்பிட்டபின்** என்று பொருள் படக்கூடிய **மாந்தபின்** என்ற சொல் இருக்குமேயாயின், அத்தொடருக்கு மிகவும் பொருத்தமான பொருள் கிடைக்குமாகையால் **மாந்தபின்** என்ற சொல்லுக்குப் பதிலாக **மோந்தபின்** என்ற சொல் அச்சுப் பிழையாக இடம்பெற்றிருக்க வேண்டுமென்பது அவரது வாதம்.

தமிழிலுள்ள பெரும்பாலான மருத்துவப் படைப்புக்கள் யாவும் விரைவாக நினைவில் வைத்துக் கொள்ளுமாறும் எளிதில் சொல்லக்கூடிய வகையிலும் எதுகை, மோனையுடன் செய்யுள் வடிவிலேயே யாக்கப்பட்டிருக்கின்றன. எடுத்துக்காட்டாக, திருமூலரின் மருத்துவப் படைப்புக்கள் அத்தனையும் செய்யுள் வடிவிலேயே அமைந்துள்ளன. பண்டைக் காலத்தில், புலவர்கள் யாவரும் மருத்துவத்தில் தேர்ச்சி பெற்றவர்களாகவும், மருத்துவர்கள் யாவரும் கவிஞர்களாகவும் இருந்திருக்கின்றனர்.

தொத்து நோய் பற்றிய **நோய்–நுண்மக் கொள்கை** (germ theory)யைக் கண்டுபிடிக்கும் முன்னரே சங்ககால மருத்துவர்கள் **நோய் எதிர்ப்புச் சக்தி** (Immunity) பற்றிய கருத்தினை நன்கு தெரிந்துள்ளனர். இக்கருத்தினை உறுதி செய்யும் வகையில் **பாலைக்கலி**யில் சொல்லப்பட்டுள்ள பின்வரும் கருத்தினைச் சுட்டிக்காட்டலாம். நல்ல நோய் எதிர்ப்புச் சக்தியுடன் கூடிய உடம்பினைக் கொண்ட (திருந்திய யாக்கையுள்) ஒரு நோயாளிக்கு மருத்துவன் தரும் மருந்தானது (மருத்துவன் ஊட்டிய மருந்து) மருத்துவன் விரும்பியவாறு (மருந்தாகி மனன் உவப்ப) நோயைக் குணமாக்குவதில் திறம்படச் செயல்படும்.

"திருந்திய யாக்கையுள் மருத்துவன் ஊட்டிய
மருந்துபோல் மருந்தாகி மனன் உவப்ப"[7]

இதே பாடல் வரிகளுக்கு மருத்துவர் லலிதா காமேஸ்வரன்[8] பின்வருமாறு விளக்கமளிக்கிறார்:

நல்ல வாழ்வியல் விதிமுறைகளுக்கேற்ப வாழ்ந்து நன்கு பாதுகாக்கப்பட்ட உடம்பினை (திருந்திய யாக்கை) நோயாளி கொண்டிருந்தால், மருத்துவர் தரும் மருந்து (மருத்துவன் ஊட்டிய மருந்து), நோயாளியின் பாதிக்கப்பட்ட உறுப்பினைச் சடுதியில் சென்றடைந்து திறம்பட வேலை செய்யும்.

## 2. பெண்களின் நோய் பற்றிய மருத்துவமும் மகப்பேறு மருத்துவமும் (GYNAECOLOGY AND OBSTETRICS)

சங்ககால மருத்துவர்கள் பெண்களைப் பாதிக்கின்ற நோய்கள் பற்றியும் தாய்மை மருத்துவம் பற்றியும் ஆழ்ந்த அறிவு பெற்றிருந்தனர் என்று சங்க இலக்கியங்களில் காணப்படும் பல்வேறு சான்றுகள் பகர்கின்றன. தமிழ் இலக்கியங்களில் காணப் படும் பெண்களின் உடல்நலப் பராமரிப்பு பற்றிய மருத்துவக் குறிப்புக்களை அலசிப் பார்க்கும் போது, பெரும்பாலான மருத்துவக் குறிப்புக்கள் கர்ப்பிணிப் பெண்களைப் பற்றியதாகவே அமைந்திருப்பதைக் காணலாம்.

தமிழில், தாய்மை அடைந்த பெண் **கர்ப்பிணி** என்னும் சொல்லினால் குறிப்பிடப்படுகிறாள். **கர்ப்பிணி** என்னும் சொல் **கர்ப்பம், பிணி** என்ற சொற்களின் **இரட்டைச் சொல்** (Double - Word) ஆகும். **பிணி** என்பது நோயைக் குறிக்கும் சொல்லாகும். எனவே, கர்ப்பம் என்பதே பெண்களுக்கு ஒரு நோய் எனக் கருதப்படுகிறது. எனவே, கர்ப்பிணிப் பெண்கள் நோயாளிகளைப் போன்று மென்மையாகப் பராமரிக்கப்பட வேண்டுமென அறிவுறுத்தப்படுகிறது.

கருமுளை (Embryo)யின் பெருக்கம் மற்றும் வளர்ச்சி, சூலுற்ற காலத்தில் ஏற்படும் உடல்நிலை மாற்றங்கள், கருச்சிதைவு மற்றும் பிரசவம் ஆகியவை பற்றி சங்ககால மருத்துவர்கள் பூரண அறிவு பெற்றிருந்தனர் என்று சங்க இலக்கிய ஆதாரங்கள் வெளிப் படுத்துகின்றன.

பெண்களின் கருவைச் சிதைப்பவர்கள் (மகளிர் கருச் சிதைத்தோர்) பெரியதொரு பாவத்தைச் செய்பவர்களாகக் கருதப் பட்டனர்.[9]

சூலுற்ற நாள்முதல் பிரசவநேரம் வரை பல்வேறு நிலைகளிலும் கருமுளையின் வளர்ச்சி பற்றி தமிழ் இலக்கியங்களில் நன்கு விவரிக்கப்பட்டுள்ளது.

**கர்ப்பமாதல்** என்பது சூல் என்னும் சொல்லினால் குறிப்பிடப்படுகிறது. ஒரு பெண் முதன் முதலில் கர்ப்பமடைதல் **தலைச்சூல்** அல்லது **கடுஞ்சூல்**[10] என்று குறிப்பிடப்படுகிறது. **பொய்யான கர்ப்பம்** (False pregnancy) என்பது **கூடா சூல்**[11] எனப்படுகிறது. குறைப்பிரசவம் இயல்மீறிய செயலாகக் கருதப் பட்டது.

"குழவி இறப்பினும் ஊன்றடி பிறப்பினும்"[12]

குறுகிய காலச் கருச்சிதைவு "உறுப்பில் பிண்டம்" என்றழைக்கப்பட்டது.

"சிறப்பில் சிதடும் உறுப்பில் பிண்டமும்"[13]

(சிதடு - குருடு)

முழுக்காலக் கர்ப்பம் **நிறைசூல்**[14] என்றழைக்கப்படுகிறது.

**ஆத்மரக்ஷாமிர்தம், வைத்திய சார சங்கிரஹம்** ஆகிய சித்தமருத்துவ நூற்களை மேற்கோள்காட்டி **அனந்த நாராயண அய்யர்** என்பவர் இரண்டாவது மாத கர்ப்பத்திலுள்ள கரு முளையினை ஒரு **கழற்சிக் காயுடன்** (Molucca - Caesalpina Bonducella) ஒப்பிட்டுக் கூறியுள்ளதை மிகவும் பாராட்டிப் பின்வருமாறு கூறியுள்ளார்.[15]

கழற்சிக் காய் என்பது குழந்தைகள் விளையாடுகின்ற பந்து போன்ற ஒரு விதை; குழந்தைகள் விளையாடப் பயன்படுவது; சில நாட்டு மருந்து தயாரிப்பில் பயன்படுவது. ஆனால் மேற்கூறப்பட்ட ஒப்பீடு கழற்சிக் காயின் பந்து போன்ற உருண்டை வடிவத்தை மட்டும் சார்ந்ததன்று; அதைவிடச் சிறந்ததோர் ஒப்புமையும் அதனுள் அடங்கியுள்ளது. இந்த ஒப்புமைக்குப் பயன்படுத்தப்பட்டுள்ள சொற்றொடர் **கழக் கொடிக்காய் போல்** என்பதாகும். கருமுளையானது கழற்சிக் காய்போல் அமைந்தது என்பது பொருளாகும். கருமுளையினை உள்ளடக்கி மெல்லிய இழைகளினால் மூடப்பட்டு சிறு குமிழிபோல் காட்சியளிக்கும் இருமாதக் கருமுளையானது, **"செடியின் விதையினை உள்ளடக்கி மேல் தோட்டுடன் சிறிய பந்து போல் தோன்றும் கழற்சிக் காய்"** போன்று அமைந்திருக்கும் என்பதே அந்த ஒப்புமையின் பொருளாகும். கழற்சிக்காயின் உள்ளே இருக்கும் விதையே கருமுளையினுள் இருக்கும் கருவுயிரைக் குறிப்பதாகும்.[16]

அவர் மேலும் கூறுகையில், "இந்த ஒப்புமையில் காணப்படும் கருமுளை பற்றிய சித்தர்களின் அறிவு அவர்கள் சுயமாகப் பெற்றிருந்ததேயன்றி வேறெங்கிருந்தும் பெறப்பட்டதன்று" என்றும் குறிப்பிடுகின்றார்.[17]

பழங்கால இந்திய மருத்துவர்களின் கருமுளை வளர்ச்சி பற்றிய நுண்ணறிவு குறித்து கேஸ்வாணி (Keswani) என்பவர் கூறியுள்ள கருத்துக்கள் (அத்தியாயம் - 2ல் ஏற்கெனவே கூறப்பட்டுள்ளது) பண்டைய தமிழ் மருத்துவ அறிஞர்களின் கருவியல் அறிவுக்கும் பொருந்துவதாகும். அதாவது,

**"பழங்கால இந்திய மருத்துவர்கள் கருத்தரித்த தொடக்ககால கருமுளையின் மிக நுண்ணிய தோற்றத்தினை விவரிக்கும் அளவில் ஆற்றல் பெற்றிருந்தனரெனில், அவர்கள் ஏதோ ஒரு வகை நுண்கண்ணாடிக் கருவியின் துணையினைப் பெற்றிருக்க வேண்டுமென்பதுடன் விலங்குகளின் கருமுட்டை வளர்ச்சி பற்றியோ அன்றி கருச்சிதைவு, குறைப் பிரசவம் ஆகியவற்றை அறுவை சிகிச்சை செய்ததன் மூலமாகவோ கருமுளை வளர்ச்சி பற்றி நன்கு ஆய்ந்தறிந்திருக்க வேண்டும்"**[18]

கருமுளையில் அடுத்தடுத்த மாதங்களில் ஏற்படும் வளர்ச்சி நிலை மாற்றங்கள் பற்றி பிரசவமாகும் முன்னர் அக்கருமுளை எதிர் கொள்ளும் விதவிதமான இன்னல்களைக் குறிப்பிட்டு அருட்செல்வர் மாணிக்கவாசகர் ஒரு விரிவான விளக்கமளித்துள்ளார்.[19]

சூலுற்ற மகளிரின் உடல்நிலை மாறுதல்கள் பற்றியும், கர்ப்ப காலத்தில் அவர்களின் நடவடிக்கைகள் பற்றியும் சங்க இலக்கியத்தில் மிக விரிவாக விளக்கப்பட்டுள்ளது. சூலுற்ற முதல் மூன்று மாதங்களில் உடலில் சில மாற்றங்கள் ஏற்படுகின்றன. இதன் காரணமாக, ஒரு வினோதமான ஆசை, உணர்வு ஏற்பட்டு, சுவையில் ஒரு முரண்பாட்டு உணர்வுடன் மசக்கை என்னும் நோயினால் வாடுகின்றனர்.

கர்ப்ப காலத்தில் பெண்களுக்கு ஏற்படும் இவ்வகை வேட்கையானது **வயா** என்று இலக்கியத்தில் குறிப்பிடப் பட்டுள்ளது. இந்த மசக்கைக் காலத்தில் கர்ப்பிணிப் பெண்கள் ஒருவித புளிப்புச் சுவையை விரும்பி நெல்லிக்காய் (Gooseberry), புளியங்காய் (Tamarindus indicus) போன்றவற்றைச் சாப்பிடுகின்றனர்.

**15**

**"நெல்லிக்காய் வேட்கைத் தந்து மலர்ந்த**
**இவள் வயா நோய்க்கே"[20]**

கருவுற்ற பெண்களுக்கு இம்மசக்கைக் காலத்தில் ஏற்படுகின்ற வாந்தியெடுக்கும் உணர்வினைக் கட்டுப்படுத்த இப்புளிப்புச் சுவை உதவுகிறது. முதன்முதலாகக் கருவுற்ற பெண்கள் (கடுஞ்சூல் மகளிர்) பசுமையான புளியங்காயைச் (பசும்புளி) சாப்பிட வேண்டுமென்னும் வேட்கையினைக் கொண்டிருப்பவர்.

**"................. பசும்புளி வேட்கைக்**
**கடுஞ்சூல் மகளிர்"[21]**

சங்ககாலத்தில் **வயா** நோயினால் துன்புற்ற கர்ப்பிணிப் பெண்கள் **மண்** போன்ற பொருட்களைச் சாப்பிடும் பழக்கத்தைக் கொண்டிருந்தனர். புறநானூற்றில், **சேரமன்னன் யானைக் கட்சேய் மாந்தரன் சேரலிரும்பொறையைப்** புகழ்ந்து பாடுமுகமாக **குறுங்கோழியூர்க் கிழார்** என்னும் புலவர், அவருடைய நாட்டில், வயா என்ற நோயினால் துன்புறும் கர்ப்பிணிப் பெண்களன்றி அவரது எதிரிகளின் நாட்டைச் சேர்ந்த எவரும் அவரது நாட்டின் மண்ணைச் சாப்பிட்டதில்லை என்று அவரது நாட்டு மண்ணின் பெருமையினைப் புகழ்ந்து கூறியுள்ளார்.

**"வயாருறு மகளிர் வேட்டுநின் அல்லது**
**பகைவர் உண்ணா அரும் மண்ணினையே"[22]**

பெண்களுக்கு முதல் பிரசவம் மிகவும் பயங்கரமானது என்று சங்க காலப் பெண்கள் உணர்ந்திருந்தனர். எனவே, முதல் முறையாகக் கருத்தரித்த பெண்கள் அவர்களின் பிரசவம் எளிதாக இருக்க வேண்டுமென கடவுளிடம் கைகூப்பித் தொழுது வேண்டினர்.

**"கடுஞ்சூல் மகளிர் பேணி கைதொழுது"[23]**

அந்நாட்களில் நாவிதக் குலப்பெண்கள் பிரசவம் பார்ப்பதில் மிகுந்த தேர்ச்சி பெற்றவர்களாயிருந்தனர். இவர்களின் பிரசவம் பார்க்கும் திறன் பற்றியும் எவ்வித கடினமான, சிக்கலான பிரசவங்களையும் மிகவும் திறமையாக வெற்றிகரமாக நிறை வேற்றியமைக்கான சான்றுகள் பல உள்ளன.

இத்தகையதொரு நாவிதப் பெண்ணின் பிரசவம் பார்க்கும் திறன் பற்றி விவரிக்கும் ஒரு சுவையான சம்பவம் குறித்து **கொங்குமண்டலச் சதகத்தில் கார்மேகக் கவிஞர்** (சுமார் 9ஆம் நூற்றாண்டு) விரிவாக எடுத்துரைத்துள்ளார்:

ஒருநாள் கந்தபுரம் என்னும் ஊரில் (கந்தபுரத் தொருநாள்), குறைபாடெதுவுமில்லாத தெளிந்த நீரையுடைய நதியின் பக்கத்தில் (குறைவறு தெண்ணீர் நதியணை) கொங்கு நாட்டு மன்னனின் கர்ப்பிணிப் பெண் (இறைமகளார்) தாங்க முடியாத பிரசவவலியினால் துன்புற்றுக் கொண்டிருந்தாள். (மகவீனப் பொறாதுடல் ஏங்க) தாயின் வயிற்றில் குழந்தை சரியான நிலையில் இல்லாததால் பிரசவத் தாதிகள் எத்தனையோ பேர் வந்து முயன்றும் தாயையும் சேயையும் உயிருடன் பிரித்தெடுக்க முடியவில்லை. எனவே, தாய்க்கும் சேய்க்கும் எவ்விதத் தீங்கும் ஏற்படாத வகையில் வெற்றிகரமாகப் பிரசவத்தை நிறைவுறச் செய்பவர்க்கு மதிப்புமிக்க சன்மானங்கள் அளிப்பதாகப் பறையறைவித்தான் மன்னன். ஒரு நாவிதப் பெண் இவ்வறிவித்தலைச் சவாலாக ஏற்றுக் கொண்டு வயிற்றைக் கீறிச் சிசுவை வெளியெடுக்கின்ற சிசேரியன் முறையில் (Caesarian Operation) பிரசவத்தை வெற்றிகரமாக நிறைவேற்றி மன்னனை மகிழ்வித்தாள் (வகிர் துறை வழியேற்று மகிழ்வூட்டும்).

இத்தகைய திறமைமிக்க அந்த நாவிதப் பெண் பிறந்து வளர்ந்த துறையூர் நாட்டினால் சூழப்பெற்ற பெருமை வாய்ந்தது இந்த கொங்கு மண்டலமாகும். (மங்கலை தோன்றி வளர் மறைவாழித்தேர் நரையூர் நாடு சூழ் கொங்கு மண்டலம்).

**"குறைவறு தெண்ணீர் நதியணை கந்தபுரத்**
**தொருநாள்**
**இறைமகளார் மகவீனப் பொறாதுடல் ஏங்க வகிர்**
**துறைவழி யேற்று மகிழ்வூட்டு மங்கலை**
**தோன்றிவளர்**
**மறைவழி தேர்நரை யூர்நாடுசூழ் கொங்கு**
**மண்டலமே"[24]**

## ஓவியம் மற்றும் சிற்பச் சான்றுகள்

அக்காலத்தில் கர்ப்பிணிப் பெண்கள் பிரசவித்தலின் போது நிற்கும் நிலையில் வைத்துப் பிரசவம் பார்க்கப்பட்டதாக ஓவியம் மற்றும் சிற்பங்களின் மூலம் தெரியவருகிறது.

தஞ்சாவூர் மாவட்டத்தில் தாராசுரம் என்னும் ஊரிலுள்ள கி.பி. 12ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த ஐராவதீஸ்வர ஆலயத்தின் மேற்குப் பிரகாரச் சுவரின்மீது செதுக்கப்பட்டுள்ள முகப்புச் சிற்பமொன்று ஒரு கர்ப்பிணிப் பெண் பிரசவத்திற்காக நின்று கொண்டிருக்கும் நிலையில் இரு மருங்கிலும் தாங்கலுக்காக நின்று கொண்டிருக்கும் இரு பெண்களின் தோள்களின் மீது

அவளுடைய கைகளைப் போட்டுப் பிடித்துக் கொண்டிருப்பதாகச் சித்தரிக்கப்பட்டுள்ளது.

பிரசவம் பார்க்கும் அப்பெண்கள் கர்ப்பிணிப் பெண்ணின் அடிவயிற்றை மென்மையாக அழுத்திக் கொண்டிருக்கிறார்கள். இவ்விருவரைத் தவிர, மூன்றாவதாக ஒரு பெண் பிரசவ நிகழ்ச்சிகளை மிகுந்த ஆவலுடன் கவனித்துக் கொண்டிருக்கிறாள்.[25]

தென்னாற்காடு மாவட்டத்தைச் சேர்ந்த **சிதம்பரம் நடராசர் கோயிலில்** காணப்படும் **முகப்புச் சிற்பத்தில்** நின்று கொண்டிருக்கும் நிலையில் ஒரு பெண் பிரசவிப்பதையும் அவளுக்கு உதவியாக இரு துணை உதவிப் பெண்கள் பிரசவத்தைக் கவனித்துக் கொண்டிருப்பது போன்றும், பிரசவம் பார்க்கும் மற்றொரு பெண் தாதி அவர்களை மேற்பார்வை செய்து கொண்டிருப்பது போன்றும் சித்தரிக்கப்பட்டுள்ளது.[26] (படம் 28)



**படம் 28**
**மகப்பேறு பற்றிய சிற்பம்**
**(சிதம்பரம் நடராசர் ஆலயம்)**

**விருத்தாசலம் விருத்தகிரீஸ்வரர் ஆலயத்தில் 16 கால் மண்டபத்தின் ஒரு தூணிலுள்ள சிற்பத்தில்** பிரசவத்திற்காக நின்று கொண்டிருக்கும் நிலையில் ஒரு கர்ப்பிணிப் பெண்ணின் வலப்புறம் ஒரு பெண் அக்கர்ப்பிணிப் பெண்ணைத் தாங்கிக் கொண்டிருப்பது போன்றும் இடப் புற மிருக்கும் மற்றொரு பெண் பிரசவத்தை எளிதாக்கும் பொருட்டு அக்கர்ப்பிணிப் பெண்ணின் வயிற்றை அழுத்திக் கொண்டிருப்பது போலவும், மூன்றாவதாக ஒருபெண் பிரசவித்து வெளிவரும் சிசுவைப் பிடித்துக் கொள்வதற்காகத் தரையில் அமர்ந்திருப்பது போன்றும் சித்தரிக்கப்பட்டுள்ளது.[27]

**இராமநாதபுரத்திலுள்ள ராமவிலாசத்தில்** ராமர் மற்றும் அவரது சகோதரர்களின் பிறப்புக் காட்சியும், கிருஷ்ணரின் பிரசவக் காட்சியும் அவர்களுடைய தாய்மார்கள் தங்களுடைய பிள்ளைகளை நின்று கொண்டிருக்கும் நிலையில் ஈன்றெடுப்பது

போன்றும் அவர்களுடைய மார்பு வரை திரைச் சீலையால் மறைக்கப்பட்டவாறும் தீட்டப்பட்ட 18ஆம் நூற்றாண்டு ஓவியத்தைக் காணலாம்.[28] (படம் 29)



படம் 29
மகப்பேறு காட்சி ஓவியம் (ராமநாதபுரம் ராமவிலாசம்)



படம் 30
மகப்பேறு காட்சி ஓவியம்
(மதுரை மீனாட்சி அம்மன்
ஆலய ஓவியம்)

நின்று கொண்டிருக்கும் நிலையில் பிரசவித்தலுக்கு மற்றொரு சான்றாக மதுரை மீனாட்சி அம்மன் கோயிலிலுள்ள 19ஆம் நூற்றாண்டு ஓவியம் திகழ்கிறது. இவ்வோவியத்தில் ராணி மங்கம்மா நின்று கொண்டிருக்கும் நிலையில் குழந்தையை ஈன்றெடுக்கும் காட்சி வரையப் பட்டுள்ளது. இங்கும் பிரசவக் காட்சி மறைவாகயிருக்கும் பொருட்டு ராணியின் தலை மட்டும் வெளியே தெரிகின்ற அளவில் பணிப்பெண்கள் ஒரு திரைச் சீலையைப் பிடித்துக் கொண்டிருப்பதாகத் தீட்டப்பட்டுள்ளது.[29] (படம் 30)

இதே போன்றதொரு வண்ண ஓவியம் அழகர் கோயிலிலும் காணப்படுகிறது. (படம் 31)



படம் 31
மகப்பேறு காட்சி ஓவியம் (அழகர் கோயில்)

ஆனால் கர்நாடகாவில் காணப்படும் இத்தகைய சிற்பங்கள் பிரசவக் காட்சியினை உட்கார்ந்த நிலையில் பிரசவிப்பது போன்று செதுக்கப்பட்டுள்ளன. ஹங்கல் தாரகேஸ்வரர் ஆலயத்திலுள்ள 12ஆம் நுற்றாண்டைச் சேர்ந்த கல்லில் செதுக்கப்பட்ட சிற்பம் ஒன்று உட்கார்ந்த நிலையில் பிரசவிக்கும் காட்சி ஒன்றை வெளிப்படுத்துகிறது.[30]

கர்நாடகாவின் பட்கல்லிலுள்ள கேத்தப்பையா - நாராயணா ஆலயத்தில் கிபி. 16ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த சிற்பம் ஒன்று பிரசவிக்கும் பெண் ஒரு இருக்கையின் மேல் உட்கார்ந்திருக்க, அவளுக்குத் துணையாக நிற்கும் மூன்று பெண்களுள் ஒருத்தி கர்ப்பிணிப் பெண்ணின் பின்னால் நின்று கொண்டு ஒரு கையால் அவளது முதுகைத் தாங்கிப் பிடித்தவாறு மறுகையால் அவளது அடிவயிற்றை மெதுவாக அழுத்திக் கொண்டிருக்க, இரண்டாமவள் கர்ப்பிணிப் பெண் முன் பக்கமாகச் சாய்ந்துவிடாதவாறு தாங்கிப்பிடிக்க, மூன்றாமவள் கர்ப்பிணிப் பெண்ணின் முன்பக்கம் வெளிவரும் சிசுவைப் பிடிப்பதற்காகத் தரையில் உட்கார்ந்து கொண்டிருப்பது போன்று செதுக்கப்பட்டுள்ளது.[31]

கர்நாடகாவின் தென்மேற்குப் பகுதியிலுள்ள பிலிகிரியில் (Biligiri) பிலிரங்கநாத சுவாமி ஆலயத்திலும், எடியூரில் (Ediyur) சித்தலிங்கேஸ்வரர் ஆலயத்திலும் இதுபோன்ற சிற்பங்கள் இருப்பதாக கிருஷ்ணமூர்த்தி குறிப்பிட்டுள்ளார்.[32]



படம் 32அ
மகப்பேறு பற்றிய சிற்பம்
(ஒஸ்தியா – ரோம்)

பழங்காலத்தில் உட்கார்ந்த நிலையில் பிரசவிப்பதென்பது அபூர்வமானதன்று. எகிப்து நாட்டில் இந்தப் பழக்கம் இருந்ததாக தொல்லியல் சான்றுகள் உள்ளன. ரோமாபுரியில் ஒஸ்தியா (Ostia) என்னுமிடத்திலுள்ள சிற்பத்தில் பிரசவம் பார்க்கும் பெண்ணொருத்தி பிரசவிக்கயிருக்கும் பெண்ணை பிரசவ நாற்காலி ஒன்றில் உட்கார வைத்துப் பிரசவத்தைக் கவனித்துக் கொண்டிருப்பது போன்றும் அவளுடைய உதவிப் பெண் அந்தப் பெண்ணைத் தாங்கிப் பிடித்துக் கொண்டிருப்பது போன்றும் சித்தரிக்கப்பட்டுள்ளது.[33] (படம் 32அ)

இதேபோன்று உட்கார்ந்த நிலையில் பிரசவம் பார்க்கும் காட்சி ஒன்று கி.பி. 1533ஆம் ஆண்டைச் சேர்ந்த ஓவியம் ஒன்றிலும் காணப்படுகிறது.[34] (படம் 32ஆ)



படம் 32ஆ
மகப்பேறு பற்றிய ஓவியம்
(மறுமலர்ச்சிக் காலம்)

பெருநாட்டின் மோச்சிகா (Mochica) என்னுமிடத்திலுள்ள களிமண் சிற்பம் ஒரு பிரசவிக்கும் பெண்ணைச் சித்தரிக்கின்றது. பிரசவிக்கும் பெண் தரையில் அமர்ந்திருக்க பிரசவம் பார்க்கும் பெண் பின்னாலிருந்து கொண்டு பிரசவத்தை எளிதாக்கும் பொருட்டு மெதுவாக அழுத்தித்

தடவிக் கொண்டிருக்கிறாள். மற்றொரு தாதிப்பெண் அப்பெண்ணின் முன்னால் பிரசவத்தில் துணைபுரிவதற்காக முழந்தாளிட்டு நின்று கொண்டிருக்கிறாள்.[35] (படம் 33)



**படம் 33**
**மகப்பேறு பற்றிய களிமண் ஜாடி சிற்பம்**
**(மோச்சிகா – பெரு)**

மேலே குறிப்பிட்ட சிற்பங்களிலும் ஓவியங்களிலும் பிரசவத்தின்போது கர்ப்பிணிப் பெண்கள் நின்ற நிலையிலும், உட்கார்ந்த நிலையிலும் பிரசவிப்பது போன்று காட்டப் பட்டுள்ளன. ஆனால், தற்கால ஆங்கில மருத்துவர்கள் இயல்பான பிரசவத்திற்கு இந்த இரு நிலைகளையும் பரிந்துரைப்பதில்லை.

## பிரசவத்திற்குப் பின்னர் தாய்–சேய்ப் பராமரிப்பு

பிரசவித்த பின்னர் தாய்-சேய்ப் பராமரிப்பு குறித்துச் சங்க இலக்கியங்களில் ஏராளமான தகவல்கள் காணக் கிடக்கின்றன. பிரசவித்த பெண்ணை நெய்யில் குளிப்பாட்டுவது சங்ககாலத்தில் வழக்கமாக இருந்துள்ளது. இது பற்றிய நிகழ்ச்சியொன்று நற்றிணையில் சித்தரிக்கப்பட்டுள்ளது. நற்றிணையில் ஒரு காட்சி பின்வருமாறு:

சப்தமிடுகின்ற தென்னங்கீற்றால் வேயப்பட்ட பந்தலின் கீழ்க்கிடக்கும் மணற் பரப்பில், பாணற் தலைவனைச் சூழ்ந்து காவல் காத்தற் போல், திருந்திய அணிகளை அணிந்த மகளிர் நல் நிமித்தமாகச் சூழ்ந்து நிற்க, வெளியே விரிக்கப்பட்ட மென்மையான அணையின் மீது பிறந்த மணம் மாறாது

மணக்கின்ற புதல்வனுடன் செவிலி துஞ்ச, அரைத்த வெண்கடுகும் நெய்யும் கலந்து பூசித் தேய்த்து முழுகிய நீராட்டினாலே ஈரமான அணிகளையுடைய, மகவை ஈன்ற அத்தாய், மீண்டும் உடலெங்கும் பசு நெய் பூசிய மென்மையான உடம்பையுடைய அம்மனையாளின் இரு இமைகளும் ஒன்றாகப் பொருந்த உறங்கிக் கொண்டிருந்தாள் என்பது.

> "........................... **விரவுமணற் பந்தர்ப்**
> **பெரும்பாண் காவல் பூண்டௌன ஒரு சார்த்**
> **திருந்திழை மகளிர் விரிச்சி நிற்ப**
> **வெளியுற விரிந்த அறுவை மெல்லணைப்**
> **புனிறு நாறு செவிலியோடு புதல்வன் துஞ்ச**
> **வையவி அணிந்த நெய்யாட்டு ஈரணிப்**
> **பசுநெய் கூர்ந்த மென்மை யாக்கை**
> **சீர்கெழு மடந்தை ஈர்மை பொருந்த**"[36]

என்ற பாடலின் பொருளாகும்.

இதில் காணப்படும் மருத்துவக் குறிப்பு யாதெனில், குழந்தை பிறந்தவுடன் தாயின் உடலில் வெப்பம் மிகுந்து காணப் படுவதுடன், உடம்பெல்லாம் ஈன்றதனால் மிகுந்த வலியுடன் காணப்படும். வெண்கடுகை அரைத்து, நெய்யுடன் கலந்து பூசி நீராடியதாகப் பாடலில் வருகிறது. இதில் வெண்கடுகு என்பது உடல் அசதி, வலிகளைப் போக்கும் மருத்துவக் குணம் மிக்கது ஆனால் உடல் வெப்பத்தை அதிகரிக்கச் செய்வது. நெய்யானது வெப்பத்தைத் தணிக்கும் தன்மை கொண்டது. ஆகவே, இரண்டையும் கலந்து பூசி நீராடியதாகக் கூறப்பட்டுள்ளது. அதுபோல், நீராடியதன் பிறகு உள்ள உடல் வெப்பத்தைத் தணிக்க உடம்பில் பசுநெய் தடவிய உடம்புடன் கண்ணயர்ந்ததாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

இதுபோன்று, ஐயவியும், பசு நெய்யும் கலந்து தலைக்கு நீராடும் பழக்கம் சங்ககால மக்களிடையே காணப்பட்டுள்ள தென்பது, இது போன்ற பல உதாரணங்கள் சங்கப் பாடல்களில் வருவதினின்றும் புரிந்து கொள்ள முடிகிறது.

ஒரு பெண் அவளுடைய தலைப் பிரசவத்தில் ஆண் குழந்தையைப் பெற்றெடுப்பது அவளுடைய குடும்பத்திற்கு மிகப் பெரிய கௌரவமாகக் கருதப்பட்டது. அவ்வாறு தலைப் பிரசவத்தில் ஆண் மகனைப் பெற்றெடுத்தால், சுற்றியுள்ள சுற்றத்தார் அனைவரும் (கடும்பு உடைக் கடுஞ்சூல்), அவ்விளம்

பெண் அவளது குடும்பத்திற்கு ஒரு வாரிசினைப் பெற்றுத் தந்து குடும்பத்திற்குப் புகழ் வாங்கித் தந்தமைக்காக அவளைக் கண்ணுங் கருத்துமாகப் போற்றிப் பராமரித்தனர்.

> "கடும்பு உடைக் கடுஞ்சூல் நம் குடிக்கு உதவி
> நெய்யொடு இமைக்கும் ஐயவித் திரள்காழ்
> விளங்குநகர் விளங்கக் கிடந்தோட் குறுகி
> புதல்வன் ஈன்றெனு"[37]

பிறந்த குழந்தைகள் யாவும் தாய்ப்பாலூட்டி வளர்க்கப் பட்டன.[38] தாய்ப்பால் இல்லாதிருந்தால் அல்லது குறைவாக இருந்தால் தாய்ப்பால் அதிகமாகச் சுரக்கும் பொருட்டு இளந்தாய் மார்கள் குளிர்ந்த நீரில் குளிப்பாட்டப்பட்டனர்.[39]

கர்நாடகாவிலுள்ள பட்கல் ஆலயத்தில் (Bhatkal Temple) உள்ள ஒரு சிற்பம் அக்கால மக்களின் நாடிபார்க்கும் பழக்கத்தையும் குழந்தை பராமரிப்பில் தாய்ப்பாலூட்டலுக்கு அவர்கள் கொடுத்த முக்கியத்துவத்தையும் வெளிப்படுத்துகிறது. தாய்ப் பாலூட்டிக் கொண்டிருக்கும் ஒரு பெண் நோயாளியின் கையைப் பிடித்துத் தனது விரல்களால் அவளது நாடியைப் பார்த்துக் கொண்டிருக்கும் ஒரு கிராம மருத்துவப் பெண்ணை அச்சிற்பம் சித்தரித்துக் காட்டுகிறது.[40] களைப்பாயிருக்கும் ஒரு பெண் கட்டிலில் படுத்திருக்க, அவளுடைய களைப்புத் தீரும் வகையில் அவளுடைய கால்களை அவளது வேலைக்காரப் பெண் அமுக்கி விடுவது போன்று மற்றொரு சிற்பம் காட்டுகிறது.[41] (படம் 34)



*படம் 34*
*உடம்பைத் தேய்த்துவிடும் சிகிச்சை (பட்கல் ஆலயம்)*

## மறுகண் பொருத்துதல் (Eye Transplantation)

உடலில் பாதிக்கப்பட்ட ஒரு கண் உறுப்பை எடுத்து விட்டு அதற்குப் பதில் மாற்றுக்கண் உறுப்புப் பொருத்தும் பழக்கம் தற்காலத்தில் நடைமுறையில் இருந்து வருகிறது. அத்தியாயம் 2இல் குறிப்பிடப்பட்டுள்ளது போல், சிவபெருமானின் குருதி சிந்திய கண்ணுக்குப் பதிலாக, சிவபக்தனாகிய கண்ணப்பன் தனது கண்ணையே தோண்டி எடுத்துப் பொருத்திய சம்பவம் இடைக்கால இலக்கியமான பெரியபுராணத்தின் ஒரு புராண மாகிய கண்ணப்ப நாயனார் புராணத்தில் **ஊனுக்கு ஊன்** என்ற பெயரில் இடம்பெற்றுள்ளது.

> "உற்றநோய் தீர்ப்பது ஊனுக்குஊன் எனும்
> உரைமுன் கண்டார்"[42]



படம் 35
கண்ணப்பர் – மாற்றுக்கண் பொருத்துதல்

சிவபக்தராகிய கண்ணப்பன் ''உரைமுன் கண்டார்'' என்பதன் மூலம் **ஊனுக்கு ஊன்** என்னும் சொற்களை நினைவுக்குக் கொண்டு வந்தாரெனக் கூறப் பட்டிருப்பதால் **ஊனுக்கு ஊன்** என்னும் சொற்றொடர் அக்காலத்தில் புழக்கத்திலிருந்து வந்த சொற் றொடராகவே இருந்திருக்க வேண்டும். இச்சொற்றொடரில் கூறப்பட்டுள்ள அறிவுரையை நினைவுபடுத்திச் சிவபெருமானின் கண்பிரச்சனைக்கு கண்ணப்பன் தீர்வு கண்டார். (படம் 35)

இக்குறிப்பு, பாதிக்கப் பட்ட கண்ணுக்கு மாற்றுக்கண் பொருத்திச் சிகிச்சையளிக்க முடியும் என்ற அறிவியல் உணர்வு அக்காலத் தமிழ் மக்களிடம் இருந்துள்ளது என்பதற்கு ஒரு எடுத்துக்காட்டு.

## 4. இசை மருத்துவம் (Musico - Theraphy)

இசையின் மூலம் நோய் குணமாக்கலைத் துரிதப்படுத்த முடியுமென்ற விபரம் பழங்காலத் தமிழ் மன்னர்கள் நன்கு அறிந்திருக்க வேண்டும். போர்க்காலங்களில், அரசாங்க மருத்துவர்களும், அறுவை சிகிச்சை நிபுணர்களும் அரசர்களுடன் போர்முனைக்குச் செல்வது வழக்கம். இந்த மருத்துவர்களின் பொறுப்புக்களும் கடமைகளும் சங்க இலக்கியங்களில் பின்வருமாறு விளக்கிக் கூறப்பட்டுள்ளன.

அரசரையும் போர் வீரர்களையும் எல்லாவித உடல் நலக் கேடுகளிலிருந்தும் நஞ்சூட்டுதலிலிருந்தும் மருத்துவர்கள் பாதுகாக்க வேண்டும். காயமுற்ற போர்வீரர்களின் காயங்களைக் குணமாக்குதல் அறுவை மருத்துவர்களின் கடமையாகும். மருத்துவர்களும் அறுவை மருத்துவர்களும் போர்க்கள முகாமில் அரசர்களின் கூடாரங்களின் அருகில் கூடாரமிட்டமர்த்தப் பட்டனர். பிறருடைய கூடாரங்களினின்றும் வேறுபடுத்திக் காட்டும் வகையில் அவர்களின் கூடாரங்களின் மேல் பிரத்தியேகக் கொடிகள் பறக்கவிடப்பட்டிருக்கும்[43]

இசைக் கலைஞர்கள் போர்முனைக்கு அழைத்துச் செல்லப்பட்டனர், காயமுற்ற வீரர்களுக்கு ஆறுதலளிக்கவும், காயங்களின் துன்ப வேதனையினை மாற்றி மனதுக்கு இதமளிக்கவும் இசைகள் ஒலிக்கப்பட்டன. **யாழ்** உட்பட பல்வேறு இசைக் கருவிகள் (பல்லியம்) இசைக்கப்பட்டன (கறங்க) என்று **புறநானூற்றுப்** பாடலொன்று கூறுகிறது. வீரர்களை மகிழ்விக்கும் பொருட்டு **ஆம்பல்** என்னும் இசைக்கருவி முழங்க, காஞ்சி என்னும் பண்ணில் பாட்டுக்கள் பாடப்பட்டன.

**"............ யாழொடு பல்லியம் கறங்க**
**............................................................**
**.................................. ஆம்பல் ஊதி**
**இசைமணி யெறிந்து காஞ்சி பாடி**
**...................................................**
**காக்க வம்மோ .................**
**வேந்துறு விழுமந் தாங்கிய**
**பூம்பொறிக் கழறிய நெடுந்தகை புண்ணே"[44]**

இசை மருத்துவம் பற்றிக் கிருஷ்ணமூர்த்தி கூறுகையில், மன உளைச்சலைக் களைவதிலும், சோர்வுணர்ச்சியினை நீக்குவதிலும் இசையின் சக்தி விவாதத்திற்கப்பாற்பட்டது என்று குறிப்பிடுகின்றார்.[45]

இசை மருத்துவத்தின் பயன்பாடு பற்றிய மற்றொரு நிகழ்ச்சி **மலைபடுகடாம்** என்னும் சங்க இலக்கியத்தில் காணப்படுகிறது.

குறிஞ்சி மலையினைச் சேர்ந்த ஒரு பெண்ணின் கணவரின் மார்பில் (கொழுநர் மார்பின்) வளைவுக் கோடுடைய வரிப்புலி பாய்ந்ததால் (கொடுவரி பாய்ந்தென) ஏற்பட்ட நெடிய ஆழமான காயத்தின் (நெடுவசி விழுப்புண்) வேதனையினைத் தணிக்க (தணிமர்) பாடிக் கொண்டிருந்ததாகச் சித்தரிக்கப் பட்டுள்ளது.

> **"கொடுவரி பாய்ந்தெனக் கொழுநர் மார்பின்**
> **நெடுவசி விழுப்புண் தணிமர் காப்பென**
> **வரள் வாள் கூந்தல் கொடிச்சியர்பாட"[46]**

நோயாளியின் வேதனைகளைக் களைவதில் இசையின் உளவியல் விளைவு பற்றிய கவிஞரின் அறிவினை இப்பாடல் வரிகள் உணர்த்துகின்றன.

போரில் காயமுற்ற வீரர்களுக்கு ஆறுதல் அளிப்பதும், ஏனைய வீரர்களுக்கு உற்சாகமூட்டுவதும் தனது கடமையென உணர்ந்திருந்தான் பாண்டிய மன்னன் நெடுஞ்செழியன்.

பாண்டிய மன்னன் இரண்டாம் நெடுஞ்செழியன் போரில் காயமுற்ற வீரர்களைத் தனது உதவியாளர்களுடன் நடு இரவுகளில் போய்ப் பார்வையிடும் பழக்கத்தைக் கொண்டிருந்ததன் காரணமாக அவன் நடு இரவுத் தூக்கத்தையிழந்தான் என்று நெடுநல்வாடையில் ஒரு குறிப்பு காணப்படுகிறது.

> **"ஒளிருவாள் விழுப்புண் காணிய புறம்போந்து**
> **...................................................**
> **நள்ளென் யாமத்தும் பள்ளிகொள்ளான்**
> **சிலரோடு திரிதரும் வேந்தன்"[47]**

காயமுற்றப் போர்வீரர்கள் பெண் தாதியர்களால் பராமரிக்கப்பட்டனர். இவர்களைத் தொல்காப்பியம் **புறத்துறை மகளிர்** என்று குறிப்பிடுகின்றது.[48] கடுமையாகக் காயமுற்ற வீரர்கள் அவர்களுடைய இல்லங்களுக்கு எடுத்துச் செல்லப்பட்டு அவர்களது மனைவியர்களால் பராமரிக்கப்பட்டனர்.

மருத்துவத் துறையில் இசையின் பயன்பாடு குறித்துப் பாண்டிச்சேரி ஜிப்மர் மருத்துவமனையைச் சேர்ந்த சுவாமிநாத காசிநாதன் பின்வருமாறு கூறியுள்ளார்.[49]

இசை அமைதியான தூக்கத்திற்கு உதவுகிறது. இரத்த ஓட்டத்தை இயல்பு நிலைக்குக் கொண்டு வருகிறது. நரம்பு மண்டலத்தையும் தசைகளையும் இயல்பான செயல்பாட்டிற்குக் கொண்டு வருகிறது. இவ்விதமாக நோயாளிகளின் உடல்நலத்தை விருத்தி செய்யும் வகையில் இசையானது ஒரு மருந்து போல் செயல்படுகிறது.

## 5. இறந்த சடலங்களைப் பத்திரப்படுத்துதல்

முதன் முதலாக இறந்தவர்களின் சடலங்களைப் பிரமிடுகள் (Pyramids) மூலம் பத்திரப்படுத்தியவர்கள் எகிப்தியர் களேயாவர். இடைக்காலத் தமிழ்நாட்டில் இறந்தவர்களின் சடலங்களைப் பத்திரப்படுத்தும் வழக்கம் இருந்துள்ள தென்பதைக் **கம்பராமாயணம்** தெளிவுபடுத்துகிறது. ஆனால் இடைக்காலத் தமிழர்கள் இதற்காகப் பிரமிடுகளைப் பயன்படுத்த வில்லை; மாறாக, ஒருவித மருந்தெண்ணெயைப் பயன்படுத்தி உள்ளனர். இத்தகைய மருந்தெண்ணெய் மூலம் இறந்த சடலங்களைக் கெட்டுப் போகாமல் பத்திரப்படுத்தும் முறையானது **தைலத் தோணியிடல்** என்றழைக்கப்பட்டது.

தசரதன் இறந்தபோது, அவனது இறுதிச் சடங்குகளை நிறைவேற்றுவதில் காலதாமதம் ஏற்பட்டதால் அவனது சடலம் ஒருவித **தைலத்தில்** (மருந்தெண்ணெய்) வைத்துப் பத்திரப் படுத்தப்பட்டது. இச்செயலினைக் கம்பர் பின் வருமாறு விவரிக்கின்றார்:

கடல்போன்ற பெண்களின் கூட்டத்தில் இதுகாறும் மூழ்கிக் கிடந்த தசரதன் (தையற் கடலிற் கிடந்தான்), இப்போது தைலக் கடலில் கிடத்தப்பட்டான் (தைலக் கடலின் தலையுய்த்தார்):

> **"தையற் கடலிற் கிடந் தானைத்**
> **தைலக் கடலின் தலை யுய்த்தார்"**[50]

இறந்த சடலங்களைச் சில குறிப்பிட்ட காலத்திற்குப் பத்திரப்படுத்தப் பல வழிகளுள்ளன. குறுகிய காலப்பத்திரப் படுத்துதலுக்கு பனிக்கட்டிகள் (Ice Blocks) பயன்படுத்தப் படுகின்றன. தற்கால மருத்துவமனைகளில் இதற்கென அமைக்கப் பட்ட பிண மனை (Mortuary) எனப்படும் பிரத்தியேக அறைகள் உள்ளன. இவ்வறைகளில் இறந்த சடலங் களைப் பத்திரப்படுத்த வேதிப் பொருட்கள் (Chemicals) பயன்படுத்தப்படுகின்றன.


படம் 36
'தைலத்தோணியிடல்' – தசரதன் உடல் பாதுகாப்பு (அழகர் கோயில் ஓவியம்)

கம்பராமாயணத்தில் இடம்பெற்ற "தைலத் தோணியிடல்" என்னும் இக்காட்சியினை விவரிக்கும் வண்ணம் அமைந்துள்ள 12ஆம் நுற்றாண்டினைச் சேர்ந்த அழகர் கோயில் ஓவியம் (படம் 36) ஒன்று இடைக்காலத் தமிழகத்தில் இத்தகைய சடலப் பத்திரப் படுத்தும் முறை பழக்கத்தில் இருந்துள்ளமைக்கும் மருத்துவத் துறை நன்கு வளர்ச்சி பெற்றிருக்க வேண்டுமென்பதற்கும் சான்றாக அமைந்துள்ளது.

## நஞ்சூட்டாய்வு (Toxicology)

பிற மாநிலங்களைப் போலவே இடைக்காலத் தமிழகத்திலும் மருத்துவர்கள் நச்சு மருத்துவத்தில் (விஷ வைத்தியம்) தேர்ச்சி பெற்றவர்களாகயிருந்துள்ளனர். இடைக் காலத் தமிழ் நூலாகிய சிந்தாமணியில் பாம்பினால் தீண்டப் பட்டவரின் கடிவாயினைச் சோதித்துப் பார்த்து, தீண்டிய பாம்பு எந்தவகையைச் சார்ந்ததென்றும், பாம்புக் கடியின் நச்சுத் தன்மையின் கடுமை எத்தன்மை வாய்ந்ததென்றும் அறிந்து கொள்வதற்கான சில வழிமுறைகள் பரிந்துரைக்கப்பட்டுள்ளன. உதாரணமாக,

- மேம்பல் (தட்டம்), கீழ்ப்பல் (அதட்டம்) ஆகிய இரு பற்களினாலும் கடிக்கப்பட்டிருந்தால், கடியுண்டவர் இறப்பது நிச்சயம்;
- மற்ற பற்களால் கடிக்கப்பட்டிருந்தால் கடுமையான ஆபத்தை விளைவிக்கும்.[51]
- கடிவாயிலிருந்து வெளிவரும் நஞ்சின் மணத்தின் தன்மையினைக் கொண்டு எவ்வகைப் பாம்பு கடித்ததென்று தீர்மானிக்கலாம்.[52]
- கடிவாயில் விரல்களால் தேய்க்கும்போது கொப்புளங்கள் ஏற்பட்டால் தீண்டிய பாம்பு மாநாகம் என்னும் வகையினைச் சார்ந்ததாகும்;

- கடிவாயில் விரல்களால் தேய்க்கும்போது ஒருவகைத் திரவம் பீறிட்டு வெளியேறினால் தீண்டிய பாம்பு மண்டலி என்னும் இனத்தினைச் சார்ந்ததாகும்.[53]

**மந்திரித்தலின்** மூலம் பாம்புக் கடிக்குச் சிகிச்சையளிக்கும் முறை இடைக்காலத்தில் புழக்கத்தில் இருந்திருக்கிறது. பாம்பின் கொடிய நஞ்சினை (அரவின்வெல் விடத்தை) மந்திர உச்சரிப்பின் மூலம் முறித்து விடலாம் என்று கம்பராமாயணத்தில் கூறப் பட்டுள்ளது.

**"வெள்ளெயிற்று அரவின் வெல் விடத்தை**
**மாய்க்கு மது மந்திரம்"**[54]

திருமுக்கூடல் மருத்துவமனையில் சேமித்து வைக்கப் பட்டிருந்த மருந்துகளுள், **விமலா, பில்வாதிகிருதம், கண்டீரா** ஆகியவையும் இருந்ததாக முன்பிரிவில் கூறப்பட்டிருந்தது. இம்மருந்துகள் யாவும் பாம்பின் நச்சுத்தன்மையை முறிக்கும் விஷ முறிவு மருந்துகளாகும். பாம்பினால் தீண்டப்பட்டவரின் கண்களில் விமலா என்ற மருந்தின் சில துளிகளை விட்டால் பாம்பின் விஷத்திலிருந்து உடனடி நிவாரணம் கிடைக்கும்.[55] பில்வாதி கிருதமுடன் சிறிது தண்ணீர் சேர்த்து விஷம் இறங்கும் வரைக் கடிவாயில் தேய்த்துக் கொண்டிருக்க வேண்டும்.[56] இந்த மருந்தினை உட்கொள்ளுவதன் மூலம் பல வகை பாம்புக்கடி விஷத்தையும் முறித்துவிடலாம். தேள்கடியின் விஷத்தன்மையைப் போக்க கண்டீராவின் சாறு சிறந்த மருந்தாகும்.

மேற்கூறப்பட்ட விவரங்களிலிருந்து இடைக்காலத் தமிழ் மருத்துவர்கள் எல்லாவகையான விஷக்கடிச் சிகிச்சைகளிலும் தேர்ச்சிபெற்றவர்களாயிருந்தனர் என்பது விளங்கும்.

## 7. உடனடித் தேவைக்கு மூலிகைச் சிகிச்சை

இந்நாள் போல் மருத்துவமனை வசதி அந்நாளில் கிடையாது. உடனடித் தேவை சிகிச்சைகளுக்கு மக்கள் மூலிகை மருந்துகளையே நம்பியிருக்க வேண்டியதிருந்தது. எனவே, பொதுவாக மக்களனைவரும் மூலிகைகளின் மருத்துவப் பண்புகளையும், மருத்துவப் பயன்களையும் நன்கு அறிந் திருந்தனர். நெருக்கடி நிலையின்போது, கைக்கெட்டும் மூலிகைகளைப் பறித்துத் தாங்களே நோய்களுக்கான சிகிச்சையை மேற்கொள்ளும் பழக்கத்தைக் கொண்டிருந்தனர். சோழர் காலத்தைச் சேர்ந்த சிற்பமொன்று இத்தகையதொரு

நெருக்கடி நேரத்தில் உடனடித் தேவையாக மூலிகைச் சிகிச்சை செய்யப்படுவதற்கு எடுத்துக்காட்டாக விளங்குகிறது.[57]

தஞ்சை மாவட்டத்தைச் சேர்ந்த புஞ்சை எனுமிடத்திலுள்ள நல்துணை ஈஸ்வரன் ஆலயத்தில் காணப்படும் சோழர் காலச் சிற்பமொன்று (படம் 37) நோயினால் அவதியுறும் ஒரு மனிதனுக்கு அவனுடைய உதவியாளர்கள் அவசர மூலிகைச் சிகிச்சையளிப்பதைச் சித்தரிக்கின்றது.



படம் 37
மூலிகைச் சிக்சிசை (புஞ்சை நல்துணை ஈஸ்வரன் ஆலயம்)

காட்சி இடம்பெற்றுள்ள இடம் தாமரைச் செடிகள் நிறைந்த ஒரு ஏரி அல்லது குட்டையின் கரையாகும். பாதிக்கப் பட்ட மனிதன் தனது இடது கை ஏதோ ஒரு வகை வலியினால் பாதிக்கப்பட்டாற்போல் கையைத் தூக்கி வைத்த நிலையிலிருக் கிறான். மற்றொரு மனிதன் உட்கார்ந்தவாறு அவன் முதுகைத் தாங்கிப் பிடித்துக் கொண்டிருக்கிறான். ஒரு பெண் உதவியாளர் அருகிலுள்ள ஒரு மரத்திலிருந்து (அநேகமாக அது வில்வ மரமாயிருக்கலாம்) சில இலைகளைப் பறிக்க முயன்று கொண்டிருக்கிறாள். மற்றொரு ஆண் உதவியாளர் ஒரு கிண்ணத்தைக் கையிலேந்திக் கொண்டிருக்கிறான். இச்சூழ் நிலையிலிருந்து அம்மனிதனுக்கு ஏற்பட்டுள்ள ஏதோ ஒரு நோயின் அவசர சிகிச்சைக்காக மூலிகை மருத்துவம் செய்ய முயற்சிப்பதாகத் தோன்றுகிறது. இரத்தப்போக்கினைத் தடுத்து

நிறுத்துவதும் தலைச்சுற்றலுக்கு நிவாரணமளிப்பதும் வில்வ இலையின் மருந்துவப் பண்பாகும்.

வேறுமுறையான மருத்துவச் சிகிச்சையளிக்க இயலாத இத்தகைய சூழ்நிலையில் மூலிகைகளின் பயன்பாடு எத்தகையது என்பதை விளக்கும் வகையில் அமைந்துள்ளது மேற்கண்ட சிற்பம்.

பண்டைத் தமிழர்கள் பல பொதுவான நோய்களுக்கான மருந்துகளையும் சிகிச்சை முறைகளையும் அறிந்திருந்தனர். மேலும், அவர்கள் அடிக்கடி போர்களைச் சந்திக்க வேண்டிய சூழலில் இருந்தமையால் அறுவை மருத்துவத்திலும் அவர்கள் தேர்ச்சி பெற்றிருந்திருக்க வேண்டும். அவர்கள் மேற்கொண்ட அறுவை சிகிச்சை முறைகள் பற்றி இனி வரும் பிரிவின் கீழ் சுருக்கமாக ஆராயப்பட்டுள்ளது.

# பிரிவு 6

## அறுவை மருத்துவம்

அறுவை மருத்துவம் என்பது நோய் குணமாக்கும் அறிவியலின் ஒரு பிரிவாகும். உடலில் சிதைந்து போன பாகங்களைத் தைத்தல், கெட்டுப்போன உறுப்புக்களை நீக்குதல் ஆகியவை அறுவை மருத்துவத்தின் முக்கிய செயல்களாகும். அறுத்தல் (Incision), துண்டித்தல் (Excision), பிரித்தெடுத்தல் (Extraction), தைத்தல் (Suturing), சுடுதல் (Cauterization) மற்றும் வெட்டியெறிதல் (Amputation) ஆகிய அறுவை மருத்துவ முறைகள் சங்க காலத்தில் புழக்கத்திலிருந்துள்ளன.

சங்க இலக்கியங்களில் காணப்படும் மருத்துவ ஆதாரங்கள் மூலிகை மருத்துவ சிகிச்சை பற்றி மட்டுமின்றி அறுவை மருத்துவக் கலை பற்றியும் சங்ககால மக்களின் நுட்ப அறிவினை வெளிப்படுத்துபவைகளாகவுள்ளன. **மாமுனி அகத்தியரின் மண்டையோட்டு அறுவை சிகிச்சைத் (Cranium Operation)** திறன் குறித்து இந்நூலில் ஏற்கெனவே குறிப்பிடப் பட்டுள்ளது. பண்டைய தமிழ்நாடு அடிக்கடி போர்களை எதிர் கொள்ள வேண்டியிருந்ததால் போரில் காயமுற்ற வீரர்களுக்கு அறுவை கிகிச்சை செய்து பராமரிக்க வேண்டிய அவசியம் எப்போதும் இருந்து வந்தது. எனவே, சங்ககால அறுவை மருத்துவர்கள் தங்களின் அறுவை மருத்துவத் திறனை வளர்த்துக் கொள்ள அதிக அளவில் வாய்ப்புக்கள் பெற்றிருந்தனர்.

### 1. பண்டைய அறுவை மருத்துவத்திறனுக்கு அகழ் வாய்வுச் சான்றுகள்

சங்க காலத்தில் அறுவை மருத்துவம் செய்யும் பழக்கம் இருந்ததற்கு ஆதாரமாக **மதுரை அருகே பழங்கானத்தம்** எனுமிடத்தில் தற்கால இடுகாட்டுப் பகுதியான **கோவலன் பொட்டலில்** அகழ்ந்தெடுக்கப்பட்ட ஒரு தாழியில் ஒரு மனிதனின் எலும்புகள் கண்டெடுக்கப்பட்டன.[1] மதுரை மருத்துவக் கல்லூரியைச் சேர்ந்த உடல் கூறு அமைப்பியல் பேராசிரியர் (Professor of Anatomy) மருத்துவர் பானுமதி அத்தாழியினுள்ளிருந்த எலும்புகளையெல்லாம் சோதித்து, அவ்வெலும்புகளுக்குரிய மனிதனின் இடது கையானது தோள்பட்டையில் இருந்து வெட்டியெடுக்கப்பட்டுள்ளது (Amputated) என்றும், மேலும் வெட்டி எடுக்கப்பட்ட தோள்பட்டைப் பகுதியில் எலும்பு

வளர்ச்சி அடைந்திருப்பதைக் காட்டும் சுவடுகள் தெரிவதால் கை வெட்டிஎடுக்கப்பட்ட பின்னர் சில காலம் அந்த மனிதன் உயிர் வாழ்ந்திருக்க வேண்டுமென்றும் கண்டுள்ளார்.[2] இது தற்போது மதுரை திருமலை நாயக்கர் மஹால் அருங் காட்சியகத்தில் வைக்கப்பட்டுள்ளது (படம் 38).



படம் 38·
கை துண்டிக்கப்பட்ட மனித எலும்புக்கூடு (கோவலன் பொட்டல் – மதுரை) சங்ககாலம்

மேலும், அந்த எலும்புகள் யாவும் சுமார் 1800 ஆண்டு கட்கு முன்னர் வாழ்ந்த ஒரு நடுத்தர மனிதனுடையவையாக இருக்க வேண்டுமென்றும் கண்டறியப்பட்டுள்ளது. எனவே, அந்த மனிதன் ஒரு போர்வீரனாக இருந்திருக்க வேண்டு மென்றும், போரில் காயம்பட்ட அவனுக்கு அறுவை சிகிச்சை செய்யப்படும்போது அவனது இடதுகை துண்டித்து எடுக்கப் பட்டிருக்க வேண்டுமென்றும் யூகித்தறியலாம்.

## 2. காயங்களுக்கு அறுவை சிகிச்சை

போரில் ஏற்படும் காயங்களுக்கு அளிக்கப்பட்ட சிகிச்சை பற்றி சங்க இலக்கியமான **புறநானூறில்** விவரிக்கப்பட்டுள்ளது. இரத்தம் வடிந்த காயம் சுத்தம் செய்யப்பட்டு, மருந்து தடவிப் பின் பருத்தித் துணியினால் கட்டுப்போடப்பட்டுள்ளது.

**"பஞ்சியும் களையாப் புண்ணர்"[3]**

என்னும் புறநானுற்றுப் பாடல் வரியிலிருந்து காயம் பட்ட போர் வீரர்கள் காயத்தின் மீது போடப்பட்ட பஞ்சுக் கட்டினைக்

களைந்தெடுக்காமல் இருந்தனர் என்று தெரிகிறது. பஞ்சு என்னும் சொல் காயத்திற்குக் கட்டுப்போடப் பயன்படும் துணியினைக் குறிக்கும். "களையாப் புண்ணர்" என்பது காயத்தின் மேல் கட்டுப் போடப்பட்ட துணியினை அவிழ்க்காத புண்களைக் கொண்டவர் என்று பொருள்படும். காயத்திற்குச் சிகிச்சையளிக்கும் முறை பற்றியும் புறநானூற்றில் தெளிவாக விளக்கப்பட்டுள்ளது.

வீரனின் உடம்பில் உண்டான காயம் எதிரிகளின் இரும்பு ஆயுதங்களால் ஏற்பட்டது. இக்காயத்தினைக் கவிஞர் "இரும்பினால் சுவைக்கப்பட்ட வீரப்புண்" (இரும்பு சுவை கொண்ட விழுப்புண்) என்று வஞ்சப் புகழ்ச்சியாகக் கூறுகிறார். மருந்தாக விளங்கும் மரத்தின் (மருந்து கொள்மரத்தின்) பாலைத் தடவியதால் காயம் முற்றிலும் குணமடைந்து, அதன் வடு மட்டும் உடம்பில் எஞ்சி நின்றது. மரத்தினின்றும் பாலைப் பெறுவதற்காக வெட்டப்பட்டப் பகுதி, காலப்போக்கில் மறைந்து வெட்டப்பட்ட தடம் மட்டும் காணப்படுவது போல் புண்பட்ட காயமும் குணமாகி அதன் தழும்பு மட்டும் எஞ்சி நின்றதாகக் கவிஞர் சுவைபட வர்ணித்துள்ளார்:

> **"இரும்புசுவை கொண்ட விழுப்புண் நோய்தீர்ந்து**
> **மருந்துகொள் மரத்தின் வாள்வடு மயங்கி**
> **வடுவின்று வடிந்த யாக்கையன்"**[4]

காயம்பட்ட புண்களுக்கு அத்திமரத்துப் பால் சிறந்த மருந்தாகப் பயன்படுவதால்[5] **மருந்து கொள் மரம்** என்பதன் மூலம் கவிஞர் **அத்தி மரத்தையே** (Ficus Glomerata) குறிப் பிட்டிருக்க வேண்டும்.

சங்க காலத்தில் போர் என்பது அடிக்கடி நடைபெறும் நிகழ்ச்சியாகும். எனவே, காயங்களுக்கு மருந்திடும் அறுவை சிகிச்சைகளும் நாள்தோறும் நடைபெறும் சாதாரண நிகழ்ச்சியாக இருந்திருக்க வேண்டும். **பதிற்றுப் பத்து** என்னும் சங்கப் பாடலில் அறுவை சிகிச்சை முடிந்து இறுதியில் தையலிடும் காட்சி மிக அழகாகச் சித்தரிக்கப்பட்டுள்ளது.

அறுவை மருத்துவர் ஒரு போர்வீரனின் காயத்தைத் தைத்துக் கொண்டிருந்தபோது நீண்ட வெண்மையான ஊசி (நெடுவெள்ளூசி)யானது தோலினுட் சென்று மீண்டும் வெளிவந்து கொண்டிருந்தது. இக்காட்சியை எடுத்துரைக்கு முகமாகப் புலவர் ஒரு மீன்கொத்திப் பறவை (சிரல் - Kingfisher) மீனைத்தேடித் தனது அலகினைக் குளிர்ந்த நீருக்குள்

நுழைப்பதும் பின்வெளியிலெடுப்பதுமாக (மீன்தேர் கோட்பின் பனிக்கயம் மூழ்கிச் சிரல் பெயர்ந்தன்ன) இருப்பதைப் போன்று காயத்தைத் தைக்கும் ஊசி தோலுக்குள் புகுவதும் பின்வெளி வருவதுமாக இருந்ததென நயம்படக் கூறியுள்ளார்.

“மீன்தேர் கோட்பின் பனிக்கயம் மூழ்கிச்
சிரல் பெயர்ந்தன்ன நெடுவெள்ளூசி
நெடுவசி பரந்த வடுவாழ் மார்பின்”[6]

தையலிடும் ஊசியின் செயல்பாட்டை மீன்கொத்திப் பறவை அலகின் செயல்பாட்டுடன் ஒப்பிட்டிருப்பது வெறுங் கவர்ச்சியாக மட்டுமல்லாது மீன் கொத்திப் பறவை குளத்தில் மீனுக்காக மூழ்கி எழுவது எவ்வளவு சாதாரணமாகக் காணப் படக்கூடிய காட்சியோ அது போன்றே காயங்களுக்குத் தையலிடும் காட்சியும் அவ்வளவு சாதாரணமாகக் காணக்கூடிய காட்சியாகும் என்ற ஆழ்ந்த கருத்தினை மறைமுகமாகச் சுட்டிக் காட்டியுள்ளார் புலவர்.

### 3. கழலைக் கட்டிக்கான அறுவை சிகிச்சை

உடலில் தோன்றும் கழலைக் கட்டியினை அறுவை சிகிச்சையின் மூலம் குணமாக்குதல் பற்றிக் காவியப் புலவர் கம்பர் தனது கம்பராமாயணத்தில் அழகுபடக் கூறியுள்ளார்.

உடலில் தோன்றிய கழலைக் கட்டியினை (உடலிடைத் தோன்றிற் றொன்றை) அறுத்து, அதனின்றும், இரத்தத்தை வடித்தெடுத்து (அதன் உதிரம் ஊற்றி) பின் அந்த இடத்தைச் சுட்டு (சுடலுறச் சுட்டு), அதன்மேல் வேறு ஒரு மருந்தினைப் பூசிப் புண்ணை ஆற்றித் துயரம் தீர்ப்பர்:

“உடலிடைத் தோன்றிற் றொன்றை அறுத்து அதன்
உதிரம் ஊற்றி
சுடலுறச் சுட்டு வேறோர் மருந்தினால் துயரம் தீர்வர்”[7]

இதன் மூலம் கட்டிகளைக் குணமாக்கும் அறுவை சிகிச்சையின் நான்கு நிலைகளைச் சுட்டிக்காட்டியுள்ளார்.

1. கட்டியினை அறுத்தெடுத்தல்
2. கட்டியினுள்ளிருந்த கெட்ட இரத்தத்தினை வெளியேற்றுதல்
3. அறுத்த இடத்தில் சுடுதல்
4. புண்ணுள்ள இடத்தில் மருந்தினைத் தடவுதல்.

இதில் குறிப்பிடத்தக்க அம்சம் என்னவெனில், ஒரு கழலைக் கட்டியினை அறுவை சிகிச்சையின் மூலம் குணமாக்கும் வழிமுறையினைக் கூறியிருப்பவர் ஒரு மருத்துவர் அன்று; ஆனால் ஒரு தமிழ்ப் புலவர் தனது காவியத்தை எழுதும்போது மிகச் சாதாரணமாக அறுவை சிகிச்சை பற்றி மிகத்தெளிவாகக் கூறியிருப்பது பாராட்டற்குரியது.

அறுவை சிகிச்சையில் சுடுதல் முறை பற்றி இம்மாதிரி யான கருத்து இடைக்கால நூலாகிய **நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்திலும்** காணப்படுகிறது.

**"வாளா லறுத்துச் சுடினும் மருத்துவன்பால்**
**மாளாத காதல் நோயாளன்"**[8]

அறுவை மருத்துவர் பாதிக்கப்பட்டவருடைய உடம்பின் பாதிக்கப்பட்ட பகுதியை வாளால் அறுத்து, பின் அந்த இடத்தைச் சுட்டுக் குணமாக்கினாரெனினும் மருத்துவனிடம் நோயாளி மீளாத அன்பு கொண்டிருந்தான் என்பது அதன் விளக்கம்.

## 4. படைக்கலக் காயங்களுக்கான அறுவை சிகிச்சை

போரில் இரும்பு ஆயுதங்களினால் போர்வீரர்கள் காயமுறும் போது அந்த இரும்பு ஆயுதங்களின் நொறுங்கிய துண்டுகள் காயத்தினுள் தங்கி மறைந்து கொள்ளும் வாய்ப்புக்கள் உள்ளன. இந்த இரும்புத் துண்டுகளை வெளியே எடுக்காவிடில் காயம் ஆறாது என்பதை இடைக்கால அறுவை மருத்துவர்கள் நன்கு அறிந்திருந்தனர். இத்தகைய காயங்களுக்குச் சிகிச்சையளிக்கும் போது முதலில் காயங்களுக்குள் மறைந்திருக்கும் இரும்புத் துண்டுகளை வெளியே எடுத்து, பின் அக்காயங்களின் மேல் மருந்துகளைப் பூசி, பின்னர் மருந்தினால் நனைக்கப்பட்ட துணியினால் காயங்களைச் சுற்றிக் கட்டுப் போடுவர். இவ்வாறு காயத்தின் மேல் மருந்தில் நனைந்த துணியினால் கட்டுப் போடுவதற்கு **நெய்க்கிளி வைத்தல்** என்று பெயர். நோயாளியின் உடம்பில் ஏராளமான காயங்களிருந்தால், அவன் ஒருவித **மருந்தெண்ணெய்ப் படுக்கையின்** மீது கிடத்தப்படுவான்; இச்செயலானது **நெய்ப்பித்தல் கிடத்தல்** என்றழைக்கப்பட்டது. இவ்வாறு காயமடைந்த ஒரு போர்வீரனுக்குச் சிகிச்சையளிப்பது பற்றிச் **சீவகசிந்தாமணியில்** விவரிக்கப்பட்டுள்ளது.

**"நெய்க்கிளி வைக்கப்பட்டார்**
**நெய்ப்பித்தல் கிடத்தப்பட்டார்**
**புக்குளி எஃகம் நாடி**
**இரும்பினால் பொலப்பட்டார்"[9]**

காயங்களினின்றும் இரும்புத் துண்டுகளை வெளியே எடுக்கும் முறையினைப் பற்றியும் கம்பர் தனது ராமாயணத்தில் விவரித்துள்ளார். மருத்துவ சிகிச்சையில் காந்த சக்தியின் பயன் பாட்டின் முக்கியத்துவம் சமீபகாலத்தில் அதிகரித்துள்ளது. இவ்வாறு காந்த சக்தியினைப் பயன்படுத்திச் செய்யப்படும் மருத்துவ சிகிச்சைக்குக் **காந்தச் சிகிச்சை** (Magneto therapy) என்று பெயர். கம்பர், காந்தச் சிசிக்சை பற்றிய தனது அறிவினைக் கம்ப ராமாயணத்தில் காட்டியுள்ளார்.

கைகேயி கேட்ட வரம் தசரதனின் மார்பில் கூர்மையான வேல்போன்று பாய்ந்து அவனுடைய உடலிலிருந்து உயிர் வெளியேற முடியாதவாறு தடுத்து நின்று துன்புறுத்தியது. ஆனால் அவன் ராமனது மார்பினைத் தழுவி நின்றபோது ராமனது மார்பு காந்தம் போன்று செயல்பட்டு அவனது நெஞ்சில் வருத்திக் கொண்டிருந்த இரும்பு வேல் போன்ற துன்பத்தினை வெளியேற்றி அவனுக்கு ஆறுதலளித்தது.

**"அன்று கேகயன் மகள் கொண்ட வரமெனும் அயில்வேல்**
**இன்று கருஎன் இதயத்தின் இடைநின்று என்னைக்**
**கொன்று நீங்காலது இப்பொழுது அகன்றது உன்குலப் புண்**
**மன்றுலாகமங் காந்தமா மணியின்று வாங்க"[10]**

கைகேயி கேட்ட வரத்தினைக் கம்பர் ஒரு கூர்மையான இரும்பு வேலாக விவரித்து அது தசரதனின் மார்பில் துளைத்து அவனது உயிர் வெளியேற முடியாதவகையில் அவனைத் துன்பத்திலாழ்த்தியது; ஆனால் ராமனின் மார்பினைக் காந்தமாகப் பாவித்து, அக்காந்தமாகிய மார்பினைத் தனது மார்புடன் தழுவியபோது ராமனுடைய மார்பின் காந்த சக்தியினால் தசரதனது மார்பில் பாய்ந்த இரும்பு வேல் போன்ற துயரங்கள் நீக்கப்பட்டன என்று காந்த சிகிச்சை முறையைப் பற்றிக் கோடிட்டுக் காட்டியுள்ளார் கம்பர்.

# பிரிவு 7

## பழந்தமிழ்நாட்டில் மருத்துவமனைகள்

சங்ககாலத்தில் மருத்துவத் தொழிலானது பரம்பரைத் தொழிலாகப் பாதுகாக்கப்பட்டு வந்தது. ஒரு குடும்பம் ஒரு தொழிலைத் தனது வாழ்க்கைத் தொழிலாக ஏற்று நடத்திப் பெற்றத் திறன் பரம்பரை பரம்பரையாகப் பாதுகாக்கப்பட்டு ஒவ்வொரு பரம்பரையிலும் குழந்தைகள் பெற்றோர் செய்த தொழிலையே மேற்கொள்வது என்பது வழக்கமாகயிருந்தது.[1] எனவே, மருத்துவத் தொழிலானது **மருத்துவன் தாமோதரனார்**, மற்றும் **மருத்துவன் நல்லச்சுதனார்** போன்று தனிமனிதர்களால் தனித்தொழிலாக நடத்தி வரப்பட்டிருக்க வேண்டும்.[2] இதன் காரணமாக, மருத்துவ முறையிலான மருத்துவச் சேவை சங்க காலத்தில் நடை பெற்றதற்கான வாய்ப்புக்கள் இல்லை.

### 1. சங்க காலத்தில் சுகாதார மையங்கள்

சங்க காலத்தில் புகார் நகரில் மக்களின் துயரங்களைத் துடைப்பதையே தொழிலாகக் கொண்ட துறவிகள் வாழ்ந்த **“சக்கரவாளக் கோட்டம்”** என்னும் மையம் ஒன்றிருந்ததாக **மணிமேகலை** என்னும் காப்பியத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. அம் மையத்தில், மக்களின் துயரங்களும் நோய்களும் தீர்க்கப் பட்டன (துக்கம் துடைக்கும்); மாமுனிவர்களால் (மாதவர்) மன உளைச்சல்கள் நீக்கப்பட்டன (துகளறும்).

> **“துக்கம் துடைக்கும் துகளறு மாதவர்**
> **சக்கரவாளக் கோட்டம் உண்டு”**[3]

அவ்வூரில் கடும்பசியால் வாடியவர்க்கும் (ஊரார் ஆங்கண் உறுபசி உழன்றோர்), ஆதரவற்ற அனாதைகட்கும், (ஆரும் இம்மையினரும்), கடுமையான நோயினால் பாதிக்கப் பட்டவர்க்கும் (அரும் பிணியுற்றோர்) உதவுவதற்கென அற நிலையமாகச் செயல்பட்டு வந்த ஒரு பொது இடம் ஒன்றும் **(அறவி)** இருந்தது:

> **“உலக அறவி ஒன்று உண்டு அதனிடை**
> **ஊரார் ஆங்கண் உறுபசி உழன்றோர்**
> **ஆரும் இம்மையினாரும் பிணியுற்றோர்**
> **இடுவோர்த் தேர்ந்தாங்கு யிருப்போர் பலர்”**[4]

மேற்கண்ட விவரங்களிலிருந்து இங்கு கூறப்பட்டுள்ள **அறவி** என்னும் பொது இடமானது **இலவச பராமரிப்பு விடுதியாகச்** செயல்பட்ட ஒரு பொதுச் சுகாதார மையமாக இருந்திருக்க வேண்டும்.

## 2. மருத்துவமனை முறையின் வளர்ச்சி

தமிழ்நாட்டினில் குடியேறிய ஜைனர்கள் (Jains) தமிழ் மருத்துவத்தினைக் கற்று அவர்கள் நிர்மாணித்துக் கொண்ட மடாலயங்களில் தங்களது மருத்துவப் பணியினைத் தொடங்கினார்கள்.[5] பிற்காலத்தில் மருத்துவமனை முறையில் மருத்துவச் சேவை வளர்ச்சியடைந்ததற்கு ஜைனர்களின் இந்த மடாலய மருத்துவச் சேவையே அடிப்படையாக அமைந்திருக் கலாம்.

இடைக்காலத்தில் கோவில்கள் கல்வி மையங்களாக மாறிய போது சில கோவில்களில் மருந்தகங்களும் (Dispensaries), மருத்துவமனைகளும் (Hospitals) இணைக்கப்பட்டு அவற்றின் மூலம் நோயாளிகளுக்குச் சிகிச்சையளிக்கப்பட்டது. இவை தவிர சில மடங்களும் (Mathas) கல்வி நிலையங்களையும் மருத்துவ மனைகளையும் நடத்தி வந்தன.

மருத்துவமனையென்பது கல்வெட்டுக்களில் **ஆதுலர் சாலை, ஆதுர** சாலை மற்றும் **ஆரோக்கிய** சாலை என்ற சொற்களின் மூலம் குறிப்பிடப்பட்டுள்ளன.

**ஆதுலர்** சாலை என்னும் சொல் ஆதரவற்றவர் என்னும் பொருளுடைய **ஆதுலர்** என்னும் சொல் மற்றும் **நிலையம்** என்னும் பொருளுடைய சாலை என்னும் சொல் ஆகியவற்றின் கூட்டுச் சொல்லாக நின்று **ஆதரவற்றோரின் இல்லம்** (Home for the Destitutes) என்ற பொருளை உணர்த்தும் சொல்லாகும்.[6]

திருமுக்கூடல் கல்வெட்டில்[7] மருத்துவமனையைக் குறிப்பிட **ஆதுலர் சாலை** என்ற சொல்லே பயன்படுத்தப் பட்டிருக்கின்றது. **ஆதுலர்** சாலை என்னும் சொல் நேரிடையாக மருத்துவமனை என்னும் பொருளை உணர்த்தாவிடினும் ஆதுலர் சாலையைப் பற்றிய விளக்கங்கள், அதன் செயல்பாடுகள் ஆகியவை பற்றிக் கல்வெட்டுக்களில் குறிப்பிட்டிருப்பதை ஆழ்ந்து நோக்குங்கால், **ஆதுலர் சாலை** என்னும் சொல் மருத்துவமனையினைக் குறிப்பிடவே கல்வெட்டுக்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது என்பதை ஐயமறத் தீர்மானிக்கலாம். மேலும் தமிழ் - தமிழ் அகரமுதலியில்[8] **ஆதுரம்** என்னும்

சொல்லுக்கு நோய் என்றும் ஆதுரன் என்னும் சொல்லுக்கு நோயினால் பாதிக்கப்பட்டவன் என்றும் பொருள் கூறப்பட்டுள்ளது. எனவே முதலில் ஆதுர சாலை எனும் சொல் மருத்துவமனையினைக் குறிப்பிடப்பயன்படுத்தப்பட்டிருக்க வேண்டும்; பின்னர் நாளடைவில் இச்சொல் மருவி ஆதுல சாலை என்று மாற்றம் பெற்றிருக்க வேண்டும். ஆரோக்கிய சாலை என்னும் சொல் சமஸ்கிருதத்தை மூலமாகக் கொண்டது. ஆரோக்கியம் என்பது உடல் நலத்தையும் சாலை என்பது உணவு விடுதியையும் குறிக்கும் என்பதால் ஆரோக்கிய சாலை என்பது உணவளித்து உடல்நலம் பேணும் ஒரு விடுதியினை (Nursing Home) அல்லது மருத்துவமனையினைக் குறிக்கும். ஸ்ரீரங்கம் கல்வெட்டில் அங்குள்ள மருத்துவமனை ஆரோக்கிய சாலை என்றே குறிப்பிடப்பட்டுள்ளது.[9]

சோழர், பாண்டியர், விஜயநகர மற்றும் மராட்டியர் கல்வெட்டுக்களில் நாட்டின் பல்வேறு பகுதிகளிலும் அமைந்துள்ள கிராமப்புற மருந்தகங்கள் பற்றியும் மருத்துவமனைகள் பற்றியும் விரிவான குறிப்புக்கள் காணப்படுகின்றன.

### தஞ்சாவூர் மருத்துவமனை

சோழ மன்னர்களும் அரச குடும்பத்தைச் சார்ந்தவர்களும் ஏழைகளுக்கு மருத்துவ வசதியளிப்பதைச் சமயப் பெருமை வாய்ந்த அறச்செயலாகக் கருதினர். எனவே, அவர்களுடைய ராஜ்ஜியத்தின் பல்வேறு பகுதிகளிலும், அவர்கள் ஏழைகள் பயனடையும் வகையில் இலவச மருந்தகங்கள் நிறுவினர். தஞ்சாவூர் மாவட்டம் பாபநாசம் தாலுக்காவைச் சேர்ந்த கோயில் தேவராயன் பேட்டை[10] கல்வெட்டு தான் தஞ்சாவூரில் மருத்துவமனை இருந்தது பற்றிய விபரத்தை அளிக்கின்ற முதல் கல்வெட்டாகும். இந்த மருத்துவமனையானது சுந்தரச் சோழ விண்ணகர ஆதுல சாலை என்று கல்வெட்டில் குறிப்பிடப் பட்டுள்ளது.[11] இளவரசி ஆழ்வார் ஸ்ரீ பராந்தகன் ஸ்ரீ குந்தவைப் பிராட்டியார் இந்த மருத்துவமனையின் பராமரிப்புச் செலவுக்கும், இலவச மருத்துவச் சேவைக்குமாக 9 'மா' நிலத்தைக் கொடையாக அளித்துள்ளார். மேலும், முதலாம் ராஜேந்திரசோழ தேவனின் மூன்றாம் ஆட்சியாண்டுக் காலத்திய (கி.பி. 1015) குறிப் பேட்டிலிருந்து, ராஜகேசரி சதுர்வேதமங்கலத்துச் சபையினரால் அந்த நிலம் விற்கப்பட்டுக் கொடையின் நோக்கங்களுக்காகச் செலவிடப்பட்டது என்று தெரியவருகிறது. ஆனால், நில

விற்பனைத் தொகைப் பற்றாக்குறையாகயிருந்த படியால், களகரச்சேரி என்னும் சிற்றூரைச் சேர்ந்த ஒருவன் தனது நிலத்தினை விற்று மருத்துவமனைப் பராமரிப்புச் செலவை ஈடுகட்டினான். இந்தத் தகவல், முதலாம் ராஜேந்திர சோழ தேவனின் ஏழாம் ஆட்சியாண்டுக் காலத்தைச் (கி.பி. 1019)[12] சேர்ந்த கோயில் தேவராயன் பேட்டையிலுள்ள மத்தியபுரீஸ்வரர் ஆலயத்திலுள்ள ஒரு கல்வெட்டின் மூலம் தெரியவருகிறது. இந்த மருத்துவமனை குந்தவைப் பிராட்டியாரால் தனது தந்தை இரண்டாம் சுந்தர சோழப் பராந்தகனின் நினைவாக நிறுவப் பட்டது.

### திருவிசலூர் மருத்துவமனை

கும்பகோணத்தையடுத்த திருவிசலூர் என்ற ஊரிலுள்ள சிவயோகநாதர் ஆலயத்தில் காணப்படும் முதலாம் ராஜேந்திரனின் நான்காம் ஆட்சியாண்டுக் காலத்திய கல்வெட்டில்[13] ஒரு அறுவை மருத்துவருக்கு, பொதுமக்களுக்கு மருத்துவ சேவை புரிவதற்காக நிலமும் வீடும் கொடையாக அளிக்கப்பட்ட விபரம் குறிப்பிடப் பட்டுள்ளது. அந்த மருத்துவர் அந்த வீட்டை அவரது மருத்துவ மையமாகப் பயன்படுத்தியிருக்க வேண்டும்.

### வேம்பத்தூர் மருத்துவமனை

முதலாம் ராஜேந்திர சோழ தேவனின் மூத்த சகோதரி குந்தவைப் பிராட்டியார் வேம்பத்தூரில் மருத்துவத் தொழில் நடத்தி வந்த பிரயோகத்தரையன் என்னும் அறுவை மருத்துவருக்கு வேம்பத்தூரிலுள்ள ஒரு வீட்டையும் ஒரு வேலி 4 மா நிலத்தையும் மக்களுக்கு இலவச மருத்துவச் சேவை புரிவதற்காகக் கொடையாக அளித்துள்ளார்.[14] கொடையைப் பெற்றுக் கொண்ட பிரயோகத்தரையன் அக்கொடையினைத் தனது வாழ்நாள் ஊதியமாக ஏற்றுக் கொண்டு தான் பெற்ற அந்த இல்லத்திலேயே தனது இலவச மருத்துவச் சேவையைத் தொடர்ந்தார்.

### திருமுக்கூடல் மருத்துவமனை

தமிழ்நாட்டில் செங்கற்பட்டு மாவட்டத்திலுள்ள ஒரு சிற்றூர் திருமுக்கூடல். பாலாறு, வேகவதி, செய்யாறு ஆகிய மூன்று நதிகளின் சங்கமத்தில் அமைந்துள்ளது, அங்குள்ள வெங்கடேசப் பெருமாள் ஆலயம் மிகவும் பழமை வாய்ந்தது (படம் 39) (படம் 40அ, 40ஆ).



*படம் 39*
வெங்கடேசப் பெருமாள் ஆலயம் (திருமுக்கூடல்)



படம் 40அ
திருமுக்கூடல் வெங்கடேசப் பெருமாள் ஆலயம்
(தெற்குப் பார்வை)



படம் 40ஆ
திருமுக்கூடல் வெங்கடேசப் பெருமாள் ஆலயம்
(உள் பார்வை)



படம் 41
திருமுக்கூடல் கல்வெட்டு

அதன் பிரகாரச் சுவரில் ஒரு கல்வெட்டுக் கண்டெடுக்கப்பட்டது. கி.பி. 1915-16ஆம் ஆண்டில் இக்கல்வெட்டு **கே.வி. சுப்பிரமணிய ஐயரால்** கண்டெடுக்கப்பட்டுப் படியெடுக்கப்பட்டது. கி.பி. 11ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த இக்கல்வெட்டு மிகப்பெரியதும், மிக அதிகஅளவிலான தகவல்களைத் தருவதுமாகும். தற்கால மருத்துவமனைகளைப் போன்று முறையாகச் செயல்பட்டு வந்த ஒரு **ஆதுலர் சாலை** (மருத்துவமனை)யைப் பற்றி விரிவான குறிப்புக்களைத் தந்துள்ளது.[15] இக்கல்வெட்டு ராஜகேசரிவர்மன் எனப்பட்ட வீரராஜேந்திர தேவரின் ஆறாம் ஆட்சியாண்டு (கி.பி 1067) என்று நாளிடப்பட்டுள்ளது (படம் 41).

ஒரு முழுமையான **ஆரோக்கிய சாலை** என்பது தேர்ச்சி பெற்ற மருத்துவர்கள், முக்கியமான மருந்துகளின் போதுமான சேமிப்பு, நிறைந்தளவில் உணவு மற்றும் நடைமுறைத்திட்டம் ஆகியவற்றைப் பெற்றிருக்க வேண்டும் என்று **வைத்திய சாஸ்திரம்** என்ற நூலை மேற்கோள்காட்டி கிரிஜா பிரசன்ன மஜூம்தார் (Girija Prasanna Majumdar)[16] கூறியுள்ளார். திருமுக்கூடலில் இருந்த **ஆதுலர் சாலை** இத்தேவைகள் யாவற்றையும் நிறைவு செய்திருந்தது.

கல்வெட்டறிக்கை[17]யிலுள்ள விபரங்களின்படி இந்த **ஆதுலர் சாலை** எல்லா வசதிகளுடனும் கூடிய ஒரு முழுமையான மருத்துவமனையாகச் செயல்பட்டுவந்துள்ளது. **உள்–நோயாளி** (In-Patients)களுக்கனெ **15 படுக்கை வசதிகள்** கொண்டிருந்தது. ஓராண்டுப் பயன்பாட்டிற்குத் தேவையான அளவில் **20 வகையான அத்தியாவசிய மருந்துகள்** சேமித்து வைக்கப்பட்டிருந்த விபரத்தைக் கல்வெட்டு பட்டியலிட்டுக் காட்டியுள்ளது. இந்த மருந்துகளின் பயன்பாட்டு விபரங்கள் இந்நூலில் **மருந்து** எனும் அதிகாரத்தில் அட்டவணை-1ன் கீழ்ப்பட்டியலிடப்பட்டுள்ளன.

மருந்துகள் மற்றும் பிற வசதிகள் நீங்கலாக, ஒரு மருத்துவமனையின் நிறைந்த செயல்பாட்டிற்கு அதிமுக்கியத் தேவையானது அங்கு பணிபுரிவோரின் திறமையான மருத்துவச் சேவையாகும். கல்வெட்டில் கூறப்பட்டுள்ள விபரங்களின்படி, திருமுக்கூடல் மருத்துவமனையானது மருத்துவமனைக்குத் தேவையான எல்லாப் பணியாட்கள் மற்றும் இதர வேலையாட்களுடன் கூடிய ஒரு தன்னிறைவு பெற்ற ஒரு முழுமை மருத்துவ மனையாகச் செயல்பட்டு வந்துள்ளது.

இம்மருத்துவமனை '**வீரசோழன் ஆதுலர் சாலை**' எனப் பெயரிடப்பட்டிருந்தது. வெங்கடேசப் பெருமாள் ஆலயத்தில்

அமைந்துள்ள வேத பாடசாலையில் கற்கும் மாணவர்கள், பாடசாலையில் பணியாற்றும் ஆசிரியர்கள், கோயில் பணியாளர்கள் ஆகியோரின் உடல்நலப் பராமரிப்புக்குத் தேவையான மருத்துவ வசதி அளிப்பதற்கென இம்மருத்துவமனை நிறுவப்பட்டது. மருத்துவமனைப் பராமரிப்புச் செலவுக்காக அளிக்கப்பட்டிருந்த அறக்கட்டளை பற்றிய தகவல்களும் கல்வெட்டில் இடம் பெற்றுள்ளன.

மருத்துவமனைப் பணியாளர் பட்டியலில் **ஒரு பொது மருத்துவர்** (General Physician), **ஒரு அறுவை மருத்துவர்** (சல்லியக் கிரியை பண்ணுவான் ஒருவன் - Surgeon), **இரண்டு ஊழியர்கள்** (Attendants), **இருபெண் ஊழியர்கள்** (Nurses), **ஒரு நாவிதன்** மற்றும் ஒரு, **நீர் கொண்டு வருபவன்** (Water man) ஆகியோர் இடம்பெற்றிருந்தனர். ஆதுலர் சாலையின் நிர்வாகப் பொறுப்பினை ஏற்று நடத்தும் மருத்துவர்

> **"ஆலப்பாக்கத்து சவர்ணன் கோதண்டராமன்
> அஸ்வத்தாம பட்டர்"**

எனக் குறிப்பிடப்பட்டுள்ளதன்மூலம் கோதண்டராமன் அஸ்வத்தாம பட்டர் என்னும் மருத்துவர் ஆலப்பாக்கம் என்னும் பக்கத்துக் கிராமத்திலிருந்து நியமிக்கப்பட்டிருந்தாரென அறியலாம்.

**'சல்லியக் கிரியை பண்ணுவான்'** என்னும் சொற்றொடர் பொதுவாக அறுவை சிகிச்சை செய்யும் அறுவை மருத்துவரைக் (Surgeon) குறிப்பதாகும். இத்தொடரின் பொருளினைக் காண இதனைச்

சல்லியம் + கிரியை + பண்ணுவான்

எனப் பிரித்துப் பொருள் கொளல் வேண்டும். இதில், **கிரியை** என்பது **வேலை** என்றும் **பண்ணுவான்** என்பது **செய்பவன்** என்றும் பொருள்படும். எனவே, தொடரின் பொருள் **சல்லியம் என்னும் வேலையைச் செய்பவன்** என்ற பொருளை உணர்த்துகிறது. ஆனால், **சல்லியம்** என்ற சொல் **அறுவைச் சிகிச்சை** என்னும் செயலை நேரடியாக உணர்த்துவதன்று. தமிழ்ச் சொற்களஞ்சியத்தில் **சல்லியம்** என்பது அம்பு, ஆணி, இரும்புக் கோல், ஆயுத நுனி, ஈட்டி, ஆயுதத் தாக்குதலைக் களைந்தெறியும் மந்திரசக்தி எனப் பல்வேறு பொருள்படக் குறிப்பிடப் பட்டுள்ளது. போரில் காயமுற்ற வீரனின் காயத்திற்குச் சிகிச்சை அளிக்கும் மருத்துவர் முதலில் காயத்தினுட் புகுந்துள்ள ஆயுதத்

துணுக்குகளை (சல்லியம்) வெளிக்கொணர்ந்த பின்னரே மருந்திட்டுக் கட்டுப்போட வேண்டும். எனவே, காயத்தினுட் புகுந்துள்ள **ஆயுதத் துணுக்குகளை (சல்லியம்)** வெளியிலெடுத்து, மருந்திட்டுக் காயத்தைக் குணமாக்குபவன் **சல்லியக் கிரியை பண்ணுவான்** என அழைக்கப்பட்டிருக்க வேண்டும். மேலும் தமிழ்ச் சொற்களஞ்சியத்தில் **சல்லியக்கரணி** என்பதற்கு **"அத்திரசத்திரம்"** (Missiles and Weapons) என்ற **"ஆயுதங்கள் தைத்த புண்ணை ஆற்றும் மருந்து"** என்றும், **கரணி** என்பதற்கு மருந்து என்றும் பொருள் தரப்பட்டுள்ளது. எனவே, **சல்லியம்** என்பதன் பொருள் **ஆயுதங்கள் துளைக்கப்பட்டதால் ஏற்பட்ட புண்ணை ஆற்றுவது** என்பதாகக் கொள்ளலாம். மூன்று சொற்களையும் ஒருங்கிணைத்துப் பார்க்கும்போது, **சல்லியக் கிரியை பண்ணுவான்** என்னும் சொற்றொடர், **ஆயுதங்களினால் ஏற்பட்ட புண்ணினை ஆற்றும் செயலைச் செய்கின்றவன்** என்ற பொருளை உணர்த்துவதைக் காணலாம். அதாவது **அறுவை மருத்துவரைக்** (Surgeon) குறிப்பிடுவதாகும். **சாம்பசிவம் பிள்ளையின்** கருத்து இவ்விளக்கத்திற்குத் துணை விளக்கமாக அமைந்துள்ளது.

> **"சல்லியச் சிகிச்சை" என்பது, அம்பு, குண்டுகள், நஞ்சு முதலான வெளிப்பொருட்கள் உடலினுள் புகுந்திருந்தால் அல்லது தேவையற்ற சதை, சீழ், இரத்தம் ஆகியவை உடற்பாகங்களை ஆக்கிரமித் திருந்தால், அவற்றை கத்தி போன்ற கருவிகளால் அறுவை சிகிச்சை மூலம் குணமாக்கும் கொடூரமான முறை"**

என்ற அவரது விளக்கம் "அறுவை சிகிச்சை" (Surgery)யையே குறிப்பிடுகின்றது. எனவே, மேற்கண்ட விளக்கங்கொண்டு பார்க்குங்கால், **சல்லியக் கிரியை பண்ணுவான்** என்னும் சொற்றொடர் அறுவை சிகிச்சை செய்பவரை அதாவது **அறுவை மருத்துவரை** (Surgeon)க் குறிப்பதாகவே இருக்கவேண்டும்.

கல்வெட்டில் காணப்படும் பின்வரும் வரிகள்:

> **"ஆதுலர்க்கு மருந்து களுக்கு வேண்டும்**
> **மருந்து பறித்தும் விறகிட்டு பரியாரம்**
> **பண்ணுவர் இருவர்"**

என்னும் வரிகள் நோயாளிகளுக்கு வேண்டிய மருந்துகளுக்கான மூலிகைகளைப் பறித்தல், மருந்துத் தயாரிப்பிற்குத் தேவையான

விறகுகளைக் கொண்டு வருதல் முதலிய எல்லா வேலைகளையும் செய்யும் இரண்டு ஊழியர்களைக் (Two Attendants) குறிப்பிடுகின்றன.

"ஆதுலர்க்கு வேண்டும் பரியாரம் பண்ணி
மருந்தாடு பெண்டுகள் இருவர்"

என்னும் வரிகள் நோயாளிகளுக்கு (ஆதுலர்க்கு) தேவையான சேவைகளைச் செய்து (பரியாரம் பண்ணி), மருந்து கொடுக்கும் இரு பெண்கள் (மருந்தாடு பெண்டுகள் இருவர்) என இரண்டு தாதிகளைக் (Nurses) குறிப்பிடுகின்றன.

இவர்கள் தவிர, தனது சவரத் தொழிலுடன் சிறுசிறு அறுவைச் சிகிச்சைகளையும் செய்து கொண்டு நோயாளிகட்கும், ஆதுலர் சாலையில் உள்-நோயளிகளாகத் தங்கிச் சிகிச்சை பெற்று வருபவர்கட்கும் (கிடைகளுக்கும்), ஆதுலர் சாலையுடன் இணைக்கப்பட்ட சத்திரத்தில் தங்கியிருப்பவர்கட்கும் (சத்திரர்க்கும்) தேவையான சேவைகளைச் செய்ய ஒரு நாவிதன் (வேண்டும் பணி செய்யும் நாவிசன் ஒருவன்) இருந்தான் என்பதை

"ஆதுலர்க்கும் கிடைகளுக்கும் சத்திரர்க்கும்
வேண்டும் பணி செய்யும் நாவிசன் ஒருவன்"

என்ற வரிகள் தெரிவிக்கின்றன.

இரவு நேரங்களில் மருத்துவமனையில் விளக்கெரிப்பதற்கான வசதிகள் செய்யப்பட்டிருந்தனவென்றும் கல்வெட்டறிக்கையில் கூறப்பட்டுள்ளது. இதற்காக இரண்டே கால் காசு ஒதுக்கப் பட்டிருந்தது. மருத்துவமனைக்குத் தேவையான தண்ணீரைக் கொண்டு வருவதற்காக நியமிக்கப்பட்டிருந்த நீர் கொணர் மனிதனுக்கு ஆண்டுக்கு 15 கலம் நெல் ஊதியமாக அளிக்கப் பட்டது.

"ஆதுலர்சாலை வீரசோழனில் வியாதிப்பட்டுக்
கிடப்போர்
பதினைவர்க்கு-ப் பேரால் - அரிசி நாழி - யாக
அரிசி குறுணி - ஏழு - நாழி"

என்பதில் ஆதுலர் சாலையில் எப்போதும் பதினைந்து உள்-நோயாளிகள் நோய்வாய்ப்பட்டுக் கிடந்தனர் என்ற அடிப் படையில் ஓராண்டிற்கு இலவச உணவிற்காக ஆகும் செலவு கணக்கிடப்பட்டு, நாளொன்றுக்குத் தலைக்கு ஒரு நாழி அரிசி வீதம் வழங்க வழிவகை செய்யப்பட்டிருந்தது புலனாகிறது.

## மருத்துவமனை அலுவலர் குழுவினரின் ஊதியம்

திருமுக்கூடல் ஆதுலர் சாலையில் பணியாற்றிய அலுவலர்களின் ஊதியம் பற்றிய விபரம் கல்வெட்டுக் குறிப்பேட்டிலுள்ளபடி கீழே தரப்பட்டுள்ளது.

**"கோதண்டராமன் அஸ்வத்தாம பட்டனுக்கு நாள் ஒன்றுக்கு**
**நெல் முக்குறுணியும் காசு எட்டும்"**

மருத்துவன் கோதண்டராமன் அஸ்வத்தாம பட்டனுக்கு ஊதியமாக நாள் ஒன்றுக்கு 3 குறுணி நெல்வீதம் ஆண்டுக்கு 3 X 30 X 12 குறுணி அல்லது 3 X 30 X 12 / 12 = 90 கலம் நெல்லும், ஆண்டுக்கு 8 காசுப் பணமாகவும் ஊதியம் வழங்கப்பட்டது. இவை தவிர மருத்துவரும் அவரது சந்ததியினரும் அனுபவிக்கும் வகையில் நிலமும் வழங்கப்பட்டதாகக் கல்வெட்டில் கூறப்பட்டுள்ளது.

**"சல்லியக் கிரியை பண்ணுவான் ஒருவனுக்கு நாள் ஒன்றுக்கு நெல் குறுணி"**

அதாவது, அறுவை சிகிச்சை செய்யும் அறுவை மருத்துவனுக்கு நாள் ஒன்றுக்கு ஒரு குறுணி நெல்வீதம் ஆண்டுக்கு 30 கலம் நெல் ஊதியமாகத் தரப்பட்டது.

**"பரியாரம் பண்ணுவர் இருவர்க்குப் பேரால் நாள் ஒன்றுக்கு நெல் குறுணி"**

பணி செய்துவந்த இரண்டு ஊழியர்களுக்கும் தலைக்கு நாள் ஒன்றுக்கு ஒரு குறுணி நெல் வீதம் ஆண்டுக்கு 30 கலம் நெல் ஊதியமாக வழங்கப்பட்டது.

**மருந்தாடும் பெண்டுகள் இருவருக்குப் பேரால் அரிசி நா நாழியாக**
**நாள் ஒன்றுக்கு நெல் குறுணியும் பேராற் காசு அரைய யாக காசு ஒன்றும்**

அங்கு பணி செய்த தாதிப் பெண்கள் இருவருக்கும் நாள் ஒன்றுக்கு தலைக்கு 4 நாழிவீதம் அரிசியும் அதாவது நெல் ஒரு குறுணி வீதமும், ஒவ்வொருவருக்கும் ஆண்டுக்கு 1/2 காசு வீதம் இருவருக்கும் சேர்த்து ஒருகாசும் வழங்கப்பட்டன. அதாவது, ஒவ்வொரு தாதிப் பெண்ணுக்கும் நாள் ஒன்றுக்கு ஒரு குறுணி வீதம் ஆண்டுக்கு 1 X 30 X 12/12 = 30 கலம் நெல்லும் 1/2 காசுப் பணமும் ஊதியமாக வழங்கப்பட்டன. மேற்கண்டவாறு

மருத்துவமனைப் பணியாளர்கட்கு வழங்கப்பட்ட ஊதிய விவரம் கீழே பட்டியலிடப்பட்டுள்ளது.

### பட்டியல் எண் 1

| எண் | அலுவலர் | ஆண்டு ஊதியம் நெல்– கலம் | ஆண்டு ஊதியம் (பணமாக) காசு | நிலம் |
|---|---|---|---|---|
| 1. | பொது மருத்துவர் | 90 | 8 | நிலம் |
| 2. | அறுவை மருத்துவர் | 30 | – | - |
| 3. | ஆண் ஊழியர் | 30 | 1 | - |
| 4. | தாதி | 30 | 1/2 | - |
| 5. | நாவிதன் | 15 | – | - |
| 6. | நீர் கொணர்வோன் | 15 | – | - |

ஊதியங்கள் யாவும் நாள் ஒன்றுக்கு குறுணிகள் அளவில் நெல்லாக வழங்கப்பட்டுள்ளன.

ஒப்பீட்டளவிற்குப் பயன்படும் வகையில் மேற் குறிப்பிடப்பட்ட அலுவலர்களின் ஊதியங்கள் யாவும் தற்கால (1999-ம் ஆண்டு) விலை மதிப்புப்படிக் கணக்கிடப்பட்டு (இணைப்பு 1ஐப் பார்க்கவும்) பின்வரும் பட்டியலில் தரப்பட்டுள்ளன.

### பட்டியல் எண் 2

| எண் | அலுவர் | ஆண்டு ஊதியம் நெல் | ஆண்டு ஊதியம் நெல்லின் மதிப்பு | ஆண்டு ஊதியம் | ஆண்டு ஊதி. | மொத்த ஆண்டு ஊதியம் | மாத ஊதி. |
|---|---|---|---|---|---|---|---|
| | | (கலம்) | (ரூபா.) | (காசு) | (ரூபா.) | (ரூபா.) | (ரூபா.) |
| 1. | பொது மருத்துவர் | 90 | 40500 | 8 | 34800 | 75300 | 6275.00 |
| 2. | அறுவை மருத்துவர் | 30 | 13500 | - | - | 13500 | 1125.00 |
| 3. | ஆண் ஊழியர் | 30 | 13500 | 1 | 4350 | 17850 | 1487.50 |
| 4. | தாதி | 30 | 13500 | 1/2 | 2175 | 15675 | 1306.25 |
| 5. | நாவிதன் | 15 | 6750 | - | - | 6750 | 562.50 |
| 6. | நீர்கொணர் வோன் | 15 | 6750 | - | - | 6750 | 562.50 |

## திருப்புகளூர் மருத்துவமனை

சோழர்காலத்தில் திருப்புகளூரில் நிறுவப்பட்டதொரு மருத்துவமனை பற்றிய விபரம் கல்வெட்டில் காணப்படுகிறது. விக்கிரம சோழர்[18] காலத்திய கல்வெட்டொன்றில் திருப்புகளூரில் முடிகொண்ட சோழப் பேராற்றின் வடகரையில் நிறுவப் பட்டிருந்த மருந்துவமனையொன்றிற்கு நோயாளிகளையும் ஆதரவற்றவர்களையும் (ஆதுலரையும் அனாதரையும்) பராமரிக்கும் வகையில் சத்திரியநாத சதுர்வேதி மங்கலத்து ஊர்ச் சபையினர் கொடையாக வழங்கிய வரிவிலக்களிக்கப்பட்ட நிலம் பற்றிய விபரம் காணப்படுகிறது.

இது பற்றி, கல்வெட்டில் காணப்படும் வரிகள் பின் வருமாறு:

3. "..................... திருப்புகளூரி

4. முடிகொண்ட சோழப் பேராற்றுக்கு வட
கரையில் ஆதுலசாலையாகக் கொண்ட மடத்தில்
ஆதுலரை
யும் அனாதரையும் ......(இரசனரய)ன வளநாட்டு திரு
வழுந்தூர் நாட்டுத்

5. தேவூர்த் தேரூருடையான் வேலன் மனத்துக்கினியனான வீர
ராஜராசன் செய்வித்த ஆதுலசாலைக்(கு) யத்தேவர்
சிரிபண்
பண்டாரத்தே காசுகொண்டு ஆதுல ... ஆக
நாங்கள் இறை
யிலியாக விட்டுக் குடுத்த நிலமா"[19]

கல்வெட்டு வரிகளிலிருந்து அந்த மருத்துவமனையினை நிறுவியவர் வீரராஜராஜன் என்று தெரியவருகிறது. இதில் குறிப்பிடத்தக்க விபரம் என்னவெனில் அந்த மருத்துவமனை யானது இன்றும் ''சித்தவைத்திய சாலை''யாக அதே இடத்தில் பராமரிக்கப்பட்டு வருகிறது[20] (படம் 42).



படம் 42
சித்த மருத்துவமனை(திருப்புகளூர்)

## ஸ்ரீரங்கம் மருத்துவமனை

ஸ்ரீரங்கம் ரங்கநாதர் ஆலயத்தில் ஒரு ஆரோக்கிய சாலை (மருத்துவமனை) இருந்ததென்ற விபரம் அக்கோயிலில் காணப்படும் இரு கல்வெட்டுக்களின் மூலம் தெரியவருகிறது. அவற்றுள் ஒன்று ஹொய்சல மன்னர் பிரதாப சக்கரவர்த்தி வீர ராமநாத தேவரின் மூன்றாம் ஆட்சியாண்டுக் காலத்தைச் (கி.பி. 1257) சேர்ந்தது; முற்றுப்பெறாதது. மற்றது சக ஆண்டு 1415 (கி.பி. 1493) என நாளிடப்பட்டது.

ஸ்ரீரங்கம் கல்வெட்டு தரும் விபரங்களின்படி[21] கருட வாகன பட்டர் என்பவர் அவருடைய குரு ராமானுஜரின் ஆணைப்படி ஸ்ரீரங்கம் ஆலயத்தினுள் ஒரு ஆரோக்கிய சாலையைத் தொடங்கி வைத்தார். வீரராமநாத தேவரின் காலத்தில் மற்றொரு **கருட வாகனப்பட்டர்** என்பவர் கி.பி. 1257இல் ஹொய்சலத் தளபதி சிங்கண்ண தண்டநாயகர் என்பவரிடமிருந்து ஆரோக்கியசாலையின் பராமரிப்பிற்காக நிலங்களை மானியமாகப் பெற்றார். முகம்மதியர்களின் படையெடுப்பின் போது சிதைக்கப்பட்ட இந்த ஆரோக்கியசாலையினை மூன்றாவதாக ஒரு கருடவாகனப்பட்டர் கி.பி. 1493இல் புனரமைப்புச் செய்தார்.

ஹொய்சல மன்னரின் பிரதான தளபதியான சிங்கண்ண தண்டநாயக்கர் ஸ்ரீரங்கம் ரங்கநாதர் ஆலயத்தின் நான்காவது பிரகாரத்திலுள்ள திருநடை மாளிகையின் இடைக் கூடத்தின் ஒரு பகுதியினைப் பிரித்து அதை ஆரோக்கிய சாலை நடத்துவதற்காக நீண்ட அறையாக மாற்றிக் கொடுத்தார் என்று கி.பி. 1257ஐச் சேர்ந்த முற்றுப் பெறாதக் கல்வெட்டு தெரிவிக்கிறது.[22] அவர் மும்முடிச் சோழ சதுர்வேதி மங்கலத்தில் 16 வேலி நிலத்தை 1100 வராகன் பொன் கொடுத்து வாங்கி, அந்நிலத்திலிருந்து கிடைக்கும் விளைச்சலை ஆரோக்கிய சாலையின் பராமரிப்புச் செலவுக்காக ஏற்பாடு செய்தார்.

அந்த ஏற்பாட்டின் படி,

1. ஆரோக்கிய சாலையின் நிர்வாகப் பொறுப்பினை ஏற்று நடத்தும் மருத்துவராகிய கருடவாகனப் பட்டருக்கு நாள் ஒன்றுக்கு 5 குறுணி நெல் ஊதியமாக வழங்கப்பட்டது.
2. மருத்துவரின் உதவியாளருக்கு (துணை மருத்துவர்) நாள் ஒன்றுக்கு 3 குறுணி நெல்.

3. இரண்டு ஆண் ஊழியர்களுக்கு (வைத்திய பரிச்சாரகர்) நாள் ஒன்றுக்கு 1 தூணி + 1 பதக்கு நெல்.

4. மருத்துவமனையில் மருந்துகள் தாயரிக்கவும் அவற்றைப் பத்திரப்படுத்தவும் ஆகும் செலவிற்காக 100 காசுகள்.

வழக்கமான மருந்து தயாரிப்பு வேலைகளுடன் ஆரோக்கிய சாலையில் கஷாயக் குடிநீர் என்னும் மருந்து வடி நீரையும் தயாரித்து அதனைத் தினந்தோறும் ரங்கநாத சுவாமிக்குப் பூசைப் பொருளாகப் படைக்க வேண்டும்.

கி.பி. 1257ஆம் ஆண்டுக் கல்வெட்டில் “**வைத்தியரில் எனக்கும் ரக்சகராய் இதர்மம் நெடுநாள்பட நடத்திக் கொண்டு வந்த நாயகன் ஆன கருடவாகன பட்டர்**” என்னும் சொற்றொடர் காணப்படுகிறது. இதன் பொருள் இந்த ஆரோக்கியசாலையை நெடுங்காலமாக நடத்திக் கொண்டு வந்த மருத்துவராகிய கருடவாகனபட்டர் எனக்கும் (சிங்கண்ண தண்டநாயகருக்கும்) பாதுகாவலராய் (ரட்சகராய் நோயினின்றும் காப்பாற்றுபவராக) இருந்தார் என்பதாகும்.

மேலே இதுகாறும் கூறப்பட்ட ஸ்ரீரங்கம் ஆரோக்யு சாலையின் கருடவாஹன பட்டர் பற்றிய சமஸ்கிருதக் கல்வெட்டின் தமிழ் எழுத்துப் பெயர்ப்பு கீழே தரப்பட்டுள்ளது.

“ஸ்ரீமத் - பிரதாபச் சக்ரவர்த்திகள் ஸ்ரீ-ராமநாத தேவர் ப்ரதானரில் (ஸி) ங்கண்ணதேவ ஸிங்கண்ண தெண்டநாயக்கன் ..... மூன்றாவது காத்திகை மாசத்து ஒரு - நாள் ஸ்ரீரங்கநாதன் தன்மம் = ஆக எடுத்தகை - யழகிய நாயனார் எழுந்தருளி - இருக்கிற திரு - க்கோபுரத்துக்கு மேல் = அருகாக = திருநடை - மாளிகையிலே ஒரு ஸாலையும் ஸமைத்து = ச்சாலைப்புறம் = ஆக = பாண்டிக்குலசாரி - வளநாட்டு விழ - நாட்டுப் ..... கரம் = ஆன மும்முடிஸோளச் - சருப்பேதி மங்கலத்து ........ நான் இந்த = க்காணிக்கும் இறையிலிக்கும் = ஆக ஸ்ரீபண்டாரத்து ஒதுக்கின வராகன் பொன் ஆயிரத் = ஒரு - நூறு (1 *) இ-ப்பொன் ஆயிரத்து ஒரு நுற்றுக்கும் இப்படியால் கொண்ட நிலத்தில் உதயங் கொண்டு **வைஜ்ய – பரிச்சாரகர்க்கும் ஔஷதத்துக்கும் சந்ராதித்யவரை** செல்வதாக ஸ்ரீரங்கநாதன் தந்தருளின திருமுகப்படியும் மஹானியோகப்படியிலே இத்-தன்மம் செய்வதாக நிஷ்ச்சயித்(த)து **வைஜ்யரில் எனக்கும் ரக்ஷகராய் இ–த்தர்ம்மம் நெடுநாள் பட நடத்திக் கொண்டு வந்த நாயகன் = ஆன கருடவாஹன – பட்டருக்கு ஐங் – குறுணி நெல்லும் பலி –** ச்சாரகராய் கதைக்கூத்தாய் இ-த்தர்ம்மம் நடத்த

தோள்மாலையழகியர்க்கு-மு-க்குறுநெ (ல் *)லும் பரிச்சாரகர் இருவர்க்கு தூணி-ப்பதக்கு ........ நீக்கி உள்ளதிலே நாள் ஒன்றுக்கு நூறு காசு வந்த ஔஷதம் கொண்டு ........"

முகம்மதியரின் படையெடுப்பின் போது சிதைக்கப்பட்ட இந்த ஆரோக்கிய சாலையை மூன்றாவதாக ஒரு கருடவாகனப் பட்டர் கி.பி. 1493இல் மீண்டும் சீரமைத்ததோடு அங்கு ஒரு தன்வந்த்ரி எம்பொருமானின் சிலையையும் நிறுவினார்.

## தன்வந்த்ரி ஆலயம்

ஏற்கெனவே கூறப்பட்டுள்ளபடி, மருத்துவத்துறையின் முதன்மைத் தெய்வமாகத் தன்வந்த்ரி கருதப்படுவதுடன், மருத்துவர்களும் நோயாளிகளும் அவர்களுடைய உடல் நலமேம் பாட்டிற்குத் தன்வந்த்ரியின் அனுக்கிரகம் வேண்டுமென்றும் விரும்பினார்கள். ஸ்ரீரங்கம் ஆரோக்கிய சாலையில் மருத்துவ ராயிருந்த கருட வாகனப் பட்டரும் இதற்கு விதி விலக்காயிருந்த தில்லை. இந்த மருத்துவக் கடவுளுக்கென்று அந்த ஆரோக்கிய சாலையின் அருகில் ஒரு கோயிலைக் கட்டினார் என்பதில் கருத்து வேறுபாடுகள் உள்ளன. அவர் அந்தக் கோயிலைப் புதிதாகக் கட்டினாரா அல்லது சிதைந்த நிலையிலிருந்த பழைய கோயிலைப் புதுப்பித்தாரா என்று கூற முடியாதென்று ரெட்டி கூறுகிறார்.[23] ஆனால், கோயிலொழுகு என்னும் ஸ்ரீரங்கம் கோயில் பற்றிய பிற்றைய அறிக்கையொன்று, கி.பி. 11ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த ராமானுஜரின் காலத்திற்கு வெகு காலத்திற்கு முன்பே தன்வந்த்ரி கோயில் அங்கு இருந்ததென்றும், (படம் 43அ, ஆ, இ)



படம் 43அ ஸ்ரீரங்கம் தன்வந்த்ரி ஆலயம் (பொதுப் பார்வை)



படம் 43ஆ
ஸ்ரீரங்கம் தன்வந்த்ரி ஆலயம் (முன்பார்வை)



படம் 43இ
தன்வந்த்ரி ஆலயம், ஸ்ரீரங்கம்
(சன்னிதிக்குச் செல்லும் வழி)

பின்னர் சிதைவுற்ற அக்கோயிலினை ராமானுஜர் ஸ்ரீரங்கம் கோயிலின் தர்மகர்த்தாவாகயிருந்தபோது பழுது பார்த்துப் புதுப்பித்து அவருடைய சீடராகிய கருவாகன பட்டரிடம் ஒப்படைத்தாரென்றும் கூறுகிறது. நோய்தீர்க்கும் கலையின் காக்கும் கடவுளாக இருக்கும் காரணத்தினால் இந்த மருத்துவத் தெய்வமாகிய தன்வந்த்ரியின் கோயில் ஒரு மருத்துவமனையின் அருகில் அமைந்திருப்பது சாலவே பொருத்தமானதொரு அம்சமாகும். இக்கோயிலில் வீற்றிருக்கும் தன்வந்த்ரியின் திருவுருவமானது நான்கு கைகளைக் கொண்டதாக, பின் கைகளில் சக்கரமும் சங்கும் வைத்துக் கொண்டு, முன் கைகளொன்றில் அமிர்த கலசத்தையேந்திக் கொண்டும் மற்றொரு கையை அபயநிலையில் வைத்துக் கொண்டுமிருப்பதாக அமைந்துள்ளது. தென்னிந்தியாவிலுள்ள எண்ணற்ற விஷ்ணு ஆலயங்களெங்கிலும் இது போன்று தன்வந்த்ரி கோயிலைக் கொண்டதாக வேறு எந்தக் கோயிலையும் காணமுடிவதில்லை. ஆகவே, இந்தத் தன்வந்த்ரிக் கோயில் சிற்ப சாஸ்திரக் கலையில் தனிப்பெரும் முக்கியத்துவத்தைப் பெற்றுள்ளது (பிரிவு 10, படம் 48அ-ஐப் பார்க்க).

ஸ்ரீரங்கம் ஆலயத்திலுள்ள ஆதுலர்சாலையின் செயல் பாடுகள் குறித்து கி.பி. 1493ஐச் சேர்ந்த கல்வெட்டு வாசகத்தின் பின்வரும் வரிகள் மூலம் அறியலாம்: (படம் 44அ) (படம் 44ஆ)



படம் 44அ ஸ்ரீரங்கம் தன்வந்த்ரி ஆலயக் கல்வெட்டுத் தூண்



படம் 44ஆ
ஸ்ரீரங்கம் தன்வந்த்ரி ஆலயக் கல்வெட்டு (முன்புறப் பார்வை)

26. “................ மு
27. ன்னாள் பிரதாப
28. சக்கரவ(ர்)த்தி காலம்
29. துடங்கி யிவருடை
30. ய பூர்வாள் க
31. ருடவாகன ப(ட்ட)
32. ர் நடத்தி வந்த ஆ
33. ரோக்கிய சாலை”

“முன் காலத்தில் பிரதாப சக்கரவர்த்தியின் காலம் முதல் இவருடைய மூதாதையர் (பூர்வாள்) கருடவாகன பட்டர் நடத்தி வந்த ஆரோக்கிய சாலை” என்பது இதன் பொருள். இதன்மூலம், அந்த ஆரோக்கிய சாலையை முன்காலத்தில் நடத்திவந்த இவருடைய மூதாதையரின் பெயரும் கருடவாகனப்பட்டர் என்பதேயாகும் என்று உணரமுடிகிறது. மேலும் கல்வெட்டின் பின்வரும் வரிகளின் மூலம்.

84. “கருடவாக
85. ன பட்டர் ஆகி
86. ஸ்தானம் ஆக

87. புத்ர
88. பௌ
89. த்ர
90. பரம்
91. பரை
92. ய் யாக
93. அச்ச
94. ன்நரர்க்க
95. ஸ்தாயி
96. யாக ந
97. டத்த (க்) க
98. டவத – ர
99. கவும்"

அந்த ஆரோக்கிய சாலையானது கருடவாகன பட்டர் மற்றும் அவரது வாரிசுகள் - மகன், பேரன் எனப் பரம்பரை பரம்பரையாக நடத்தப்பட வேண்டுமென்று கருடவாகனப் பட்டருக்கு அறிவுறுத்தப்பட்டுள்ளதை அறியலாம்.

மேலும், கல்வெட்டு எழுதப்பட்ட காலத்தில் ஆரோக்கிய சாலையைப் பொறுப்பேற்று நடத்தி வந்தவரின் பெயர் அழகிய மணவாள மங்கலத்தரையரின் மகனான ஶ்ரீனிவாசன் என்னும் கருடவாகன பட்டர்" என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.

18. "......... அழகிய ம
19. ணவாள மங்கல
20. தரையர் புத்திரன் (ஶ்ரீ)
21. னிவாசன் ஆன (ஶ்ரீ)
22. ரங்க – கருடவ(ா)
23. கன பட்டர்"

ஆகவே, அந்த ஆரோக்கிய சாலையானது பரம்பரை மருத்துவர்கள் மூலம் நூற்றாண்டு காலமாக நடத்திவரப்பட்டுள்ள தென்றும், ஆரோக்கியசாலையினைப் பொறுப்பேற்று நடத்தி வரும் மருத்துவர் தனது உண்மைப் பெயருடன் கருடவாகனப் பட்டர் என்ற பெயரையும் பெற்றார் என்றும் தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம்.

## பட்டியல் 3

## ஸ்ரீரங்கம் ஆலய மருத்துவமனை அலுவலரின் ஊதியப் பட்டியல்

| எண் | அலுவலர் | நாள்ஒன்று நெல் குறுணி | ஊதியம் ஆண்டுக்கு நெல்கலம் | ஆண்டு ஊதியம் ரூபாயில் | மாத ஊதியம் ரூபாயில் |
|---|---|---|---|---|---|
| 1. | மருத்துவர் | 5 | 150 | 67500 | 5625 |
| 2. | துணை மருத்துவர் | 3 | 90 | 40500 | 3375 |
| 3. | ஆண் ஊழியர் (பரிசாரகர்) | 3 | 90 | 40500 | 3375 |

### *மருத்துவ அலுவலர்க்கு அளிக்கப்பட்ட ஊதியங்களிலிருந்து அறியவரும் அனுமானங்கள்*

மேலே தரப்பட்ட பட்டியல்களிலிருந்து, பொதுவாக அறுவை மருத்துவரைவிட மருத்துவருக்கு அதிக அளவில் முக்கியத்துவம் அளிக்கப்பட்டிருப்பதைக் காணலாம். சோழர் காலத்தில், ஆண் ஊழியர் மற்றும் தாதியரைவிட மிகக் குறைவாகவே அறுவை மருத்துவருக்கு ஊதியம் அளிக்கப் பட்டிருப்பதைக் காணமுடிகிறது. ஆனால், இன்றைய நாட்களில் அறுவை மருத்துவர் பொதுமருத்துவருக்குச் சம அளவிலும் மற்றப் பணியாளர்கள், பெண் தாதிகள் ஆகியோரை விட மிக அதிக அளவிலும் ஊதியம் பெறுகின்றார். அக்காலத்தில் அறுவை மருத்துவத்திற்கு அதிக அளவில் முக்கியத்துவம் அளிக்காதிருந்ததற்கான காரணம் அறுவை மருத்துவம் போதிய அளவில் வளர்ச்சியடையாமையோ அன்றி பெரிதளவில் அறுவை மருத்துவத் திறனின் தேவையின்மையோ காரணமாக இருந்திருக்கலாம். பெண் பராமரிப்பாளர்களுக்கு இன்று போல் அன்றும் அதிக முக்கியத்துவம் அளிக்கப்பட்டுள்ளமையையும் காண முடிகிறது. இணைப்பில் தரப்பட்டுள்ள இன்றைய கணக்கீட்டுடன் ஒப்பிட்டுப் பார்த்தால், இன்றைய மருத்துவப் பணியாளர்கள் அன்றைய மருத்துவப் பணியாளர்களைவிட அதிக அளவில் ஊதியமும் தகுநிலையும் பெற்றுள்ளனர் என்பதை தெளிவாகப் புரிந்து கொள்ள முடியும்.

## திருந்துதேவன் குடி மருத்துவமனை

திருந்துதேவன் குடியிலுள்ள **திரு–அரு–மருந்து** தேவர் **ஆலயத்தினைக்** குறிப்பிட்டு பாலசுப்பிரமணியன் என்பவர்[24] அது ஆயுர்வேத மருந்தகத்துடன் கூடியதொரு முதனிலை மருத்துவ மையமாகவோ அல்லது மருத்துவமனையாகவோ இருந்திருக்கலாம் என்று குறிப்பிடுகின்றார். மேலும், **அருமருந்து தேவர்** என்பவர் **நோய் தீர்க்கும் மருந்துகளின் இறைவன்** என்று குறிப்பிட்டு, அத்துடன் ஒரு ஆயுர்வேத அல்லது சித்த மருத்துவப் பள்ளியும் இணைக்கப்பெற்றால் மிகவும் பயனளிக்கக் கூடியதாகவும் பெருமைப்படக் கூடியதாகவுமிருக்கும் என்று கூறுகிறார்.

## இலவச மருத்துவச் சேவை

மருத்துவமனைகளின் பணி, நோயாளிகளின் பிணிகளைக் களைந்து அவர்களைப் பராமரிப்பதேயாகும். ஆனால், நோய் குணமடைந்தபின்னர் நோயாளியைப் பேணிக்காப்பது மிகமிக அவசியமானதாகும். இக்கருத்தினை நன்கு உணர்ந்திருந்த சோழர்கள் நோய்க் குணமடைந்தபின் நோயாளியின் பராமரிப்புக் கான வசதிகளையும் செய்தனர். மருத்துவமனையில் குணமடைந்து வெளிவரும் நோயாளிகள் தங்கி ஓய்வெடுக்கவும் இலவச ஓய்வு விடுதிகள் அமைக்கப்பட்டதோடு அவர்களின் உடல் பராமரிப்புக் காக இலவச சத்துணவு அளிக்கவும் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த தென்று இரண்டாம் ராஜேந்திரசோழனின் கல்வெட்டு தெரிவிக்கிறது.[25]

மூன்றாம் ராஜேந்திர சோழன் காலத்தைச் (கி.பி. 1246 - 1279) சேர்ந்த மற்றொரு கல்வெட்டில்[26] சுப்பிரணிய சிவம் என்பவர் திருத்தொண்டத் தொகையான் திருமடத்திற்கு ஒரு நிலத்தை, அதிலிருந்து கிடைக்கும் வருவாயின் ஒரு பகுதி அந்த மடத்தில் தங்கிச் செல்லும் நோயாளிப் பயணிகளுக்கு இலவச மருத்துவச் சிகிச்சைக்காகச் செலவிடப்பட வேண்டுமென்ற நிபந்தனையுடன் கொடையாக அளித்தாகக் குறிப்பிடப் பட்டுள்ளது.

## அட்டவணை 2

## பண்டைய தென்னிந்திய மருத்துவமனைகள்

| எண் | சுகாதாரமையத்தின் பெயர் | இடம் | அரசகுலம் / காலம் | நாள் | அரசரின் பெயர் | மேற்கோள் குறிப்பு / கல்வெட்டு |
|---|---|---|---|---|---|---|
| 1. | விஹாரமுக்யஜ்வராலயா | விஜயபுரி நாகார்ஜுனகோண்டா | புத்தர்களின் காலம் | கி.பி. முதல்/ இரண்டாம் நூற்றாண்டு | - | நாகார்ஜுன கோண்டா அகழ் வாய்வு அறிக்கை |
| 2. | சக்கரவாளக் கோட்டம் | புகார் (காவேரிப்பூம் பட்டினம்) | சங்ககாலத் திற்குப்பின் | - | - | மணிமேகலை 17:75-76 |
| 3. | அறவி | புகார் (காவேரிபூம் பட்டினம்) | சங்ககாலத் திற்குப்பின் | - | - | மணிமேகலை 17:18-21 |
| 4. | ஆதுலசாலை | மலைநாட்டின் (கேரளா) திருவல்லாவிலுள்ள கோயில் | - | கி.பி. 10வது/ 11வது நூ.ஆ. | - | T.A.S. Vol II pt. III p. 149, ஒசூர் அலுவலக ஏடுகள் பகுதி40, 13 வரி. 403-438 |
| 5. | சுந்தரச்சோழவிண்ணகர ஆதுலசாலை | பண்டாரவாடை (தஞ்சாவூர்) | சோழர் காலம் | கி.பி. 1015 | இளவரசி ஆழ்வார் ஸ்ரீ பராந்தகன் குந்தவைப் பிராட்டியார் | A.R.S.I.E. 1924, p. 16, A.R.E. No. 249/1923 |
| 6. | இலவச மருத்துவ இல்லம் | திருவிசலூர் (கும்பகோணம்) | சோழர் காலம் | கி.பி. 1016 | இராசேந்திரன் I | S.I.I. Vol. XXII, XXIII No. 350, 351 |

| எண் | சுகாதாரமையத்தின் பெயர் | இடம் | அரசகுலம் / காலம் | நாள் | அரசரின் பெயர் | மேற்கோள் குறிப்பு / கல்வெட்டு |
|---|---|---|---|---|---|---|
| 7. | இலவச மருத்துவ இல்லம் | வேம்பத்தூர் | சோழர் காலம் | கி.பி. 1012-1044 | இராசேந்திரன் I (ஸ்ரீ குத்தவைப் பிராட்டி) | A.R.E. 36/1898 |
| 8. | இலவச மருத்துவ உதவி யுடன் கூடிய விடுதி | தஞ்சாவூர் மாவட்டம் | சோழர் காலம் | கி.பி. 1054 | இராசேந்திரன் II | T.N.S.D.A. 39/ 1976-77 |
| 9. | வீரசோழன் ஆதுலர்சாலை | திருமுக்கூடல் (செங்கல்பட்டு மாவட்டம்) | சோழர் காலம் | கி.பி. 1067 | வீரராசேந்திரன் | E.I.XXI, No. 38 A.R.E. 182/1915 |
| 10. | திருப்புகளூர் ஆதுலர் சாலை | திருப்புகளூர் (தஞ்சாவூர் மாவட்டம்) | சோழர் காலம் | கி.பி. 1120 | பரகேசரிவர்மன் என்னும் விக்கிரம சோழ தேவர் | T.N.S.D.A. No.323/ 1928;A.R.E. No.97 1927-28 |
| 11. | ஆதரவற்றோருக்கும் நோயாளிகட்கும் கௌடிய மடத்திலுள்ள இலவச சிகிச்சை இல்லம் | கௌடிய மடம் (மைசூர் மாநிலம்) | கங்கர்கள் | கி.பி. 1162 | புஜபல சக்கர வர்த்தி திருபுவன மல்ல பிஜ்ஜல தேவராசா | E.C. VII |
| 12. | தன்வந்த்ரி ஆரோக்கிய சாலை | ஸ்ரீரங்கம் (திருச்சி) | ஹொய்சலர் | கி.பி. 1257 | பிரதாப சக்கரவர்த்தி வீரராமனாத தேவர் | E.I. XXIV, No. 12 |

| எண் | சுகாதாரமையத்தின் பெயர் | இடம் | அரசகுலம் / காலம் | நாள் | அரசரின் பெயர் | மேற்கோள் குறிப்பு / கல்வெட்டு |
|---|---|---|---|---|---|---|
| 13. | பிரசுத்தியாரோக்யசாலை (மகப்பேறு இல்லத்துடன் கூடிய பொது மருத்துவ மனை) | மால்காபுரம் (குண்டூர் அருகில்) | காகத்யர் | கி.பி. 1262 | ராணிருத்ரம் மாவும் அவரது தந்தை காகத்ய கணபதியும் | மால்காபுரம் கல் தூண் கல்வெட்டு S.I.I. Vol. X, No.395 I.A.P.No183, p. 245 |
| 14. | இலவச மருத்துவமையம் (திருத்தொண்டத் தொகையான் திருமடம்) | தஞ்சாவூர் மாவட்டம் | சோழர் காலம் | கி.பி. 1246-1279 | இராசேந்திர சோழர் III | A.R.E.No. 192/ 1929 |
| 15. | திருஅருந்து மருந்து தேவர் முதல்நிலை மருத்துவ மையம் | திருந்துதேவன்குடி தஞ்சாவூர் மாவட்டம் | சோழர் | - | - | S.R. பாலசுப்பிர மணியன்; பிற் காலச் சோழர் கள், ப. 140 |
| 16. | ஷிஃபா கானா (மருத்துவமனை) | பீடார் (கர்நாடகா) | பாமினி வம்சம் | கி.பி. 1452 | அலாவுதீன் II | B.I.I.H.M. XVI, No.122, 1986, p. 39 |
| 17. | சாந்தாகுருஸ் (ஹோலி க்ராஸ்) | கொச்சி (கேரளா) | போர்ச்சுக் கீசியர் | கி.பி. 1506 | அல்ஃபோன்சோ டி அல்புகர்க் | B.I.I.H.M. Vol. XVII, No.1, Jan. 1987, p.59 |
| 18. | ராயல் மருத்துவமனை | கோவா | போர்ச்சுக் கீசியர் | கி.பி. 1510 | அல்ஃபோன்சோ டி அல்புகர்க் | B.I.I.H.M.Vol. XVII, No.1, Jan. 1987, p.59 |
| 19. | தார்-உஸ்-ஷிஃபா (சிகிச்சை இல்லம்) | பாக் நகர் (ஹைதராபாத்) | சுல்த்தான் | கி.பி. 1595 | குலிகுதுப் ஷா | I.I.H.M. Museum Guide, Part II, p. 54 |

# பிரிவு 8

## பழந்தமிழ் நாட்டில் மருத்துவக் கல்வி

### 1. பழந்தமிழரின் கல்வி பற்றிய மனப்பான்மை

பழந்தமிழ் நாட்டில் மருத்துவக் கல்வி பற்றி ஆராயும் முன் கல்வி பற்றி பழந்தமிழரின் மனப்போக்கு எப்படியிருந்தது என்பது பற்றிய பார்வை பயனுள்ளதாயிருக்கும். கல்விக்குப் பழந்தமிழர் எத்தகையதொரு முக்கியத்துவம் அளித்திருந்தனர் என்பதற்கான குறிப்புக்கள் தமிழ் இலக்கியத்தில் ஏராளமாக உள்ளன. அர்த்தமுள்ள வாழ்வினை வாழ்வதற்குக் கண்கள் எத்துணை முக்கியமோ அந்த அளவிற்குப் பழந்தமிழர் கல்விக்கு முக்கியத்துவம் அளித்திருந்தனர். கணிதத்திற்கு ஆதாரமான "**எண்**"ணும், வாசித்தல், எழுதுதல், கற்றல் ஆகியவற்றிற்கு ஆதார மான **எழுத்தும்** வாழ்வின் அடிப்படைக் காரணிகளாகுமெனக் கருதி அவையிரண்டும் உயிர் வாழும் மக்களுக்குக் கண்கள் போன்றவையெனப் போற்றினர்.

**"எண்ணென்ப ஏனை எழுத்தென்ப யிவ்விரண்டும்**
**கண்ணென்ப வாழு முயிர்க்கு"[1]**

**"எண்ணும் எழுத்தும் இருகண்ணெனத் தகும்"[2]**

மன்னனைவிட கற்றறிந்த அறிஞன் ஒருவன் செல்லுமிட மெல்லாம் அதிக அளவில் மதிப்பும் மரியாதையும் பெறுதலால் மன்னனைவிடக் கற்றறிவாளன் சிறப்புமிக்கவனாகக் கருதப் படுகிறான்.

"கற்றோர்க்குச் சென்றவிடமெல்லாம் சிறப்பு"[3]

கல்விக்கு இத்தகைய முக்கியத்துவம் இருந்தமையால், கற்பிக்கும் ஆசிரியர் துன்புறுங்காலம் அவருக்கு உதவிபுரிதல் (உற்றுழி உதவியும்) கற்றலுக்கான கட்டணத்தை மிகுந்த அளவில் கொடுத்தல் (உறு பொருள் கொடுத்தும்) அவர் கூறும் அறவழிகளை எவ்வித வெறுப்பும் அதிருப்தியும் காட்டாது (பிற்றை நிலை முனியாது) கடைப்பிடித்தல் ஆகிய இதுபோன்ற வழிமுறைகளையெல்லாம் பின்பற்றியாகிலும் கல்வி கற்க வேண்டுமென்பதை வள்ளுவர் உணர்த்துகின்றார்.

"உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்
பிற்றை நிலை முனியாது கற்றல் நன்றே"[4]

மேலும், கற்பிக்கும் ஆசிரியருக்குக் கொடுக்க வேண்டிய கட்டணத்தைக் கொடுக்க இயலாத ஒருவன் அதனை இரந்து பெற்றாகிலும் (பிச்சை புகினும்) கற்பது மிக்க நன்று என்பதனை,

**கற்கை நன்றே கற்கை நன்றே**
**பிச்சை புகினும் கற்கை நன்றே**[5]

என்று நீதிநூலான வெற்றிவேற்கை கூறுகிறது.

நாலடியாரில் கல்வி மருந்துடன் ஒப்பிடப்பட்டுள்ளது. 'எழுத்தறிவின்மை' (மம்மர்) என்னும் துன்பத்தினைப் போக்குவதால் (அறுக்கும்) கல்வி போன்றதொரு மருந்தினை எவ்வுலகிலும் காணமுடிவ தில்லை எனக் கல்வியானது மருந்தாகப் போற்றப்படுகின்றது.

**"எம்மை உலகத்தும் யாம் காணோம் கல்விபோல்**
**மம்மர் அறுக்கும் மருந்து"**[6]

கல்வியின் இத்தகைய சிறப்பின் காரணமாகவே, பாண்டிய மன்னன் ஆரியப் படை கடந்த நெடுஞ்செழியன் "கல்வியறிவில்லா மூத்த மகனைவிட கல்வியறிவுள்ள இளைய மகனே அரசுரிமைக்குத் தகுதி பெற்றவன்" என்று புறநானூறில் கூறியுள்ளான்:

**"ஒருகுடிப் பிறந்த பல்லோருள்ளும்**
**மூத்தோன் வருகவென்னாது அவருள்**
**அறிவுடையோனார் அரசும் செல்லும்"**[7]

## 2. சங்ககாலத்தில் கல்வியின் நிலை

சங்க காலத்தில் கல்வியானது விதிமுறைப்படுத்தப்படவு மில்லை; அமைப்பு முறைக்குட்படுத்தப்படவுமில்லை. கல்வி கற்பவருக்கு ஆசிரியரின் இல்லமே சிறந்த பயிற்சித் தளமாக விளங்கியது. பெற்றோரின் வளர்ப்புமுறை குழந்தைகளின் கல்வியை முழுமையாக விருத்தி செய்வதாகயிருந்தது. குடும்பம் என்பது கல்வியின் மிகச்சிறந்த செயல்துணையாகக் கருதப் பட்டது. சுற்றுப்புற அருகாமையிலுள்ள முதியவர்கள் இளைஞர்களின் ஒழுக்கம், அறிவு ஆகியவற்றின் வளர்ச்சிக்கு உறுதுணையாக இருந்தனர்.

பழந்தமிழ்நாட்டில், ஒவ்வொரு குடும்பமும் அவர்கள் வாழும் இடத்தின் புவியியல் மற்றும் தட்பவெப்ப நிலைகளுக் கேற்ப ஏதேனும் ஒரு தொழிலில் ஈடுபட்டிருந்தனர். பொதுவாக, தந்தை பெற்ற தொழில்நுட்பத்திறன் மகன், பேரன் என வம்சாவழி முறையாகக் கற்பிக்கப்பட்டு, தந்தையின் தொழிலை மகன்

மேற்கொள்ளுவதென்பது பாரம்பரிய பழக்கமாக இருந்தது. எடுத்துக்காட்டாக, மதுரைக் கணக்காயர் என்பவர் சிறந்த அறிஞரும் கவிஞருமாவார்; அவரது மகன் மிகவும் பிரபல்யமான கவிஞரும் கருத்துரையாளருமான நக்கீரர் ஆவார்; கீரன் கொற்றனார், தென்னூர் கிழார் முதலியோர் அவர்வழி வந்த வாரிசுகளாவர்; முசிறி ஆசிரியர் நீலகண்டர் என்பவர் இவ்வாரிசு வழியில் வந்த 10வது தலைமுறையினராவார்.[8]

பாரம்பரிய கல்வி கற்றல் என்னும் இந்த முறையானது மருத்துவம் உள்ளிட்ட ஏனைய துறைகளிலும் பின்பற்றப் பட்டிருக்க வேண்டும். பிறதுறைகளில் தேர்ச்சி பெற்றிருந்தோரும் கூட சிறந்த புலவர்களாகப் புலமைபெற்று விளங்கியுள்ளனர் என்பதற்குச் சங்க இலக்கியங்களில் ஏராளமான சான்றுகள் காணக்கிடக்கின்றன. இத்தகையப் புலவர்கள் தங்கள் பெயர்களின் முன்னால் தங்களின் தொழிற்பெயர்களையும் அடைமொழியாக இணைத்துக் கொண்டனர். உதாரணங்கள் சில வருமாறு:

- மதுரை **அறுவை வாணிகன் இளவேட்டனார்** என்பவர் ஒரு துணி வியாபாரியும் புலவருமாவார் (அறுவை - ஆடை, துணி; வாணிகன் - வியாபாரி; புறநானூற்றின் 329ஆம் பாடலின் ஆசிரியர்)
- **மருத்துவன் தாமோதரனார்** ஒரு மருத்துவரும் புலவருமாவர்; இவர் அகநானூறு, புறநானூறு, திருவள்ளுவ மாலை ஆகியவற்றில் பல பாடல்களைப் பாடியுள்ளார் (அகம் - 25 பாடல்கள்; புறம் - 3 பாடல்கள்; திருவள்ளுவ மாலை - 11 பாடல்கள்)
- மதுரைக் **கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார்** ஒரு மளிகை வியாபாரியும் புலவருமாவார். புறநானூற்றில் 59ஆம் பாடலைப் பாடியவர்.
- **கணியன் பூங்குன்றனார்** என்பவர் ஒரு சோதிடரும் புலவருமாவார்; இவர் புறநானூறில் புகழ்பெற்ற பாடலான **யாதும் ஊரே, யாவரும் கேளிர்** மற்றும் நாலடியாரில் பாடல்கள் 128, 212, நற்றிணையில் 226ஆம் பாடல் ஆகியவற்றைப் பாடியுள்ளார்.
- தங்கை **பொற்கொல்லன் வெண்ணாகனார்** என்பவர் ஒரு பொற்கொல்லரும் புலவருமாவார், இவர் நற்றிணையில் 313ஆம் பாடலைப் பாடியுள்ளார்.
- வடமா **வண்ணக்கன் தாமோதரனார்** என்பவர் ஒரு தங்கத் தேர்வாய்வரும் புலவருமாவார்; இவர் புறநானூற்றில் 172ஆம் பாடலைப் பாடியுள்ளார்.

### 3. கல்விக்கு ஆதரவு

சங்ககாலத்தில் மன்னர்கள் தமிழுக்கு ஆதரவாக இருந்துள்ளனர். சிறந்த தமிழ்ப் புலவர்கள் மதிப்புமிக்க சன்மானங்களினால் வெகுவாகக் கௌரவிக்கப்பட்டனர். சிறந்த புலவர்கள் தமிழ்ச் சங்கத்திற்கு வரவழைக்கப்பட்டு அவர் களுடைய படைப்புக்கள் பரிசோதிக்கப்பட்டு, அவற்றுள் சிறந்த படைப்புக்கள் அங்கீகரிக்கப்பட்டு, அவற்றின் ஆசிரியர்கள் மதிப்புமிக்க கொடைப் பொருட்களால் கௌரவிக்கப்பட்டனர். எடுத்துக்காட்டாக, **பதிற்றுப்பத்து** என்பது 10 சேர மன்னர்களைப் புகழ்ந்து 10 புலவர்கள் பாடிய 10 வரிப்பாடல் திரட்டுக்கள் 10 கொண்ட தொகுப்பாகும். இப்படைப்புக்கள் யாவும் அங்கீகரிக்கப்பட்டு ஒவ்வொரு புலவருக்கும் பொன்னும் நிலமும் வெகுமதியாக வழங்கப்பட்டன.[9] உதாரணத்திற்கு ஒன்று: பெருமைமிகுபுலவர் கபிலர் பதிற்றுப்பத்துப் பாடல் திரட்டில் செல்வக் கடுங்கோ வாழியாதன் என்ற மன்னன்மீது ஏழாவதுப் பத்துப் பாடல்களைப் பாடி நூறுஆயிரம் காணம் (பொன் நாணயம்) பரிசுடன், மன்னர் ஒரு உயர்ந்த மலையின் மீது நின்று அவரது பார்வைக்குட்பட்ட நிலம் முழுவதையும் பரிசாகவும் பெற்றார். இதுபோல் பிற பாடல்களைப் பாடிய பிற புலவர்களும் இதுபோன்று பொற்காசுளும் நிலங்களும் பரிசாகப் பெற்றனர்.

இத்தகையதொரு உற்சாகமூட்டும் ஆதரவு தமிழ்ப் புலவர்களுக்குக் கிடைத்தமை மருத்துவத் துறை உள்ளிட்ட பிற துறைகளைச் சார்ந்த அறிஞர்களுக்கும் தமிழில் புலமை பெற தூண்டுதலாக அமைந்தது.

சங்ககால மக்கள் தங்களுடைய குலத்தொழிலில் புலமை பெற்றதோடு தமிழில் புலமை பெறுவதையும் ஒரு பெரும் பேறாகக் கருதினர் என்பது மேற்கண்ட விபரங்களின் மூலம் தெளிவாகிறது.

### நன்னடத்தைக் கல்வியின் முக்கியத்துவம்

சங்க கால மக்கள் தங்களுடைய குலத் தொழிலில் தேர்ச்சியும் தமிழில் கவித்துவமும் பெற்றதுடன் சமூகத்தில் நன்மதிப்புப் பெறவேண்டுமாயின் நன்னடத்தை மிகமிக முக்கியமானதென்றும் கருதினர். இந்த நன்னடத்தையை அவர்கள் தங்களுடைய குடும்பத்தினர், ஆசிரியர் மற்றும் சுற்றுப் புறங்களிலுள்ள முதியவர்கள் ஆகியோரிடமிருந்து பெற்றனர்.

கற்றறிந்த அறிஞர்கள் பலரும் போற்றும் நன்னடத்தை பெற்றிருந்தவர்கள் சான்றோர் என்று போற்றப்பட்டனர். ஒவ்வொரு தந்தையும் தன் மகனைச் சான்றோனாக்க வேண்டியது தனது கடமை என்று உணர்ந்திருந்தார் என்பதை

"சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே"[10]

என்ற புறநானூறு வரி அறிவுறுத்துகிறது. இக்குண நலன்கள் மருத்துவத்துறையிலும் காணப்பட்டன. மருத்துவம் பயில்பவர்கள் தங்களது தொழிலில் தேர்ச்சியும் திறமையும் பெறுவதுடன் நன்னடத்தையும் பெறவேண்டியது கட்டாயமாக இருந்தது. மருத்துவன் தாமோதரனார் தமிழ்ச் சங்கத்தில் ஒரு உறுப்பினராகக் கௌரவம் பெற்றது மருத்துவ அறிஞர்கள் தமிழிலும் புலமை பெற்றிருந்தனர் என்பதற்கு ஒரு எடுத்துக் காட்டாகும்.

## 4. சங்ககால மருத்துவக் கல்விமுறை

சங்ககால மக்கள் கல்விக்கு அளித்த முக்கியத்துவம் பற்றியும் கல்வி கற்பிக்கும் ஆசிரியர்கள், ஆசான்கள் பற்றியும் எண்ணற்ற சான்றுகள் சங்க இலக்கியங்களில் காணக் கிடந்தாலும், கல்வி கற்பிக்கும் நிறுவனங்கள், கல்வி நிலையங்கள் இருந்தமைக்கான ஆதாரம் எதுவும் காணப்படவில்லை. எனவே, ஆசிரியர்கள் தங்களது இல்லங்களிலேயே மாணவர்கட்குத் தனிப் பட்ட முறையில் கல்வி கற்பித்திருக்க வேண்டும். கற்றறிந்த அறிஞர்களும், ஆசிரியர்களும் சமுதாயத்தில் பெருமளவில் மதிப்பும் மரியாதையும் பெற்றிருந்தனர் என்பதால் ஆசிரியருக்கும் மாணவருக்குமிடையேயான தொடர்பு அக்காலத்தில் மற்ற இடங்களிலிருந்தது போல் குரு-சிஷ்யன் என்ற முறையில் இருந்திருக்க வேண்டும்.

மருத்துவத் தொழில் ஒருகுலத்தொழிலாக இருந்துள்ள மையால், மருத்துவக் கல்வியும் தந்தையிடமிருந்து மகன் கற்றுக் கொண்டதாக இருந்திருக்கவேண்டும். தன் மகனை ஒரு மருத்துவ அறிஞனாக ஆக்கவேண்டுமென்ற ஆர்வம் தந்தைக்கும், சிறந்த மருத்துவன் என்ற அங்கீகாரத்தைப் பெறுவதற்காக மருத்துவக் கல்வியைத் தெளிவுறக் கற்று நன்கு தேர்ச்சிபெற வேண்டுமென்ற ஆர்வம் மகனுக்கும் இருந்திருக்குமாகையால் மருத்துவக் கல்வியிலும், செய்முறைப் பயிற்சியிலும் கற்பிப்பவர், கற்பவர் ஆகிய இருவருக்குமிடையே மிகுந்த ஈடுபாடு இருந்திருக்கும். இவ்வாறு மருத்துவத்தைப் பயிலும் மாணவர் முழு நிறைவான

மருத்துவக் கல்வியைப் பெற்றிருப்பான். எனவே, சங்க காலத்தில் மருத்துவக் கல்வி பெருமளவில் நிறுவனங்கள் மூலமாக அளிக்கப் படாவிடினும் அதன் தரம் மிகவும் உன்னதமான நிலையில் இருந்திருக்குமென்று கூறலாம்.

சங்க இலக்கியங்களில் சித்த மருத்துவம் குறித்து எவ்வித குறிப்பும் காணப்படவில்லையாகிலும், சங்க கால மருத்துவர்கள் பின்பற்றிய மருத்துவமுறை வாதம், பித்தம், கபம் என்ற முத்தாதுக்களின் சித்த மருத்துவக் கொள்கையினை அடிப்படையாகக் கொண்டதேயாகும். திருக்குறளில் காணப்படும் இது பற்றிய சான்று குறித்து இதே அத்தியாயத்தில் பிரிவு 4ன் கீழ் விளக்கப் பட்டுள்ளது.

## 5. சித்த மருத்துவக் கல்விமுறை

சங்க காலத்தில் மருத்துவக் கல்வியானது பரம்பரையாகக் கற்பிக்கப்பட்டு வந்துள்ளது என்பது மேற்கூறப்பட்ட விரபரங்களால் தெரியவரும். மேன்மை மிகுந்த சித்தர்கள் சித்தயோக முறையில் தாம்பெற்ற ஞானத்தினை இரகசியமாகக் காப்பாற்றி வந்தபோதிலும், தமது நம்பிக்கைக்குப் பாத்திரமான சீடர்களுக்குத் தமது அறிவினைப் புகட்டி வந்தனர்.

'ஆனந்த காண்டம்' என்னும் சித்த இலக்கிய நூலிலிருந்து சித்தமருத்துவமானது குரு-சீடன் முறையில் நந்தி-தன்வந்த்ரி-அசுவனி-விசுவனி-அகத்தியர்-புலத்தியர்-தேரர்-யூகி என்று வழிவழியாகக் கற்பிக்கப்பட்டு வந்துள்ளது தெரியவருகிறது.

இவ்வாறு குரு-சீடன் முறையில் சித்த மருத்துவக் கல்வி கற்பிக்கப்பட்டு வந்ததற்கான சான்றுகள் போகரின் "சட்டக் காண்டம்" என்னும் நூலில் காணக்கிடக்கின்றன; அவற்றுள் சில கீழே தரப்பட்டுள்ளன:

- தனக்கு மருத்துவத்தினைப் போதிக்குமாறு (எந்தனுக்குப் போதிக்க) சீடன் குருவிடம் வேண்டுகிறான்:

  "திட்டமுடன் எந்தனுக்கு உபதேசங்கள்
  சிறப்புடன் போதிக்கத் தொழுதிட்டேனே"[7]

- சீடன் ஒரு குகைக்குள் அழைத்துச் செல்லப்பட்டு மருத்துவ நுட்பங்கள் கற்பிக்கப்பட்டதாகச் சீடன் கூறுகின்றான்.

"என்னையே கொண்டு சென்று
குகைக்குள்ளே வைத்து
எழிலான வித்தைகளைக் கற்பித் தாயே"[12]

- சித்தர் தனது சீடனுக்கு நூறுகோடி (சத கோடி) மருத்துவ ஞானங்களையும் (வித்தைகளையும்) நாள்தோறும் (நாளும்) கற்பித்தார்:

"தந்திட்டார் எந்தனுக்கு நாளும் ஈந்தார்
சதகோடி வித்தைகளும் கற்பித்தாரே"[13]

- நந்தி முனிவர் சூடாமுனி சித்தருக்குச் சித்த மருத்துவத்தை தன் முன்னிலையிலேயே கற்பித்ததாக நந்தி முனிவரின் சீடர் கூறுகின்றார்:

"மெல்லவே என் முன்னால் நந்திதாமும்
மேதினியில் சூடாமுனி சித்தர்க்கு
புல்லவே உபதேசம் செய்தார் பாரில்"[14]

- சித்தர்கள் தாங்கள் வசித்து வந்த குகைகளிலேயே தங்களுடைய சீடர்களுக்குக் கல்வி கற்பித்தனர். சித்தர்கள் தங்களுக்கென நாற்பத்தெட்டு உறுப்பினர்களைக் கொண்ட சங்கம் வைத்திருந்தனர்:

"தேனான மாணவர்கள் நாற்பத்தெண்பேர்
தெளிவான சங்கத்துப் புலவரைய்யா"[15]

- இச்சங்கமானது சித்த உறுப்பினர்களின் படைப்புக்களை உலக மக்களுக்குப் பயன்படும் வகையில் வெளியிட்டது:

"ஒளிபோல சங்கத்தார் நூல்கள் எல்லாம்
உலகுகளில் அன்பர்க்குப் பகரலாச்சே"[16]

சித்தர்கள் எழுதும் நூல்கள் யாவும் சித்தர்களின் அங்கீகாரத்திற்காக சித்தர் சபைக்கு அனுப்பி வைக்கப்பட வேண்டும். இந்நூல்கள் சபையில் சித்தர்களால் விவாதிக்கப்பட்டு அவற்றுள் பெருந்தகுதி பெற்றவை மட்டும் அங்கீகரிக்கப்பட்டன; மற்றவை நிராகரிக்கப்பட்டன. இவ்வாறு அங்கீகரிக்கப்பட்ட நூல்கள் பொதுமக்களால் பாராட்டப்பட்டன. இத்தகைய சங்கக் கூட்டங்கள் பொதிகை மலையில் நடைபெற்றன. நாட்டில் எல்லாப் பகுதிகளிலிருந்தும் அறிஞர்கள் பலரும் இத்தகைய கூட்டங்களில் கலந்து கொண்டனர்.

அகத்தியர் எழுதிய அகத்தியர் 1200 என்னும் சித்த மருத்துவ நூலில் அகத்தியருக்கு குரு என்னும் பட்டம் சித்தர்களால் வழங்கப்பட்ட விவரம் காணப்படுகிறது.

"தீரவேதான் அகத்தியர்க்கு குருபட்டம் தான்
திகழத்தான் கொடுத்தார் சித்தர் தானே"[17]

இவ்வாறு மருத்துவப் படைப்புக்கள் சித்தர்களின் சங்கத்தில் அங்கீகாரம் பெறுவதற்கான நடைமுறைகள் யாவும் தற்காலப் பல்கலைக் கழகங்களில் முனைவர் பட்டம் (Ph.D Degree) பெறுவதற்காக ஆய்வாளர்கள் தமது ஆய்வுக் கட்டுரை களைச் சமர்ப்பிக்கும் நடைமுறைளை ஒத்திருப்பது இங்குக் குறிப்பிடற்பாலது.

## 6. மருத்துவக் கல்விமுறையில் மாற்றம்

தமிழ்நாட்டிற்குள் புத்தர்களும், ஜைனர்களும், அந்தணர்களும் வடக்கேயிருந்து குடியேறியபோது தமிழர் பண்பாட்டின் தனிப்பெருந்தன்மை தாக்கமடைந்தது. கல்வித் துறையில் இதுகாறும் நிலவிவந்த மதச் சார்பின்மைக் கோட்பாடு கொஞ்சங் கொஞ்சமாக மாறத் தொடங்கியது. மதவெறியார்வம் தமிழ்ப் பண்பாட்டில் ஊடுருவத் தொடங்கியது. ஜைன, புத்தமதத் துறவிகள் கல்வித்துறையின் புதிய முகவர்களாக மாறினர். ஜைன, புத்த மதக் கோட்பாடுகள் பிற்காலத் தமிழ் நூற்களில் இடம் பெறலாயின. இத்துறவிகளின் உறைவிடமாக அமைக்கப்பட்ட மடாலயங்கள் அவர்களுடைய மதக் கோட்பாடுகளையும், வேதங்களையும் போதிப்பதற்கான கல்வி மையங்களாகவும் செயல்படலாயின. ஜைனர்கள் தமிழ் மொழியினைக் கற்று, அவர்களுடைய மதக்கொள்கைகளையும் எண்ணங்களையும் பரப்புவதற்காக தமிழில் அறநெறி நூற்களை எழுதலாயினர்.

திரிகடுகம், நான்மணிக்கடிகை, சிறுபஞ்சமூலம், ஏலாதி என ஜைனர்களால் எழுதப்பட்ட நூற்கள் யாவும் மருத்துவ மூலிகைகளின் தலைப்புக்களாக அமைந்திருப்பதி லிருந்து அவர்களுடைய மடப்பள்ளிகளில் மருத்துவமும் ஒரு பாடமாகக் கற்பிக்கப்பட்டிருக்க வேண்டுமென எண்ணத் தோன்றுகிறது. மேலும், **சிறுபஞ்சமூலம்** என்ற நூலின் ஆசிரியர் **காரி ஆசான்**. இவர் தனது பெயரின் பின்னால் "ஆசான்" என்னும் அடைச் சொல்லினைச் சேர்த்திருப்பதால் அவர் நன்னடத்தை ஒழுக்க நெறிகளுடன் மருத்துவத்தையும் கற்பித்திருக்க வேண்டும். இவ்வாறு, தனிமனிதரின் தொழிலாக இதுகாறும் இயங்கிவந்த

கல்வி கற்பிக்கும் தொழிலானது, ஜைனர்களின் மூலம் நிறுவனத் தொழிலாக மாறியதோடு ஜைனப் பள்ளிகளும் புத்த விகாரங்களும் பல்லவர் காலத்தில் (கி.பி. 600 - கி.பி. 850) கல்வி மையங்களாக மாறலாயின.

## இடைக்காலத்தில் மருத்துவக் கல்வி

இடைக்காலத்தில் தென்னகமெங்கும், குறிப்பாகத் தமிழக மெங்கனும் சைவ மற்றும் வைணவ மத ஆதரவாளர்களால் மடங்கள் தோற்றுவிக்கப்பட்டன. இந்த மடங்கள் யாவும் கல்வி நிலையங்களாகவும் செயல்பட்டன. இவ்வாறு மடங்கள் அமைத்தல் நடைமுறையில் வளர்ச்சிபெற்று கி.பி. 10ஆம் நூற்றாண்டில் உச்சநிலை அடைந்து, அவைபடிப்படியாக கோயில்களுடன் இணைக்கப்பட்டு அவர்களின் பராமரிப்பின் கீழ் இயங்கலாயின.[18] மதச்சார்பான இந்தப் பள்ளிகள், விகாரங்கள், மடங்கள் யாவும் அவைகளின் மதக்கோட்பாடுகளையும் வேதபாடங்களையும் பரப்புவதையே முக்கிய நோக்கமாகக் கொண்டு செயல்பட்டு வந்தன. இவை தவிர, மற்றும் பல கல்விக் கூடங்களும் விழுப்புரம் அருகே எண்ணாயிரம்,[19] பாண்டிச்சேரி அருகில் திருபுவணி,[20] மற்றும் செங்கல்பட்டு அருகில் திருமுக்கூடல்[21] இவையாவும் கி.பி. 11ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவை) சென்னைக்கருகில் திருவொற்றியூர் (13ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது) ஆகிய இடங்களில் நிறுவப்பட்டன.

ஆனால் இக்கல்விமையங்கள் யாவும் வேதபாடங் களையும், மதக் கோட்பாடுகளையும் மட்டுமே கற்பிக்கப் பயன் பட்டன. ஆனால் திருவாவடுதுறையில் 12ஆம் நூற்றாண்டில் நிறுவப்பட்ட கல்விக் கூடத்தில் மட்டும் ஏனைய பாடங்களுடன் சரக ஸம்ஹிதா அஷ்டாங்க ஹிருதயம் மற்றும் ரூபாவதாரம் ஆகிய மருத்துவப் பாடங்கள் கற்றுத் தரப்பட்டன.[22]

இந்நிறுவனங்களைத் தோற்றுவித்தவர்களின் தலையாய நோக்கம் மருத்துவக் கல்வியளிப்பதல்லவென்பதால், வேத பாடங்கள், இலக்கணம் மற்றும் சமய போதனைகள் தவிர வேறென்னென்ன பாடங்கள் இங்கு கற்பிக்கப்பட்டனவென்பவை பற்றிய தகவல்கள் எதுவும் கிடைக்கப்பெறவில்லை. ஆனால் மேற்கண்ட விபரங்களிலிருந்து தெளிவாகத் தெரிவதென்ன வெனில் இம்மையங்களின் மூலம் இடைக்காலத்தில் மருத்துவக்

கல்வி வளர்ச்சிக்காகப் போதிய கவனம் செலுத்தப்படவில்லை என்பதாகும். ஆனாலும், இங்கு பயிலும் மாணவர்களின் உடல் நலப் பராமரிப்புக்காகத் திருமுக்கூடல் ஆதுலர் சாலை போன்று இந்த புத்தவிகாரங்களுடனும், ஜைனமடங்களுடனும் இணையப் பெற்ற ஆதுலர்சாலைகளை நிறுவியிருந்தனர்.

**எனவே, இடைக்காலத்திலும் தந்தை-மகன் என்ற முறையிலான மருத்துவக் கல்வி முறையே நீடித்திருக்க வேண்டுமென்று தீர்மானிக்க வேண்டியதாயுள்ளது; மற்றும் மருத்துவத் தொழிலும் பாரம்பரியத் தொழில் முறையாகவே கடைப்பிடிக்கப்பட்டிருக்க வேண்டும்.**

இடைக்காலத் தமிழக மருத்துவர்கள் மருத்துவத் தொழிலின் விருத்திக்காக மானியங்கள் மற்றும் கொடைகள் மூலம் ஆட்சியாளர்களால் ஊக்கப்படுத்தப்பட்டனர். இத்தகைய மானியங்களும் கொடைகளும் அவர்களுடைய வாரிசுகளுக்கோ அல்லது அவர்களால் தெரிவு செய்யப்பட்ட சீடர்களுக்கோ மருத்துவக் கல்வியளிப்பதற்குப் பயன்படுத்தப்பட்டன; அதன் மூலம், மருத்துவத் தொழிலை அவர்களுடைய தொழில் முறை வாரிசுத் தொழிலாகத் தொடர்ந்து நடத்திவர வழிவகை செய்தனர்.

# பிரிவு 9

## மருத்துவர்களின் தகுதி நிலை

சங்ககாலம் முதற்கொண்டே தமிழ்நாட்டு மருத்துவர்கள் சமுதாயத்தில் மதிப்பு மரியாதையுடன் கௌரவமாகப் போற்றப்பட்டு வந்துள்ளனர். எல்லாப் பிரிவு மக்களிடமிருந்தும் தனி மரியாதையினைப் பெற்று மகிழ்ந்தனர். அவர்களுடைய தொழில் திறனுக்காகவும், தொழிலில் அவர்கள் காட்டிவந்த ஈடுபாட்டிற்காகவும் அவர்கள் ஆட்சியாளர்களால் கௌரவிக்கப் பட்டனர்.

### மருத்துவர்கள்

நோய்தீர்க்கும் கலையில் தேர்ச்சிபெற்று, மருத்துவத் தொழிலை நடத்திவந்தவர்கள் **"மருத்துவர்கள்"** அல்லது **"வைத்தியர்கள்"** என்றழைக்கப்பட்டனர். நோய்களை இனம் கண்டறியும் திறன்பெற்ற மருத்துவர்கள் **தொல்காப்பியத்தில்**[1] **'நோய் மருங்கறிஞர்'** என்று வேறுபடுத்திக் காட்டப் பட்டுள்ளனர்.

இலக்கியங்களிலும் கல்வெட்டுக்களிலும் மருத்துவத் தொழில் புரிபவர்கள் பல்வேறு சொற்களால் குறிப்பிடப் பட்டுள்ளனர். **மருத்துவன், மருத்தன், மாமாத்திரர், வைத்தியன்** மற்றும் **சவர்ணன்** போன்ற சொற்கள் பொதுவாக மருத்துவத் தொழில் புரிபவனைக் குறிப்பிடப் பயன்படுத்தப்பட்டுள்ளன.[2]

**"சல்லியக் கிரியை பண்ணுவான்", "அங்க வைத்தியன்"** ஆகிய சொற்கள் அறுவை சிகிச்சை செய்யும் மருத்துவனைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

மருத்துவத் தொழில்புரியும் பெண்கள் **"மருத்துவி", "மருத்துவச்சி, "தாதி", "செவிலி"** என்றழைக்கப்பட்டனர். இவற்றுள், **"மருத்துவி"** என்பது "பெண் மருத்துவரையும்", **"மருத்துவச்சி"** என்பது "பிரசவம் பார்க்கும் பெண்"ணையும் குறிப்பவையாகும். **தாதி, செவிலி** ஆகிய சொற்கள் சிகிச்சையின் போது பெண் மருத்துவருக்குத் துணை நின்று, பின் நோயாளியின் தேவைகளைக் கவனித்துக் கொள்ளும் பெண்களைக் குறிப் பிடுகின்றன.

**பரிகாரம்**[3] என்னும் சொல் நோய் நீக்கல், பராமரித்தல் என்று பொருள்படுவதால், **பரிகாரி**[4] என்னும் சொல் நோய்களை நீக்குபவரை அதாவது மருத்துவரைக் குறிப்பதாகும்.

**விஷம்** அல்லது **விடம்** என்பது நச்சு அல்லது நஞ்சு என்பதைக் குறிக்கும். எனவே, **விஷ வைத்தியன்** மற்றும் **விடஹாரி** என்ற சொற்கள் நஞ்சை நீக்கும் சிகிச்சையளிப்பவரைக் குறிப்பதாகும்.[5]

## மருத்துவர்களின் கல்வித் தகுதிநிலை

### புலவராக மருத்துவர்

பழங்காலத்தில் மருத்துவ அறிஞர்கள் கவித்துவத்திலும் புலமை பெற்றிருந்தனர். சித்த மருத்துவ நூற்கள் யாவும் கவிதை வடிவிலிருப்பதைக் காணலாம். அக்காலத்தில், புலவர் யாவரும் சமுதாயத்தில் நல்ல மதிப்பும் மரியாதையும் பெற்றிருந்தனர். எனவே, ஒரு மருத்துவன் கவித்துவத்திலும் நன்கு தேர்ச்சி பெற்றிருந்தால், அவன் மருத்துவன் என்ற முறையிலும், புலவன் என்ற முறையிலும் சமுதாயத்தில் இரட்டிப்பு மதிப்பும் மரியாதையும் பெற்றதுடன், கௌரவப் பட்டங்களின் மூலம் சிறப்புறக் கௌரவிக்கப்பட்டான்.

எடுத்துக்காட்டாக, **"உறையூர் மருத்துவன் தாமோதர னார்"**[6] ஒரு மருத்துவ அறிஞரும், புலவரும் ஆவார். மருத்துவத் தொழிலுக்குச் சமுதாயத்தில் உயர் மதிப்பளிக்கப்பட்ட காரணத்தால், புலவர் தாமோதரனார் தன்பெயருக்கு முன்னால் 'மருத்துவன்'' எனும் அடைமொழியையும் இணைத்து "மருத்துவன் தாமோதரனார்" என அழைக்கப்படலானார். இவர் புறநானூறில் மூன்று பாடல்களும், குறுந்தொகையில் ஒரு பாடலும் பாடியுள்ளார்.

**மருத்துவன் நல்லச்சுதனார்**[7] என்பவர் மற்றொரு சங்க காலப் புலவரும் மருத்துவருமாவார். சங்க இலக்கியமான **பரிபாடலில்** இவர் **முருகக் கடவுள்** பற்றி பாடல்கள் புனைந்துள்ளார்.

இதுபோல் மருத்துவன் ஒருவன் கவித்துவத்திலும் புலமை பெற்று அதன் பொருட்டு கௌரவப் பட்டத்தினால் கௌரவிக்கப்பட்டமைக்கான சான்றுகள் கல்வெட்டுக்களிலும் காணப்படுகின்றன. **மாறன் காரி** என்பவர் பாண்டிய நாட்டில்

வாழ்ந்த ஒரு மருத்துவராவார். இவர், கவித்துவத்திலும் சிறந்த புலமை பெற்றிருந்தார். இதன் காரணமாக இவருக்கு **மதுரகவி** என்னும் பட்டமளிக்கப்பட்டுக் கௌரவிக்கப்பட்டார்.[8]

## இசைஞானியாக மருத்துவர்

மருத்துவரும் புலவருமான **மருத்துவன் நல்லச்சுதனார்** இசையிலும் மிகுந்த தேர்ச்சி பெற்றிருந்தார். இவர் **பரிபாடலில்** 6, 8, 9, 10, 15, 19 ஆகிய பாடல்களுக்கு இசையமைத்துள்ள விபரம் பரிபாடல் மூலம் தெரியவருகிறது.[9]

## அவை உறுப்பினராக மருத்துவர்

பழந்தமிழ்நாட்டில் மருத்துவ அறிஞர்களின் திறமைகள் பாராட்டப்பட்டதுடன், நல்திறன்படைத்த மருத்துவ அறிஞர்கள், அவைகளிலும், அரச சபைகளிலும் உறுப்பினர் களாகச் சேர்க்கப்பட்டுக் கௌரவிக்கப்பட்டார்கள். மருத்துவ அறிஞர் **மருத்துவன் தாமோதரனார்** மூன்றாம் தமிழ்ச் சங்கத்தில் உறுப்பினராயிருந்த விபரம் ஏற்கெனவே இந்நூலில் கூறப்பட்டுள்ளது.[10]

அரசருக்கு அறிவுரை கூறி நல்வழி காட்டும் வகையில் அன்று **ஐம்பெருங்குழு, எண்பேராயம்** என்ற பெயர்களில் முறையே ஐந்து, எட்டு உறுப்பினர்களைக் கொண்ட சபைகள் இருந்ததாகச் **சிலப்பதிகாரத்தில்** குறிப்பிடப்பட்டுள்ளது. இவ்வுறுப்பினர்களுள் மருத்துவர்களும் இடம்பெற்றிருந்தனர்.[11] இம்மருத்துவர்கள் அரசருக்கும் நிர்வாகச் சபை உறுப்பினர் களுக்கும் மருத்துவச் சேவை புரிந்து வந்திருக்கின்றனர்.[12]

## 2. மருத்துவர்களின் அரசியல் தகுதிகள்

உயர்தேர்ச்சி பெற்ற மருத்துவ அறிஞர்கள் அரசவைகளில் உறுப்பினர்களாகச் சேர்க்கப்பட்டுள்ள விபரம் **ஆனைமலைக்** கல்வெட்டுக்களிலிருந்து தெரியவருகிறது.

**மாறன்காரி** என்னும் மருத்துவப் புலவர் (அவரது புலமைத்திறனுக்காக ஏற்கெனவே மேற்கோள் காட்டப்பட்டவர்). **'மூவேந்த மங்கலப் பேரரையன்'** என்றும் அழைக்கப்பட்டவர். இவர், பாண்டிய நாட்டுக் களக்குடியில் பாராட்டுக்குரிய திறன் பெற்ற மருத்துவராகத் திகழ்ந்தவர். கி.பி. 7ஆம் நூற்றாண்டில் பாண்டிய மன்னன் பராந்தக மாறன் சடையனின் மந்திரி சபையில்

முதல் மந்திரியாக (உத்தர மந்திரியாக) அமர்த்தப்பட்டுக் கௌரவிக்கப்பட்டார், என்பதை

> "கோமாறன் சடையர்க்கு உ
> த்தர மந்திரி களக்குடி வைத்
> தியன் மூவேந்த மங்கலப்
> பேரரையன் ஆகிய மாறன்காரி"[13]

என்று கல்வெட்டு தெரிவிக்கிறது. மேலும், அதே வைத்திய குலத்தைச் சேர்ந்த மாறன்காரியின் தம்பியான **மாறன் எயினன்** மாறன்காரியின் மறைவுக்குப் பின்னர் பாண்டிய அரசவையில் மந்திரியாக இடம்பெற்றார் என்ற விபரமும் கல்வெட்டில் கூறப்பட்டுள்ளது.[14]

### 3. கௌரவப் பட்டங்களினால் தனிச்சிறப்புப் பெற்ற மருத்துவர்கள்

அக்காலத்தில் மருத்துவர்களை **சவர்ணன், வைத்தியன், மருத்துவன், சல்லியன், அங்கவைத்தியன்** முதலான அடைமொழிகளை அவர்களுடைய பெயர்களுக்கு முன் இணைத்து அவர்களை வேறுபடுத்திக்காட்டுவது இயல்பாக இருந்தது. இவ்வாறு அடைமொழிப் பெயர்களுடன் அழைக்கப் பட்ட சில மருத்துவர்களின் பெயர்கள் கல்வெட்டுக்களில் குறிப்பிடப்பட்டவாறு கீழே தரப்பட்டுள்ளன.

1. **சவர்ணன்** அரையன் மதுராந்தகன்[15]
2. **சவர்ணன்** பராசிரியன் ஆதித்ததேவன் திருவம்பலப் பெருமாள்.[16]
3. **சவர்ணன்** அரையன் சந்திரசேகரன் ஆன உத்தமசோழ அசலன்.[17]
4. குடநாடு **சவர்ணன்** குலசேகர நாராயணன்[18]
5. ஆலப்பாக்கம் **சவர்ணன்** கோதண்டராமன் அஸ்வத்தாம பட்டன்.[19]
6. **சவர்ணன்** காசியப்பன் குலோத்துங்க சோழன் மங்களாதிராஜன் சீராள தேவன்[20]
7. **சவர்ணன்** திருமறைக்காவுடையான்[21]
8. களக்குடி **வைத்தியன்** மூவேந்த மங்கலப் பேரரையன் ஆகிய மாறன்காரி.[22]

9. அங்க வைத்தியன் கூத்தப் பெருமாள்[23]

10. வைத்தியன் பாண்டி அமிர்தமங்கல வரையனான சாத்தன் கணபதி.[24]

அக்காலத்தில் திறன்மிக்க மருத்துவர்கள் சிகாமணி, வைத்திய சிகாமணி,[25] வைத்தியராஜா,[26] வைத்திய சக்கரவர்த்தி,[27] வைத்தியப்புரந்தரன்[28] போன்று பலவித பட்டங்களின் மூலம் கௌரவிக்கப்பட்டனர் என்ற விபரம் கல் வெட்டுக்களின் மூலம் தெரியவருகிறது. திருபுவனச் சக்கரவர்த்தி கோனேரின்மை கொண்டான் சுந்தரபாண்டியனின் 8ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டில் வைத்தியப் புரந்தரன் பட்டம் பெற்ற மருத்துவர் பற்றிய குறிப்பொன்று காணப்படுகிறது.

> "நாங்கூர் சவர்ணன் பராசிரியன் ஆதித்த தேவன்
> திருவம்பலப் பெருமாளான வைத்தியப் புரந்தர்க்கு"[29]

காளையார்கோயில் பகுதியைச் சேர்ந்த மருத்துவ அறிஞர் முதலியார் அஹோரசிவர் என்பவர் 'வைத்தியச் சக்கரவர்த்தி' என்னும் பட்டமளிக்கப்பட்டுக் கௌரவிக்கப்பட்டார்.[30] இது போல, திருச்சூளையைச் சேர்ந்த மற்றொரு மருத்துவர் 'வைத்தியாதிராஜன்' என்ற பட்டம் அளிக்கப்பட்டுக் கௌரவிக்கப்பட்டுள்ளார்.[31]

## 4. சமுதாயத்தில் மருத்துவர்களின் மதிப்பு நிலை

### மருத்துவக் குலம்

பரம்பரை பரம்பரையாக மருத்துவத்தொழிலை நடத்தி வந்த குடும்பம் வைத்திய குலம் என்றும் மருத்துவக் குலம் என்றும் அழைக்கப்பட்டன.

சங்க காலத்தில் மக்கள் புரிந்துவந்த தொழில்களுக்கேற்ப அவர்களை வகைப்படுத்தி வைக்கும் வழக்கம் இருந்தது. ஒவ்வொரு வகையைச் சார்ந்த பிரிவினரும் தனித்தனி வீதிகளில் அல்லது பகுதிகளில் குடியமர்த்தப்பட்டனர்.

சிலப்பதிகாரத்தில் அதன் ஆசிரியர் இளங்கோவடிகள் புகார் நகரின் நகர அமைப்பினை விவரித்தெழுதும்போது பல்வேறு தொழில்களின் அடிப்படையில் மக்கள் வாழ்ந்துவந்த பல வீதிகளைப் பற்றிக் குறிப்பிடுகையில் அரசவீதி, தேர்வீதி, கடைவீதி, வணிகர்வீதி, அந்தணர்வீதி என்று பலவாறாகக் குறிப்பிட்டுள்ளார்.[32] இவற்றுள், ஆயுர்வேத மருத்துவர் வீதியும், சோதிடர் வீதி (காலக் கணிதர்)யும் அடங்கும். எனவே,

அக்காலத்தில் ஆயுர்வேத மருத்துவச் சிகிச்சையளித்து வந்த மருத்துவர்கள் இருந்துள்ளமையும், அவர்கள் தனிவீதியொன்றில் வாழ்ந்துவந்தனரென்றும் தெரியவருகிறது.

இடைக்காலத்தில், மருத்துவக் குடும்பத்தினர் வாழ்ந்து வந்த சிற்றூர் **மருத்துவக்குடி** என வழங்கப்பட்டது. தஞ்சை மாவட்டத்தில், திருவிடை மருதூர் என்னும் ஊருக்கருகில் **மருத்துவக்குடி** என்ற பெயரில் இன்றும் ஒரு கிராமம் இருந்து வருகிறது.[33] அந்நாளில் **மருத்துவக்குடி**கள் இருந்துள்ளமை பின்வரும் சான்றுகளின் மூலம் உறுதிப்படுத்தப்படுகின்றன:

சோழர் காலத்தில் கி.பி. 7ஆம் நூற்றாண்டில் இப்போதைய தஞ்சை மாவட்டத்தின் கும்பகோணம், மற்றும் மயிலாடுதுறை சேர்ந்த பகுதி திரைமூர் நாடு என்று வழங்கப்பட்டது. இத்திரைமூர் நாட்டைச் சேர்ந்த திருக்குரங்காடு துறை என்னும் கிராமத்தினருகில் மருத்துவக் குடும்பங்கள் வாழ்ந்து வந்த பகுதி ஒன்று **மருத்துவக்குடி** என்ற பெயரால் அழைக்கப்பட்டுள்ளது.[34] இது இன்றும் இதே பெயரில் வழங்கப்பட்டு வருகிறது என்பது குறிப்பிடத்தக்கது.

பாண்டிய மன்னன் மாறன் சடையனின் கல்வெட்டொன்றில் பின்வருமாறு குறிப்பிடப்பட்டுள்ளது:

> **"...................... ஸ்ரீ கோ மாறன்**
> **சடையர்க்கு யாண்டு நான்கா மாண்டு**
> **•எதிராமாண்டு**
> **திரைமூர் நாட்டு மருத்துவக்**
> **குடி சபையோம் இந்நாட்டு திருக்குறங்காடு"[35]**

மருத்துவச் சேவையில் நாவிதக் குடும்பம்

தமிழ்நாட்டில் கிராமங்களில் மக்களுக்குத் தேவையான அத்தியாவசியப் பணிகளைச் செய்து வந்த 18 வகைத் தாழ்த்தப் பட்ட இனங்களுள் நாவிதர்களும் அடங்குவர். இந்த இனத்தினர் யாவரும் **குடிமக்கள்** என்று அழைக்கப்பட்டுள்ளனர்.[36] இப்பதினெட்டு வகை இனத்தினரும் **குடிமக்கள்** பிரிவினைச் சேர்ந்தவராகக் கருதப்பட்ட போதிலும், நாவிதக் குலத்தைச் சேர்ந்தோர் மட்டிலும் **குடிமக்கள்** என்ற பெயரை இன்று வரை தக்க வைத்துக் கொண்டிருக்கின்றனர்.[37] ஏனெனில் கிராம மக்களுக்கு முடிவெட்டும் சேவையுடன் மங்கலக் காரியங்கள் மட்டுமன்றி அமங்கலக் காரியங்களுக்கும் அவசியமான பணிகளை இந்த நாவிதர் மட்டுமே செய்து வருகின்றனர்.

நாவிதனைக் குறிப்பிடுகின்ற வழக்கத்திலுள்ள பிற சொற்கள் **நாவிசன், அம்பட்டன்** ஆகும்.[38] அவர்களுடைய வழக்கமான முடிவெட்டும் (Hair cutting) தொழிலுடன் சிறுசிறு அறுவை மருத்துவங்களையும் செய்து வந்துள்ளனர். வீரசோழன் ஆதுலர் சாலையில் பணியாற்றிய நாவிசன் ஒருவனுக்கு வழக்கமானப் பணிகளுடன் அவனாற்றிய இதரபணிகளுக்கென அவனுக்கு ஆண்டொன்றுக்கு 15 கலம் நெல் ஊதியமாக வழங்கப் பட்ட விபரத்தைத் தெரிவிக்கும் திருமுக்கூடல் கல்வெட்டி லிருந்து[39] இதுதெளிவாகப் புலப்படும் (ஏற்கெனவே இந்நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது.)

நாவிதர்கள் இசையிலும் வல்லவர்களாகயிருந்தனர். பல வகையான சடங்குகளின்போது அவர்கள் இசை நிகழ்ச்சிகள் நடத்தி வந்திருக்கின்றர். உதாரணமாக, வங்கலந்தையைச் சேர்ந்த வைத்திய குலத்தினர் இசைக் கருவிகளின் மூலம் கச்சேரிகள் நடத்தி (வாத்திய கேய சங்கீதங்களால்) புகழடைந்தனர் (மலிவெய்திய) என்று **சீவரமங்கலம்** செப்பேடுகளில் குறிப்பிடப் பட்டுள்ளது.

> **“வாத்யகேய சங்கீதங்களால் மலிவெய்தி**
> **வங்கலந்தை வைத்யகுலம்”**[40]

மங்கலச் சடங்குகளின் போது அடிப்படைப் பணிகளால் நாவிதன் ஈடுபடுத்தப்பட்டிருந்தமையால், அவன் **மங்கல வினைஞர், மங்கலையன்** என்றும், நாவிதப் பெண் **மங்கலை** என்றும் அழைக்கப்பட்டனர்.[41] மங்கலம் என்னும் சொல் மருத்துவ குலத்தைச் சேர்ந்தோரின் பெயர்களுடன் இணைத்துக் காணப்படுவதாக முதுநிலை கல்வெட்டாய்வாளர் **கிருஷ்ணன்** குறிப்பிட்டுள்ளார்.[42] இவ்வாறு, பெயர்களுடன் **மங்கலம்** என்ற அடைமொழியும் இணைக்கப்பட்டுள்ளதைத் தெரிவிக்கும் சில சான்றுகள் கீழே தரப்பட்டுள்ளன.

> மூவேந்தர் **மங்கலப்** பேரரையன் மாறன்காரி.[43]
> பாண்டி **மங்கல** விசையரையன் மாறன் எயினன்[44]
> பாண்டி அமிர்த **மங்கலப்** பேரரையன் சாத்தன் கணபதி[45]
> பூதனூர் வண்ணக் கண்ணுவன் அரையன்
> பாசுரனம்பலவன் **மங்கலப்** பேரரையன்[46]

மங்கலம் என்னும் அடைமொழியினைப் பெயருடன் கொண்டவர்கள் **நாவிதர்கள்** என்று **சுப்பராயலு** குறிப்பிடு கின்றார்.[47]

ராஜராஜனின் கி.பி. 1014ஆம் ஆண்டைய கல்வெட்டொன்றில்[48] **பஞ்சவன் மங்கலப் பேரரையன் அனையன் பவருத்திரன்** மற்றும் **ராஜராஜ பிரயோகத்தரையன்** என்னும் பெயர் கொண்ட ஒரு நாவிதன் ஆகியோர் பற்றிக் குறிப்பிடப் பட்டுள்ளது. **பிரயோகம்** என்ற சொல் **மருத்துவ சிகிச்சையைக் குறிப்பிடும் சொல்லாகும்**. எனவே, **பிரயோகத்தரையன்** என்ற சொல் மருத்துவச் சிகிச்சை செய்பவனைக் குறிப்பிடுவதாகும்.[49] எனவே நாவிதன் என்பவன் மருத்துவ சிகிச்சை (அறுவை) செய்துள்ளான் என்பது புலனாகும்.

கொங்கு மண்டலச் சதகத்தில் **மங்கலை** எனும் சொல் நாவிதப் பெண்ணைக் குறிப்பிடப் பயன்படுத்தப்பட்டுள்ளது.[50] நாவிதப் பெண்கள் பிரசவம் பார்ப்பதில் மிகவும் திறமை பெற்றவர்கள் என்பது யாவரும் அறிந்த செய்தியாகும். தமிழ் நாட்டில் கிராமங்களில் நாவிதப் பெண்கள் இன்றும் பிரசவம் பார்க்கும் பெண்கள் என்னும் பொருள்பட **மருத்துவச்சி** என்று அழைக்கப்படுகின்றனர். பிரசவம் பார்க்க இந்த மருத்துவச்சியையே அழைக்கின்றனர்.

எனவே, **வைத்திய குலம்** என்றழைக்கப்பட்ட நாவிதக் குடும்பங்கள் பண்டை நாட்களில் மரியாதையுடன் நடத்தப் பட்டுள்ளன. கரவந்தபுரம் என்னும் கிராமத்தைச் சேர்ந்த **சாத்தன் கணபதி** என்னும் **ஆதிவாசியினத்தைச்** சேர்ந்தவன் ஒரு மருத்துவன் ஆவான். இவன் தாழ்த்தப்பட்ட குலத்தைச் சார்ந்திருந்தாலும் மருத்துவம் என்ற தகுதியுடன் ஒரு கோயிலையும், ஒரு பெரிய தாடகத்தினையும் கட்டுவித்துள்ளான்.[51]

## 5. மருத்துவர்களின் பொருளாதார நிலை

தமிழகத்தில் இடைக்காலம் வரை மருத்துவச் சேவையானது ஒரு அறச்செயலாகவே கருதப்பட்டு வந்தது. மருத்துவர்களும் அவர்களது மருத்துவச் சிகிச்சைக்கென கட்டணம் எதுவும் வசூலிக்க வில்லை. மாறாக, அவர்கள் வசதியுள்ள பணக்கார நோயாளி களுக்கு மருத்துவச் சிகிச்சையளிக்கும்போது அவர்களுடைய செலவில் தேவையான மருந்துகளைத் தயாரித்து, அம்மருந்துகளில் ஒரு பகுதியினை வசதியற்ற நோயாளிகளுக்குச் சிகிச்சையளிப்பதற்கு என்று ஒதுக்கி வைத்துவிடுவர். இவ்வாறு அவர்களால் ஒதுக்கி வைக்கப்படும் மருந்துகளுக்கு **மருத்துவ பாகம்** என்று பெயர்.[52]

நாளடைவில், பொருளாதார நிலை மாற்றங்களின் காரணமாக மருத்துவர்களின் வாழ்க்கைச் செலவுகளுடன்

மருந்துகளின் தயாரிப்புச் செலவுகளும் அதிகரிக்கவே, அவர்கள் மருத்துவத் தொழிலுடன் தங்களது குடும்பங்களையும் பராமரிக்கப் பணம் தேவைப்பட்டது. எனவே, அவர்கள் தங்களது சிகிச்சையின் மூலம் நோயாளிகள் குணமடைந்தபின் அவர்களிடம் இருந்து சிலவகை வெகுமதிகளைப் பெறலாயினர். இவ்வாறான நிலை ஏற்பட்ட பின் நோயாளிகளும் மருத்துவர்களின் தேவையைக் கருத்திற்கொண்டு பண்டங்களை வெகுமதியாகக் கொடுக்கலாயினர். அவ்வாறு கொடுப்பதை அறமாகவும் கொண்டனர். இதன் காரணமாக, மருத்துவர்களுக்கும், மருத்துவச்சிகளுக்கும் கொடுக்கப்பட வேண்டிய கூலியினைத் தவறாது சரியான முறையில் கொடுத்தருள வேண்டுமென்பதை வலியுறுத்தி ஔவையார் தனது உலகநீதியில் பின்வருமாறு கூறியுள்ளார்.

> "................ கூலியைக் கைக்கொள்ள வேண்டாம்
> வஞ்சமற நஞ்சு அறுத்த மருத்துவச்சிக் கூலி
> மகா நோவுதன்னைத் தீர்த்த மருத்துவன் கூலி"[53]

இடைக்காலத்தில் மருத்துவமனைகள் உருவானபோது மருத்துவமனையில் பணிபுரிந்த மருத்துவர் மற்றும் மருத்துவப் பணியாளர்களுக்கு ஊதியமாக நெல் வழங்கப்பட்டது. திருமுக்கூடல் வீரசோழன் ஆதுலர் சாலையிலும் ஸ்ரீரங்கம் ரங்கநாதர் கோயிலில் அமைந்திருந்த ஆரோக்கியசாலையிலும் பணிபுரிந்த மருத்துவப் பணியாளர்கட்கு வழங்கப்பட்ட ஊதியம் பற்றிய விபரம் இதே நூலில் பிரிவு 7ன் கீழ் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

இடைக்காலத்தில் மருத்துவ அலுவலர்களுக்கு அவர்களின் மருத்துவச் சேவைக்கான கூலி தானியமாகவும் காசு எனப்படும் அக்காலத்திய நாணயமாகவும் வழங்கப்பட்டன. ஆயின், அக்கால மருத்துவர்களின் பொருளாதார நிலைபற்றித் தெளிவாக அறிந்து கொள்ள வேண்டுமாயின், அக்கால மருத்துவர்கள் ஊதியமாகப் பெற்றுள்ளவற்றின் தற்போதைய மதிப்பு தெரிந்திருக்க வேண்டும். அப்போதுதான் தற்கால மருத்துவர்களின் ஊதிய விபரங்களுடன் அப்போதைய மருத்துவர்களின் ஊதிய விபரங்களை ஒப்பிட்டு அப்போதைய மருத்துவர்களின் பொருளாதார நிலை எவ்வாறிருந்திருக்கும் என்பதைத் தெளிவாக உணர முடியும்.

அக்காலத்தில் மருத்துவர்களின் ஊதியம் தானியமாகவும் (நெல்) காசு என்ற அக்கால நாணயமாகவும் வழங்கப்பட்டன. காசு என்பது அக்காலத்திய பொற்காசு ஆகும். அதன் மதிப்பு

அந்நாளிலே இடத்திற்கு இடம் மாறுபட்டிருந்தது. எனவே, அப்பொற்காசுகளின் இன்றைய மதிப்பினைக் கண்டுபிடிப்பதில் சற்றுச் சிரமம் காணப்படுகின்றது. ஆனால், கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ள சில பண்டமாற்றுப் பொருட்களின் மதிப்புக்களிலிருந்து காசு மதிப்பு ஏறக்குறைய சரியான ரூபாய் மதிப்பில் கணக்கிடமுடியும். இதுபோல், ஊதியமாகக் கொடுக்கப் பட்ட நெல்லின் அளவுகளிலிருந்தும் அவற்றிற்கு ஈடான அரிசியின் அளவினை கிலோகிராம் எடையில் கணக்கிட்டு மருத்துவ அலுவலர்கள் ஊதியமாகப் பெற்ற நெல்லின் இன்றைய ரூபாய் மதிப்பினைக் கணக்கிடமுடியும். இவைதொடர்பான கணக்கீடுகள் பற்றிய விபரம் இந்நூலின் இறுதியில் சேர்க்கப் பட்டுள்ள இணைப்பில் விபரமாகத் தரப்பட்டுள்ளது. அவ்வாறு கணக்கிடப்பட்ட மருத்துவப் பணியாளரின் ஊதியங்களின் இன்றைய ரூபாய் மதிப்புக்கள் பிரிவு - 7ன் கீழ் தரப்பட்டுள்ளன. ஒப்பீட்டுப் பார்வைக்காக, அன்றைய மருத்துவ அலுவலர்களுக்குச் சமநிலைப் பணியிலிருக்கும் இன்றைய மருத்துவ அலுவலர்களின் ஊதிய விபரம் இந்நூலின் இறுதியில் பட்டியல்-6இல் தரப்பட்டுள்ளது.

## மருத்துவருக்கு அளிக்கப்பட்ட ஊக்க மானியம்

இடைக்காலத்தில் திறன்மிக்க மருத்துவர்களின் சேவையைப் பாராட்டி அவர்களுக்கு நிலங்கள் கொடையாக வழங்கப்பட்டுள்ளன.

## பொதுமானியங்கள்

இடைக்காலத்தில் எந்தவொரு கொடை அல்லது மானியம் எந்தவொரு நோக்கத்துடன் வழங்கப்பட்டாலும் அக்கொடையில் ஒரு பங்கு மருத்துவர்களுக்கும் மருத்துவச் சேவையில் ஊக்கமும் உற்சாகமும் அளிப்பதற்காக வழங்கப் பட்டுள்ளது.

பல்லவ மன்னன் நந்திவர்மனின் 21ஆம் ஆட்சியாண்டுக் காலத்தில் குமாரமங்கல வெள்ளத்தூர் என்னும் கிராமத்தைப் பொதுமானியமாக வழங்கியபோது, அதில் ஒரு பங்கு ஒரு மருத்துவனுக்காக ஒதுக்கப்பட்டுள்ளது.[54]

விழுப்புரம் தாலுகா திருவாமத்தூரிலுள்ள அபி ராமேஸ்வரர் ஆலயத்தில் கண்டெடுக்கப்பட்ட கல்வெட்டில் பாண்டிய மன்னன் திருபுவனச் சக்கரவர்த்தி கோனோரின்மை

கொண்டான் தனது 13ஆம் ஆட்சியாண்டின் போது அக்கோயிலில் வேதபாராயணம் செய்து வந்த பிராமணர்களுக்கு அளிக்கப்பட்ட 28 பங்குகள் கொண்ட ஒரு கொடையிலிருந்து ஒரு பங்குக்கான 4 'மா' நிலத்தைப் பனையூர் நாடு ராஜராஜ சதுர்வேதி மங்கலத்தின் தென்கோடியில் அமைந்துள்ள தளவாநல்லூரிலிருந்து ஒரு வைத்தியனுக்குத் தரப்பட்ட விபரம் கூறப்பட்டுள்ளது.[55]

## சிறப்புக் கொடைகள்

மருத்துவர்களுக்கு ஊக்கமளிக்க வேண்டியதன் அவசியத்தை ஆழ்ந்து உணரத் தலைப்பட்டதன் காரணமாக சில வேளைகளில் நிலங்களை விலைக்கு வாங்கி மருத்துவர்களின் சேவையைப் பாராட்டும் பொருட்டுக் கொடையாக வழங்கி உள்ளனர்.

அரசி குந்தவைப் பிராட்டியார் **சவர்ணன் அரையன் சந்திரசேகரன்** என்ற மருத்துவருக்கு சமுதாயத்திற்கு மருத்துவச் சேவை புரிவதற்கென 12 காசு பணத்திற்கு நிலமும் வீடும் வாங்கி நன்கொடையாக அளித்துள்ளார்.[56]

**சவர்ணன் அரையன் மதுராந்தகன்** என்பவர் ஒரு சிறந்த மருத்துவர். அவருடைய மருத்துவச் சேவைக்காக அவருக்குச் சில நிலங்கள் அவரும் அவருடைய சந்ததியினரும் அனுபவிக்கும் உரிமையுடன் கொடையாக வழங்கப்பட்டுள்ளது.[57]

சோழமன்னர் பரகேசரிவர்மன் என்னும் உடையார் ஸ்ரீ ராஜேந்திர சோழதேவரின் 18ஆவது ஆட்சியாண்டுக் காலத்தில் ஒரு கிராம மருத்துவருக்கு விழுப்புரம் தாலுகாவில் திருவாமத்தூரிலுள்ள நிலம் கொடையாக வழங்கப்பட்டுள்ளது.[58]

தஞ்சாவூர் மாவட்டம் திருப்புகலூரிலுள்ள கி.பி. 12/13ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த சோழ மன்னன் கோனேரின்மை கொண்டானின் கல்வெட்டில் **'வைத்திய சிகாமணி'** என்ற சிறப்புப் பட்டம் பெற்று சிறந்து விளங்கிய மருத்துவர் ஒருவருக்கு அவருடைய சிறந்த மருத்துவச் சேவையைப் பாராட்டி நிலம் கொடையாக வழங்கப்பட்ட விபரம் தெரிவிக்கப்பட்டுள்ளது.[59]

அறுவை மருத்துவர்களுக்கும் அவர்களுடைய அறுவை மருத்துவச் சேவையைப் பாராட்டி கொடைகள் வழங்கப் பட்டுள்ளன. பாண்டிய மன்னர் திருபுவனச் சக்கரவர்த்திக் கோனேரின்மை கொண்டான் சுந்தரபாண்டிய தேவரின் எட்டாம்

ஆட்சியாண்டைச் சேர்ந்த கல்வெட்டில், 'வைத்தியப்புரந்தர்' என்னும் பட்டம்பெற்ற சவர்ணன் பராசிரியன் ஆதித்த தேவன் திருவம்பலப் பெருமாள் என்ற அங்க வைத்தியருக்கு (அறுவை மருத்துவருக்கு) வடகொங்கு நாட்டின் ஒரு பிரிவைச் சேர்ந்த எல்லூர் நாட்டிலுள்ள வானவன்மாதேவி என்னும் கிராமத்தை இறையிலிக் கொடையாக (Tax-free-grant) வழங்கப்பட்ட விபரம் குறிப்பிடப்பட்டுள்ளது.[60]

## சிறப்பு மானியங்கள்

இடைக்காலத்தில் மருத்துவத் தொழிலை ஊக்குவிக்கும் பொருட்டுத் திறமை மிக்க மருத்துவர்களுக்கு வைத்திய பாகம், வைத்திய போகம், வைத்தியக் காணி, ஆதுல போகம், வைத்திய விருத்தி, சல்லிய விருத்தி, சல்லிய போகம், சல்லியக் கிரியை போகம், விஷபோகம், விஷகார போகம் போன்ற பலபெயர்களில் மானியங்களும் கொடைகளும் வழங்கப் பட்டுள்ளன.

## வைத்திய பாகமும் வைத்திய போகமும்

ஒரு மருத்துவர் தானே அல்லது தனது நேரடி மேற் பார்வையின் கீழ் நோயாளியின் சிகிச்சைக்காகத் தயாரிக்கப்படும் மருந்தில் ஒரு பகுதியைத் தனது மருத்துவ சேவைக்காக ஒதுக்கி வைத்துக் கொள்வார். மருத்துவருக்கு இவ்வாறு அனுமதிக்கப் பட்ட பாகம் மருத்துவ பாகம் அல்லது வைத்திய பாகம் என்றழைக்கப்பட்டது.[61]

வைத்தியபோகம் என்பது வைத்தியர் (மருத்துவர்) தனது சேவையைப் பாராட்டித் தனக்களிக்கப்பட்ட நிலத்தினைப் பயிரிட்டுச் சாகுபடி செய்து அதில் கிடைக்கும் வருமானத்தைத் தனது மருத்துவ சேவைக்காகப் பயன்படுத்தும் உரிமையைக் குறிக்கும்.

இவ்வாறு மருத்துவனுக்குக் கொடையாக வழங்கப்படும் நிலம் ஒருபொதுவான ஒரு பெரிய கொடையின் பாகமாக வழங்கப்பட்டிருந்ததால் அந்தப் பாகம் வைத்திய பாகம் என்றழைக்கப்பட்டது. மருத்துவன் தான் வைத்திய பாகமாகப் பெற்ற நிலத்தைப் பயிரிட்டு அனுபவிக்கும் எல்லா உரிமைகளும் அவனுக்கு அளிக்கப்பட்டிருப்பின் அக்கொடையானது வைத்திய பாகம் அல்லது வைத்திய போகம் என்று இரு வகையிலும் கூறப்பட்டது.

திருக்கோயிலூர் தாலுக்காவிலுள்ள திருவிக்ரமப் பெருமாள் ஆலயத்திலுள்ள கல்வெட்டு[62] அரசமானியமாகத் தரப் பட்ட திருக்கோவலூர் பற்று என்னும் ஊரிலுள்ள நிலத்தினைப் பற்றிக் குறிப்பிடுகின்றது. இம்மானிய நிலமானது 24 பங்குகளைக் கொண்டது. இவற்றுள் ஒரு பங்கு **வைத்திய போகமாக** பலவித சாகுபடி உரிமைகளும் வரிவிலக்குகளும் அளிக்கப்பட்டுத் திருபுவனச் சக்கரவர்த்திக் கோனேரின்மை கொண்டானின் 18ஆம் ஆட்சியாண்டுக் காலத்தில் கி.பி. 13ஆம் நூற்றாண்டில் வழங்கப் பட்டுள்ளது.

கன்னியாகுமரி மாவட்டத்தில் அகத்தீஸ்வரம் பகுதியிலுள்ள சிவன் கோவிலருகில் கண்டெடுக்கப்பட்ட கி.பி. 15ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த இரண்டு பாறைக் கல்வெட்டுக்கள் (Rock Inscriptions) 29 பாகங்களைக் கொண்ட ஒரு கொடையில் ஒரு பாகம் **வைத்திய பாகமாக** அளிக்கப்பட்ட விபரத்தைத் தெரிவிக்கின்றன.

> **"................... பாகம் இருபத்தி நா**
> **லும் சிவ பாகம் இரண்டும் விஷ்ணுபாகம் இரண்டும்**
> **வைத்திய பாகம் ஒன்றும்கூட பாகம் யிருபத்தொன்பது"**[63]

என ஒரு கல்வெட்டிலும்,

> **"மனை யிருபத்துநாலு சிவபிரதிஷ்டைக்**
> **கும் விஷ்ணுப் பிரதிஷ்டைக்கு முள்ள தல**
> **த்துக்கு வைத்திய பாகம் ஒன்றுக்கு மனை ஒன்றும்"**[64]

என மற்றொரு கல்வெட்டிலும் காணப்பட்டுள்ளது.

### வைத்தியக் காணி

செங்கற்பட்டு மாவட்டம் குன்னத்தூரிலுள்ள சிவன் கோயிலில் காணப்பட்ட ராஜராஜதேவனின் 10ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டில்[65] **வைத்தியக் காணி** என்ற பெயரில் **சவர்ண காசியப்பன் குலோத்துங்க சோழன் மங்களாதிராஜன் சீராள தேவன்** என்ற மருத்துவனுக்கு நிலம் கொடையாக வழங்கப்பட்ட விபரம் காணப்படுகிறது.

### வைத்திய விருத்தி

புதுக்கோட்டை மாவட்டம் ஆலங்குடித் தாலுக்காவைச் சேர்ந்த திருவரங்குளதிலுள்ள ஹரதீர்த்தேஸ்வரர் கோயில் கல்வெட்டில் பாண்டிய மன்னர் குலசேகர தேவரின் 24ஆம்

ஆட்சியாண்டின் போது நிம்பவன வைத்தியாச்சாரியார் என்னும் மருத்துவனுக்கு **வைத்திய விருத்தி நிலம்** வரி நீக்கம் பெற்ற இறையிலிக் கொடையாக வழங்கப்பட்டுள்ள விபரம் பின்வருமாறு குறிப்பிடப்பட்டுள்ளது.

5 "**நிம்பவன வைத்தியர் தனிய (முது)கு வைத்திய விருத்தி நிலம் யிறையி**

6 **வி குடுத்த காணியாவது**

..........................................................

13 ................................ கல்லும் வெட்டிக் குடுத்தோம் முதலியார் நிம்பவன **வைத்திய சாரியார்க்கு**"[66]

பல பாகங்களைக் கொண்ட பொதுவான பாகங்களைக் கொண்ட பொதுவான கொடைகள் பற்றிக் குறிப்பிடும்போது அக்கொடைகளின் பங்காளிகளின் பெயர்களும், ஒவ்வொரு பங்கிற்கும் உரிய விகிதாச்சாரப் பங்குப் பிரிவும் பற்றி குறிப்பிடப் படுவதும் உண்டு. இத்தகைய கொடைப் பங்கினைப் பெறும் மருத்துவர் தன் பங்குக்குரிய நிலத்தில் சாகுபடி செய்து அதில் பெறும் வருமானத்தை மருத்துவச் சேவைக்காகப் பயன்படுத்த வேண்டும். இம்மாதிரிப் பங்கீட்டு முறையில் பாண்டியர் ஆட்சியிலும் **வைத்திய விருத்திக்** கொடைகள் வழங்கப் பட்டுள்ளன.

விருத்தாசலம் தாலுக்கா விருத்தகிரீஸ்வரர் ஆலயத்தில் உள்ள கல்வெட்டில் பாண்டி மண்டலம் ந(ட்) குறிச்சியின் தலைவனான திருமாலிருஞ்சோலை நின்றான் எனும் மழவராயனால் மன்னர் கோனேரின்மை கொண்டான் பெயரில் கி.பி. 13ஆம் நூற்றாண்டில் பகடங்குடி என்னும் கிராமத்திலுள்ள நிலம் வரி நீக்கம் பெற்ற 30 பங்குக் கொடையாக வழங்கப்பட்டது பற்றிய விபரம் தரப்பட்டுள்ளது. இப்பங்குகளுள் ஒரு பங்கு **வைத்திய விருத்தி**க்காக ஒதுக்கப்பட்டுள்ளது.[67] அதே மழவராயன் கி.பி. 1273இல் இருங்கோளப்பாடி நாடு பருவூர் கூற்றத்திலுள்ள நிலத்தினை 24 பங்குகள் கொண்ட மற்றொரு கொடையாக வழங்கியிருப்பதும், அவற்றுள் ஒரு பங்கு **வைத்திய விருத்தி**க்காக ஒதுக்கப்பட்டிருந்ததும் தெரியவருகிறது. இக்கொடை நிலமானது வரிநீக்கம் செய்யப்பட்டதுடன் நன்செய் மற்றும் புன்செய் பயிர் சாகுபடி செய்வதற்கும் அனுமதியளிக்கப் பட்டிருந்தது.

தஞ்சை மாவட்டம் நன்னிலம் தாலுக்காவில் அச்சுத மங்கலத்திலுள்ள சோமநாதசுவாமி ஆலயத்துக் கல்வெட்டில்[68] கி.பி.13ஆம் நூற்றாண்டில் சோழ மன்னன் கோனேரின்மை கொண்டான் ஆட்சிக் காலத்தில் அச்சுதமங்கலக் கிராமத்திற்குப் பொது உரிமையாக இருந்த நிலம் சோமநாத மங்கல மகா சபையினரால் **வைத்திய விருத்திக்குக்** கொடையாக அளிக்கப் பட்ட விபரம் குறிப்பிடப்பட்டுள்ளது.

**சல்லிய விருத்தி**

கன்னியாகுமரி மாவட்டம் அகஸ்தீஸ்வரத்தில் சிவன் கோயிலுக்கு அருகில் காணப்பட்ட பாறைக் கல்வெட்டில்[69] வேதங்களைப் பாராயணம் செய்வதற்கும், **சல்லிய விருத்திக்** காகவும் நிலம் கொடையாக வழங்கப்பட்டுள்ளது தெரிய வருகிறது.

**ஆதுலர் போகம்**

நோயாளிகளின் மருத்துவ சிகிச்சைக்கென வழங்கப்பட்ட கொடை அல்லது மானியம் **ஆதுலர் போகம்** என்று அழைக்கப்பட்டது.

கி.பி. 1016 - கி.பி. 1017 நாளிட்ட முதலாம் ராஜேந்திர சோழதேவனின் கல்வெட்டொன்று இத்தகைய கொடையினைப் பற்றித் தெரிவிக்கின்றது. இக்கொடை ராணி ஆழ்வார் ஸ்ரீ பராந்தகன் குந்தவைப் பிராட்டியாரால் அளிக்கப்பட்டுள்ளது. இக்கொடையில் குறிப்பிடப்பட்டுள்ள பல்வேறு வகையான நிலங்களும் வீட்டுமனைகளும் வெண்ணாடு திருநல்லம் ஊர்ச் சபையினரால் அவ்வூர் வாழ் மக்களிடமிருந்து விலைக்கு வாங்கப்பட்டு மருகை நாட்டுப் பூதனூரைச் சேர்ந்த வண்ணக் கண்ணுவன் அரையன் பாசுரன் அம்பலவன் மங்கலப் பேரரையன் என்ற மருத்துவனுக்குத் திருநல்லம் மக்களின் உடல்நல மருத்துவப் பராமரிப்புக்காக "ஆ(துலர்) - போகம்" என்ற பெயரில் வரி விலக்களிக்கப்பட்ட கொடையாக வழங்கப்பட்டுள்ளது.[70]

**சல்லிய போகம்**

மேலே கூறப்பட்டது போன்ற மற்றொரு கொடை பற்றிய விபரம் திருவிசலூர் சிவயோகநாதர் ஆலயத்தில் கண்டெடுக்கப் பட்ட முதலாம் ராஜராஜசோழனின் கி.பி. 1016 - கி.பி. 1017 நாளிட்ட கல்வெட்டின் மூலம் தெரியவருகிறது.[71] ராணி குந்தவைப்

பிராட்டியார் ஆர்க்காட்டுக் கூற்றம் ஸ்ரீ பராந்தக சதுர்வேதி மங்கலத்துச் சபையிடமிருந்து நிலம் விலைக்கு வாங்கி, அரையன் உத்தமச்சோழன் என்ற நாவிதனுக்குச் **சல்லிய போகமாக** வழங்கியதாக அக்கல்வெட்டுத் தெரியப்படுத்துகிறது.

## சல்லியக் கிரியா போகம்

அறுவை மருத்துவருக்கு (சல்லியனுக்கு) அறுவை மருத்துவத் தொழிலை விருத்தியடையச் செய்வதற்காக வழங்கப் படும் மானியம் **சல்லியக் கிரியா போகம்** என வழங்கப்பட்டது.

மேலே குறிப்பிடப்பட்ட சிவயோகநாதர் ஆலயத்தில் காணப்பட்ட மற்றொரு கல்வெட்டில்[72] இதேபோன்று மற்றொரு கொடை பற்றிய விபரம் காணப்பட்டுள்ளது.

முதலாம் ராஜராஜனின் தமக்கை குந்தவைப் பிராட்டியார் பழையாறு என்னுமிடத்தில் தங்கியிருந்த போது ராஜகேசரி சதுர்வேதி மங்கலத்திலுள்ள ஒரு வேலி 4 'மா' நிலத்தையும், வேம்பத்தூரிலுள்ள ஒரு வீட்டையும் அரையன் உத்தமச்சோழன் என்ற ராஜேந்திர சோழ - பிரயோகத்தரையன் ஆகிய அம்பட்டனுக்கு (நாவிதனுக்கு) **சல்லியக் கிரியா போகமாக** வழங்கியிருப்பது அக்கல்வெட்டின் மூலம் தெரியவருகிறது.

## விஷபோகம் – விஷஹார போகம்

நச்சுக்கடியினால் பாதிக்கப்பட்ட நோயாளிகளுக்குச் சிகிச்சையளிக்கும் விஷ வைத்தியர்களுக்கு **விஷபோகம்** மற்றும் **விஷஹார போகம்** என்ற பெயர்களில் கொடைகள் வழங்கப்பட்டிருப்பது கல்வெட்டுக்களின் மூலம் தெரியவருகிறது.

உத்திரமேரூர் வைகுந்தப் பெருமாள் கோயிலில் காணப்படும் கி.பி. 961ஆம் ஆண்டைச் சேர்ந்த மன்னர் பார்த்திவேந்திரவர்மனின் 5ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டில்[73] இது போன்றதொரு கொடை வழங்கப்பட்டுள்ள விபரம் காணப் படுகிறது. உத்திரமேரூர் கிராமச் சபையினால் நியமிக்கப்பட்ட ஒரு விஷவைத்தியருக்கு விஷவைத்தியத் தொழில் மேம்பாட்டிற்காக **விஷஹாரபோகம்** என்ற பெயரில் நிலம் வழங்கப்பட்டிருப்பதும் ஆனால் வம்சாவழியாக அந்நிலத்தை அந்த வைத்தியர் அனுபவிக்க முடியாதென்ற நிபந்தனை விதிக்கப்பட்டிருப்பதும் அக்கல்வெட்டில் காணப்பட்டுள்ளது. முதலாம் ராஜேந்திர சோழனின் கரந்தைச் செப்பேட்டுத் தொகுதியிலிருந்து[74] விஷ

முறிவுக்குப் பயன்படும் மூலிகைச் செடிகளைப் பயிரிடுவதற்காக **விஷபோகம்** என்ற பெயரில் மருத்துவர்களுக்கு நிலங்கள் கொடையாக வழங்கப்பட்டிருப்பதாக அறியமுடிகிறது. விஷத்தினால் பாதிக்கப்பட்ட மக்களைக் குணப்படுத்தும் மருத்துவர்களுக்கு இவ்வாறு கொடையாக வழங்கப்பட்ட நிலம் **விஷவிருத்தி நிலம்**[75] என்றழைக்கப்பட்டது.

## நாவிதர்களுக்கும் மருத்துவச்சிகளுக்கும் வழங்கப்பட்ட கொடைகள்

மருத்துவத் தொழிலை மேம்படுத்துவதற்காக இது போன்ற ஊக்கக் கொடைகள் மருத்துவர்களுக்கு மட்டுமின்றி, மருத்துவத் தொழில் சார்ந்த நாவிதன் (Barber), மருத்துவச்சி (Midwife) போன்றவர்களுக்கும் வழங்கப்பட்டுள்ளன. ஏற்கெனவே குறிப்பிட்டுள்ளபடி, நாவிதர்கள் சிறுசிறு அறுவை சிகிச்சை செய்வதிலும், அவர்களின் மனைவிமார்கள் மருத்துவச்சிகளாகப் பிரசவம் பார்ப்பதிலும் ஈடுபட்டிருந்தனர். எனவே, கொடைகளாகவும் மானியங்களாகவும் அவர்களுக்கு அளிக்கப்பட்ட ஊக்கம் அக்கால மன்னர்களின் பெருந்தன்மை மிக்க அறச் செயல்களாகக் கருதப்பட்டதோடு மருத்துவ வளர்ச்சிக்கு ஆதாரமாக விளங்கிவந்த மருத்துவத் தொழிலாளர்களின் வாழ்க்கை வசதிகளை மேம்படுத்துவதில் மன்னர்கள் காட்டிய அக்கறையையும் ஆர்வத்தையும் வெளிப்படுத்துவதாகவும் இருந்தது.

கி.பி. 1117ஆம் ஆண்டைச் சேர்ந்த கல்வெட்டில்[76] பராந்தகச் சோழனால் வழங்கப்பட்ட கொடையில் பல பிராமணர் களுடன் சோதிடர்கள், மருத்துவர்கள் மற்றும் கிராம மக்களுக்குச் சிறுசிறு அறுவை சிகிச்சைகள் செய்து வந்த நாவிதர்கள் உள்ளிட்ட கிராமநலப் பணியாளர்கள் ஆகியோர் இடம் பெற்றிருந்தனர் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும், அம்பலத்தடிபட்டர் என்னும் மருத்துவர் ஒருவருக்கும் கொடை வழங்கப்பட்டதாக அதில் குறிப்பிடப்பட்டுள்ளது.

பாண்டிய மன்னன் ஜடாவர்மன் சுந்தரபாண்டிய தேவன் (முதலாம் சுந்தரபாண்டியன்) தனது 7வது ஆட்சியாண்டுக் காலத்தில் (கி.பி. 1258 - கி.பி. 1259) பல்வேறு நிறுவனங்களும், அப்போது புதிதாக நிர்மாணிக்கப்பட்ட சுந்தரபாண்டிய சதுர்வேதி மங்கலம் என்ற ஊரைச் சேர்ந்த சமூகத்தினரும் பங்கிட்டுக் கொள்ளும் வகையில் நிலம் ஒன்றைக் கொடையாக

வழங்கியுள்ளார். கொடையில் பங்கு பெற்ற சமூகத்தினருள் பிராமணர்கள், வைத்தியர்கள், நாவிதர், மருத்துவச்சி ஆகியோர் இடம் பெற்றுள்ளனர். அவ்வாறு வழங்கப்பட்ட கொடைப் பங்குகளில், இரு மருத்துவர்கள் முறையே ஒரு பங்கு, முக்கால் பங்கு என்றும், ஒரு நாவிதர் 3/8 பங்கும் பெற்றுள்ளனர்.[77]

## சமயத் தொண்டாற்றிய மருத்துவருக்கு வழங்கப்பட்ட கொடைகள்

மருத்துவத் தொழிலில் ஈடுபட்டிருந்தோருக்கு வழங்கப்பட்ட மேலே குறிப்பிடப்பட்ட கொடைகள் தவிர, ஆலயங்களுடன் தொடர்பு கொண்டு சமயத் தொண்டாற்றிய மருத்துவர்களுக்கு மற்றுமொரு வகையான கொடை வழங்கப் பட்டுள்ளது.

10ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த ராஜராஜ தேவனின் குன்றத்தூர் கல்வெட்டில்[78] திருவளீஸ்வரம் உடையார் கோவிலில் விளக்கெரிப்பதற்காக சில பசுக்களைக் கொடையாக வழங்கிய மங்களாதி சீராளன் என்னும் மருத்துவனுக்கு மருத்துவக் காணி என்ற பெயரில் நிலம் கொடையாக வழங்கப்பட்டுள்ளது குறிப்பிடப்பட்டுள்ளது.

திருக்கோடிக்காவல் கோயிலின் நிர்வாகிகள் திரைமூர் நாடு திருவாவடுதுறைக் கோயிலில் தங்கியிருந்த 10 தபசிகளுக்கு உணவளிப்பதற்காக 1 வேலி நிலமும் அந்தத் தபசிகளுக்கு மருத்துவச் சேவை புரிவதற்காக சத்துரு மானியன் ஆளப்பிறந்தான் என்ற மருத்துவனுக்கு 1/2 வேலி நிலமும், கி.பி. 12ஆம் நூற்றாண்டில் சோழ மன்னன், பரகேசரிவர்மன் திருபுவனச் சக்கரவர்த்தி விக்கிரமசோழ தேவனின் முதலாம் ஆட்சியாண்டுக் காலத்தில் கொடையாக வழங்கப்பட்டுள்ளது.[79]

திருநெல்வேலி மாவட்டம் வாசுதேவநல்லூரிலுள்ள சிந்தாமணிநாதர் ஆலயத்தில் காணப்படும் கல்வெட்டில்,[80] பாண்டிய மன்னன் குலசேகர தேவன் தனது 7ஆம் ஆட்சியாண்டுக் காலத்தில் (கி.பி. 1487) வைத்திய சிகாமணி என்னும் கௌரவப் பட்டம் பெற்ற சவர்ணன் திருமறைக்காவுடையான் என்ற மருத்துவனுக்கு அக்கோயிலில் வீற்றிருக்கும் இறைவனுக்கு மருந்தெண்ணெய் படைப்பதற்காக காணியாட்சி என்ற பெயரில் வரிநீக்கம் பெற்ற நிலங்களைக் கொடையாக வழங்கியுள்ள தகவல் காணப்பட்டுள்ளது.

## 7. ஆலயப் பணியில் மருத்துவர்கள்

பொது நலன் கருதி மருத்துவர்கள் ஆலயங்களைக் கட்டுவித்த விபரங்களும் கல்வெட்டுக்களில் காணக்கிடக்கின்றன.

களக்குடி வைத்தியன் மூவேந்த மங்கலப் பேரரையன் எனும் மாறன்காரி என்ற மருத்துவன் ஒரு கற்கோயிலைக் (கற்றளி) கட்டு வித்து, அதற்கு குடமுழுக்குச் (Consecration) செய்யும் முன்னரே (நீர்த் தளியாது) இறந்து போனான் (சுவர்க்க ரோகனம் செய்தபின்) என்றும்,

> **"................................ களக்குடி வை**
> **த்தியன் மூவேந்த மங்கலப்**
> **பேரரையன் ஆகிய மாறன்**
> **காரி யிக்கற்றளி செய்து**
> **நீர் (த்த) ளியாது யெ சுவர்க்க ரோ**
> **கனம் செய்த பின்"[81]**

மாறன்காரியின் மறைவுக்குப் பின், அவனுடைய சகோதரன் பாண்டிய மங்கல விசை அரையன் எனும் மாறன்எயினன் கோயிலின் முகப்பில் ஒரு மண்டபம் அமைத்துக் கோயிலுக்குக் குடமுழுக்குச் செய்வித்தான் என்றும் ஆனைமலைப் பாறைக் கல்வெட்டுத் தெரிவிக்கின்றது (படம் 45).



படம் 45
ஆனைமலைக் கல்வெட்டு

"............................. பாண்டி
மங்கல விசை அரையன்
ஆகிய மாறன் னெயி
னன் முக மண்டபஞ் செ
ய்து நீர்த்தளித்தான்"[82]

கரவந்தபுரம் ஆதிவாசி வைத்திய குலத்தைச் சேர்ந்த பாண்டி அமிர்த மங்கலவரையன் என்றழைக்கப்பட்ட சாத்தன் கணபதி என்னும் மருத்துவன் ஒரு கோயிலையும் (திருந்துவிட்டது திருக்கோயிலும்) ஸ்ரீதடாகம் என்னும் ஒரு பெரிய ஏரியையும் நிர்மாணித்தான்.

"..................... கரவந்த புராதி
வாசி வைத்தியன் பாண்டி அமி
ர் தமங்கல வரையனா யி
ன சாத்தன் கணபதி தி
ருந்து விட்டது திருக் கோயி
லும் ஸ்ரீதடாகமும்"[83]

சாத்தன் கணபதியின் மனைவி (தர்மபத்தினி)யான "நக்கன் கொற்றி" துர்க்காதேவி மற்றும் ஜேஷ்டாதேவி ஆகிய பெண் தெய்வங்களுக்காக திருப்பரங்குன்றத்தில் இரண்டு கோயில்களைக் கட்டியுள்ளாள்.

"................. தர்மபத்தினி யாகிய ந
க்கன் கொற்றியார் செய
ப்பட்டது துர்க்காதேவி கோ
யிலும் ஜேஷ்ட கோயிலும்"[84]

சோழர் காலத்தில் இளவரசர் ராஜாதித்ய தேவருக்கு மருத்துவராக விளங்கியவர் சேனன். சோழ மன்னர் மாதிரை கொண்ட பரகேசரிவர்மனின் (முதலாம் பராந்தகன்) 29ஆவது ஆட்சியாண்டுக் காலத்தில் திருநாவலூர் திருவகத்தீஸ்வரத்து மகாதேவர் கோயிலில் ஒரு அணையாவிளக்கு ஏற்றிவைப்பதற்காக 100 செம்மறியாடுகளை இவர் கோயிலுக்குக் கொடையாக வழங்கியுள்ளார்.[85]

"ராஜாதித்ய தேவர்க்குப்
பன்மருந்திடு சேனன்"

## ஒரு தாதியின் சமயக் கொடை

சமயத் தொண்டின் பொருட்டு ஒரு தாதி கொடையளித்திருப்பது குறிப்பிடத்தக்கதொரு நிகழ்ச்சியாகும்.

விஜயநகர மன்னர் விருப்பண்ண உடையாரிடம் தாதியாகப் பணிபுரிந்து வந்த கண்ணாத்தாய் என்பவள் கி.பி. 1386இல் ஸ்ரீரங்கம் கோயிலில் சுவாமியின் முன் விளக்குகள் எரிப்பதற்காக கன்றுகளுடன் 15 பசுக்களைக் கொடையாக வழங்கியதோடு, தெய்வத்திற்குப் பாலும் நெய்யும் படைப்பதற்காக இதுபோன்று மற்றொரு கொடையும் வழங்கியுள்ளார்.[86]

மேற்கூறப்பட்ட விபரங்களிலிருந்து, சமயப் பணிகளுக்குத் தாராளமாகக் கொடைகள் வழங்கும் அளவிற்கு இடைக்கால மருத்துவப் பணியாளர்களின் பொருளாதார நிலை நன்கு வளர்ச்சியடைந்துள்ளதைக் காணலாம். இருப்பினும், தங்களுடைய மருத்துவச் சேவையின் வளர்ச்சிக்காக ஆட்சியாளர்களிடமிருந்து நன்கொடைகள் பெற்றுள்ளனர் என்றும் அறிந்து கொள்ள முடிகிறது.

அட்டவணை 3: பழந்தமிழ் நாட்டு மருத்துவர்கள்

| எண் | மருத்துவரின் பெயர் | ஆதரித்த அரசரின்பெயர் | நாள் | கல்வெட்டு மேற்கோள் |
|---|---|---|---|---|
| 1. | கரவந்தபுர வைத்தியன் சாத்தன் கணபதி என்னும் பாண்டி அமிர்த மங்கல வரையன் | பாண்டிய மன்னன் மாறன் சடையன் (வரகுணன் I) | கி.பி. 773-774 | ARE 371/1908 SII XIV, No.3, E.I. XXXVI, No. 15, pp. 114-120, I.A. XXII, 67, TAS (i) 286 |
| 2. | திருநாவலூர் வைத்தியன் சேனை கோயில் | மதுரை கோனேரின்மை கொண்டான் பரகேசரிவர்மன் (பராந்தகன் I) | கி.பி. 836 | ARE 325/1902 SII VII, No.954 |
| 3. | மாறன்காரி என்னும் களக்குடி வைத்தியன் மூவேந்த மங்கலப் பேரரையன் | பராந்தகச் சோழன் I | கி.பி. 840 | E.I. VIII\1905-1906 No. 33, pp. 317-320 |
| 4. | சவர்ணன் காசியப்பன் குலோத்துங்க சோழன் மங்கலாதிராசன் சீராள தேவன் | இராசராசதேவன் | கி.பி. 992 | ARE 184/1929-1930 |
| 5. | பஞ்சவன் மங்கலப் பேரரையன் அனையன் பவருத்திரன் | இராசராசதேவன் | கி.பி. 1014 | SII II, No. 66, p. 277, Line 498, p. 302 fn |

| எண் | மருத்துவரின் பெயர் | ஆதரித்த அரசரின்பெயர் | நாள் | கல்வெட்டு மேற்கோள் |
|---|---|---|---|---|
| 6. | சவர்ணன் அரையன் மதுராந்தகன் திருநாவலூர் வைத்தியன் | இராசேந்திரன் I | கி.பி. 1015 | ARE 248/1923 |
| 7. | வண்ணக் கண்ணுவன் அரையன் பாசுரன்; அம்பலவாணன் மங்கலப் பேரரையன் | இராசேந்திரன் I | கி.பி. 1016-17 | ARE 639/1909 |
| 8. | (அம்பட்டன்) அரையன் உத்தம சோழன் என்னும் பிரயோகதரையன் | இராசேந்திரன் I | கி.பி. 1016-17 | ARE 350/1907 |
| 9. | சவர்ணன் அரையன் சந்திரசேகரன் என்னும் உத்தமச் சோழ அசலன் | பரகேசரிவர்மன் என்னும் இராசேந்திர சோழதேவர் | கி.பி. 1056 | ARE 112/1925 |
| 10. | ஆலப்பாக்கத்து சவர்ணன் கோதண்டராமன் | இராசகேசரிவர்மன் என்னும் வீரஇராசேந்திர தேவர் | கி.பி. 1067 | EI. XXI, No. 38 |
| 11. | சத்துரு மான்யன் ஆளப்பிறந்தான் | விக்கிரம சோழதேவர் | கி.பி. 1118 | ARE 47/1930-31 |
| 12. | ஸ்ரீநிவாஸ கருடவாகன பட்டர் | - | கி.பி. 1257 | EI. XXIV/1937-1938 No. 12 |
| 13. | மட்டியூர் வைத்யாதிராஜன் என்னும் சங்கதியழகர் வண்ண உடையார் | ஜடாவர்மன் சுந்தரபாண்டியத் தேவர் | கி.பி. 13ஆம் நூ.ஆ. | ARE 125/1903 SII. VIII, No. 411 |

| எண் | மருத்துவரின் பெயர் | ஆதரித்த அரசரின்பெயர் | நாள் | கல்வெட்டு மேற்கோள் |
|---|---|---|---|---|
| 14. | நாங்கூர் சவர்ணன் பராசிரியன் ஆதித்ததேவன் திருவம்பலப் பெருமாள் | சுந்தரபாண்டியத் தேவர் | கி.பி. 13ஆம் நூ.ஆ. | ARE 13/1906 SII. XXII, pt. I, No. 13(a); TVM TOPO VI SM 61 of 428 |
| 15. | அங்கவைத்தியன் கூத்தபெருமாள் (அறுவை மருத்துவர்) | சுந்தரபாண்டியத் தேவர் | கி.பி. 13ஆம் நூ.ஆ. | ARE 429/1909 TVM TOPO II, SA 1597, p. 364 |
| 16. | அழகிய மணவாள வைத்தியன் | ஜடாவர்மன் பராக்ரம பாண்டிய தேவர் | கி.பி. 13ஆம் நூ.ஆ. | ARE 5/1924 |
| 17. | வைத்திய சிகாமணி | சோழமன்னன் கோனேரின்மை கொண்டான் | கி.பி. 13ஆம் நூ.ஆ. | ARE 98/1927-28 |
| 18. | நிம்பவன வைத்தியாச்சாரியன் | பாண்டியன் குலசேகரத்தேவர் | கி.பி. 13ஆம் நூ.ஆ. | ARE 280/1914 TVM TOPO II, SA 1665, p. 388, IPS No. 75 |
| 19. | தாதி கண்ணாத்தாய் | விஜயநகர மன்னர் விருப்பண்ண உடையார் | கி.பி. 1386 | ARE 341/1952-53 |
| 20. | குடநாடு சவர்ணன் குலசேகர நாராயணன் | பாண்டியன் குலசேகர தேவர் | கி.பி. 1477 | ARE 346/1949-50 |
| 21. | சவர்ணன் திருமறைக்காவுடையான் | பாண்டியன் குலசேகர தேவர் | கி.பி. 1487. | ARE 350/1949-50 |

அட்டவணை 4: மருத்துவ வளர்ச்சிக்காக வழங்கப்பட்ட நன்கொடைகள்

| வழங்கியவர் | நன்கொடை விபரம் | வழங்கப்பட்டவர் | ஆண்டு | மேற்கோள் |
|---|---|---|---|---|
| நந்திவர்ம பல்லவ மல்லன் | உதயசந்திர மங்கல ஊரின் 108 பங்குகளுள் ஒரு பங்கு | மருத்துவர் | கி.பி. 752 | SII, Vol. II, pt. III; 30; உதயேந்திரம் செப்பேடுகள் I, பக். 135-140 |
| பல்லவ மன்னன் நந்திவர்மன் | குமார மங்கல வெள்ளத் தூரிலுள்ள நிலத்தில் ஒரு பங்கு | மருத்துவர் | - | SII, Vol. II, pt. III; IV & V p. 362 |
| விஜயநந்தி விக்ரமவர்மன் | கொடைநிலத்தில் இரு பங்குகள் | மருத்துவர் | - | SII, Vol. II, pt. III;IV & VI, p. 517 |
| உத்தம சீலசதுர்வேதி மங்கல சபை | வைத்திய போகம் | மருத்துவர் | கி.பி. 820 | ARE 330/1952-53 |
| உத்திரமேரூர் சதுர்வேதி மங்கல சபை | விஷகார போகம் | மருத்துவருக்கு மட்டும் (பரம்பரை அனுபவம் இல்லை) | கி.பி. 961 | ARE 36/1878 SII, Vol. III, No. 177 |
| ஆழ்வார் ஸ்ரீ பராந்தகன் குந்தவைப் பிராட்டியார் | சல்லிய போகம் | சவர்ணன் அரையன் சந்திரசேகரன் என்னும் உத்தம சோழ அசலன் மற்றும் வாரிசுகள் | கி.பி. 1016 | ARE 112/1925 pt. II, No. 14, p. 82, ARE 351/1907 |

| வழங்கியவர் | நன்கொடை விபரம் | வழங்கப்பட்டவர் | ஆண்டு | மேற்கோள் |
|---|---|---|---|---|
| ஆழ்வார் ஸ்ரீ பராந்தகன் குந்தவைப் பிராட்டியார் | சல்லியக் கிரியை போகமாக நிலங்களும் வீடும் | இராசேந்திர சோழ பிர யோக தரையன் | கி.பி. 1019 | ARE 249/1923 |
| ஸ்ரீ குந்தவைப் பிராட்டியார் | வைத்திய போகம் | சவர்ணன் அரையன் மதுராந்தகன் மற்றும் அவன் சந்ததியினர் | கி.பி. 1019 | ARE 249/1923 |
| இராசேந்திர சோழ தேவர் | நிலம் | கிராம வைத்தியர் | கி.பி. 1030 | ARE 18/1922 |
| இராசேந்திர சோழ தேவர் | நிலம் | கிராம வைத்தியர் | கி.பி. 1070 | ARE 19/1992 |
| பராந்தக சோழர் | நிலத்தில் பங்குகள் | மருத்துவர், நாவிதர், அம்பலத்தடி பட்டர் | கி.பி. 1117 | Ramesan, N; Studies in Medieval Deccan History based on two new Unpublished copper-plate Inscriptions of the state Museum, Govt. of A.P. Press, Hyderabad, 1972, Verses 64-121,p. 119. |
| திருக்கோடிக்கா ஆலய அதிகாரிகள் | வைத்திய விருத்திக்காக 1/2 வேலி நிலம் | மருத்துவன் சத்துரு மானியன் ஆளப் பிறந்தான் | கி.பி. 1118 | ARE 47/1930-31 |

| வழங்கியவர் | நன்கொடை விபரம் | வழங்கப்பட்டவர் | ஆண்டு | மேற்கோள் |
|---|---|---|---|---|
| இராசேந்திரன் III | குன்றத்தூர் நாட்டில் வைத்தியக் காணி | குலோத்துங்க சோழ மங்களாதிராஜன் சீராள தேவன் | கி.பி. 1223 | ARE 184/1929-30 |
| தளபதி சிங்கண்ண தண்ட நாயகா | நிலம் | கருட வாகனபட்டர் | கி.பி. 1257 | EI. XXIV, No. 12, p. 90-91 |
| ஜடாவர்மன் சுந்தரபாண்டியன் | சமுதாய நன்கொடை | மருத்துவர், நாவிதன், மகப்பேறு மருத்துவச்சி | கி.பி. 1258-59 | ARE 306/1958-59, p. 18, TVM TOPO Vol. II, SA 137, p. 38, ARE 56/1932-33 |
| ஜடாவர்மன் சுந்தரபாண்டியன் | வானவன் மாதேவி கிராமம் வடகொங்குநாடு | ஆதித்த தேவன் திருவம் பலப் பெருமாள் என்னும் வைத்தியப்புரந்தரன் (அறுவை மருத்துவர்) | கி.பி. 1259 | ARE 13\1906 |
| ஜடாவர்மன் சுந்தரபாண்டியன் | நிலம் | வைத்யாதி ராஜா | கி.பி. 1265 | ARE 125/1903 |
| ஜடாவர்மன் சுந்தரபாண்டியன் | வைத்திய விருத்தி | - | கி.பி. 1251-1268 | ARE 56/1932-33 |
| பாண்டிய மண்டலத் தலைவன் மழவராயன் | நன்கொடை நிலத்தில் 30ல் 1 பங்கு வைத்திய விருத்திக் காக | மருத்துவர் | கி.பி. 1273 | ARE 132/1900 SII Vol. III, No. 145 |

| வழங்கியவர் | நன்கொடை விபரம் | வழங்கப்பட்டவர் | ஆண்டு | மேற்கோள் |
|---|---|---|---|---|
| சோமநாத மங்கலம் ஊர்ச் சபை உறுப்பினர்கள் | வைத்திய விருத்தி | - | 12/13ஆம் நூ.ஆ. | TNSDA No. 272/1978 |
| சோழ மன்னன் கோனே ரின்மை கொண்டான் | நிலம் | வைத்திய சிகாமணி | 12/13ஆம் நூ.ஆ. | ARE 98/1927-28 |
| திருபுவனச் சக்கரவர்த்தி கோனேரின்மை கொண்டான் | வைத்திய போகம் | மருத்துவன் | 13ஆம் நூ.ஆ. | ARE 307/1902; SII, Vol. III, No. 936 |
| விக்ரம பாண்டியதேவர் | நிலப் பங்கு | கிராம வைத்தியர் | கி.பி.13ஆம் நூற். | ARE 46/1922; TVM Vol. II, pt (iii) SA 2103, pp. 106-107 |
| பெயர் குறிப்பிடப்படவில்லை | வைத்திய பாகம் மற்றும் சல்லிய விருத்தி | - | கி.பி. 1438 | கன்னியாகுமரி கல்வெட்டு TNSDA No. 22, 23 of 1968 |
| குலசேகர தேவ பாண்டியன் | வைத்திய விருத்தி | நிம்பவன வைச்சியாச் சாரியன் | கி.பி. 1477 | ARE 346/1949-50 |
| குலசேகரதேவ பாண்டியன் | இறையிலி நிலம் | குடநாடு சவர்ணன் குலசேகர நாராயணன் | கி.பி. 1477 | ARE 346/1949-50 |
| ஜடாவர்மன் சுந்தரபாண்டியத்தேவர் | நிலம் | வைத்திய ராஜா | - | ARE 125/1903 |
| கோனேரின்மை கொண்டான் சுந்தரபாண்டியத் தேவர் | நிலம் | வைத்தியப்புரந்தரன் | - | ARE 13/1906 |

# பிரிவு 10

## மருத்துவத் தெய்வங்கள்

தனது துன்பமும் துயரமும் நீங்க வேண்டுமெனத் தெய்வங்களை வேண்டுவதும், அவ்வாறு துயர்துடைக்கும் தெய்வங்களுக்கெனக் கோயில்கள் கட்டி வழிபாடுகள் செய்வதும் உலகெங்கிலும் மக்கள் கடைப்பிடித்தொழுகும் வழக்கமாக இருந்து வருகிறது. இந்நூலில் முன்னர் குறிப்பிட்டுள்ளதுபோல், கிரேக்கர்கள் **அஸ்கெலபியஸையும்** (Askelepios), எகிப்தியர்கள் **இம்ஹோதெப்பையும்** (Imhotep) மருத்துவத் தெய்வங்களாக வழிபட்டு அவர்களுக்கென கோயில்களும் கட்டியுள்ளனர். இது போல், தென்னிந்தியாவிலும் நோய்த்தீர்க்கும் சக்தி படைத்த தெய்வங்களாகப் பல தெய்வங்களும், அந்த நம்பிக்கையில் அத் தெய்வங்களுக்காக அமைக்கப்பட்ட கோயில்களும் ஏராளமாக உள்ளன.

ஆயுர்வேத மருத்துவ ஞானம் பிரம்மாவிடமிருந்து அசுவினி (Aswini) குமாரர்களின் மூலம் தன்வந்த்ரிக்குப் (Dhanwantri) போதிக்கப்பட்டதென்ற விபரம் இந்நூலில் ஏற்கெனவே குறிப்பிடப்பட்டுள்ளது. மருத்துவத்தின் இந்த மூலாதாரப் புராணக் கருத்துத் தென்னக மக்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளதென்னும் விபரம் பிரம்மா, அசுவினி குமாரர்கள், தன்வந்த்ரி ஆகியோரின் இறையுருக்கள் தென்னகக் கோயில்களில் காணப்படும் சிற்பச் சான்றுகளின் மூலம் தெளிவாகிறது.

### 1. பிரம்மா

கர்நாடகத்தில் ஐஹோலி (Aiholi) என்னுமிடத்திலுள்ள 7ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த சிற்பத்தில் மருத்துவரின் அடையாளச் சின்னமாக விளங்குகின்ற **அமிர்த கலசத்தைத்** தனது இடது கையில் ஏந்தியவாறு **பிரம்மா** வீற்றிருப்பதாக வெளிப்படுத்தப்பட்டுள்ளது (படம் 46அ).

புஞ்சைக் கோயிலில் (Punjai Temple) உள்ள பத்தாம் நூற்றாண்டைச் சேர்ந்த தேவகோஷ்டச் சிற்பமொன்றில் பிரம்மா தனது பின்னிடதுகையில் அமிர்த கலசத்தையேந்தியுள்ள நிலையில் சித்தரிக்கப்பட்டுள்ளது (படம் 46ஆ)



படம் 46அ பிரம்மா (ஐஹோலி–கர்நாடகா) (கி.பி. 7ஆம் நூ.ஆ.)



படம் 46ஆ
பிரம்மா (புஞ்சை)
(கி.பி. 10ஆம் நூ.ஆ.)

## 2. அசுவினித் தேவர்கள்

இந்துசமயப் புராணங்களில் அசுவினிக்குமாரர்கள் வியத்தகு நோய்தீர்க்கும் சக்தி படைத்த தேவ மருத்துவர்களாகச் சித்தரிக்கப்பட்டுள்ளனர். ஒரு முனிவருக்குப் புத்துயிர் அளித்தது, உயிரோடு புதைக்கப்பட்ட ஒரு முதியவரை உயிர் பிழைக்க வைத்தது, தேவமாது ஒருவருக்குச் செயற்கைக் கால் கொடுத்தது, மற்றும் பார்வையற்ற ஒருவனின் பார்வையை மீட்டுத் தந்தது ஆகியவை அசுவினி குமாரர்களின் மருத்துவ ஆற்றலை வெளிப்படுத்துகின்ற ஒருசில எடுத்துக்காட்டுகளாகும்.[1] தமிழ்நாட்டு மக்கள் சில தமிழகக் கோயிற்களில் இம்மருத்துவ இரட்டையர்களின் சிற்பங்களை வைத்திருப்பதன்மூலம் அவர்களுக்குத் தெய்வீக நிலையினை அளித்துள்ளனர். தமிழ்நாட்டிலுள்ள திருக்கடையூர் கோவிலில் உள்ள தெற்கு மாடத்தில் இந்த அசுவினித் தேவர்களின் சிற்பங்கள் காணப்படுகின்றன. (படம் 47அ)



படம் 47அ
அசுவினித் தேவர்கள்
(திருக்கடையூர்)



படம் 47ஆ
அசுவினித் தேவர்கள் (சிதம்பரம்)

சிதம்பரம் நடராசர் ஆலயத்தில் இந்த இரட்டை மருத்துவத் தேவர்களின் சிற்பங்கள் காணப்படுகின்றன. (படம் 47ஆ)

கும்பகோணத்திற்கு அருகிலுள்ள நாச்சியார் கோயில் ஆலயத்தில் மூலஸ்தானத்தின் வடபுற அடித்தளத்தில் காணப் படும் சிற்பத்தில் இரண்டு பெண் உதவியாளர்களுடன் ஒரு கர்ப்பிணிப்

பெண்ணிற்கு அசுவினித் தேவர்கள் பிரசவம் பார்ப்பது போன்ற காட்சி சித்தரிக்கப்பட்டுள்ளது (படம் 47இ).



படம் 47இ
அசுவினித் தேவர்கள் (நாச்சியார் கோவில்)

### 3. ஆத்ரேயப் புனர்வசு

அக்னிவேச முனிவரிடமிருந்து (Sage Agnivesa) மருத்துவ ஞானத்தைப் பெற்று அக்னிவேச தந்திரம் (Agnivesa Tantra) என்னும் மருத்துவ நூலினை ஆக்கியருளிய ஆத்ரேயப் புனர்வசுவிற்கும் தமிழ்நாட்டில் தெய்வீக அந்தஸ்து அளிக்கப்பட்டுள்ளது. லால்குடியிலுள்ள சிவன் கோயிலில் இவரது சிற்பம் வைக்கப்பட்டுள்ளதே இதற்குச் சான்றாக விளங்குகிறது.

### 4. தன்வந்த்ரி

தேவலோகத்தில் தேவர்களுக்கு மருத்துவராக விளங்கியவர் தன்வந்த்ரி. இவர் திவோதசா (Divodasa) என்ற பெயரில் காசி மன்னராக இவ்வுலகில் அவதரித்து சுசுருதா (Susuruta)வுக்கு அறுவை மருத்துவத்தைப் புகட்டினார். விஷ்ணுபுராணத்தின்படி, தேவர்களும், அசுரர்களும் அமிர்தம் வேண்டிப் பாற்கடலைக் கடைந்தபோது அமிர்தக் கலசத்தைக் கையிலேந்திய வண்ணம் மருத்துவ மூலிகைகளுடன் பாற்கடலிலிருந்து தன்வந்த்ரி எழுந்தருளினார். ஸ்ரீரங்கம் ரங்கநாதர் ஆலயத்தில் தன்வந்த்ரிக்கென தனிக்கோயில் அமைக்கப்பட்டு (அத் 4, பிரிவு 7ஐப் பார்க்கவும்) இன்றும்



படம் 48அ
தன்வந்த்ரி (ஸ்ரீரங்கம்)

வழிபாடுகள் நடைபெற்று வருகின்றன (படம் 48அ).

தென்னிந்தியாவில் பல விஷ்ணு ஆலயங்களில் தன்வந்த்ரிக்கு துணை-மூலவர் அந்தஸ்து வழங்கப் பட்டுள்ளது. **சிதம்பரம் நடராசர் ஆலயத்தின்** மேற்குக் கோபுரத்தில் நிற்கும் நிலையில் தன்வந்த்ரியின் தேவ கோஷ்டச் சிற்பம் காணப்படுகிறது (படம் 48ஆ).



படம் 48ஆ
தன்வந்த்ரி (சிதம்பரம்)



படம் 49அ
தன்வந்த்ரி (திருவான்மியூர்)
(மருந்தீஸ்வரர் ஆலயம்)

சென்னை திருவான் மியூரிலுள்ள **மருந்தீஸ்வரர் ஆலயத்தில்** அமிர்த கலசத்தை முன்னிரு கைகளில் ஏந்திக் கொண்டு நிற்கும் நிலையில் தன்வந்த்ரியின் இறையுரு உலோகச் சிலை காணப் படுகிறது (படம் 49அ).



படம் 49ஆ தன்வந்த்ரி (சிவகங்கை)

சிவகங்கைக் கோயிலிலுள்ள தன்வந்த்ரியின் சிற்பம் பின்னிரு கைகளில் அமிர்தகலசத்தையும் சக்கரத்தையும் கொண்டிருப் பதாகச் சித்தரிக்கப்பட்டுள்ளது (படம் 49ஆ).

ஆந்திர மாநிலம் அனந்தபூர் மாவட்டத்திலுள்ள லேபாக்ஷி கோயிலில் (Lapakshi Temple) தன்வந்த்ரியின் சிற்பம் விஜயநகரச் சிற்பப் பாணியில் செதுக்கப்பட்டுள்ளது (படம் 49இ).



படம் 49இ
தன்வந்த்ரி(லேபாக்ஷி-
ஆந்திரா)


படம் 50அ
தன்வந்த்ரி (நுக்கிஹல்லி - கர்நாடகம்)

மைசூர் மாவட்டத்திலுள்ள சோமநாதபுர ஆலயத்தில் தன் வந்த்ரியின் ஹோய்சலாச் சிற்பம் இரு கைகளிலும் அமிர்த கலசத்தையேந்திய நிலையில் சித்தரிக்கப்பட்டுள்ளது. கர்நாடக மாநிலம் ஹஸ்ஸன் மாவட்டத் திலுள்ள (Hassan District) சென்ன ராய பட்டணத் தாலுகாவில் நுக்கிஹல்லி (Nuggihalli) என்னும் இடத்திலுள்ள ஸ்ரீலக்ஷ்மி நரசிம்மர் கோவிலில் தன்வந்த்ரியின் சிற்பம் சிதைந்த முகத்துடன் இருகை களிலும் அமிர்தகலச மேந்திய நிலையில் காணப்படுகிறது (படம் 50அ).

கர்நாடக மாநிலம் மாண்டியா மாவட்டத்தில் கிருஷ்ணராஜ பேட்டையைச் சேர்ந்த ஹொஸ ஹொலலு (Hosaholalu) எனுமிடத்திலுள்ள ஸ்ரீலக்ஷ்மி நாராயணர் கோயிலிலுள்ள தன்வந்த்ரியின் சிற்பமும் இதே போன்ற பாணியி லேயே அமைக்கப்பட்டுள்ளது (படம் 50ஆ).

இது போன்று, மைசூர் மாநிலத்தில் ஹலெபேடு (Halebed) என்ற இடத்திலுள்ள ஹொய்ஸல ஆலயத்திலும் (Hoysala Temple) தன்வந்த்ரியின் சிற்பம் அமிர்தகலசத்தை இரு கைகளிலும் ஏந்திய நிலையில் காணப்படுகிறது (படம் 50இ)


படம் 50ஆ
தன்வந்த்ரி
(ஹொஸஹொலலு—கர்நாடகம்)


படம் 50இ
தன்வந்த்ரி (ஹலெபேடு –கர்நாடகம்)

கேரள மாநிலத்தில் ஆலப்புழை மாவட்டத்தில் பிரயிக்கரை (Prayikara), சேர்தலை அருகிலுள்ள மருதோர் வட்டம் (Maruthorvattam), கோட்டயத்திலுள்ள ஒலாஸ்ஸா (Olassa) ஆகிய இடங்களிலுள்ள கோயில்களிலும் தன்வந்த்ரி முதன்மைத் தெய்வமாக வீற்றிருப்பதைக் காணலாம்.[2] திருச்சூரில் ஷோரனூர் அருகேயுள்ள நெல்லுவாயா (Nelluvaya) என்னு மிடத்தில் தன்வந்த்ரிக் கென்றே தனி ஆலயம் நிறுவப்பட்டு வழி பாடுகள் நடை பெற்றுவருகின்றன (படம் 51அ, 51ஆ, 51இ, 51ஈ).



படம் 51அ
தன்வந்த்ரி ஆலயம் (நெல்லுவாயா – கேரளா) (நுழைவாயில்)



படம் 51ஆ
தன்வந்த்ரி ஆலயம் (நெல்லுவாயா–கேரளா) (வெளித் தோற்றம்)



படம் 51இ
தன்வந்த்ரி ஆலயம் (நெல்லுவாயா - கேரளா)
(உள்தோற்றம்)



படம் 51ஈ
தன்வந்த்ரி சன்னதி

இக்கோயில் புதுப்பிக்கப்பட்டு சுமார் நூறு ஆண்டுகளே ஆகின்றன என்றாலும், இக்கோயில் பூசாரியின் கூற்றுப்படி, சுமார் 300 ஆண்டுகளுக்கு மேலாகத் தன்வந்த்ரி மூலவிக்கிரஹத்திற்கு வழிபாடு நடைபெற்று வருகிறது[3] (படம் 51உ).



படம் 51உ தன்வந்த்ரி மூலவிக்கிரஹம் (நெல்லுவாயா)

## 5. அகத்தியர்

மாபெரும் தமிழ் முனிவரும் மருத்துவருமாகிய அகத்தியரின் உறைவிடம் **பொதிகை மலையாகும்** (படம் 52அ).



படம் 52அ பொதிகைமலை அகத்தியர் கோயில்

இந்த மலையில் அமைந்துள்ள **அகத்தியர் கோயிலில்** அகத்தியரின் உருவச்சிலை மூல விக்கிரகமாக அமைந்துள்ளது. மூலஸ்தானத்தின் முகப்பின் இடது மற்றும் வலதுபுற இரு மருங்கிலும் வெண்கலம் மற்றும் மரத்தினாலான அகத்தியரின் உருவச் சிற்பங்கள் வைக்கப்பட்டுள்ளன (படம் 52ஆ).



படம் 52ஆ அகத்தியர் (பொதிகை மலை)

திருவாவடுதுறை மாசிலாமணி கோயில், புஞ்சை நல்துணை ஈஸ்வரன் கோயில், கோனேரிராஜபுரம் உமா மகேஸ்வரர் கோயில், கருந்தட்டான் குடி விசிஷ்டேஸ்வரர் கோயில், அனங்கூர் அகத்தீஸ்வரர் கோயில், திருவேள்விக் குடி மணவாளேஸ்வரர் கோயில், திருப்புகளூரிலுள்ள முற்காலச் சோழர் காலத்திய ஸ்ரீஅக்னீஸ்வரர் கோயில் மற்றும் திருசட்டி முட்டத்திலுள்ள பிற்காலச் சோழர் காலத்திய கோயில் ஆகியவற்றில் அகத்தியரின் திருவுருவைத் தேவகோஷ்டச் சிற்பங் களாக வடித்து வழிபட்டிருப்பதன் மூலம் அகத்தியருக்குத் தெய்வீக அந்தஸ்து வழங்கியுள்ளனர் தமிழர்கள் என்பது புலப்படும்.[4]

தஞ்சாவூர் மாவட்டம் சீர்காழித் தாலுகாவில் திருப்பங்கூர் சிவாலயத்தில் அகத்தியரின் சிற்பம் இடது கையில் கமண்டலமும் வலது கையில் உத்திராட்ச மாலையும் கொண்டு நின்ற நிலையிலிருப்பது போன்று வடிவமைக்கப்பட்டுள்ளது.

## 6. பிற சித்தர்கள்

தமிழ்நாட்டில் சில கோயில்களில் போகர், திருமூலர் போன்று மற்றும் சில சித்தர்களுக்கும் தெய்வீக அந்தஸ்து தரப் பட்டுள்ளது. சிதம்பரம் நடராசர் ஆலயத்தில் பின் வேதகாலத்தைச் சேர்ந்த சித்தமருத்துவர் பதஞ்சலி (Patanjali)யின் (படம் 53) வெண்கல உருவச் சிலை காணப் படுகிறது. தமிழ்நாட்டி லுள்ள சிவாலயங்களில் 63 நாயன்மார்களுக்கும் தெய்வீக அந்தஸ்துடன் சிலைகள் வைக்கப்பட் டுள்ளன. இவர்களுள் மன்னர் மகேந்திரவர்மனின் நோயினைத் தன் தெய்வீக



படம் 53
பதஞ்சலி (சிதம்பரம்)

சக்தியினால் குணமாக்கிய **அப்பர்** என்றழைக்கப்படுகின்ற திருநாவுக்கரசர் (படம் 54அ) மற்றும் பாண்டிய மன்னரின் கூன் முதுகினைத் தனது தெய்வீக சக்தியினால் நேராக நிமிர்த்திய **திருஞான சம்பந்தர்** ஆகியோருக்குச் சிவபக்தர்களால் சிறப்பு வழிபாடுகள் செய்யப்படுகின்றன (படம் 54ஆ)



படம் 54அ
அப்பர்



படம் 54ஆ
திருஞானசம்பந்தர்

## 14. மருத்துவக் கடவுளாகச் சிவபெருமான்

சித்தமருத்துவத்தை உலகினுக்குத் தந்தருளியவர் என்று புராண வரலாற்றின் மூலம் நம்பப்படுகின்ற சிவபெருமான் **சித்தன்** என்றும் அழைக்கப்படுகின்றார். ருத்திரன் என்றழைக்கப்படும் சிவபெருமானை **"மருத்துவப் பொருட்களைக் கையிலேந்தி நிற்கும் தலைசிறந்த மருத்துவன்"** என்று ரிக் வேதம் உருவகப் படுத்தியுள்ளது.[5] சிவபெருமான் **வைத்தீஸ்வரன், மருந்தீஸ்வரன், ஜுரேஸ்வரன், ஜுரஹர்** என்று மருத்துவர் என்ற பொருளில் அழைக்கப்படுவது யாவரும் அறிந்ததே. சிவ பெருமானின் பெருமைகள் பற்றிய விளக்கங்கள் தென்னகத்தில், குறிப்பாகத் தமிழகத்தில், ஏராளமாகக் காணக்கிடக்கின்றன. திருமழ

பாடியிலுள்ள **"வைத்தியநாதீஸ்வர முடையார்"** தற்போது **ஜுரேஸ்வரே** என்றழைக்கப்படுகின்றார். ஜுரேஸ்வரரின் சில சிற்பங்கள் மூன்று தலை, மூன்று கால்களுடன் கையில் சூலாயுதம் ஏந்தி போர்முனையில் சமர்புரியும் போர்வீரன் போன்ற நிலையில் வடிக்கப்பட்டுள்ளதைத் தமிழ்நாட்டில் காணலாம். மிதமிஞ்சிய வெப்பத்தின் காரணமாகத் தலைவலி மற்றும் காய்ச்சலினால் அவதிப்படுவோர், திருமழபாடியிலுள்ள ஜுரேஸ்வரரின் சிற்பத்தின் உடம்பில் மிளகினை (Pepper) குழம்பாக அரைத்துப் பூசிக் கொள்வது வழக்கமாவுள்ளது.[6]

சென்னை திருவான்மியூரிலுள்ள **மருந்தீஸ்வரர்** கோயில் அமைந்துள்ள இடத்தில் தான் **அகத்திய முனிவர் சிவபெருமானிடமிருந்து மூலிகை மருத்துவ அறிவினைப் பெற்றார்** என்றும் அன்று முதல் அக்கோயிலில் வீற்றிருக்கும் சிவபெருமான் **"மருத்துவக் கடவுள்"** என்னும் பொருள்படும்படி **"மருந்தீஸ்வரர்"** என்றழைக்கப்படுகின்றார் என்றும் மரபுவழிக் கதைகள் கூறுகின்றன (படம் 55அ), (படம் 55ஆ) அருட்செல்வர் ஞானசம்பந்தர் சிவபெருமானை **"மருத்துவச் சிகிச்சைக் கடவுள்"** என்ற பொருளில் **"வைத்தீஸ்வரன்"** என்றழைக்கின்றார். சீர்காழி அருகிலுள்ள **''வைத்தீஸ்வரன் கோயில்''** நோய்தீர்க்கும் அற்புதசக்தி வாய்ந்ததெனப் புகழ்பெற்றுத் திகழ்கின்றது.



படம் 55அ
மருந்தீஸ்வரர் ஆலயம் (திருவான்மியூர்) (வெளித்தோற்றம்)



படம் 55ஆ மருந்தீஸ்வரர் ஆலயம் (திருவான்மியூர்) (தெற்குப் பார்வை)



படம் 56 வைத்தீஸ்வரன் கோயில்

(படம் 56) இக்கோயிலின் உட்பிரகாரத்தில் தன்வந்த்ரியின் கற்சிலை வழிபாட்டில் உள்ளது. அங்குள்ள கோயில் குளம் நீர்வாழ் உயிரினங்களான மீன், தவளை, ஆமை, பாம்பு முதலியன எதுவுமின்றிச் சுத்தமாக இருக்கின்றது. அக்குளத்திலுள்ள நீரானது அதில் மூழ்கி எழுபவரின் தோல் நோய்கள் அனைத்தையும் நீக்கவல்ல அற்புத சக்தி படைத்தது என்று நம்பப்படுகிறது. அக்குளத்தின் அடியில் படிந்திருக்கும் சேற்றுமண் எல்லா நோய்களையும் குணப்படுத்தும் ஆற்றல் மிக்கதென நம்பப்படுவதோடு அந்த மண் கலந்த சிறிய மருந்து உருண்டைகள் அக்கோயிலில் பக்தர்களுக்கு விற்கப்படுகின்றன. அக்குளத்தின் நீரும், சேற்று மண்ணும் பல நோய்களைக் குணமாக்கக்கூடிய அற்புத மருத்துவக் குணம் படைத்தவையாயிருக்கலாம்; அந்த மருத்துவக் குணம் அக்கோயில் மூலவராகிய சிவபெருமானின் சக்தியாக ஏற்றிச் சொல்லப்படுகின்ற தெனக் கொள்ளலாம். மருத்துவர்களால் கைவிடப்பட்டு உதவியற்றுத் துயருறும் நோயாளிகளுக்கு அக்கோயிலின் மூலவராகிய சிவபெருமானே இறுதியில் பாதுகாப்பளித்து நோய்தீர்க்கும் மூலாதாரமாக விளங்குகிறார்.

# அடிக்குறிப்புகள்.....

## பிரிவு – 1

## தமிழ் மருத்துவம்

1. Simon Casie Chitty : "The Tamil Plutarch", Rev. Edn., General Publishers Ltd., Colombo 1946 (RP) **B.I.H.M.** Vol. IX, 1979, p. 41.
2. C. Dwarakanath: **"The Development of Indian Medicine, Sarangadhara's Contribution"**, p. 72 fn.
3. Shyam Manohar Misra, "Sage Agastya - A Critical Study", **QJMS**, Vol. LXX, Nos. 1-2, pp. 77-82.
4. **Kanniyakumari District Gazatteer**, Ch. 15, p. 829.
5. *சிலப்பதிகாரம் மூலமும் அடியார்க்கு நல்லார் உரையும், ப. 229.*
6. Subramaniyam Malayandi: "Epigraphical and Rock-shelter Painting. Evidences for the Siddha Medical Studies during the pre-historic and Proto-Historic periods", **Heritage of the Tamil Siddha Medicine,** Eds. S.V.Subramanian & V.R. Madhavan, p. 27.
7. D.V.S. Reddy, "Glimpses of the Art of Medicine and Medical Aid in Ancient South India" (RP) from the Miscellany Vol. XIX, No.2, August, 1952, **B.I.H.M.**, Vol. III.
8. Subramaniyam Malayandi, **Op.cit,** p. 26.
9. Dr. Lalitha Kameswaran, Comparative Systems in Medicine with special reference to the "Tamil Siddha System", **P.S.I.C.S.T.S**, Vol. 10, 1971.
10. P.T. Srinivasa Iyengar : **History of Tamil from the Earliest to 600 A.D.**, p. iv.
11. **Ibid.,**
12. A. Shanmugavelan: **Siddhar's Science, Longevity and Kalpa Medicine in India.**
13. .................. "Siddhars, Their Attainments and their Role in Medicine", **B.I.H.M.** Vol. III, No.2, April 1973, (RP) pp. 71-73.
14. **Ibid.,** p. 71 fn.
15. A. Shanmugavelan: "Ancient Medical Treatises of Siddha System of Medicine and their significance to History of Medicine", **J.T.M.S.S.M.L.** 1983, p. 40.
16. C. Dwarakanath, **Op.cit.**, p. 171 fn.

17. C.K. Sampath: "Evolution and Development of Siddha Medicine", **Heritage of the Tamils-Siddha Medicine,** pp. 17-18.
18. A. Shanmugavelan: "Ancient Medical Treatises ............" **Op.cit.,** pp. 45-46.
19. **Ibid.,**
20. S.N. Sen, & B.V. Subbarayappa (Eds.) **"A Concise Hisotry of Science in India",** p. 309.
21. Ibid, p. 335.
22. P. Gurusironmani: "A Short note on the History of Siddha Medicine" (RP) From the B.I.H.M. Vol. II, No. 2, April 1972, p. 78.
23. **Ibid.,**
24. **B.I.H.M.,** Vol. III, No.2, April 1973 (RP) p. 73; R. Niranjana Devi : "Attitude and Awareness of the Home Remedial Medical Knowledge among Hindu & Muslim college Girls" - A Project Report, IGNOU, 1995, p. 39.
25. P. Gurusironmani, **Op.cit.,** p. 80.

## பிரிவு - 2
## சத்துணவும் உடல்நலப் பராமரிப்பும்

1. *குறள், 941.*
2. Peg Jorden, "Foods that harm, foods that heal", **THE HINDU,** dt. 2.8.1998, Sunday Magazine, p. vii.
3. **Ibid.,**
4. V.M. Bhave, N.S. Deodhar & S.V. Bhave: **"You and Your Health",** National Book Trust, India, 5th (RP) 1993, p. 36.
5. "Maimonaid's on the Preservation of Health", **JRAS,** Vol. 4, pt. 2., July 1994, p. 217.
6. *குறள், 942.*
7. *குறள், 227.*

7அ. *மணி, 17:15.*

7ஆ. *மணி, 28:217.*

8. *குறள், 947.*
9. *குறள், 945.*

## பிரிவு – 3

## நோய்கள்

1. தொல். உரிப்பொருள் 341.
2. கே. வெங்கடேசன் : தமிழ் இலக்கியத்தில் சித்த மருத்துவம், ப. 66.
3. E.I. Vol. XXI, No. 38, p. 239.
4. Mallal Inscription, Line ; 6, Collected papers of R. Tirumalai, p. 105.
5. மதுரை. 20:2.
6. விவேக. 86.
7. குமரேச சதகம், பாடல் : 30.

   "கல்லினால், மயிரினால், மீதூண் விரும்பலால்
   கருதியளிச் சரத்தினால்
   கடுவலி நடக்கையால், மாடசால அடக்கையான்
   காணி, பழங்கறி உண்ணலால்
   நெல்லினால் உமியினால் உண்டலால் மூழ்கலால்
   நித்திரைகள் இல்லாமையால்
   நிர்ப்பகையினால், பனிக்காற்றில் உடல்நோதலால்
   நீடுசருகு இலை ஊரலால்
   மெல்லிநல்லார் கலவி அதிகம் உள் விரும்புவார்
   வீழ்மலம் சிக்குகையினால்
   மீறுசுமை யெடுத்தலால் இளவெயில் காய்தலால்
   வளிரவிளெ தயிரால் சாருகதி உண்ணலால்
   வன் பிணிக்கு இடமென்பர் காண்."

8. சிறுபாண். 74.
9. ஏலாதி. 56.
10. திருமந்திரம். 120.
11. தணிகை. 'அகத்தியனருள் பெறுபடலம்', 26.
12. பேரூர் : தீர்த்தப் படலம் 40.
13. பெரியபுராணம் : 'திருநாவுக்கரசர் புராணம்' 49, 52, 62.
14. பெரியபுராணம் : 'திருநாவுக்கரசர் புராணம்', 49.
15. பெரியபுராணம் : 'ஏயர்கோன் கலிகான நாயனார்புராணம்', 389.

16. வி. நெடுஞ்செழியன் : "சூலை நோயும் நான்மாரும், சமய நோக்கில் ஒப்பாய்வு", 21ஆவது ஆய்வுக் கோவைத் தொகுப்புகள், தொகுதி 1, 1983, ப. 633.
17. சி. செல்வராஜ், "A Study of Diseases, Medicine & Medical Men in the Medieval Tamil Country", **B.I.T.C.**
18. பெரியபுராணம் : சம்பந்தர் புராணம், 713.
19. பெரியபுராணம் : சம்பந்தர் புராணம், 311, 329.
20. Mandayam Kumar : "Leprosy and Siddha Medical Science", **Heritage of the Tamils - Siddha Medicine,** IITS, p. 427.
21. கலித்தொகை, குறிஞ்சி, 29:6-7.
22. யசோதர காவியம், 1:213-216.
23. K. Radhakrishnan: "Siddha Medicine for the Skin Diseases", **Heritage of the Tamils - Siddha Medicine,** p. 422.
24. Mandayam Kumar: **Op.cit.,**
25. K. Radhakrishnan, **Op.cit.,** p. 417.
26. ஏலாதி 56:1.
27. ஏலாதி 56:2.
28. மணி 20:33-35.
29. சிறு. 74:1.
30. மேலது.
31. குறள். 457.
32. மணி. 3:105-114.
33. O. Somasundaram, "Religious Treatment of Mental Illness in Tamilnadu", **IJP.** Indian Psychiatric Society, 1973, pp. 38-48.
34. புறம். 28:1-4.
35. சிலப். 5:118-121.

## பிரிவு - 4
## மருந்து

1. நற்றிணை 140.
2. கலித்தொகை : குறிஞ்சி 8:20-21.
3. கலித்தொகை : பாலை 31:14-15.
4. குறள். 950.

5. கே.ஜி. கண்ணப்பன் : "திருக்குறளில் அறிவியல் - பிணியும் மருந்தும்", **First World Tamil Congress,** Kaulalampore, 1990, p. 88.

6. பெருங்கதை : உஞ்ஞைக் காண்டம், 33:14.

7. **Tamil Lexicon,** Supplement, Part I, p. 155.

8. N.H. Keswani, **"Medical Heritage of India"**, p. 42.

9. திருமந்திரம், 8000.

10. A.R. கண்ணப்பர் : "தமிழகத்தின் சஞ்சீவி மூலிகைகள்", **Second World Tamil Congress, Siddha Maruttuvam Special Issue,** p. 31.

11. கே. வெங்கடேசன் : 'தமிழ் இலக்கியத்தில் சித்த மருத்துவம்', ப. 237.

12. மேலது, ப. 237.

13. சிலப்பதிகார மூலமும் அரும்பதவுரையும் அடியார்க்கு நல்லாருரையும்", உ.வே.சா. குறிப்புகளுடன், தமிழ்ப். பல்கலைக் கழக வெளியீடு, 1985, ப. 171.

14. மேலது. ப. 54.

15. கம்பராமாயணம் : யுத்த காண்டம், மருத்து மலைப் படலம், 2664.

15அ. மேலது, 2727.

16. கம்பராமாயணம் : சுந்தரகாண்டம், உருக்காட்டுப் படலம், 5580.

17. மேலது.

18. N. Subbureddiar: "Allusions to Health and Medicine in Tamil Literature", p. 95.

19. E.I. Vol, XXI, No. 38.

## பிரிவு – 5

## மருத்துவச் சிகிச்சை

1. குறள், 948.

2. கலித்தொகை : நெய்தற்கலி 22:2-3.

3. குறள், 949.

4. நற்றிணை, 136:2-3.

5. திருவள்ளுவ மாலை, 11.

6. கே. வெங்கடேசன் : "**தமிழ் இலக்கியத்தில் சித்த மருத்துவம்**", பக். 165-166.
7. **கலித்தொகை** : பாலைக் கலி 16:19-20.
8. லலிதா காமேஸ்வரன் : "A study of References to Medicine in Literature in TamilNadu" - A Comparative Systems in Medicine with special reference to the Tamil Siddha System, **P.S.I.C.S.T.S.**, Jan 1968, Vol. I, p. 181.
9. **புறம்.** 34:2.
10. **ஐங்குறுநூறு** : 271-309.
11. **அகம்.** 198.
12. **புறம்.** 74.
13. **புறம்.** 28:1.
14. **அகம்.** 173.
15. A. Ananda Narayana Iyer : "A note on an Embryological concept of Ancient Indian Medicine", **The Madras Medical Journal,** April 1995, p. 51.
16. **Ibid.,**
17. **Ibid.,**
18. N.H. Keswani : "Bulletin of National Institute of Science of India", No. 21, 1962.
19. மாணிக்கவாசகர், **திருவாசகப் போற்றித் திருவகல்** 13-25.

    "மானுடப் பிறப்பினுள் மாதா வுதரத்து
    ஈனமில் கிருமிச் செருவினிற் பிழைத்தும்
    ஒருமதித் தன்றியின் இருமையிற் பிழைத்தும்
    இருமதி விளைவின் ஒருமையிற் பிழைத்தும்
    மும்மதித் தன்னுள் அம்மதம் பிழைத்தும்
    ஈரிரு திங்களிற் பேரிருள் பிழைத்தும்
    அஞ்சு திங்களில் முஞ்சுடல் பிழைத்தும்
    ஆறு திங்களில் ஊரலற் பிழைத்தும்
    ஏழு திங்களில் தாய்புவி பிழைத்தும்
    எட்டுத் திங்களில் காத்த வும்பிழைத்தும்
    தக்கத் தசமதி தாயோடு தன்பாடுந்
    துக்க சாகரத் துயரிடைப் பிழைத்தும்."

20. **ஐங்குறுநூறு** 51.
21. **குறுந்தொகை** : 287:4-5.

22. புறம் 20:14-15.
23. பத்துப்பாட்டு 6:609.
24. கார்மேகக் கவிஞர், "கொங்கு மண்டலச் சதகம்" 92.
25. **A.S.I.** சென்னை.
26. Francoise Indology, Pondicherry.
27. பேரா. முனைவர் **T.** சந்திரசேகர், சிற்பத்துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.
28. நடன காசிநாதன் : "Delivery System in Ancient Tamilnadu", "கல்வெட்டு", T.N.S.D.A. ஆகஸ்டு 1992, ப. 35.
29. K. Krishnamurthy, **"Dictionary of Medical Archaeology"**, p. 50.
30. Asoke, K. Bagchi : **"Medicine in Medieval India"**.
31. Jyotsna K. Kamat : "Depiction of Social Life in Bhatkal Temples" (Eds.) A.V. Narasimha Murthy & K.V. Ramesh, **Giri Dhara Sri-Essays on Indology,** p. 61.
32. K. Krishnamurthy, **Op.cit.**
33. John Scarborough : **"Roman Medicine"**.
34. Institute of History of Medicine, Museum, Hyderabad.
35. K. Krishnamurthy, **Op.cit.**
36. நற்றிணை : 40:5-10.
37. நற்றிணை : 370:2-5.
38. நற்றிணை : 355: 1-2.
39. பத்துப்பாட்டு 6:601-603.
40. Jyotsna K. Kamat : **Op.cit.**
41. **Ibid.**
42. கண்ணப்ப நாயனார் புராணம், 172-174.
43. K. Krishnamurthy, **Social & Cultural Life in Ancient India,** p. 93.
44. புறம். 281.
45. R. Krishnamurthy, "The Philosophical Background of Music", கலாச்சேத்ரா, காலாண்டு இதழ், தொகு. 2, எண். 4.
46. மலைபடுகடாம் : 303-305.
47. நெடுநல்வாடை : 172:186-187.
48. தொல்காப்பியம் : கற்பியல் 173-174.
49. சுவாமிநாதன், காசிநாதன் : "இசையில் உடல்நலம்", "மஞ்சரி".

50. கம்பராமாயணம் : தைலமாட்டுப் படலம், 576.

51. சீவகசிந்தாமணி 1286.

52. மேலது, 1287.

53. மேலது, 1288.

54. கம்பராமாயணம் : உருக்காட்டுப் படலம் 3762.

55. சாரங்கதார ஸம்ஹிதை : உத்தரகாண்டம், ப. 345.

56. The Therapeutic Index, Ayurveda, Siddha & Unani Medicines.

57. Mithal W. Meistu (Ed.,), "Encyclopaedia of Indian Temple Architecture - South India Lower Dravida Desa, Vol. I, pt. I, 1983.

## பிரிவு - 6

## அறுவை மருத்துவம்

1. .................. தமிழக வரலாற்றுச் சின்னங்கள், TNSDA, Serial No. 102, pp. 49-50.

2. மதுரை திருமலைமஹால் அருங்காட்சியகப் பொறுப்பாளர் டாக்டர் வே. வேதாசலம் என்பவருடன் நேர்காணல்.

3. புறம். 353.

4. புறம். 180:5-7.

5. க.சு. உத்தமராயன்: "தமிழ் இலக்கியங்களில் மருத்துவ நூல் செய்திகள்" (தொகு.) ந. சஞ்சீவி, "பல்கலைப் பழந்தமிழ்", ப. 169.

6. பதிற்றுப் பத்து 5:2.

7. கம்பராமாயணம் : யுத்த காண்டம், கும்பகர்ணன் வதைப் படலம், 146.

8. நாலாயிர : குலசேகர ஆழ்வார் 691/2; பெருமாள் திருமொழி 45.

9. சிந்தாமணி 818.

10. கம்பராமாயணம் : மீட்சிப் படலம்.

## பிரிவு - 7

## பழந்தமிழ் நாட்டில் மருத்துவமனைகள்

1. M. Veluchamy, "Life Oriented Education of the Tamils", Heritage of the Tamils - Education and Vocation, (Eds). S.V. Subramanian, V.R. Madhavan, p. 144.

2. V.R. Madhavan : "Medical Education of the Tamils", **Op.cit**, p. *224*.
3. மணிமேகலை : *17:75-76*.
4. மணிமேகலை : *17:18-21*.
5. V.R. Madhavan, Op.cit., p. *224*.
6. **Tamil Lexicon.**
7. **E.I.** Vol. XXI, p. 238.
8. தமிழ் - தமிழ் அகரமுதலி.
9. **E.I.** Vol. XXIV (1937-38) No. 12, p. 99.
10. **A.R.S.I.E.,** 1924, p. 16 & No. 249/1923.
11. **A.R.E.** 36/1898.
12. **A.R.S.I.E.,** 1924, p. 16 & No. 249/1923.
13. **S.I.I.** Vol. XXIII, Nos 350 & 351.
14. **S.I.I.** Vol. XXIII, p(iii).
15. **E.I.** Vol. XXI, No. 38, pp. 220-250.
16. Girija Prasanna Majumdar : **Health and Hygiene,** p. 650.
17. **E.I.** Vol. XXI, **No.** 38 *(12 குறுணி = 1 கலம்).*
18. TNSDA Serial No. 323/1978; **ARE** 97/1927-28.
19. *திருப்புகலூர் கல்வெட்டு 323/1978*
20. Rukmani Vathanam : "Sri Agniswarar Temple at Tiruppugalur - A study" Unpublished Ph.D., Thesis, Madras University, 1995.
21. **E.I.** Vol. XXIV, No. 12.
22. Referring to the **"KOILOLUGU,** part I", Published in 1909, p. 43, the following message is mentioned in **E.I.** XXIV (1937-38), No. 12, of Srirangam Inscription of Garudavahana Bhatta, p. 91:

    A disciple of Ramanuja added some Jambu fruits to the curd-rice offering of God Ranganatha, and Ramanuja, noticing the signs of indisposition in the face of the Image, traced out its cause and immediately ordered some Kashaya to be administered to the deity and arranged for the regular supply of that decoction to the God every night through his disciple Garudavahana Bhatta. It is further added that the offerig of a medicinal decoction to the God at night is understood to be in Vogue in one or two other temples in South India, at Madurai for instance.

23. D.V.S. Reddy : "Medical Relief in Medieval South India", **B.H.M.** 1941, Vol. I, p. 385.

24. *எஸ். ஆர். பாலசுப்பிரமணியன் : "பிற்காலச் சோழர் கோயில்கள்", ப. 140.*

25. **TNSDA,** Serial No. 17/1976-77; No. 37/1976-77.

26. **ARE.** 192/1929.

## *பிரிவு – 8*

## பழந்தமிழ் நாட்டில் மருத்துவக் கல்வி

1. *குறள். 392.*

2. *கொன்றை வேந்தன் 7.*

3. *மதுரைக் காஞ்சி, 26.*

4. *புறம். 183:1-2.*

5. *அதிவீரராம பண்டிதர் : வெற்றி வேற்கை, 35.*

6. *நாலடியார்.*

7. *புறம். 183:5-7.*

8. *புறநானூறு மூலமும் உரையும், உ.வே. சாமிநாத ஐயர் குறிப்புகளுடன், ப. 49;* R. Venkataraman : "Education of the Sanga Tamil", **Heritage of the Tamils - Education and Vocation,** p. 19.

9. *புறநானூறு – மூலமும் உரையும், பக். 3-4.*

10. *புறம். 312.*

* *தஞ்சைப் பல்கலைக்கழக சித்த மருத்துவர் டாக்டர் பிரேமா அவர்களிடம் இருந்து பெற்ற ஆய்வுக் கட்டுரைச் செய்திகள்.*

11. *போகர் சட்ட காண்டம் 7000, காண்டம்* II, 330.

12. *மேலது, ப. 344.*

13. *மேலது, ப. 734.*

14. *மேலது, காண்டம்* I 534.

15. *மேலது, ப. 549.*

16. *மேலது, ப. 555.*

17. *மேலது, ப. 700.*

18. A. Velusamy Swaminathan : "The Role of Hindu Mutts as Centres of Learing for the Tamils", **Heritage of the Tamils - Education and Vocation,** p. 192.

19. **ARE.** 144-145/1918.

20. **ARE.** 96-97/1919.

21. **E.I.** Vol. XXI, pp. 220-250.

22. K.A. Nilakanta Sastri, **The Colas**, p. 632.

## பிரிவு – 9

## மருத்துவர்களின் தகுதி நிலை

1. தொல்காப்பியம் : சொல் - 183.

2. ஆசிரிய நிகண்டு.

3. **Tamil Lexicon.**

4. மேலது.

5. மேலது.

6. புறம் - முன்னுரைப் பகுதி.

7. பரிபாடல், ப. XXIII.

8. **SII.** Vol. XIV, No. 1.

9. பரிபாடல், ப. 23.

10. சிலப்பதிகாரம், பக். 7-8.

11. சிலப்பதிகாரம், பக். 146 அ.கு.

12. K.A.N. Sastri, The Colas, p. 69.

13. **SII,** Vol. XIV, No.2., Lines 1-4.

14. **E.I.** Vol. III, pp. 317-320; SII, Vol. XIV, Nos. 1,2,3

15. **ARE.** 248, 249/1923.

16. **ARE.** 13/1906.

17. **ARE.** 159/1925.

18. **ARE.** 346/1949-50.

19. **SII,** Vol. III, pt. II, p. 310; E.I. Vol. XXI.

20. **ARE.** 784/1929-30.

21. **ARE.** 350/1949-50.

22. **EI.** Vol. VIII, No.33, pp. 317-320.

23. **ARE.** 429/1909.

24. **ARE.** 47/1930-31; தென்பாண்டியர் செப்பேடு, ப. XXII.

25. **ARE.** 350/1949-50; 98/1927-28.

26. **ARE.** 125/1906.
27. **ARE.** 575/1902.
28. **ARE.** 130/1906.
29. **ARE.** 13 & 130/1906; SII, Vol. XXII, pt. I.
30. **ARE.** 575/1902.
31. **ARE.** 125/1903.
32. *சிலப்பதிகாரம் : இந்திரவிழவூரெடுத்த காதை 43-44.*
33. David Dean Shulman: **"Tamil Temple Myths"**, p. 385, fn. 9.
34. F.R. Hemingsway, **"Gazatteer of Tanjore District"**, Vol. I, p. 216.
35. **ARE.** 358/1957.
36. **Tamil Lexicon.**
37. **மேலது.**
38. **மேலது.**
39. *இந்த அத்தியாயத்தின் பிரிவு 7இல் விளக்கம் காண்க.*
40. **SII,** Vol. II, **No.** 66, **p.** 277, **Line.** 498; **p.** 302 fn.
41. **Tamil Lexicon.**
42. **EI.** Vol, XXXVI, pp. 116-117.
43. **EI.** Vol, XVII & VIII, No. 33(1).
44. **EI.** Vol, XVII & VIII, No. 33(2).
45. **EI.** Vol, XXXVI, No. 15.
46. **S.I.I.** Vol, XXVI, No. 684.
47. *சுப்பராயலு : "வைத்திய குலம் - தமிழ் கல்வெட்டியலும் வரலாறும்", வெளியிடப்படாத கட்டுரை, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 1991,* **புலவர்** *ராசு அவர்களிடமிருந்து பெற்றது.*
48. **SII,** Vol. II, **No.** 66, **p.** 277, line. 498, **p.** 302 fn.
49. **Sanskrit - English Dictionary.**
50. *இவ்வத்தியாயத்தில் பிரிவு 4ஐப் பார்க்க.*
51. *திருப்பரங்குன்றம் கல்வெட்டு, நந்தி-மாத இதழ், பிப். 1972.*
52. *இரா. மாதவன், "மருத்துவ நோக்கில் தமிழரின் பொருளாதாரம்",* Friday Seminar Paper, IITS, 1985, p. 37.
53. **உலகநீதி** *11.*

54. B. Rama Rao: "Interesting Aspects of Health care in Tamilnadu History", Article, studies in History of Medicine and Science, (Ed.,) Hakeem Abdul Hakeem, Vol. XIV, Nos. 1-2, New Series (1995-96), RP. p. 67.
55. T.V. Mahalingam: **Topological List of Tamilnadu & Kerala,** Vol. II, pt (II), Para 36, pp. 106-107; ARE 46/1922.
56. **ARSIE.** 1924-25, p. 25.
57. **ARSIE.** 1922-23, p. 16; 1923-24, p. 16.
58. **ARE.** 18 & 19/1922.
59. **ARE.** 98/1927-28; Nannilam Ins, Vol II, TNSDA, No. 322/1978.
60. **SII.** Vol. XXII, pt. 1; ARE 13/1906.
61. **Tamil Lexicon.**
62. **ARE.** 307/1902; SII Vol. VII, No. 936; T.V. Mahalingam Topo. List, VOI. II, p. 386.
63. TNSDA. No. 22/1968.
64. *கன்னியாகுமரி கல்வெட்டுக்கள்,* TNSDA, S.No. 23/1968.
65. **ARE.** 184/1929-30.
66. **ARE.** 280/1914; IPS Vol. II, No. 575.
67. **ARE.** 132/1900; SII Vol. III, No. 145.
68. *நன்னிலம் கல்வெட்டு, தொ.* II, TNSDA 272/1978.
69. *கன்னியாகுமரி கல்வெட்டு,* TNSDA 22, 23/1968.
70. **ARE.** 639/1909; SII, Vol. XXVI, No. 684 & p (iv).
71. **ARE.** No. 351/1907.
72. **ARE.** No. 350/1907.
73. **SII.** Vol. III, No. 177; ARE 36/1898.
74. *கரந்தைச் செப்பேட்டுத் தொகுதிகள்,* எண். II, பாடல் 224.
75. **SII.** Vol. V, No. 260; ARE 156/1920.
76. B. RamaRao; *அ.கு. 54ல் உள்ளபடி, ப. 67.*
77. **ARE.** 306/1958-59; T.V. Mahalingam; Topo. List in TN. & Kerala, Vol. II, p. 68.
78. **ARE.** 784/1929-30; திருக்கோடிக்கா கல்வெட்டு TNSDA 214/ 1979.
79. **ARE.** 47/1930-31.

80. **ARE.** 350/1949-50.

கவனிக்க : ஸ்ரீரங்கம் கோயிலில் நிறுவப்பட்டிருந்த மருத்துவ மனையில் ஒவ்வொரு இரவிலும் ஒருவகை மருந்துக் கஷாயம் தயாரிக்கப்பட்டு சுவாமி ரங்கநாதருக்கு நிவேத்தியப் பொருளாக வழங்கப்பட்டு வந்த விபரத்தை பிரிவு 7ல் 'ஸ்ரீரங்கம் மருத்துவமனை' என்ற தலைப்பின் கீழ்க்காண்க.

81. **SII.** Vol. XIV, No.2, LInes 1-7.

82. **EI.,** Vol. III, p. 317-320; SII Vol XIV, Nos. 1,2&3.

83. **தென்பாண்டியர் செப்பேடுகள்,** XXII.

84. திருப்பரங்குன்றம் கல்வெட்டுக்கள், **'நந்தி'** மாத இதழ், பிப். 1973.

85. **ARE.** 325/1902; SII, Vol. VII, No. 954.

86. **ARE.** 341/1952-53.

## பிரிவு – 10

## மருத்துவத் தெய்வங்கள்

1. **Museum Guide,** Part II (Indian Medicine), pp. 6-7.
2. A. Sridhara Menon, **Cultural Heritage of Kerala, p.** 30.
3. Personal Interview with the **Priest K.N. Neelakantan,** May 1998.
4. S.R. Balasubramanian, **Early Chola Temples: Middle Chola Temples: Later Chola Temples.**
5. T.A. Gopinatha Rao, **Elements of Hindu Iconography,** Vol. II, pt. II, p. 420.
6. S. Ramachandran, **Tirumalapadi,** pp. 30-43.



# தொகுப்புரை

தென்னிந்தியாவில் மருத்துவக் கலையின் பரிணாம வளர்ச்சி மற்றும் விரிவாக்கம் பற்றி இந்த ஆய்வேட்டில் பகுப்பாய்வு செய்யப்பட்டுப் பின்வரும் கருத்தளவைகள் கண்டறியப்பட்டுள்ளன.

உலகில், இந்தியா நீங்கலான பிற நாடுகளில் தொடக்க நிலை முதல் மருத்துவத் துறையில் ஏற்பட்டுள்ள வளர்ச்சி பற்றிய சிற்றாய்வின் மூலம் பின்வரும் கருத்து புலனாகிறது.

எகிப்து, கிரீஸ், ரோம் ஆகிய பகுதிகளில் தொடக்க நிலையில் தோன்றிய மருத்துவ வளர்ச்சி, படிப்படியாக முன்னேற்றமடைந்து, ஹிப்போகிரேட்ஸ் (Hippocrates), காலன் (Galen) போன்ற மருத்துவ வல்லுநர்களை உருவாக்கி, அவர்களின் அரிய, பெரிய கண்டுபிடிப்புக்களின் மூலம், மேல்நாட்டு மருத்துவத் துறையானது, தற்போது உலகெங்கும் **"நவீன மருத்துவம்"** என்று போற்றப்படுகின்ற அளவில் மாபெரும் வளர்ச்சியினை அடைந்துள்ளது.

இந்தியாவைப் பொறுத்தவரை, **"சிறப்புமிகு இந்திய மருத்துவம்"** என்று போற்றப்படுகின்ற ஆயுர்வதே மருத்துவ முறையானது கி.மு. ஆறாம் நூற்றாண்டுக்கு முன்பே தோன்றி, பின்னாளில் யுனானி மற்றும் மேல்நாட்டு மருத்துவ முறைகள் இந்தியாவிற்குள் புகுத்தப்படும் காலம் வரை உச்சநிலைப் புகழுடன் தழைத்தோங்கிச் சிறப்புற்றிருந்தது.

மருத்துவ அறிவியலில் இந்திய மருத்துவர்கள் பிற நாட்டு மருத்துவர்களைவிட எந்த வகையிலும் தரம்தாழ்ந்து இருந்ததில்லை என்று ஆய்வின் முடிவுகள் தெரிவிக்கின்றன. பொது மருத்துவத்திலும், அறுவை மருத்துவத்திலும் ஈடு, இணையற்ற திறன் மிகு மருத்துவர்கள் இந்தியாவில் இருந்துள்ளனர். எடுத்துக்காட்டாக, சிறுநீரகக்கல் அறுவைச் சிகிச்சை (Lithotomy), அடிவயிற்றுப் புறத்தோல் அறுவைச் சிகிச்சை (Laparotomy), கண் படலமகற்றுச் சிகிச்சை (Cataract Couching), மண்டையோட்டு அறுவைச் சிகிச்சை (Cranium Operation), மூக்குக் குழைம அறுவைச் சிகிச்சை (Rhinoplasty) ஆகிய அறுவை சிகிச்சைகளில் இந்திய அறுவை மருத்துவர்கள் தன்னிகரில்லா ஆற்றலை வெளிப்படுத்தியுள்ளனர்.

மூலிகைகளின் தன்மைகள் இடத்திற்கு இடம் மாறுபடும் என்றும் கேரள மூலிகைகள் தனித்திறம் வாய்ந்தவை என்றும் கேரளாவைச் சேர்ந்த வாரியர் என்பவர் குறிப்பிட்டுள்ளார். கேரள மூலிகைகளைக் கொண்டு ஆயுர்வேத முறைப்படி தயாரிக்கப்படுகின்ற "தன்வந்தரம் மாத்திரை", "கோரோச்சநாதி மாத்திரை", "வாயு குளிகை" மற்றும் "இளநீர் அஞ்சனம்" ஆகிய மருந்துகள் பிற மாநில மூலிகைகளைக் கொண்டு அதே மருத்துவ முறையில் தயாரிக்கப்படும் மருந்துகளை விட உயரிய ஆற்றல் மிக்கவையெனக் கண்டறியப்பட்டுள்ளன என்று அவர் மேலும் குறிப்பிட்டுள்ளார்.

வயிற்றுப் போக்கு (Dysentery) போன்ற நோய்களுக்கு மலபார் வைத்தியர்கள் வழங்கிய மருந்துகள் போன்று தாமளித்த போர்ச்சுக்கீஸிய மருந்துகள் விரைவாகவோ அன்றி உறுதியாகவோ பலன் அளிக்கவில்லை என்று கி.பி. 16ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த போர்ச்சுக்கீஸிய மருத்துவர் கிரேஸியா-டா-ஒராட்டா (Gracia-da-orata) என்பவர் குறிப்பிட்டுள்ளார்.

கர்நாடகாவில் அரசர்களும், அரசகுமாரர்களும் தங்களுக்கு நேரவிருக்கும் நஞ்சூட்டுக் கொலை முயற்சி அபாயங்களினின்றும் தங்களைப் பாதுகாத்துக் கொள்ள மருத்துவத்தை, குறிப்பாக நச்சூட்டாய்வு (Toxicology) என்ற மருத்துவப் பிரிவினை, நன்கு கற்றறிந்தனர். அதன் காரணமாக, நச்சூட்டாய்வு மருத்துவம் அவர்களின் பேராதரவுடன் மிகவும் வளர்ச்சி பெற்றிருந்தது. ஆந்திரதேசத்தில், புகழ்பெற்ற பராஹிதகுல மருத்துவர்கள் நச்சூட்டாய்வு மருத்துவத் துறையில் மேலோங்கியிருந்தனர். ஆயினும், இத்துறையில் கேரளா போன்று முன்னேற்றமடைந்த நாடு வேறெதுவுமில்லை என்று கண்டறியப் பட்டுள்ளது.

தென்னகத்தில், ஆந்திர மாநிலத்தில் தான் மருத்துவ வளர்ச்சி பற்றி அகழ்வாய்வு மற்றும் கல்வெட்டு ஆதாரங்கள் ஏராளமாகக் கிடைத்துள்ளன. கி.பி. இரண்டாம் நூற்றாண்டிலேயே ஆந்திராவில் ஒரு முழுநிறை மருத்துவமனை இருந்துள்ளமைக்கான அகழ்வாய்வுச் சான்றுகள் கிடைத் துள்ளன. ஒரு நல்ல மருத்துவமனைக்குரிய இலக்கணங்களுடன் அமையப்பெற்ற ஒரு மருத்துவமனை இருந்துள்ளதை வெளிப்படுத்தும் நாகார்ஜுனகோண்டா அகழ்வாய்வு அந்நாளைய மருத்துவர்களின் திட்டத்திறனையும் வடிவமைப்பு ஆற்றலையும் பறைசாற்றுவதாக அமைந்துள்ளது.

இவ்வளவு முற்பட்ட காலத்தில் ஒரு மேன்மையான திட்டவரையறையுடன் கூடிய வடிவமைப்பில் ஒரு மருத்துவ மனை இருந்ததற்கான ஆதாரம் இந்தியாவில் வேறெங்கும் கிடைத்ததில்லை என்பது ஆந்திர மாநிலத்துக்குக் கிடைத்த அரியதொரு பெருஞ்சிறப்பாகும்.

சுசுருத ஸம்ஹிதாவைப் புதுப்பித்த மாபெரும் மருத்துவ அறிஞரான நாகார்ஜுனாவைப் பெற்றிருந்தது ஆந்திராவின் மற்றுமொரு சிறப்பாகும். இரஸவாதம் (Alchemy) என்னும் வேதியியல் அறிவியலில் அவர் அடைந்திருந்த மேம்பாடு மருத்துவத் துறையில் மட்டுமின்றி வேதியியல் துறையிலும் ஆந்திரதேசம் வேறெந்த நாட்டிற்கும் சளைத்ததல்ல என்பதற்கு சான்று கூறுவதாக அமைந்துள்ளது.

ஆயினும், தென்னகத்தில் கி.பி. 10ஆம் நூற்றாண்டு வரையிலான மருத்துவ வளர்ச்சி பற்றி வெளிப்படுத்துகின்ற அதிகாரப் பூர்வ ஆதாரங்கள் எதுவும் காணக்கிடைக்கவில்லை. எனினும், இடைக்காலத்தில் அக்கலய்யா போன்ற மருத்துவ வல்லுநர்கள் ஆந்திராவில் இருந்துள்ளமையும், ஒரு மகப்பேறு இல்லத்துடன் கூடிய பொதுமருத்துவமனை இருந்துள்ளமையும் மருத்துவ வளர்ச்சியானது ஆந்திரதேசத்தில் நாகார்ஜுனா காலம் முதல் ஒரு தொடர் நிகழ்ச்சியாக இருந்திருக்க வேண்டுமென்று எண்ண இடமளிக்கின்றன.

தமிழ்நாட்டில், உடல்நலம் பேணும் கலையிலும், உடல் நலப் பராமரிப்பிலும் சங்ககால மக்களின் மனப்பான்மையும், ஈடுபாடும் குறித்து சங்க இலக்கியங்கள் மிக விரிவான விளக்கங்கள் தந்துள்ளன. "நோய்த் தடுப்பு நோய்க் குணமாக்கலினும் சிறந்தது" என்னும் கோட்பாட்டில் சங்க கால மக்கள் மிகுந்த அக்கறை கொண்டிருந்தனர்.

அன்றைய தமிழ்நாட்டில், மகப்பேறு மருத்துவம் நன்கு வளர்ச்சி பெற்றிருந்தது. கர்ப்பிணிப் பெண்கள் தமிழ்நாட்டில் நின்று கொண்டிருக்கும் நிலையிலும், கர்நாடகம் மற்றும் பிற உலக நாடுகளிலும் உட்கார்ந்த நிலையிலும் பிரசவிக்கும் முறைகள் புழக்கத்தில் இருந்துள்ளன என்று சிற்பச் சான்றுகள் பகர்கின்றன. ஆயின் இத்தகைய நிலைகள் சுகப் பிரசவத்திற்கு எந்த அளவில் துணைபுரிகின்றன என்பது ஆய்வுக்குரிய தொன்றாகும்.

பொதுவான பல சிகிச்சை முறைகளுடன் இசை மருத்துவம் மற்றும் காந்தச் சிகிச்சை முறை ஆகியவற்றையும் அன்றைய தமிழ் மக்கள் நன்கு அறிந்திருந்தனர்.

இடைக்காலத்தில் பல மருத்துவமனைகள் "ஆதுலர் சாலை" மற்றும் "ஆரோக்கிய சாலை" என்ற பெயர்களில் தமிழ்நாட்டில் செயல்பட்டு வந்துள்ளன என்பதற்கான கல்வெட்டு ஆதாரங்கள் பல கிடைத்துள்ளன. அவற்றுள், திருமுக் கூடல் "ஆதுலர்சாலை" பற்றியும் ஸ்ரீரங்கம் "ஆரோக்கிய சாலை" பற்றியும் தெளிவான விபரங்கள் முழு அளவில் கல் வெட்டுக்களில் காணப்படுகின்றன. இவ்விரு மருத்துவமனைகளுமே திறன்மிகு மருத்துவர்களுடன் முழுநிறை மருத்துவமனை களாகச் செயல்பட்டுள்ளன. திருமுக்கூடல் மருத்துவமனையானது உள்நோயாளிகளுக்கென 15 படுக்கை வசதிகளுடன் பல்வேறு வகையான மருந்துகள் சேமிப்புக் கிடங்கில் சேமித்து வைக்கப்பட்டுச் செயல்பட்டுள்ள விபரம் தமிழக மருத்துவ வரலாற்றுக்குப் பெருமை சேர்க்கக் கூடியதாக அமைந்துள்ளது.

மருத்துவத்தொழில் பரம்பரைத் தொழிலாகப் பாது காக்கப்பட்டு வந்தது. மருத்துவக் கல்வியானது பொதுமைப் படுத்தப்படாமல், "தந்தை–மகன்" மற்றும் "குரு–சீடன்" என்ற முறையிலேயே கற்பிக்கப்பட்டு வந்துள்ளது. மருத்துவத் தொழில் புரிவோர் மிகுந்த மரியாதையுடன் நடத்தப்பட்டனர். மருத்துவ வல்லுநர்கள் சிறப்புப் பட்டங்கள் மூலம் கௌரவிக்கப் பட்டனர்; அவர்கள் அரசவை மருத்துவர்களாகவும், மந்திரி களாகவும் நியமிக்கப்பட்டுக் கௌரவிக்கப்பட்டனர். பழந்தமிழர்கள் சுகாதாரத்திற்கும் நல்ல ஒழுக்க நெறிமுறை களுக்கும் அதிக முக்கியத்துவம் கொடுத்துள்ளனர். நோய் வராமல் பாதுகாக்கும் முறைகளில் கவனம் செலுத்தியுள்ளனர்.

பழங்காலத்தில் மக்களைப் பாதித்து வந்த நோய்கள் யாவும் இன்றைய மக்களுக்கும் பழக்கப்பட்டவையாகவே இருக்கின்றன. அந்நோய்கள் யாவற்றிற்கும் அவர்கள் தகுந்த மருந்துகளையும், மருத்துவ சிகிச்சை முறைகளையும் அறிந்திருந்தனர். அறுவை கிகிச்சைகள் பற்றி அன்றைய இலக்கியங்களில் காணப்படும் குறிப்புக்கள் அக்கால மருத்துவர் களின் அறுவை மருத்துவ அறிவினைப் புலப்படுத்துகின்றன. ஆனால், உடலின் உட்புற உறுப்புக்களில் அறுவை சிகிச்சை செய்யப்பட்டதற்கான ஆதாரம் எதுவும் காணப்படவில்லை.

ஆயினும், அக்கால மருத்துவச் சிகிச்சைகள் பற்றிக் கிடைக்கப் பட்டுள்ள குறிப்புக்கள் யாவும் தமிழ்ப் புலவர்களால் அவர்களின் படைப்புக்களின் மூலம் வெளிப்பட்டவையே என்பது கவனத்திற் கொள்ளத்தக்கதொரு அம்சமாகும். எனவே, அக்காலத் தமிழ்ப் புலவர்கள் தமிழில் மட்டுமின்றி மருத்துவ அறிவியலிலும் புலமை பெற்றிருந்தனர் என்பது தெரியவருகிறது.

தமிழ் இலக்கியப் படைப்புக்களில் குறிப்பிடப்பட்டுள்ள "மாண்டாரை மீண்டும் உயிர்பெற்றெழச் செய்யும் மருந்து" போன்ற அரியதும் அற்புதமானதுமான பல மருந்துகள் அக்காலத்தில் இருந்துள்ளன என்பது போன்ற விபரங்கள் ஆழ்ந்த ஆய்வுகளுக்குட்படுத்தப்பட வேண்டியவையாகும்.

திருமுக்கூடல் கல்வெட்டுத் தெரிவிக்கும் வீரசோழன் ஆதுலர் சாலையில் சேமித்து வைக்கப்பட்டிருந்த, பல கொடிய நோய்களையும் குணப்படுத்தவல்ல சக்திவாய்ந்த பல்வேறு மருந்துகள் சேமிக்கப்பட்டிருந்த விபரங்களிலிருந்து, இடைக்கால மருத்துவர்கள் மருந்துகள் தயாரிப்பிலும், தயாரிக்கப்பட்ட மருந்துகளைக் கெட்டுவிடாமல் நீண்ட காலம் பாதுகாப்பாகச் சேமித்து வைப்பதிலும் தேர்ச்சி பெற்றிருந்தனர் என்பதை உணர முடிகிறது.

சங்க காலத்திலிருந்தே மருத்துவத் தொழில் கண்ணியமிக்கதொரு தொழிலாகக் கருதப்பட்டு வந்துள்ளது. மருத்துவர்கள் தங்கள் தொழிலைப் பொருளீட்டும் நோக்கம் எதுவுமின்றிச் சேவை மனப்பான்மையுடன் செய்து வந்துள்ளனர்.

திருமுக்கூடல் மற்றும் ஸ்ரீரங்கம் மருத்துவமனைகளில் பணிபுரிந்த மருத்துவ அலுவலர்களின் ஊதியங்கள் தற்கால மருத்துவ அலுவலர்களின் ஊதியங்களுக்கு இணையாக இல்லாவிடினும் நியாயமான அளவில் இருந்துள்ளன. அறுவை மருத்துவர்கள் பொது மருத்துவர்களைவிட, மிகக்குறைந்த அளவிலேயே ஊதியம் பெற்றுள்ளனர். ஆனால், தாதியர்களின் மருத்துவச் சேவைக்கு மிகுந்த முக்கியத்துவம் தரப்பட்டுள்ளது.

சமயச்சேவைகளுக்காக நன்கொடைகள் வழங்கும் அளவிற்கு மருத்துவர்களின் வாழ்க்கைத் தரம் சிறப்புற்றிருந்தது. தேர்ச்சியும் திறமையுமிக்க மருத்துவ

வல்லுநர்களின் நல்வாழ்விற்காகவும் அவர்களின் மருத்துவத் தொழில் மேம்பாட்டிற்காகவும் கொடைகளும் மானியங்களும் வழங்கப் பட்டன.

மக்கள் பல தெய்வங்களை மருத்துவத் தெய்வங்களாக வழிபட்டு வந்தபோதிலும், தன்வந்த்ரியும், அகத்தியரும், திருமூலரும் இன்றளவும் மக்களின் நோய்தீர்க்கும், மருத்துவத் தெய்வங்களாக வழிபடப்படுகின்றனர்.

உலக மருத்துவ வரலாற்றில் தென்னகமும், குறிப்பாகத் தமிழகமும் தனக்கெனத் தனிப் பாரம் பரியத்தைத் தக்கவைத்துக் கொண்டுள்ளது என்பதை அறிய முடிகிறது.



# நூற்பட்டியல்

## I. மூலச் சான்றுகள்

EPIGRAPHICAL SOURCES

1. A corpus of Telengana Inscriptions
2. Annual Report on Indian Epigraphy.
3. Annual Report of the Mysore Archaeological Department.
4. Archaeological Survey of Mysore Annual Report.
5. Epigraphia Andhrica.
6. Epigraphia Carnatica.
7. Epigraphia Indica.
8. Hyderabad Archaeological Series.
9. Indian Archaeology - A Review
10. Inscriptions of the Andhra Pradesh.
11. Inscriptions of the Nellore District.
12. Inscriptions of the Pudukottai State.
13. Kanniyakumari Inscriptions.
14. Karnatak Inscriptions.
15. Madras Epigraphical Report.
16. Mysore Epigraphical Report.
17. Nannilam Inscriptions.
18. Pallavar Seppēḍugaḷ
19. Paṇdiyar Seppēḍugaḷ.
20. South Indian Inscriptions
21. South Indian Temple Inscriptions.
22. State Department of Tamilnadu Archaeological Series.
23. Tirumala - Tirupati Devasthanam Inscriptions.
24. Topographical List 3 Vols, by V. Rangacharya.
25. Topographical list of Inscriptions in Tamilnadu and Kerala States - by T.V. Mahalingam.
26. Travancore Archaeological Series.

